
பதஞ்சலி யோகம்
ஒரு விஞ்ஞான விளக்கம்
ஓஷோ
5
கவிதா வெளியீடு

# பதஞ்சலி யோகம்

## ஒரு விஞ்ஞான விளக்கம்

**பாகம் - 5**

ஓஷோ

தமிழில் :
சி. எஸ். தேவநாதன்




**கவிதா பப்ளிகேஷன்**

8, மாசிலாமணி தெரு,
பாண்டி பஜார்,
தியாகராய நகர்,
சென்னை - 600 017.

044-4216 1657
+91-7402222787
kavitha_publication@yahoo.com
kavithapublication@gmail.com
www.kavithapublication.in

**PATHANJALIYOGAM : ORU VIGYANA VILAKKAM - 5 (Tamil)**



Originally published in English under the title:
**THE ALPHA AND THE OMEGA, VOLUME - 5**



For more information : www.osho.com
A Comprehensive multilingual web site featuring Osho's meditations, books and tapes and an online tour of themeditation resort at Osho Commune International.

| | | |
|---|---|---|
| Translated by | : | **C. S. Devanathan** |
| Coordination by | : | **Dhyan Sanjay** |
| Publishing Editor | : | **S. Chockalingam** |
| First Edition | : | 2005 |
| Second Edition | : | March, 2019 |
| Pages | : | **336** |
| Price | : | **Rs. 300/-** |
| **ISBN** | : | **81-8345-010-5** |
| Printed at | : | Sree Durga Printers, Chennai |

Published by :

**KAVITHA PUBLICATION**
8, Masilamani Street, Pandy Bazaar,
T. Nagar, Chennai - 600 017
Ph: 044-4216 1657 What'sapp : +91-7402222787
e-mail: kavitha_publication@yahoo.com
Website : www.kavithapublication.in

பதஞ்சலி ரொம்பவும் விஞ்ஞானபூர்வமாய் செயல்படுகிறார். கட்டுதிட்ட நெறிகளுக்குப் பிறகு நீங்கள் மிகவும் எளிமையாகி விடுகிறீர்கள். உங்களுக்குள் ஆசையற்றவராகி மனநிறைவை அடைந்த நிலையில் நீங்கள் களங்கமில்லாமல், தூய்மையுடையவராய் கனமற்ற நிலையில், நீங்கள் நறுமணத்தைப் போலாகி, இலகுவாய் சிறகடித்து காற்றில் பறக்கிறீர்கள். அப்போது சுயவிசாரணை சாத்தியம். தற்போது நீங்கள் சுயத்தை ஆராய முடியும்.

- ஓஷோ



# பதஞ்சலி யோகம்

ஒரு விஞ்ஞான விளக்கம்

சூத்திரம் 18:

**'ப்ரகாச க்ரியா ஸ்திதிசீலம் பூதேந்த்ரியாத்மகம்
போகாபவர் கார்த்தம் த்ருச்யம்'**

*காணப்படும் பொருள் பூதங்களாலும் இந்திரியங்களாலும் ஆக்கப் பட்டது. அது ஒளியையும் செயலையும், செயலற்றத் தன்மையையும் இயல்பாய் கொண்டது. காண்பவனுக்கு அனுபவமும் முக்தியும் கிடைப்பதற்காக அது உள்ளது.*

சூத்திரம் - 19:

**'விசேஷா விசேஷ லிங்க மாத்ரா
லிங்கானி குணபர்வாணி'**

*குணங்களின் நிலைகள் நான்கு: வரையறுக்கப்படாதது, வரையறுக்கப்பட்டது, அடையாளம் மட்டும் உடையவை, அடையாளம் அற்றவை என்று.*

*(இவை முக்குணங்களின் மாறிய நிலைகள். சத்துவம், ரஜஸ், தமஸ் என்கிற முக்குணங்கள்*

*சத்துவம் - அமைதி*
*ரஜஸ் - செயலோடு கூடியது.*
*தமஸ் - சோம்பல்.)*

சூத்திரம் - 20:

**'த்ரஷ்டா த்ருசி மாத்ரா சுத்தோயி
ப்ரத்ய அணுபக்ய'**

*பார்ப்பவன் விழிப்புணர்வு வடிவினன். அவன் தூயவனாக இருந்தாலும் மனதின் தன்மைக்கு ஏற்பவே அதன் வழியாய் காண்கிறான்.*

*சூத்திரம் - 21:*

**'ததர்த்த ஏவத்ருச்யஸ் யாத்மா'**

*காணப்படுவதன் இயல்பு அவனுக்காக அமைந்துள்ளது.*

*சூத்திரம் - 22:*

**'க்ருதார்த்தம் ப்ரதி நஷ்டமப்ய நஷ்டம்
ததன்ய ஸாதரணத் வாத்'**

*ஞானம் அடைந்தவர்களுக்குப் பார்க்கப்படும் பொருள் அழிந்து விட்டாலும், அது பொதுவானதென்பதால் மற்றவர்களைப் பொறுத்தவரை அழிவற்றதாய் காணப்படும்.*

*சூத்திரம் - 23:*

**'ஸ்வஸ்வமி சக்தயோ ஸ்வரூபோ பலப்தி ஹேது
ஸம்யோக'**

*பிரகிருதி (காண்பவன்) அதன் தலைவன் (காணப்பட்டது) இருவரின் சக்திகளை உணர்வதற்குக் காரணமாயிருப்பது சேர்க்கையே.*

*சூத்திரம் - 24:*

**'தஸ்ய ஹேதுர் அவித்யா'**

*அதன் (சேர்க்கை) காரணம் அறியாமையே.*

# பொருளடக்கம்

**யா**ருக்கும் தனிப்பட்டு சொந்தமில்லாத பொது அறிவு ஒன்று இருப்பது சாத்தியம் என்று அறிவியல் சார்ந்த மனம் எண்ணுகிறது. அது ஆய்ந்து தெளிவு காண்கிற மனோபாவம் கொண்டது. 'பொது அறிவு' என்றதன் மூலம் காண்பவர் வெறும் பார்வையாளராகவே நின்று விடுகிறார் என்பது பொருள். அவர் காண்கிற ஒன்றில் தானும் பங்கேற்றால் அந்தப் பங்கேற்பு அறிவைத் தெளிவற்றதாக்கி விடும். எனவே, பங்கேற்கத் தேவையில்லை. அறிவியல் சார்ந்து காண்பவர் தான் அறிகிற ஒன்றுடன் தொடர்பற்றவராய், எந்த ஒரு வழியிலும் சம்பந்தப்படாதவராய் கருத்தூன்றிக் கவனிப்பவராக மட்டுமே நின்றுவிட வேண்டும். ஆனால், அதுவே உண்மை நிலையை அறிய மேற் கொள்ளும் ஆய்வு ஆகிவிடாது.

அறிவியல் காலத்தில் நிகழ்வது, இந்த முப்பது நாற்பது ஆண்டுகளில் தன்னுடைய தவறான காரணங்கள் கொண்டு வாதிடும் மனோபாவத்தை அது உணர்ந்தே இருக்கிறது. சுட்டிக்காட்டாத அறிவு (*impersonal knowledge*) என்று எதுவும் இல்லை. அறிவு என்றாலே தன்னைப்பற்றிய அல்லது தனிப்பட்ட ஒருவரைப் பற்றியதுதான். தொடர்பற்றதாய் எந்த அறிவும் கிடையாது, காரணம் அறிவது என்றாலே தொடர்பாயிருந்து ஒன்றோடு இணைந்திருந்து அறிவதுதான். வெறும் பார்வையாளராயிருந்து எதையும் அறிவது சாத்தியமில்லை. பங்கேற்பு அவசியமாகும். ஆக எல்லைகளைக் குறிக்கும் கோடுகள் தெளிவாயில்லை.

தன்னுடைய அறிந்து கொள்ளும் முறை தனிப்பட்ட முறையிலானது என்று கவிஞன் சொல்கிறான். ஒரு கவிஞன் பூவைப் பற்றி அறிந்து கொள்கிறபோது பழைய அறிவியல் சார்ந்த முறையில் அதை அறிவதில்லை. அவன் வெளியில் நின்று காண்பவன் அல்லன். ஆழ்ந்த புலனுணர்வில் அவன் பூவின் நிலையோடு பொருந்தி விடுகிறான். அவன் பூவுக்குள் உட்புகுவதோடு அந்தப் பூவும் தன்னுள்

புகுவதற்கு இடமளிக்கிறான். அங்கு ஒரு ஆழமான சந்திப்பு நிகழ்கிறது. அந்த சந்திப்பில பூ அறியப்படுகிறது.

தற்போது அறிவியல் சொல்கிறது. ஒரு செயலை (பொருளும்) நீங்கள் கருத்தூன்றிக் கவனிக்கிறபோது நீங்கள் பங்கேற்கிறீர்கள் - அந்தப் பங்கேற்பு எத்தனை சிறியதாயினும் நீங்கள் பங்கேற்றவர் ஆகிறீர்கள். ஒரு பூவை நீங்கள் கூர்ந்து கவனிக்கிறபோது அது யாரும் பார்த்திராத அதே பூவாய் இருக்காது. காரணம் அதில் நீங்கள் புகுந்து விடுகிறீர்கள், அதன் பகுதியாகி விடுகிறீர்கள். உங்களுடைய பார்வை அதிலொரு பகுதியாகி விடுகிறது. அது முன்பிருந்த மாதிரி இருக்காது. யாரும் அறிந்திராத கடந்திராத வனாந்தரப் பாதையில் மலர்கிற பூ முற்றிலும் வேறான ஒன்று. அப்போது சற்றும் எதிர்பாராத விதமாய் யாரோ ஒருவர் அந்தப் பூவை வந்து பார்க்கிறார். அப்போது அந்தப்பூ முன்பிருந்த அதே பூவாய் இருக்காது. பூ காண்பவரை மாற்றுகிறது. காண்பதால் பூ மாறுகிறது. அங்கே ஒரு புதிய தன்மை வந்து விடுகிறது.

ஆனால் இது கவிஞர்களைப் பொறுத்தவரையில் சரிதான். அவர்களை யாரும் அறிவின் பாற்பட்டவராகவோ, அறிவியல் சார்ந்தவராகவோ இருப்பார்களென்று எதிர்பார்ப்பதில்லை. ஆனால், இது தற்போது ஆய்வுக் கூடத்தில் நிகழ்வது என்று அறிவியல் கூறுகிறது. நீங்கள் கவனிக்கிறபோது உங்களால் கவனிக்கப்பட்டது இருந்தபடியே இருக்காது. தற்போது இயற்பியலார் சொல்கிறார்கள், அணுக்கள் தங்களை யாரும் கவனிக்காதபோது முற்றிலும் வேறான வழியில் நிலைமாற்றம் பெறும் என்று. நீங்கள் கவனிக்கிறபோது உடனே தங்கள் நிலைகளை அவை மாற்றிக் கொண்டு விடும். அதே மாதிரிதான் நீங்கள் குளிக்கிறபோது முற்றிலும் வேறானவராகி விடுகிறீர்கள். யாரோ உங்களைச் சாவித்துவாரத்தின் வழியே பார்த்துக் கொண்டிருப்பதாய் உணர்கிறீர்கள் - மாறிவிடுகிறீர்கள். அணுக்களும் அப்படித்தான் தங்களை யாரோ பார்த்ததும் அவை முற்றிலும் வேறான இயக்கத்தைக் கொண்டு விடுகின்றன.

இவைதாம் எல்லைக் கோடுகளாயிருந்தன: அறிவியல் முழுக்க முழுக்க எந்த ஒன்றையும் அல்லது எந்த ஒருவரையும் சுட்டிக்காட்டாததாகவே கருதப்பட்டது. அந்த எல்லைக்கோடுகள் அறிவியலுக்கும் மதத்துக்கும் நடுவே இருந்திருக்கின்றன. அத்துடன் அது ஒரு பகுதியளவிலான பங்கேற்பாகவும் கருதப்பட்டது. மதமோ முழுமையொரு பங்கேற்பாயிருந்தது.

கவிஞன் பூவைப் பார்க்கிறான் - அங்கே கவிஞனும் இல்லாது பூக்களும் இல்லாது காட்சிகள் மட்டுமே இருக்கின்றன. அவை கண நேரக் காட்சிகள். சில கணங்களுக்கு அங்கே தொடர்பிருக்கும் பிறகு அவை தனித்தனியாகி விடும். ஒரு மறைஞானியோ, மத நம்பிக்கையுடையவரோ அந்தப் பூவைக் காணும்போது என்ன நேரிடும்? பங்கேற்பு முழுமையாயிருக்கும். அது பகுதிகளாயிருக்காது. காண்பவர் காணப்படுவது ஆகிய இரண்டும் மறைந்து விடும். இரண்டுக்கும் இடையே ஊசலாடிக் கொண்டிருக்கும் ஆற்றல் மட்டும் தொடர்ந்து இருக்கும். அனுபவம் தொடரும். அனுபவித்தறிபவர் தொடர்வதில்லை. அனுபவிக்கப்பட்டதுந்தான். மாறுபட்ட இருநிலைகளும், காணப்படுகிற பொருளும், காண்பவரும் மறைகின்றன. அனைத்து எல்லைக் கோடுகளும் கடக்கப்படுகின்றன.

மதம் ஒரு முழுமையான பங்கேற்பு. கவிதை அல்லது கலை பகுதியளவிலான பங்கேற்பு ஆகும்.

அறிவியல் எவ்வகையிலும் பங்கேற்பு செய்ததில்லை. ஆனால் அந்த நிலை நீடிக்கவில்லை. அறிவியல் கவிதைக்கும், மதத்துக்கும் சமீபமாய் வந்துவிட்டது. எல்லைக் கோடுகள் தற்போது குளறுபடியாகி விட்டிருக்கின்றன. ஐம்பது ஆண்டுகளுக்கு முன் அறிவியல் முறைகளைக் கற்ற ஒருவர் பதஞ்சலியைப் பற்றியும், சங்கரைப் பற்றியும், வேதாந்தம் பற்றியும் நகைக்கவே செய்திருப்பார். இப்போது பதஞ்சலி குறித்து நகைப்பது முடியாத காரியம். அவருடைய நேர்மையும் சீர்மையும் நிரூபிக்கப்பட்டு விட்டது.

அறிவியல் படிப்படியாய் வளரவளர யோகா உண்மையானதாயும், மிகுந்த மதிப்புடையதாயும் தோற்றம் பெறுகிறது. காரணம், இதுவே எப்போதும் யோகியின் காணும் நிலை (stand point) யாயிருக்கிறது. அதுமட்டுமே இருக்கிறது. அறியாமையின் காரணமாகவே பிரித்தலும், பிரிக்கின்ற எல்லைக் கோடுகளும் இருக்கின்றன. அது தேவைப்படுகிறது. அது முற்றிலும் தேவையானதொரு பயிற்சிதான். ஒருவர் அதில் துன்பப்பட்டு, அதை அனுபவித்து அதைக் கடந்தாக வேண்டும். அது ஒரு பாதை, வீடல்ல. இந்த உலகம் பிரிவினைக்கும், மண முறிவிற்கும் (ஒன்றை விட்டு விடுவதற்கும்) பாதையாயிருக்கிறது.

நீங்கள் அதைக் கடந்து, முழுமையான அனுபவத்தையும் புரிந்துகொள்ளத் தொடங்கினால் திருமணம் மிகவும் அருகில் எட்டிப்

பிடிக்கிற தூரத்தில் வந்து விடுகிறது. ஒருநாள், திடீரென்று ஒருநாள் முழுமையுடன் இணைக்கப்பட்டு விடுகிறீர்கள். பிரிவினை மறைந்து விடுகிறது. அந்த இணைப்பில் இருக்கிறது பரமசுகம். பிரிவால் துன்புறுவதற்குக் காணரம் அது செயற்கையானது. அதன் இருப்பிற்குக் காரணம் நீங்கள் அதனைப் புரிந்து கொள்ளாததுதான். உங்களுடைய தவறான புரிதலில் அது இருக்கிறது. அது ஒரு கனவு மாதிரி.

நீங்கள் உறக்கத்தில் இருக்கிறீர்கள்; அப்போது ஆயிரத்தியொரு விசயங்களைப் பற்றிக் கனவு காண்கிறீர்கள். காலையில் எல்லாம் மறைந்து விடுகின்றன. திடீரென்று உங்களைப் பார்த்தே நீங்கள் சிரிக்கத் தொடங்குகிறீர்கள். அந்தச் செயல் முழுதும் நகைப்பிற்கிடமாய் தெரிகிறது. அது நடந்தது என்பதையே உங்களால் நம்ப முடியாது. அது உண்மையே போல் தோன்றி உங்களை ஏமாற்றியதை நீங்கள் நம்ப மாட்டீர்கள். மனதில் மிதக்கும் பிம்பங்களால் அப்படிக் கவரப்படுவது எந்த அளவு சாத்தியம் என்று உங்களால் நம்ப முடியாது. அவை எவ்வளவுதான் ஒன்றும் தன்மையோடு, திடமாய், உண்மையானதாய் காட்சியளித்தாலும் எண்ணக் குமிழிகளன்றி வேறேயென்ன?

மெய்ம்மை (reality)யைப் புரிந்து கொள்ளும் போதும் அப்படித்தான் நேரிடுகிறது. ஆனால் மெய்ம்மையை ஆழ்ந்த பங்கேற்பின் மூலம் அறிய முடியும். நீங்கள் பங்கேற்கவில்லையெனில் ஓர் அயலாராய், வெளி ஆளாயிருந்து கொண்டு அந்த மெய்ம்மையை அறிய முடியும். நீங்கள் இந்த வீட்டுக்கு வர முடியும். இந்த வீட்டைச் சுற்றி வருவதுடன், இவ்வீட்டைப் பற்றிய சில விசயங்களை நீங்கள் அறிந்து கொள்வீர்கள். ஆனால் நீங்களோ வெளியே புற எல்லையில் செயல்பட்டுக் கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் வெளியில் இருந்து சுவர்களைப் பார்க்கிறீர்கள். வீட்டினுள்ளே எப்படியிருக்கும் என்பதை அறிய மாட்டீர்கள்.

சில நேரங்களில், இருண்ட இரவில் ஒரு திருடனைப் போல் அந்த வீட்டுக்குள் நீங்கள் நுழைய முடியும். கவிஞன் ஒரு திருடன். விஞ்ஞானி ஒரு முன்பின் தெரியாத ஆசாமி. மதம் சார்ந்த மனிதனோ ஒரு விருந்தாளி. அவன் இரவில் திருட்டுத்தனமாய் அந்த வீட்டுக்குள் வருவதில்லை. ஒரு திருடனைப் போல் இருந்து கொண்டு குறிப்பிட்ட சில விசயங்களை ஒருவர் அறிய முடியும், வெளியிலேயே சுற்றிச் சுற்றி வந்துகொண்டு உள்ளிருப்பதை அறியாத விஞ்ஞானியைவிட கவிஞன் எவ்வளவோ மேல். விஞ்ஞானி ஒருபோதும் அறிய முடியாத

ஒன்றைப் பற்றி கவிஞன் அறிவான் - அது இரவாயினும், இருளா யிருந்த போதும், அழைக்கப்படா விட்டாலும் ஒரு விருந்தாளியா யில்லை யென்றாலும், முன் வாசல் வழியே நுழையா விடடாலும் அவன் அந்த வீட்டினுள் இருக்கிறான்.

மதம் சார்ந்த மனிதன் ஒரு விருந்தாளியாய் அந்த வீட்டினுள் நுழைகிறான். அவன் அதைப் பெறுகிறான். அவனுக்கு அந்த வீட்டைப் பற்றி மட்டுமல்லாமல், விருந்தளிப்பவரைப் பற்றியும் தெரிந்திருக்கிறது - காரணம் அவன் ஒரு விருந்தாளி. அவன் பருப்பொருளாயிருக்கும் வீட்டை மட்டுமன்றி, உருவமில்லாத விருந்தளிப்பவரையும் - உண்மையில் வீட்டின் மையமாய் இருப்பவரைப் பற்றியும் அறிந்திருக்கிறான். உரிமையாளரை அவன் அறிவான்.

அறிவியல் பொருளை மட்டுமே அறியும். கலை சில சமயங்களில் பொருளல்லாதவற்றையும் கணநேரக் காட்சிகளாய்(glimpses) பெறும். காரணம், ஒரு திருடனும் வீட்டுச் சொந்தக்காரனை எதிர்பாராது சந்திக்கக் கூடும். ஆனால் அவன் (உரிமையாளன்) அயர்ந்து உறங்கிக் கொண்டிருப்பான். அவனால் முகத்தையும் பார்க்க முடியும். ஆனால் இருட்டில்தான், காரணம் அவன் அச்சத்தில் இருப்பான், ஏதாவது தவறாகி விடுமோ என்கிற பயம். அவன் ஒரு திருடன், அதனால்தான் எப்போதும் அஞ்சி நடுங்குகிறான். ஆனால் நீங்கள் ஒரு விருந்தாளி என்கிற முறையில் அந்த வீட்டுக்குள் வரும்போது, அழைக்கப்பட்ட வராவீர்கள். விருந்தளிப்பவன் உங்களைத் தழுவிக் கொள்கிறார், அதில் நல்வரவேற்பு இருக்கிறது. அப்போது மெய்ம்மையின் மையத்தை நீங்கள் அறிகிறீர்கள்.

இந்தியாவில் நாம் இரண்டு வார்த்தைகளைப் பெற்றிருக்கிறோம், இரண்டுமே 'கவிஞன்' என்று பொருள்படுபவை. வேறு எந்த மொழியிலும் 'கவிஞன்' என்பதற்கு இரண்டு வார்த்தைகள் இல்லை, காரணம், அதற்கு அவசியமேற்படவில்லை. ஒரு வார்த்தையே போதுமானது. அது கவிதையை விவரிப்பதாயிருப்பதால் 'கவிஞன்' என்ற வார்த்தையே போதுமானது. ஆனால் வடமொழியில் 'கவி', 'ரிஷி' என்கிற இரண்டு வார்த்தைகளை நாம் பெற்றிருக்கிறோம். அதன் வேறுபாடு நுட்பமானதும், புரிந்து கொள்ளத்தக்கதும் ஆகும். 'கவி' என்பது ஒன்று. அவன் திருடனைப் போல் வருகின்ற கவிஞன். அவன் பங்கேற்கிறபடியால் கவிஞன், ஆனால் அவனுடைய புலமை துண்டு

துண்டாய் கிடக்கிறது. சில குறிப்பிட்ட நேரங்களில்... அவன் - அந்தத் திருடன் வீட்டினுள் இருக்கும்போது ஒரு கணமே வெளிச்சமின்னல் அடித்தாலும் அவனால் வீட்டின் உட்புறத்தை நன்றாகவே பார்க்க முடிகிறது. மின்னல் போனதும்... எல்லாமே ஒரு கனவைப் போல் ஆகி விடுகிறது.

சில நேரங்களில் அந்தக் கவிஞன் மெய்ம்மையைப் பெறா விட்டாலும் எதிர்பாராமல் சந்தித்து விடுகிறான். அதனால்தான் சில நேரங்களில் நீங்கள் வியப்பிலாழ்ந்து விடுவது. யாரோ ஒருவரின் கவிதையை நீங்கள் படிக்கிறீர்கள், அது உங்களுடைய உணர்வைக் கிளறி விடும் ஆற்றல் கொண்டதாயிருக்கிறது. யாரிடமிருந்து அந்த வரிகள் பாய்ந்தோடி வந்தனவோ அந்த நபரைச் சந்திக்க விரும்புகிறீர்கள். ஆனால், அவனைச் சந்திக்கும்போது நீங்கள் ஏமாற்றமடைவீர்கள். அவன் எளிமையாய், ரொம்பச் சாதாரணமாய், ஏதுமற்றவனாய் இருக்கிறான்.

தனது கவிதை வாகனத்தில் பறக்கும்போது அவன் ரொம்பவும் சிறந்த தன்மையுடன் இருந்தான். ஆனால், நீங்கள் சந்திக்கும்போது அந்தக் கவிஞன் வெகு சாதாரணமாயிருக்கிறான். என்ன ஆயிற்று? அத்தகைய வைர வரிகள் ஒரு சாதாரண மனிதனிடமிருந்து வந்திருக்கும் என்று நீங்கள் எதிர்பார்த்திருக்க மாட்டீர்கள். உங்களால் அதை நம்பவே முடியாது. கவிஞன் அந்தக் கோயிலில் நிரந்தரமாய் வசிப்பவனல்லன் என்பதுதான் அதற்குக் காரணம். அவன் ஒரு திருடன். சில நேரங்களில் அவன் இருட்டில் நுழைகிறவன். வீணே சுற்றிச் சுற்றி அலைந்து திரிவதைவிட குறைந்தபட்சம் ஒரு கணநேரக் காட்சியாவது அவனுக்குக் கிடைக்கிறதே. அந்தக் காட்சியைப் பற்றி அவன் பாடுகிறான் - அவனுடைய இருப்புணர்வில் தான் அடைய முடிந்த உள்ளார்ந்த காட்சி பற்றிய துயரம் இருக்கிறது. அவன் மீண்டும் மீண்டும் அதைப்பற்றி பாடினாலும் தற்போது அந்த அனுபவம் அவனுடையதாயிருப்பதில்லை. அது கடந்த காலத்தின் ஏதோவொரு நினைவாய், நினைவுகூரலாய் இருக்கிறது, ஒரு மெய்மையாய் இருப்பதில்லை.

'ரிஷி' ஒரு விருந்தாளியாய் வரவேற்கப்படுகிற கவிஞர். ரிஷி என்றால் 'காண்பவர்' என்று பொருள். 'கவி'யும் காண்பவர் என்றே பொருள்படும். பிறகு அதிலென்ன வேறுபாடு? ரிஷி அதைப் பெறுகிறார் என்பதுதான் அதிலுள்ள வேறுபாடு. அவன் முழுமையான

பகல் வெளிச்சத்தில் அந்த வீட்டுக்குள் பிரவேசிக்கிறான், முன்வாசல் வழியே நுழைகிறான். அவன் ஒன்றும் அழையாத விருந்தாளியல்லன். அவன் யாருடைய சொத்திலும் அத்துமீறிப் பிரவேசிக்கவில்லை. அவன் நல்வரவேற்பு பெறுகிறான், விருந்தளிப்பவர் அவனை வரவேற்றுக் கொள்கிறார்.

அவன் தற்போது பாடவும் செய்கிறான். ஆனால் அவனுடைய பாட்டு வழக்கமான கவிதையில் இருந்து மாறுபட்டிருக்கிறது. உபநிடதங்கள் அத்தகைய கவிதையாய் இருக்கின்றன, வேதங்களும் அத்தகைய கவிதையே. அவை ரிஷிகளின் இதயத்தில் இருந்து வெளிப்பட்டவை. அவர்கள் சாதாரணக் கவிஞர்களல்லர். அவர்கள் விதிமுறைக்கு விலக்கானவர்கள் - அவர்களை விதிவிலக்கானவர்கள் என்றது அவர்கள் பெற்ற காட்சியால்தான். அதுவொன்றும் களவாடப்பட்டதல்ல.

ஆனால், அது நீங்கள் எப்படி முழுமையாய் பங்கேற்பவர் என்பதைக் கற்றுக் கொள்கிறபோதுதான் சாத்தியமாகும். அதுதான் யோகா என்பது. யோகா என்றால் கூடுதல், யோகா என்றால் இணைதல், யோகா என்றால் சேர்க்கை. யோகா - எப்படி மீண்டும் ஒன்று சேர்வது என்று பொருள்படும். எப்படி பிரிவை மறையச் செய்வது, அறிபவரும் அறியப்படுவதும் ஒன்றாகிற முனைக்கு எப்படி வந்து சேர்வது என்று பொருள்படும். இதுதான் யோகத்தின் தேடல்.

அறிவியல், இந்தச் சில பத்து ஆண்டுகளில் எல்லா அறிவும் தனிநபர் சார்ந்தது என்கிறவிதமாய் மிகுந்த விழிப்புணர்வு கொண்டதாகி விட்டது. எல்லா அறிவும் முற்றிலும் தனிநபர் சார்ந்தது என்கிறது யோகா. அது மிகவும் தனிப்பட்டது (personal) என்பதால் நீங்கள் அதில் அக்கறை காட்ட வேண்டும் நீங்கள் பூவாக வேண்டும், பாறையாக வேண்டும், நீங்கள் நிலவாக வேண்டும், நீங்கள் கடலாகவும், மணலாகவும் வேண்டும். நீங்கள் எதைக் கண்டாலும் காண்பவராகவும், காணப்படுவதாகவும் இருக்க வேண்டும். நீங்கள் தொடர்பு கொண்டிருக்க வேண்டும். நீங்கள் பங்கேற்கிற போதுதான் வாழ்க்கை துடிப்புடையதாயிருக்கும், தனது சமச்சீரமை (rhythm)யுடன் கூடிய துடிப்பு. பிறகு அதன்மீது நீங்கள் எதையும் வலியுறுத்த மாட்டீர்கள்.

அறிவியல் விரோதச் செயல் புரிவது, கவிதை கொள்ளை யடிப்பது, மதம் பங்கேற்பது.

தற்போது பதஞ்சலியின் இந்தச் சூத்திரங்களை புரிந்துகொள்ள முயற்சி செய்யுங்கள்.

"காணப்படும் பொருள் பூதங்களாலும், இந்திரியங்களாலும் ஆக்கப்பட்டது. அது ஒளியையும், செயலற்ற தன்மையையும் இயல்பாய் கொண்டது. காண்பவனுக்கு அனுபவமும் முக்தியும் கிடைப்பதற்காக அது உள்ளது."

நீங்கள் புரிந்து கொள்ள வேண்டிய முதல் விசயம், 'இந்த உலகம் இருப்பது நீங்கள் ஞானம்(liberate) வேண்டும்' என்பதற்காகவே. 'ஏன் இந்த உலகம், இங்கே ஏன் இத்தனை துன்பங்கள்? எதற்காக? அதன் நோக்கந்தான் என்ன?' என்று பலமுறை உங்கள் மனதில் கேள்வி எழுந்திருக்கும். என்னிடம் பலரும் வருகிறார்கள். 'இதுதான் முடிவான கேள்வி - "நாம் எதற்காக இருக்க வேண்டும். வாழ்க்கை துன்பகரமானது என்கிறபோது அதை வாழ்வதன் நோக்கம் என்ன? ஒரு கடவுள் இருக்கிறார் என்றால் இந்தப் பெருங்குழப்பத்தை அவர் போக்க வேண்டியது தானே. இந்தத் துன்பகரமான வாழ்க்கையை - அதன் துயரத்தை ஏன் அவரால் துடைத்தெறிய முடியவில்லை? அவர் ஏன் வலுக்கட்டாயமாய் மக்கள் அதை வாழும்படி செய்ய வேண்டும்?" என்கிறார்கள். யோகா இதற்கான பதிலை வைத்திருக்கிறது. 'காண்பவனுக்கு அனுபவத்தைத் தந்து அவ்விதமாய் அவனை விடுபடச் செய்வதே நோக்கம்' என்கிறார் பதஞ்சலி.

அது ஒரு பயிற்சி. துன்புறுதல் ஒரு பயிற்சி. காரணம் துன்புறாமல் பக்குவப்படுவது சாத்தியமில்லை. அது தீ மாதிரி. தங்கம் தூய்மையடைய அந்தத் தீயில் அது புடம் போடப்பட்டாக வேண்டும். தங்கம், 'ஏன்?' என்று கேட்டால் தூய்மையற்றதாயும், தகுதியற்றதாயும் இருக்க வேண்டியதுதான். தீயிலிடப்படுகிற போது தங்கத்தில் உள்ள அசுத்தங்கள் எரிக்கப்பட்டு விடும். சுத்தமான தங்கம் எஞ்சியிருக்கும். விடுதலை என்பது - விடுவிக்கப்படுவது இதுதான். ஒரு பக்குவம், ஒரு வளர்ச்சி முடிவாகத் தூய்மை. எது களங்கமற்றதோ அது இருக்கும், களங்கமானவை எரிக்கப்பட்டு விடும்.

அதைத் தெளிவாகப் புரிந்து கொள்ள வேறு வழியில்லை. அதைத் தெரிந்துணர வேறு வழி கிடையாது. தெவிட்டு நிலை (நிறைவு) என்னவென்று நீங்கள் அறிய விரும்பினால் பசியை நீங்கள் அறிந்திருக்க வேண்டும். பசியை நீங்கள் தவிர்க்க வேண்டியிருக்கும்.

தாகம் தணிவது பற்றி நீங்கள் அறிய விரும்பினால் தாகத்தை கடுமையான தாகத்தை நீங்கள் அறிந்தாக வேண்டும்.

'நான் தாகமாயிருக்க விரும்பவில்லை' என்று நீங்கள் சொன்னால், தாகம் தணிகிற அந்த அருமையான தருணத்தைத் தவற விட்டவராவீர்கள். ஒளி எப்படிப்பட்டது என்று நீங்கள் அறிய விரும்பினால் ஓர் இருண்ட இரவை நீங்கள் கடந்தாக வேண்டும். ஒளியென்றால் என்னவென்றறிய அந்த இருண்ட இரவு உங்களைத் தயார்படுத்தும். வாழ்க்கை எப்படிப்பட்டதென்று நீங்கள் அறிய விரும்பினால் மரணத்தைக் கடந்தாக வேண்டும். வாழ்க்கையை அறிந்து கொள்வதற்கான நுட்பத்தை மரணம் உங்களுக்குள் தோற்றுவிக்கிறது. அவை எதிரெதிரானவையல்ல, அவை நிறைவைத் தருகிறவை.

எதிரானது என்று உலகில் எதுவும் இல்லை, எல்லாமே நிறைவை உண்டாக்குகிறவைதாம். 'இந்த உலகம்' என்று ஓர் உலகம் இருப்பதால்தான் 'அந்த உலகம்' என்கிற ஒன்றை நீங்கள் அறிந்து கொள்ள முடிகிறது. 'அது'வென்பதை அறிவதற்காகவே 'இது'வென்பது இருக்கிறது. பருப்பொருள் (material) இருப்பது ஆன்மா சார்ந்ததை அறிந்து கொள்வதற்காகவே. நரகம் இருப்பது சொர்க்கத்தை அடைவதற்குத்தான். இதுதான் நோக்கம். இதில் ஒன்றை நீங்கள் தவிர்க்கப் பார்த்தால் மற்றொன்றையும் தவிர்க்கும் படியாகத்தான் இருக்கும். காரணம் அவை ஒன்றின் இருவேறு நிலைகள். நீங்கள் புரிந்து கொண்டு விட்டால் துயரம் இல்லை. இது ஒரு பயிற்சி, ஒழுங்குமுறை அவ்வளவுதான். ஒழுங்குமுறை என்பது கடினமானது. அது கடினமாயிருக்கக் காரணம் அப்போதுதான் உண்மையான பக்குவம் அதிலிருந்து வெளிப்படும்.

இந்த உலகம் ஒரு பயிற்சிக்கூடம், கற்றுணரும் கல்விக் கூடம் என்கிறது யோகா. அதைத் தவிர்க்காதீர்கள். அதிலிருந்து தப்பியோட முயலாதீர்கள். அதைவிட அதை வாழ்ந்து பாருங்கள். மீண்டும் வாழ்ந்தாக வேண்டும் என்கிற கட்டாயம் இல்லாதபடிக்கு அதை முழுமையாய் வாழ்ந்து விடுங்கள். தெளிந்த சிந்தனையும் புரிந்து கொள்ளும் ஆற்றலும் உள்ள ஒருவன் (ஞானி) திரும்பி வரமாட்டான். அதற்கான அவசியமில்லை என்று நாங்கள் சொல்வதன் பொருள் அதுதான். வாழ்க்கை வைக்கிற அத்தனைத் தேர்வுகளிலும் அவன் வெற்றி பெற்று விடுகிறான். அவன் திரும்பி வரத் தேவையில்லை. மீண்டும் மீண்டும் ஒரே மாதிரியான வாழ்க்கையை வாழும்படி நீங்கள்

வற்புறுத்தப்படுவதற்குக் காரணம் நீங்கள் அதைக் கற்றுணரவில்லை என்பதுதான்.

நீங்கள் கற்றுணராமலே அதைத் திரும்பத் திரும்ப அனுபவித்துக் கொண்டிருக்கிறீர்கள். அதே அனுபவம் - அதே கோபம். எத்தனை ஆயிரம் முறை நீங்கள் கோபப்பட்டிருப்பீர்கள்? அதைக் கணக்கிட்டுப் பாருங்கள். அதிலிருந்து என்ன தெரிந்து கொண்டீர்கள்? எதுவுமேயில்லை. அந்தச் சூழ்நிலை எழும் போதெல்லாம், ஏதோ அப்போதுதான் முதல் முறையாய் கோபப்படுகிற மாதிரி திரும்பத் திரும்பக் கோபப்படுகிறீர்கள்.

எத்தனை முறை காமமும், பேராசையும் உங்களை ஆட் கொண்டிருந்தது? மீண்டும் அது உங்களை ஆட்கொள்ளும். கற்றுக் கொள்வதில்லை என்று தீர்மானித்துக் கொண்டதுபோல் நீங்கள் மீண்டும் பழைய முறையிலேயே எதிர்வினை புரிகிறீர்கள். கற்றுணரத் தயாராவதென்பது யோகியாவதற்குத் தயார்ப்படுவதுதான். கற்றுணர்வதில்லை என்று நீங்கள் தீர்மானித்திருந்தால், நீங்கள் கட்டுப்பாடற்றவராய் (blind folded) இருக்க விரும்பினால், அதே அபத்தத்தை மீண்டும் மீண்டும் தொடர விரும்பினால் நீங்கள் திரும்பவும் தூக்கியெறியப்படுவீர்கள். நீங்கள் தேர்ச்சி பெறவில்லையென்றால் மீண்டும் அதே வகுப்புக்குத்தான் அனுப்பப்படுவீர்கள்.

வாழ்க்கையை வேறு எந்த வகையிலும் மேற்கொள்ளாதீர்கள். அது மிகப்பெரிய பயிற்சிக் கூடம். இருக்கிற ஒரே பல்கலைக் கழகம் (University). 'யூனிவர்சிட்டி' என்கிற வார்த்தை '*Universe' (அண்டம்) என்பதிலிருந்து வந்தது. உண்மையில் எந்தப் பல்கலைக் கழகமும் தன்னைப் பல்கலைக் கழகம் என்று அழைத்துக் கொள்தில்லை. அந்தப் பெயர் ரொம்பப் பெரியதாய் தெரிகிறதுதான்! இந்த அண்டம் முழுதும் ஒரு பல்கலைக் கழகம் எனலாம். ஆனால் நீங்களோ சின்னச் சின்ன பல்கலைக் கழகங்களைத் தோற்றுவித்து அதில் படித்துத் தேர்வு பெற்றாலே எல்லாம் அறிந்தவர் (knower) ஆகிவிடலாம் என்று எண்ணுகிறீர்கள். இல்லை, மனிதனால் உருவாக்கப்பட்ட இந்தச் சிறிய பல்கலைக் கழகங்கள் பயன்படாது. இந்தப் பல்கலைக் கழகத்தின் வழியே நீங்கள் வாழ்க்கை நெடுகிலும் பயணித்தாக வேண்டும்.

---

* யுனிவர்ஸ் (Universe) - படைக்கப்பட்ட அனைத்துப் பொருள்களின் தொகுதி. அண்டம்.

புதஞ்சலி சொல்கிறார் ... 'அனுபவத்தை வழங்கி அவ்விதமாய் விடுதலையை வழங்கும் நோக்கத்திற்காக' என்று. அனுபவம் விடுவிக்கிறது. 'உண்மையை அறிந்து கொள்ளுங்கள். அந்த உண்மை உங்களை விடுவிக்கும்' என்கிறார் இயேசு. ஒரு பொருளை அல்லது செயலை நீங்கள் அனுபவித்தறியும் போது என்ன நடக்கிறதென்று கவனியுங்கள் - அதில் பங்கேற்பும், கண்காணிப்பும் சேர்ந்திருக்கிறது - அதுதான் விடுதலை (முக்தி). அதிலிருந்து ஏதோ வெளிப்படுகிறது. அது - அனுபவம். ஓர் அனுபவம் உண்மையாகிறது. மறை நூல்களிலிருந்து நீங்கள் அதனைக் கையாளவில்லை. வேறு யாரிடமுமிருந்து நீங்கள் அதைக் கடன் வாங்கவில்லை.

அனுபவத்தை இரவலாய் பெற முடியாது. பொதுக் கோட்பாடுகளை மட்டுமே இரவலாய் பெற முடியும். அதனால்தான் கோட்பாடுகள் தூய்மையற்றவையாய் இருக்கின்றன. காரணம், அவை பல்வேறு கைகளில் மாறி வந்தவை. அழுக்கடைந்த ரூபாய் நோட்டு மாதிரி! அனுபவம் எப்போதும் புதிதாயிருக்கும், காலைப் பனித்துளிகளைப் போன்று. இன்று காலையில் பூத்த ரோஜாவைப் போல் முற்றிலும் புதிதாயிருக்கும். அனுபவம் எப்போதுமே களங்கமற்றதாய் கன்னித்தன்மையோடு காணப்படும் - அதனை யாரும் தீண்டியதில்லை. நீங்கள்தான் முதன் முறையாய் அதை ஆட்கொள்கிறீர்கள். உங்கள் அனுபவம் உங்களுடையது. அது வேறு யாருடையதுமல்ல. அதை வேறு யாரும் உங்களுக்குத் தர இயலாது.

புத்தர்களால் வழியைச் சுட்டிக்காட்ட முடியும். ஆனால் நீங்கள்தான் நடக்க வேண்டியிருக்கும். உங்களுக்காக எந்தவொரு புத்தரும் நடக்க முடியாது. 'எனது கண்களின் வழியே பார்த்துக் கொள்' என்று ஒரு புத்தர் தம்முடைய கண்களை உங்களுக்கு வழங்க முடியாது. அப்படியே அந்த புத்தர் தம்முடைய கண்களை உங்களுக்கு வழங்கினாலும் நீங்கள் கண்களை மாற்றிக் கொண்டாலும் - அந்தக் கண்கள் - உங்களை மாற்றும் திறனுடையதாயிருக்காது. அந்தக் கண்கள் உங்களுடைய இயந்திர நுட்பத்துக்கு (mechanism)ப் பொருந்துகிற போது, உங்களுடைய செய்நுட்பம் அந்தக் கண்களைத் தம்முடையவையாக்கிக் கொள்ளும். ஆனால் அந்தக் கண்களால் உங்களை மாற்ற முடியாது. அவை பகுதிகள். நீங்கள்தான் பெரிதும் முக்கியமானவர்.

எனது கைகளை நான் உங்களிடம் கொடுக்க முடியாது. அப்படியே கொடுத்தாலும் அந்தத் தீண்டுகை (touch) என்னுடைய தாயிருக்காது. அது உங்களுடையதாகும்.

என்னுடைய கையில் இருந்தே என்றாலும், ஏதோ ஒன்றை நீங்கள் உணர்கிறீர்கள். அதை உணர்வது நீங்கள்தான், என்னுடைய கை அல்ல. மெய்மையை இரவலாய்ப் பெற சாத்தியமில்லை.

அனுபவம் விடுவிக்கிறது. தினமும் என்னைச் சந்திக்க வருகிறவர்களெல்லாம் 'ஒருவர் கோபத்தில் இருந்து எப்படி விடுபடுவது? பாலுறவில் இருந்து, சிற்றின்பத்தில் இருந்து எப்படி விடுபடுவது? இதிலிருந்தும் அதிலிருந்தும் எப்படி விடுபடுவது?' என்று கேட்கிறார்கள். 'அதை வாழ்ந்து பார்ப்பதன் மூலமாய்' என்று நான் சொன்னால் அதிர்ச்சியடைகிறார்கள். தங்களுடைய உணர்ச்சிகளை அடக்கி வைப்பதற்கு வழி கேட்டு வருகிறார்கள். இந்தியாவில் வேறொரு குருவிடம் அவர்கள் சென்றிருந்தால் தங்களை அடக்கி வைத்துக் கொள்ள ஏதானும் ஒரு வழியைக் கண்டு கொண்டிருப்பார்கள். அடக்கி வைப்பதென்பது அனுபவத்தின் அத்தனை வேர்களையும் துண்டித்துக் கொள்வதாகும். அது ஒருபோதும் விடுபடுவதாகாது. அடக்கி வைப்பதென்பது ஓர் அடிமைத்தளை.

நீங்கள் ஒரு கூண்டுக்குள் வாழ்கிறீர்கள். முன்பொரு நாள் ஒரு புது சந்நியாசி என்னிடம் வந்து சொன்னார், "நான் கூண்டில் இருக்கிற ஒரு மிருகம் மாதிரி உணர்கிறேன்" என்று. அந்த மிருகத்தை என்னுடைய உதவியோடு அவர் கொல்ல விரும்புவதாய் எனக்குப் பட்டது. பழித்துக் கூறுகிற போது மட்டுமே 'மிருகம்' என்கிற வார்த்தையை நாம் பயன்படுத்துவோம். அந்த வார்த்தை நம்முடைய கண்டனத்தைச் சுமந்திருக்கும். ஆனால், அந்தச் சந்நியாசியிடம் (சாது) 'ஆகா,நான் உமக்கு உதவுகிறேன், நான் கூண்டையுடைத்து அந்த மிருகத்தை விடுவித்து விடுகிறேன்' என்று சொன்னபோது அவர் கொஞ்சம் அதிர்ச்சியடைந்தார். காரணம் நீங்கள் 'மிருகம்' என்று சொல்கிறபோது அதை முன்பே மதிப்பிட்டு, அதற்கெதிராய் தீர்ப்பளித்து விட்டீர்கள். மிருகம் அல்லது மிருகத்தன்மை என்கிற அந்த வார்த்தை! நீங்கள் சொல்ல விரும்பியதை வெகு துல்லியமாய் சொல்லி விட்டீர்கள். நீங்கள் அதை ஏற்பதில்லை. அதில் தங்கி வாழ்வதில்லை. அதனால்தான் ஒரு கூண்டை உருவாக்கிக் கொண்டீர்கள்.

கூண்டு என்பது பண்பு. எல்லாப் பண்புகளும் கூண்டுகள்தாம். சிறைகள்தாம், உங்களைப் பிணைக்கிற விலங்குகள் தாம். பண்பாளர்கள் எல்லாம். சிறைப்பட்டவர்கள்தாம். விழித்திருக்கும் ஒருவன் பண்பாளனாக மாட்டான். அவன் உயிர் வாழ்ந்து கொண்டிருக்கிறான், அவ்வளவே. அவன் முழுமையான இயக்கத்தில் இருந்தாலும் பண்புடையவனாக மாட்டான். காரணம் அவனிடம் கூண்டு இல்லை. அவன் தானாய் (புறத்தூண்டுலின்றி) இயங்குகிறவன். அவன் விழிப்புணர்வோடு செயல்படுவதால் எதுவும் தவறாகி விடுவதில்லை. ஆனால், தன்னைப் பாதுகாத்துக் கொள்கிற விதமாய் ஒரு கூண்டு அவனிடம் கிடையாது.

கூண்டு ஒரு மாற்று. ஒரு தூங்குமூஞ்சி வாழ்க்கை வாழ்வதாயிருந்தால் உங்களுக்கு பண்பு தேவைப்படும். ஆக, பண்பு என்பது பின்பற்றத்தக்க வழிமுறைகளை உங்களுக்குத் தருவது. பிறகு, நீங்கள் எச்சரிக்கையாய் இருக்கத் தேவையில்லை. நீங்கள் ஒன்றைக் களவு செய்ய எண்ணுகிறீர்கள். பண்பு உங்களைத் தடுக்கும். "கூடாது. அது தவறு. அறமுறை விதியை மீறுவதாகும், நீ நரகத்தில் துன்பப்பட நேரும். புனிதமான விவிலிய நூலை நீ மறந்து விட்டாயா? ஒருவன் அனுபவித்தாக வேண்டிய தண்டனைகளையெல்லாம் நீ மறந்து விட்டாயா?" என்று சொல்லும். இதுதான் பண்பு. இது உங்களைத் தடுத்துக் கொண்டிருக்கும். நீங்கள் களவாட விரும்புகிறீர்கள், பண்பு அதற்கு ஓர் இடையூறாயிருக்கிறது, அவ்வளவுதான்.

விழிப்புணர்வு கொண்ட ஒருவன் களவு செய்ய மாட்டான். அதற்காக அவன் பண்புடையவன் என்றாகி விடுவதில்லை. அதுதான் அதிலுள்ள அற்புதம், நேர்த்தி. அவனிடம் பண்பு கிடையாது. ஆனால், திருட மாட்டான் காரணம் அவனுடைய புரிதல். தற்போது அவன் பாவத்தைப் பற்றி அஞ்சுகிறான். பாவத்தைப் போல் மோசமானது வேறொன்றில்லை. தண்டிக்கப்படுவது குறித்து அவன் அஞ்சுவதில்லை. அதனால் பாவங்கள் தண்டிக்கப்படாது என்பதல்ல. உண்மையில் பாவங்களே தண்டனை தாம். இன்று கோபாவேசப்படுகிற நீங்கள் நாளையோ மறுபிறவியிலோ தண்டிக்கப்படுவீர்கள் என்றாகாது. அது சுத்த அபத்தம். உங்கள் கையை இன்று தீயில் வைத்தால் அது இன்றே புண்ணாகி விடும், உடனே அது புண்ணாகி விடுகிறது. தொடுவதும் சுடுவதும் ஒரே சமயத்தில் நிகழ்பவை. ஒரேயொரு கணமும் இடைவெளி இருக்காது. வாழ்க்கை எதிர்வரும் காலத்தில் நம்பிக்கை வைப்பதில்லை, அது நிகழ் காலத்தில் இருப்பது.

பாவங்கள் பிற்பாடு தண்டிக்கப்படும் என்பதாகாது. பாவங்களே தண்டனைதாம். தண்டனை இயல்பாயிருக்கிறது. நீங்கள் களவு செய்கிறீர்கள்; தண்டிக்கப்படுகிறீர்கள். களவு செய்ததுமே நீங்கள் தண்டிக்கப்படுகிறீர்கள். காரணம், நீங்கள் சிறையிலடைக்கப்பட்ட நிலையை அடைகிறீர்கள், மிகுந்த அச்சத்துக்குள்ளாகிறீர்கள். இந்த உலகத்தை உங்களால் எதிர்கொள்ள முடிவதில்லை. தொடர்ந்து குற்ற மனப்பான்மை கொண்டு வருந்துகிறீர்கள். நீங்கள் ஒரு தவறைச் செய்து விட்டீர்கள், எந்தச் சமயத்திலும் பிடிபடும்படி ஆகலாம். சொல்லப் போனால் நீங்கள் முன்பே பிடிபட்டு விட்டீர்கள். உங்களிடமே நீங்கள் அகப்பட்டுக் கொண்டீர்கள். நீங்கள் எப்படி அதை மறக்க முடியும்? நீங்கள் எவ்வாறு உங்களை மன்னித்துக் கொள்வீர்கள்? அது தயங்கித் தயங்கி வரும், உங்களை நிழலாய்த் தொடரும். அது பேயுருக் கொண்டு உங்களை சுற்றிச் சுற்றி வரும். அதுவே அதற்குத் தண்டனை.

பண்பு நீங்கள் தவறு செய்யாதபடிக்குத் தடுத்துக் கொண்டிருக்கும். ஆனால், அதைப்பற்றிச் சிந்திப்பதிலிருந்து உங்களைத் தடுக்காது. களவாடுவதும், களவு செய்ய எண்ணுவதும் ஒன்றுதான். உண்மையி லேயே ஒரு கொலையைச் செய்வதும் அதுபற்றிய சிந்தனையில் இருப்பதும் ஒன்றுதான். காரணம் உங்களுடைய தன்னுணர்வை (consciousness)ப் பொறுத்தவரை நீங்கள் ஒன்றைப் பற்றி நினைத்தாலே அதைச் செய்தமாதிரிதான். பண்பு உங்களுக்குத் தடையாகி விடுவதால் அது ஒருபோதும் செயல்வடிவம் பெறு வதில்லை. பண்பு இல்லையென்றால் அது செயலாகி விட்டிருக்கும். ஆக, உண்மையில் பண்புதான் பெரும்பாலும் இதனைச் செய்வது, அது எண்ணத்தைத் தடுக்கிறது. அந்த எண்ணம் செயலாக மாறுவதற்கு அது இடமளிக்காது.

அது சமூகத்துக்கு நன்மை பயப்பதாயிருக்கும். ஆனால், உங்களுக்கு நன்மை செய்யாது அது சமூகத்தைப் பாதுகாக்கிறது. உங்களுடைய பண்பு முகத்தைப் பாதுகாக்கிறது. உங்களுடைய பண்பால் மற்றவர்கள் பாதுகாக்கப்படுகிறார்கள், அவ்வளவுதான். அதனால்தான் ஒவ்வொரு சமூகமும் பண்பை வலியுறுத்துவது. நெறியுள்ள நடத்தை அது, இது என்று வற்புறுத்துவது. ஆனால், அது உங்களைப் பாதுகாப்பதில்லை.

விழிப்புணர்வில் மட்டுமே நீங்கள் பாதுகாக்கப்படுகிறீர்கள். விழிப்புணர்வை எப்படிப் பெறுவது? வாழ்க்கையை- அதன்

முழுமையில் வாழ்வதைத் தவிர வேறு வழியில்லை "... காண்பவருக்கு அனுபவத்தை, அதன் வழியே விடுதலையை வழங்குவதே நோக்கமாகும்..."

காணப்படும் பொருள் பூதங்களாலும் (elements) இந்திரியங் களாலும் (sense organs) ஆக்கப்பட்டது ... முக்குணங்கள். யோகா மூன்று குணங்களில் நம்பிக்கை வைக்கிறது. சத்வம், ரஜஸ், தமஸ் என்கிற முக்குணங்கள். சத்வம் பொருள்களை நிலைக்கச் செய்யும் தன்மை கொண்டது. ரஜஸ் செயல்படுத்தும் தன்மை உடையது. தமஸ் மந்த நிலையாகும். இம்மூன்றும் அடிப்படையான தன்மைகள். இம்மூன்றின் வழியேதான் உலகம் முழுமையும் இயங்குகிறது. இது யோகாவின் முத்தொகுப்பு (trinity) ஆகும்.

தற்போது இயற்பியல் ஆய்வாளர்கள் யோகாவை ஏற்றுக்கொள்ளத் தயாராயிருக்கிறார்கள். அவர்கள் அணுவைப் பிளந்து எலக்ட்ரான்களையும், நியூட்ரான்களையும், புரோட்டான் களையும் கண்டடைந்தார்கள். இம்மூன்றும் அதே மூன்று தன்மைகளைக் கொண்டவை. ஒன்று ஒளியின் தன்மை கொண்டது. சத்வம் – நிலைப்பு. மற்றொரு தன்மை ரஜஸ் – செயல், ஆற்றல், வலிமை. மூன்றாவது சோம்பல் தன்மை – தமஸ். ஒட்டு மொத்த உலகமும் இம்மூன்று தன்மைகளால் ஆக்கப்பட்டது. இம்மூன்று குணங்களின் வழியே விழிப்புணர்வுடைய மனிதன் கடந்து செல்ல வேண்டி யிருக்கும். அவன் இம்மூன்று குணங்களையும் அனுபவித்தறிகிறான். ஒருவேளை யோகத்தின் உண்மையான ஒழுங்கு முறையை, அந்த ஒத்திசைவை (harmony) நீங்களும் அனுபவித்திருந்தால்...

எல்லாரும் அனுபவிக்கிறார்கள்; சில நேரம் நீங்கள் சோம்பலாய் உணர்வீர்கள், சில நேரங்களில் முழு ஆற்றலுடன் இருப்பதாய் உணர்வீர்கள், சில நேரங்களில் நிறைவாகவும், கவலையற்றும் உணர்வீர்கள். மிகக் கொடுமையாக, மோசமாக உணர்கிற நேரமும் உண்டு. சில நேரம் நீங்களே இருளாகவும் சில நேரம் விடியலாகவும் உணர்வீர்கள். இந்தக் குணங்களனைத்தையும் நீங்கள் அனுபவித் துணர்வீர்கள். பல தருணங்களில் அவை தொடர்ச்சியாய் வர ஒரு சக்கரச் சுழற்சி இருக்கும். ஆனால் அவை சரியான விகிதத்தில் இருப்பதில்லை. மந்தத் தன்மை உடையவர் தொண்ணூறு சதவிகிதமும் செயலற்றவராகவே இருப்பார். அவரிடம் கொஞ்சம் செயல்படும் தன்மையும் இருக்கும். கொஞ்சமாவது செயல்பட்டுத்தான் இந்தச்

சோம்பேறி வாழ்க்கையை அவர் வாழ வேண்டியிருக்கும். அவருடைய செயல் அந்த மந்தத் தன்மைக்கு வலுவூட்டுவதாகும். அவர் மக்களிடம் கொஞ்சம் விரும்பத்தக்க விதமாய் நடந்து கொள்வார். இல்லையேல் மக்கள் அவரிடம் வெறுப்பும் கோபமும் கொண்டு விடுவார்களே. அவருடைய மந்தத் தன்மையை மக்கள் சகித்துக் கொள்ள மாட்டார்கள்.

நீங்கள் கவனித்திருக்கிறீர்களா? அத்தனை சுறுசுறுப்புடன் செயல்பட முடியாத பருமன் பேர்வழிகள் எப்போதும் சிரித்துக் கொண்டிருப்பதை. அதுதான் அவர்களுக்குப் பாதுகாப்பு. தங்களால் சண்டையிட முடியாதென்று அவர்களுக்குத் தெரியும். சண்டை போட்டால் தங்களால் தப்பியோட முடியாது என்பதை அவர்கள் அறிவார்கள். அவர்களால் சண்டையிட முடியாது.

ரொம்பவும் பருமனானவர்கள் எப்போதும் சிரித்தபடி மகிழ்ச்சியாயிருப்பதை நீங்கள் பார்க்கிறீர்கள். என்ன காரணம்? பருமன் பேர்வழிகள் ஒருபோதும் கவலைப்படாமல் மகிழ்ச்சியாயிருப்பது ஏன்? உளவியலாரும், தேகவியலாரும் அதுதான் அவர்களுக்குப் பாதுகாப்பு என்கிறார்கள்.

வாழ்க்கைப் போராட்டத்தில் எப்போதும் சண்டையிடும் நிலையில் இருப்பது மெலிந்தவர்களுக்கும், வலுவற்றவர்களுக்கும் சிரமம். அவர்களால் சண்டையிட முடியும். எதிராளி பலவீனராய் இருந்தால் அவரை அடித்து நொறுக்கி விடுவார்கள். எதிராளி பலசாலியாய் தெரிந்தால் பேசாமல் நழுவி விடுவார்கள். அவர்கள் இரண்டையும் செய்ய முடியும். ஆனால் பருமனானவரால் எதையும் செய்ய இயலாது. புன்னகைப்பதைத் தவிர. அவர் எல்லாரிடமும் நல்லதனமாய் நடந்து கொண்டு விடுவார். அதுதான் அவருக்கும் பாதுகாப்பு அப்போதுதானே மற்றவர்களும் நல்லவிதமாய் அவரிடம் நடந்து கொள்வார்கள்.

சோம்பேறிகள் எப்போதுமே சரியாக இருப்பார்கள். அவர்கள் கெட்டதாய் எதையும் செய்கிறதில்லை. ஒரு குற்றத்தைச் செய்வதற்குக்கூட கொஞ்சம் சுறுசுறுப்பு தேவைப்படுமே. ஒரு சோம்பேறியை இட்லராக்க உங்களால் முடியாது. அது நடவாத காரியம். ஒரு சோம்பேறியை நெப்போலியனாக்குவதோ அலெக்சாண்டர் ஆக்குவதோ முடியாத காரியம். சோம்பேறிகள் பெரிதாய் எந்தப் பாவச் செயலையும் செய்வதில்லை. அவர்களால்

முடியாது. அவர்கள் ஒருவகையில் நல்லவர்கள்தாம், காரணம் ஒரு பாவத்தைச் செய்யவோ அல்லது கெட்டதாய் ஒன்றைச் செய்யவோ அவர்கள் சுறுசுறுப்பாய் செயல்பட வேண்டுமே - அது அவர்களுக்கு ஏற்றதல்ல.

அடுத்தது, எப்போதும் சுறுசுறுப்பாய் செயல்படுகிறவர்கள், இவர்களிடம் நிதானம் இருக்காது. இவர்கள் எப்போதும் எதையாவது தொடர்ந்து கொண்டேயிருப்பவர்கள். எங்கே போய்ச் சேருவோம் என்பது பற்றியெல்லாம் இவர்கள் கவலைப்படுவது கிடையாது. அது முக்கியமில்லை. விரைந்து செல்ல வேண்டும் என்கிற ஒரே கவலைதான் அவர்களுக்கு. தாங்கள் சென்றடைகிற இடத்தைப் பற்றிக் கவலையில்லை. வேகமாய் சென்றால் சரி. 'எங்கே போகிறாய்?' என்று கேட்காதீர்கள். இவர்கள் எங்கேயும் போகவில்லை. போய்க்கொண்டே இருக்கிறார்கள். அவ்வளவுதான். இவர்களுக்கு அடையும் இடம் என்று எதுவும் கிடையாது. சுறுசுறுப்பாய் செயல்படுவதற்கான ஆற்றல் இருக்கிறது இவர்களிடம். உலகிலேயே ஆபத்தான ஆசாமிகள் இவர்கள். சோம்பேறிகளைவிட மிகவும் அபாயகரமானவர்கள். இந்த இரண்டாவது வகையினத்தில் வருபவர்கள்தாம் இட்லர்களும், முஸோலினிகளும், நெப்போலியன்களும், அலெக்சாண்டர்களும். விஷமத்தனமான வணிகர்கள் இவர்கள். இவர்களை இரண்டாவது வகையினத்தில் சேர்க்கக் காரணம் ஆற்றல் இருக்கிறது இவர்களிடம், ஏறுமாறான ஆற்றல்.

அடுத்தது, மூன்றாவது வகையில் வருகிறவர்கள். இந்த வகையினரைக் கண்டுபிடிப்பது அரிது. எங்கோ ஒரு லாட்ஸு (Laotzu) அமர்ந்திருப்பார் அமைதியாக - அது சோம்பலல்ல, இணக்கம். சுறுசுறுப்போ சோம்பலோ இல்லாமல் இணக்கமாயிருப்பது: ஆற்றலின் கொள்கலனாய்த் திகழ்ந்தாலும் ஓசைப்படாமல் அமைதியாய் அமர்ந்திருப்பது. ஆற்றல் மிக்க ஒருவர் அமைதியாய் உட்கார்ந்திருப்பதை நீங்கள் கவனித்திருக்கிறீர்களா? அவரைச் சுற்றி உயிர்ச்சக்தி ஒளிர்கின்ற ஒரு களன் (field) இருப்பதை நீங்கள் உணர்வீர்கள். அசைவற்று, எதையும் செய்யாமல், சும்மா இருத்தல்!

இம்மூன்றுக்கும் இடையில் ஒரு சமநிலையை யோகா கண்டுபிடிக்கிறது. நீங்கள் இம்மூன்றுக்கும் இடையில் ஒரு நடுநிலை அமைதியைக் கண்டுகொண்டால் மனித வலிமையின் எல்லைகளை எல்லாம் கடந்து சென்றவராவீர்கள். ஒன்று மற்றவற்றைக் காட்டிலும்

கூடுதலாயிருந்தால் அந்த ஒன்று உங்களுடைய பிரச்சினையாகிவிடும். நீங்கள் சுறுசுறுப்பைவிட சோம்பல் அதிகம் உள்ளவரென்றால் அப்போது சோம்பல் உங்களுடைய பிரச்சினையாகி விடும். நீங்கள் அதனால் துன்பப்படுவீர்கள். மூன்றாவது. ஒருபோதும் கூடுதலாயிருப்பதில்லை, அது எப்போதும் குறைவாகவேயிருக்கும். ஆனால் அதுவும் கொள்கை ரீதியில் சாத்தியமென்றாலும் - ஒருவர் ரொம்பவும் நல்லவராயிருப்பதென்பது - அதுவும் அவருக்குத் துன்பமளிப்பதாகவே இருக்கும். அதுவும் சமநிலையின்மை (imbalance)யைத் தோற்றுவிக்கும். சமநிலையில் வாழ்வதே சரியான வாழ்க்கை.

புத்தர் தனது சீடர்களுக்காக எட்டு ஒழுக்க விதிகளை வகுத்திருந்தார். ஒவ்வொரு விதிக்கு முன்பாகவும் 'ஸமா' என்கிற வார்த்தையை அவர் சேர்த்திருந்தார். அவர் 'விழிப்போடிரு' என்று சொன்னால் அவர் 'ஸ்மிருதி' என்று மட்டும் சொல்லவில்லை, 'ஸம்யக் ஸ்மிருதி' என்று சொல்கிறார். ஆங்கிலத்தில் அதனை 'பொருத்தமான நினைவாற்றல் (right memory) என்றே அவர்கள் மொழி பெயர்க்கிறார்கள். 'சுறுசுறுப்பாயிருங்கள்' என்று அவர் சொல்வதாயின் 'சரியான சுறுசுறுப்புடனிருங்கள்' என்று சொல்வார். 'சரியாக...' என்றதன் மூலம் 'சமநிலையில் இருத்தல்' என்று அவர் பொருள் கொள்கிறார். 'ஸம்யக்' என்கிற இந்திச் சொல்லுக்குப் பொருள் சமநிலை. 'ஸமாதி' என்பதற்கும், தியானம் என்பதற்கும்கூட புத்தர் 'ஸம்யக் ஸமாதி' என்று சொல்கிறார். ஸமாதி நிலையும் அதிகரித்தால் ஆபத்து. நல்ல தன்மை கூடுதலாயிருந்தால் அதுவும் ஆபத்துதான்.

சமநிலை என்பது முக்கிய காரணி (factor). நீங்கள் எவ்வகையாய் செய்தாலும், கயிற்றின் மேல் நடக்கிற கழைக் கூத்தாடி மாதிரி எப்போதும் சமன் செய்தவாறு இருங்கள். அதுதான் நியாயமான நிலை: நடுநிலை அமைதிக்கான காரணி. முடிவான இணைப்பை, முடிவான யோகத்தை அடைய விரும்புகிறவர் ஆழ்ந்த நடுநிலை அமைதியைக் கடைப்பிடிக்க வேண்டியிருக்கும். நடுநிலை அமைதியில் முக்குணங்களையும் நீங்கள் கடந்து செல்கிறீர்கள். நீங்கள் குணாதீதத்துக்குரியவர் ஆகிறீர்கள். இம்மூன்று குணங்களையும் கடந்து அப்பால் செல்கிறீர்கள். இனியும் இந்த உலகின் ஒரு பகுதியாய் நீங்கள் இருப்பதில்லை. நீங்கள் அதற்குமப்பால் சென்று விடுகிறீர்கள்.

மூன்று குணங்கள் - நிலைப்புத் தன்மை, செயல், செயலற்ற தன்மை என்பனவாம். அவை நான்கு நிலைகளைக் கொண்டிருக்கும். வரையறுக்கப்படாதது, வரையறுக்கப்பட்டது. அடையாளம் மட்டும் உடையவை, அடையாளமற்றவை என நான்கு நிலைகள்.

இம்மூன்று குணங்களும் நான்கு நிலைகளைக் கொண்டிருக்கும். முதலாவது நிலையை பதஞ்சலி 'வரையறுக்கப்பட்டது' என்கிறார். நீங்கள் அதனைப் பொருள் (matter) என்றழைக்கலாம். அதுவே உங்களைச் சுற்றி வரையறையுடன் காணப்படுகிறது. பிறகு - 'வரையறையில்லர்தது' - மனம் என்று நீங்கள் அதனை அழைக்கலாம். அதுவும் அங்கே இருக்கிறது. உங்களால் தொடர்ந்து உணரப் படுவதாயும் அதே சமயம் வரையறைக்குட்படாததாயும் அது உள்ளது. மனம் எப்படிப்பட்டதென்று உங்களால் விவரிக்க முடியாது. நீங்கள் அதை அறிகிறீர்கள், தொடர்ந்து அதனுடன் வாழ்கிறீர்கள். ஆனால் உங்களால் அதை விவரிக்க இயலாது. பொருளை விவரிக்க முடியும் மனதை அல்ல.

பிறகு - அடையாளம் மட்டும் உடையவை, சுட்டிக் காட்டப் படுபவை. இவை குறிப்பால் உணர்த்தப்படும். விவரிக்கப்படாததை விட, குறிப்பால் உணர்த்தப்படுபவை நுட்பமானதாகும். அதுவே 'தான்' என்கிற அகநிலைப்பண்பு (self). உங்களால் அதைக் குறிப்பால் மட்டுமே உணர்த்த முடியும். அது விவரிக்கப்படாதது என்றுகூட நீங்கள் சொல்வதற்கில்லை. காரணம், ஒன்று விவரிக்கப்படாதது என்று சொல்கிறபோது, அது விவரிக்கப்பட வேண்டியது என்று நுட்பமாய் சொல்லப்படுகிறது. எனவே அதுவும் ஒரு விளக்கம்தான். ஒன்று விவரிக்கப்படாமல் இருக்கிறது என்று சொல்வதற்கு ... எதிர்மறையான ஒருவழியில் நீங்கள்தாம் முன்பே அதை விவரித்து விட்டீர்களே. ஆக, பிரபஞ்ச இருப்பின் நுட்பமான அடுக்காக ஒருவரின் அகநிலைப்பண்பு (தனித்தன்மை) இருக்கிறது. அது சுட்டிக் காட்டப்பட்டதாயுள்ளது. அதன்பிறகு அதிநுட்பமான அறிகுறி தோன்றாது இருக்கிற (unmanifest) சுட்டிக்காட்டப்படாத ஒன்று உள்ளது. அதுவே தான் அற்றது (noself) ஆகும்.

ஆக; பொருள், மனம், தான், தானற்றது என்கிற இவை நான்கும் முக்குணங்களின் நிலைகளாயுள்ளன.

நீங்கள் கடுமையான மந்தத் தன்மையில் இருந்தால் ஒரு பொருளைப் போல் இருப்பீர்கள். மந்தத் தன்மையுடையவர்

கிட்டத்தட்ட ஒரு பொருள்தான், வாழ்க்கை சோம்பேறித்தனமாய் கிளர்ச்சியற்றுப் போய்விடும். அவரிடம் நீங்கள் சுறுசுறுப்பைக் காண முடியாது. அடுத்து, இரண்டாவதான தன்மை மனம். ரஜஸ் - செயல் அதிகரித்தால் நீங்கள் அதிக அளவில் மனதுக்குரியவராகி விடுவீர்கள். பிறகு நீங்கள் ரொம்பவும் சுறுசுறுப்பாயிருப்பீர்கள் - மனம் தொடர்ந்து சுறுசுறுப்போடு புதிய செயல்களைத் தேடிக் கொண்டேயிருக்கும். அது செயலைச் சூழ்ந்து கொண்டு விடும். செயலால் பீடிக்கப்பட்டு விடும்.

எவரெஸ்டு சிகரத்தை முதலில் சென்றடைந்த எட்மண்ட் ஹில்லாரியிடம் யாரோ கேட்டார்கள், 'ஏன், நீங்கள் ஏன் அப்படியொரு ஆபத்தான முயற்சியை மேற்கொள்ள வேண்டும்?' என்று. அவர் சொன்னார், 'எவரெஸ்டு சிகரம் அங்கே இருப்பதால் மனிதன் அங்கே போகும்படி ஆயிற்று'. அங்கே எதுவும் இல்லை. மனிதன் எதற்காக நிலவுக்குப் போகிறான்? காரணம் நிலவு அங்கே இருக்கிறது. நீங்கள் அதை எப்படித் தவிர்க்க முடியும்? நீங்கள் போகத்தான் வேண்டும். சுறுசுறுப்பான மனிதன் தொடர்ந்து ஏதாவதொரு வேலையைத் தேடியபடி இருப்பான். அவனால் எந்த வேலையும் செய்யாமல் இருக்க முடியாது. அதுதான் அவனுடைய பிரச்சினை. செயலற்றிருப்பது அவனுக்கு நரகம். செயல்படும்போது அவன் தன்னையே மறந்து விடுவான்.

'தமஸ்' என்கிற மந்தத்தன்மை அதிகரித்தால் நீங்கள் பொருளைப் போலாகி விடுகிறீர்கள். 'ரஜஸ்' அதிகமானால் நீங்கள் மனம் என்கிற நிலையைப் பெறுகிறீர்கள். மனம் செயல்பட்டுக் கொண்டிருக்கும் தன்மை உடையது. அதனால்தான் பெரும் வெறி (mad) பிடித்ததாகி விடுகிறது. 'சத்வம்' அதிகரித்தால் நீங்கள் 'தான் (self) என்கிற நிலையை, ஆத்மா என்கிற நிலையைப் பெறுகிறீர்கள். ஆனால் அதுவும் சமச்சீரற்றதுதான். இம்மூன்றும் சமநிலையில் இருந்தால் நான்காவதாய் வருகிறது தான் - அற்றது (no self). அதுதான் உங்களுடைய உண்மையான இருப்புணர்வு (being) அதில் 'நான்' என்கிற உணர்வும் இடம் பெறுவதில்லை. அது காரணமாகவே 'தான் அற்றது' என்ற சொல் இடம் பெறுகிறது.

மூன்று சமநிலையற்றது, ஒரு சமநிலையுள்ளது என நான்கு நிலைகள். முதலாவது வரையறுக்கப்படுவது. இரண்டாவது வரையறையற்றது. மூன்றாவது சுட்டிக் காட்டப்படுவது. நான்காவது சுட்டிக்காட்டப்படாதது. நான்காவது நிலையே உண்மையானது.

முதலாவது உங்களுக்கு மிகவும் உண்மையானதாய் செயல்முறைக்கு ஏற்றதாய் தெரியும். காரணம் அந்த முதலாவது நிலையில்தான் நீங்கள் வாழ்ந்து கொண்டிருக்கிறீர்கள். இரண்டாவது மிக நெருக்கமாய் இருப்பது போல் காணப்படும். காரணம், நீங்கள் மனதால் வாழ்கிறீர்கள். மூன்றாவது சற்று தொலைவில் இருப்பதாய் தோன்றினாலும் உங்களால் அதைப் புரிந்து கொள்ள முடியும். நான்காவது நிலையை சாதாரணமாய் நம்பவே முடியாது - தான் அற்றது! பிரமன், கடவுள் என்று நீங்கள் குறிப்பிடுவது எதுவாயினும் அது வெகு தொலைவில் இருப்பதாகவே தோன்றும். அது பெரும்பாலும் இல்லை என்பது போல் தெரிந்தாலும் அதுதான் ஏறக்குறைய எல்லாமாய் இருப்பது.

பார்ப்பவன் அறிவு வடிவினன். அவன் தூயவனாயிருந்தாலும் புத்தியின் தன்மைக்கு ஏற்பவே அதன் வழியாய் காண்கிறான்.

அந்த நான்காவதை நீங்கள் அடைந்தாலும் கூட... தூல சரீரத்துடன் இருக்கும்போது உங்கள் இருப்புணர்வின் அனைத்து அடுக்குகளையும் நீங்கள் பயன்படுத்தும்படி இருக்கும். உங்களுடன் பேசுவது புத்தராகவே இருந்தாலும் மனதைக் கொண்டுதான் அவர் பேசியாக வேண்டும். புத்தரும்கூட நடப்பதெனில் தமது உடம்பைக் கொண்டுதான் நடக்க வேண்டியிருக்கும். ஆனால், நீங்கள் அந்த மனதுக்கப்பாற்பட்டவர் என்பதை அறிந்து கொண்டபின் மனம் உங்களை ஒருபோதும் ஏமாற்றாது. நீங்கள் அதைப் பயன்படுத்திக் கொள்ள முடியும். ஒருபோதும் அது உங்களைப் பயன்படுத்து வதற்கில்லை. அதுதான் வேறுபாடு. புத்தர் தம்முடைய மனதைப் பயன்படுத்த மாட்டார் என்பதில்லை. அவர் பயன்படுத்துகிறார். நீங்கள் பயன்படுத்த மாட்டீர்கள். அவர் சரீரத்துடன் வாழவில்லை என்றாகாது. அவர் வாழ்கிறார். நீங்கள் வாழ்கிறீர்கள் - உடல் எஜமானனாயும், நீங்கள் அடிமையாயும் இருக்கிறீர்கள். புத்தர் எஜமானனாயிருக்கிறார், உடம்பு அவருக்கு அடிமையாயிருக்கிறது. ஒட்டு மொத்தமாய் ஒரு மாற்றம், முழுமையான மாற்றத்தை ஏற்படுத்தும் முறை இடம் பெறுகிறது - மேலே இருப்பது கீழாகவும், கீழே இருப்பது மேலாகவும் செல்கிறது.

'காணப்படுவதன் இயல்பு காண்பவனுக்காகவே அமைந்துள்ளது.'

இதுவே யோகம் அல்லது வேதாந்தத்தின் உச்சநிலை. 'காணப்படுவதன் இயல்பு காண்பவனுக்காகவே அமைந்துள்ளது.' காண்பவன் மறைகிற போது காணப்படுவதும் மறையும். காரணம், அது காண்பவனை விடுவிப்பதற்காகவே இடம் பெறுகிறது. விடுதலை

நேரிட்டு விட்டால் அது தேவைப்படாது. இது பல பிரச்சினைகளைத் தோற்றுவிக்கும். காரணம் ஒரு புத்தர்... அவரைப் பொறுத்தவரை காணப்படுவது மறைந்தது. ஆனால் உங்களுக்கோ அது இன்னமும் இருக்கிறது. ஒரு பூ இருக்கிறது. உங்களுள் ஒருவர் தெளிந்த சிந்தனையும், புரிந்து கொள்ளும் ஆற்றலும் கொண்டவராயிருக்கிறார். அவருக்கு அந்தப் பூ மறைந்து விடுகிறது. ஆனால் உங்களுக்கோ அது இன்னமும் தொடர்கிறது. எனில், இது எப்படி சாத்தியம்? - ஒருவருக்குக் காணாமல் போனது, மற்றொருவருக்கு (நீங்கள்) காணப்படுவதாய் இருப்பது?

அது மிகச் சரியாக இதுதான்; நீங்கள் அனைவரும் இன்றிரவு படுக்கச் செல்கிறீர்கள், எல்லாருமே கனவு காண்கிறீர்கள். பிறகு - ஒருவர் விழித்துக் கொண்டு விடுகிறார் - அவருடைய உறக்கம் கலைந்து விடுகிறது. அவருடைய கனவு காணாமல் போகிறது - ஆனால் மற்றவர்களுடைய கனவுகள் தொடர்கின்றன. அவருடைய காணாமல் போன கனவு உங்களுடைய கனவுகளுக்கு இடையூறாகாது. அதனால்தான் ஞானம் என்பது தனிப்பட்டதாய் இருப்பது. ஒருவர் அறிந்து கொண்டார். மற்றவர்கள் தொடர்ந்து அறியாமையில் இருக்கிறார்கள். அவர் மற்றவர்களுக்கும் விழிப்பூட்டி உதவ முடியும். உங்கள் உறக்கத்தில் இருந்து விழிப்படைவதற்கான உபாயங்களை அவரால் தோற்றுவிக்க முடியும். ஆனால் உங்கள் உறக்கத்திலிருந்து நீங்கள் வெளிவராத வரை உங்களுடைய கனவு தொடரும். 'காணப்படுவதன் இயல்பு காண்பவனுக்காகவே அமைந்துள்ளது.

"குறிக்கோளை அடைந்தவர்களுக்குப் போகப் பொருள் அழிந்தாலும் அது பொதுவானதென்பதால் மற்றவர்களைப் பொறுத்தவரை அழிவற்றதாய் காணப்படும்."

இந்தியாவில் கனவுக்கும் நனவுக்கும் இடையில் ஒரேயொரு வேறுபாட்டை (distinction)த் தான் நாம் உண்டு பண்ணியிருக்கிறோம். அந்த வேறுபாடு இதுதான். கனவுகள் தனிப்பட்ட முறையில் மெய்ம்மை சார்ந்தவை (reality). நீங்கள் 'உலகம்' என்று குறிப்பிடுகிற உண்மையோ ஒரு பொதுவான கனவு அவ்வளவுதான். நீங்கள் கனவு காணும் போது ஒரு தனிப்பட்ட உலகையே கனவில் காண்கிறீர்கள். இரவில் ஒரு தனிப்பட்ட (private) வாழ்க்கையை நீங்கள் வாழ்கிறீர்கள். உங்களுடைய கனவை நீங்கள் யாருடனும் பங்கு போட்டுக் கொள்ள முடியாது. உங்கள் நெருங்கிய நண்பர் அல்லது மனைவி அல்லது உங்கள் அன்புக்குரியவரும் அதிலிருந்து தொலைவில் இருப்பார்கள்.

கனவு காண்கிறபோது நீங்கள் தனியாகத்தான் கனவு காண்கிறீர்கள். உங்களோடு யாரையும் நீங்கள் கொண்டு செல்ல முடியாது. அது ஒரு தனிப்பட்ட உலகம். அப்படியானால் இந்த உலகம் எத்தகையது? இந்தியாவில் இவ்வுலகையும் நாம் கனவு போன்றது என்கிறோம். இது ஒரு பொதுவான கனவு. நாம் அனைவரும் சேர்ந்தே கனவு காண்கிறோம். காரணம் நமது மனம் அவ்விதமாய் செயல்படுகிறது.

ஆற்றுப்பக்கம் செல்லுங்கள். உங்களுடன் ஒரு நேரான கோலையும் (stick) எடுத்துப் போங்கள். அந்தக் கோல் நேராயிருப்பது உங்களுக்குத் தெரியும். அதனை ஆற்று நீருக்குள் அமுத்துங்கள். திடீரென்று அந்தக் கோல் வளைந்து கோணலாய் காணப்படும். அதை வெளியே எடுங்கள். அது நேராயிருப்பதை அறிவீர்கள். திரும்பவும் நீரில் அமிழ்த்துங்கள். அது மீண்டும் வளைவாகி விடும். கோல் அப்படியேதான் இருக்கும். இது உங்களுக்கு நன்றாகவே தெரியும். ஆனால் உங்கள் மனதின் இயக்கமும், ஒளிக்கதிர்களின் இயக்கமும் அது வளைந்திருப்பது போன்ற நிகழ்வை, மாயை (தவறான எண்ணம்)யைத் தோற்றுவிக்கும். தற்போது நீங்கள் அறிந்திருந்தாலும் அது இன்னமும் வளைந்தே காணப்படும். இதில் உங்களுடைய அறிவு கை கொடுக்கப் போவதில்லை. நீங்கள் நன்றாகவே அறிவீர்கள் அது வளைந்திருக்கவில்லை, ஆனால் வளைந்திருப்பது போல் காணப் படுகிறது என்று - காரணம் கண்களும், ஒளிக்கதிர்களும் அத்தகைய மாயையை உண்டுபண்ணுகிறது. உங்களோடு ஒரு டஜன் நண்பர்களை அழைத்துச் சென்று காண்பியுங்கள். அது வளைந்திருப்பதை நீங்கள் காண்பீர்கள். அது ஒரு பொதுவான மாயை. உலகம் ஒரு பொதுவான கனவு.

காண்பவன், காணப்படுவது இவற்றின் சேர்க்கையில் ஒவ்வொன்றின் உண்மையான இயல்பும் தெளிவாய் உணரப்படும்.

இந்தச் சேர்க்கையின் காரணம் அறியாமையே.

கனவு போன்ற இவ்வுலகுடன் சேர்ந்திருப்பதற்கு, உடம்புடன் சேர்ந்திருப்பதற்கு மனதுடன் சேர்ந்திருப்பது இன்றியமையாததாகும். இந்தச் சேர்க்கையின் மூலம் ஒரு மிகப்பெரிய சேர்க்கைக்கு நீங்கள் ஆயத்தமாகிறீர்கள். இது பொய்யான சேர்க்கை என்பதை இந்தச் சேர்க்கையின் மூலம் நீங்கள் தெளிவாகப் புரிந்து கொள்வீர்கள். இந்தச் சேர்க்கை பொய்யானது என்பதை நீங்கள் புரிந்து கொள்ளும் நாளில், முடிவான சேர்க்கை நிகழும்.

நீங்கள் இவ்வுலகிடமிருந்து மணவிலக்கு (பிரிவு) பெறுகிறபோது இறைத்தன்மையுடன் உங்களுக்கு மணவினை (இணைப்பு) நடைபெறுகிறது. நீங்கள் உலகத்தை மணந்து கொண்டிருப்பின் கடவுளிடமிருந்து மணவிலக்கு பெற்றவராவீர்கள். அதனால்தான் மீரா, சைதன்யர், கபீர் போன்ற மறைஞானிகள். மேற்கில் தெரசா இவர்கள் எல்லாரும் மணமகள் மணமகன் மற்றும் திருமணம் பற்றிப் பேசுகிறார்கள். அவர்கள் அனைவரும் இறுதியான முழுமை (consummation)க்குக் காத்திருக்கிறார்கள்.

உருவகக் கதை எப்போதுமே பயன்படுத்தப்பட்டு வந்திருக்கிறது. மறைஞானிகள் எதற்காகக் காதல், திருமணம், தழுவல், முத்தம் இவை பற்றிய உருவகக் கதைகளைப் பயன்படுத்தினார்கள் என்கிற ஐயம் உளவியல் நிபுணர்களுக்கு எழவே செய்கிறது. இந்தியாவில் பால்சார்ந்த உறவும் உருவகக் கதைகளில் பயன்படுத்தப்பட்டிருக்கிறது. இறுதியாய் திருமணம் நிகழும்போது உச்சக்கட்ட நிறைவு எட்டப் படுகிறது. ஒருவர் பிரமத்துடன் இணைகிறபோது உச்சக்கட்ட இன்பம் உணரப்படும். கடலில் இணைந்த அலை மாதிரி.

பால் சார்ந்த உருவகக் கதைகளை இந்த மக்கள் ஏன் பயன்படுத்த வேண்டும்? பாலுறவை அடக்கி வைக்கும் செயலாக அதுபற்றி உளவியல் நிபுணர்கள் சந்தேகப்படுகிறார்கள். அவர்களின் கருத்து சரியில்லாதது. பாலுறவை அடக்கி வைப்பதென்பதில்லை. அது ஓர் அடிப்படையான நிகழ்வு. மதம் எப்படி அதனைத் தவிர்க்க முடியும்? அது பயன்படுத்தப்பட வேண்டியது. பாலுறவு மட்டுந்தான் உங்களை நீங்களே இழக்கக்கூடிய உள்ளார்ந்த நிகழ்வு. உங்களை நீங்கள் முழுமையாய் இழக்கக்கூடிய வேறொரு நிகழ்வை நீங்கள் அறிய மாட்டீர்கள். கடவுள் அல்லது முழுமையில் ஒருவர் தன்னை முற்றாக இழக்கிறார் – தான் அற்றவர் (no-self) ஆகிறார். பாலுறவில் அது ஒரு கணநேரக் காட்சியாய் உங்களை வந்தடைகிறது. திருமணம், மணமகள் மற்றும் மணமகன் பற்றிய உருவகக் கதைகளைப் பயன்படுத்துவது நன்மை பயக்கக் கூடியதாகும்.

உலகுடன் இணைந்த நிலையில் நீங்கள் இறைத் தன்மையில் இருந்து விலகியவராகி விடுகிறீர்கள். உலகாயத அனுபவங்களில் உயர்ந்து, அதிலிருந்து விடுபட்டு அதைக் கடப்பதன் மூலம் இந்தத் திருமணம் (இணைப்பு) ஒரு மாயை என்பதைத் தெரிந்து கொள்வீர்கள். தற்போது உண்மையான திருமணம் உங்களுக்காக ஆயத்தமாகிறது. மணமகன் உங்களுக்காகக் காத்திருக்கிறார்.

## 2. “எங்கிருந்து வந்தோம், எவ்வாறு உருவானோம்?”

எந்த நிலையில், எப்படி என்பதெல்லாம் அதற்கில்லை. நீங்கள் விழித்திருக்கும் போது தானே இயங்குகிறீர்கள். மனதில் ஒரு திட்டம் இருக்காது, காரணம் தற்போது எவ்வகையிலும் மனம் இருப்பதில்லை. ஒரு புத்தர் கணத்துக்குக் கணம் ஏற்ற பதிலைத் தருகிறார். சூழ்நிலை எப்படியாயினும் எதைக் கோரினாலும் ஒரு திட்டம் இல்லாமல், எப்படிச் செயல்படுவது என்ற யோசனை இல்லாமல், எவ்வித உத்தியும் இல்லாமல் அவர் விடை (மறுமொழி) தருகிறார். அவருடைய மறுமொழி ஓர் எதிரொலி போன்றது. நீங்கள் ஒரு குன்றின் பக்கம் சென்று ஓசை எழுப்புகிறீர்கள், குன்றுகள் அதை எதிரொலிக்கின்றன. குன்றுகள் எப்படி எதிரொலிக்கின்றன என்று நீங்கள் எப்போதாவது கேட்டதுண்டா? அவை எதிர்வினை புரிகின்றன. நீங்கள் சிதார் என்கிற இசைக் கருவியை மீட்டுகிற போது அதனிடம் 'எப்படி?' என்ற கேள்வி எழுகிறதா? உங்களிடம் இசைப்பதற்கான நுட்பங்களும், மனதில் சங்கதிகளும் இருக்கின்றன, எப்படி இசைப்பது, பாடுவது என்று உங்களுக்குத் தெரியும். ஆனால் சிதாருக்கு? அது உங்களுடைய விரல்களுக்கு எதிர்வினை செய்கிறது வெகு எளிமையாய்.

புத்தர் என்பது 'எதுவும் இன்மை' (nothingness) நீங்கள் அவரைத் தேடிச் செல்கிறீர்கள். அவர் விடையளிக்கிறார். நினைவில் கொள்ளுங்கள் அது மறுமொழி. நீங்கள் எதிர்வினை புரியும்போது என்ன எப்படி என்று உங்கள் மனதில் ஒரு யோசனை இருக்கும். நீங்கள் எதிர்வினை புரியும்போது ஒருநிலையில் இருந்து கொண்டு எதிர்வினை புரிவீர்கள். நீங்கள் ஒரு புத்தரிடம் வந்தால் அவர் எந்த நிலையிலும் இருந்து கொண்டு எதிர்வினை புரிவதில்லை. அவரிடம் எந்த நிலையும் இல்லை. அவரிடம் முழு உண்மையையும் தெரிந்து கொள்வதற்கு முன்பே கொள்ளும் தப்பெண்ணமோ, எவ்வித கருத்தோ, கருத்துப் பாங்கோ (ideology) கிடையாது. அவர் மறுமொழி அளிக்கிறார். செயலின் நிலைக்கேற்ப அவருடைய மறுமொழி இருக்கும்.

ஒருநாள் ஒருவன் வந்து 'கடவுள் இருக்கிறாரா?' என்று கேட்டான். புத்தர் அவனை நோக்கி, 'இல்லை' என்றார். அதே நாளின் பிற்பகலில் மற்றொருவன் வந்து, அவரிடம் கேட்டான், 'கடவுள் இருக்கிறாரா?' என்று. புத்தர் அவனைக் கூர்ந்து நோக்கியபடி 'ஆமாம்' என்றார். அதேநாள் அந்திப் பொழுதில் மூனறாவதாய் ஒருவன் வந்தான். அவன் கேட்டான், 'கடவுள் இருக்கிறாரா?' என்று. அவர் பதிலளிக்கவில்லை.

அவருடைய மனம் ஒருநிலையில் இருந்தால் விடை ஏற்றதாக இருக்கும். அது எப்போதுமே மனதில் உள்ள ஒரு கருத்தில் இருந்து தோன்றுவது. அது உறுதியாயிருக்கும். அவர் கடவுள் நம்பிக்கையற்றவராய் இருந்தால் கேட்பவர் எப்படியிருந்தாலும் அது எந்த வேறுபாட்டையும் உண்டுபண்ணுவதில்லை. கருத்துப் பாங்குடைய ஒரு மனிதன் உங்களை ஒருபோதும் கூர்ந்து நோக்க மாட்டான். சூழ்நிலையையும் அவன் கருத மாட்டான். அவன் நிலையானதொரு கருத்தையே கொண்டிருப்பான். அதனைக் கருத்தாவேசம் (obsession) எனலாம்.

புத்தர் கடவுள் நம்பிக்கையற்றவராயிருந்தால் (நாத்திகர்) அம்மூவரிடமும் 'இல்லை' என்று சொல்லியிருப்பார். புத்தர் கடவுள் உண்டு என்னும் நம்பிக்கை கொண்டவராயின் (ஆத்திகர்) அவர்களிடம் 'ஆம்' என்று சொல்லியிருப்பார். ஒருவர் கருத்துக் கோவை, மனப்பாங்கு, தவறான எண்ணம், அமைப்பு, கவனம் உடையவராயின் சந்தர்ப்ப சூழ்நிலையை கூர்ந்து பார்க்க மாட்டார்.

இல்லையேல் மறுமொழி முற்றிலும் மாறுபட்டதாகி விடும். ஆழ்ந்த உறுதி இருக்கும். இருப்புணர்வில் சீர்த்தன்மை இருக்கும். அது விடைகள் பற்றியதல்ல. 'இல்லை' என்று சொன்னபோது புத்தரும் அதே நிலையில்தான் இருந்திருப்பார். 'ஆம்' என்று சொல்கிற போதும் புத்தர் அதே நிலையில்தான் இருப்பார். எதுவுமே சொல்லாமல் அவர் மவுனத்தைக் கடைப்பிடிக்கிற போதும் அதே புத்தர்தான், ஆனால் சந்தர்ப்ப சூழ்நிலைகள்தாம் வேறு.

அந்த மூன்று நிலைகளிலும் புத்தரின் சீடரான ஆனந்தர் அவரோடு இருந்திருக்கிறார். அவருக்குக் குழப்பம் ஏற்பட்டிருந்தது. புத்தர் வழங்கிய மற்ற இரண்டு விடைகள் பற்றி அம்மூவரும் அறிய மாட்டார்கள். ஆனால் ஆனந்தர் அவற்றை அறிவார். அந்த மூன்று நிலைகளிலும் அவர் இருந்திருக்கிறார்.

இரவில் புத்தர் படுக்கையில் படுத்திருந்தபோது ஆனந்தர் கேட்டார். 'ஒரு கேள்வி. தாங்கள் ஒரே கேள்விக்கு மூன்று விதமாய் பதிலளித்தது ஏன், அவை ஒன்றுக்கொன்று முரண்பாடாய் இருந்தனவே?' என்று.

புத்தர் சொன்னார். 'நான் எந்தவொரு பதிலையும் உனக்குக் கொடுக்கவில்லை. நீ கவலைப்பட வேண்டாம். உன்னுடைய கேள்வியை நீ கேட்கலாம். நான் அதற்குப் பதிலளிப்பேன். அந்த விடைகள் உனக்கு அளிக்கப்பட்டதல்ல. நீ எதற்காக அதில் நுழைவது?' என்று. ஒரு சூழ்நிலைக்கேற்ற மாதிரி விடையளிக்கப் படுகிறது. சூழ்நிலை மாறும்போது விடையும் மாறும். அது ஒரு மறுமொழி.

புத்தர் சொன்னார், "அந்த முதல் மனிதன் ஒரு கடவுள் நம்பிக்கை இல்லாதவன். நான் அவனைப் பார்த்தபோது ஒரு குறிப்பிட்ட நிலையை அவன் முன்னதாகவே அடைந்து விட்டிருந்தான். கடவுள் இல்லை" என்று அவன் முடிவு கட்டியிருந்தான். அவன் தன்னுடைய கருத்தை உறுதிப்படுத்திக் கொள்ளவே என்னிடம் வந்தது. அவன் மக்களிடம் போய் இப்படிச் சொல்வான் 'நான் நம்புகிறதையே புத்தரும் நம்புகிறார், கடவுள் இல்லை என்பதை'. நான் அவனிடம் 'இல்லை' என்று சொன்னேன்.

மாலையில் வந்தவனும் ஒரு முடிவோடுதான் வந்திருந்தான். அவன் உறுதியான நம்பிக்கை கொண்ட ஆத்திகன், வழிவழியாக வரும் மதக்கோட்பாடுகளில் நம்பிக்கையுடையவன். கடவுள் இருப்பதாக அவன் நம்பினான். அவனும் உறுதிப்படுத்திக் கொள்கிற மனதோடு வந்திருந்தான்.

"மூன்றாவது மனிதன் எந்தவொரு குறிப்பிட்ட நிலையிலும் இருந்திருக்கவில்லை. அவன் எண்ணமற்றவனாயிருந்தான். அவன் விசாரணை செய்து அறிபவன் (inquirer). அவனுக்கு எதிலும் நம்பிக்கையில்லை, அவன் எந்தவொரு முடிவுக்கும் வந்திருக்க வில்லை. அவன் ஆன்மிகச் சாதனைக்குரியவன், தூய்மையானவன். அவனிடம் நான் மவுனமாயிருந்தேன். தற்போது நீயும் அதே கேள்வியைக் கேட்பதாயின் கேட்கலாம்."

மறுமொழி என்பது எப்போதுமே வெவ்வேறாகத்தான் இருக்கும். அதன் அடியாழத்தில் இருப்புணர்வு (being) தன்னுடைய

போக்கினைக் கொண்டிருக்கும். புத்தர் எப்போதுமே மனிதனையும், சூழ்நிலையையும் கூர்ந்து கவனிக்கிறார். தீர்மானிப்பது சூழ்நிலையே யன்றி புத்தரின் மனமல்ல. அவரிடம் எதுவும் இல்லை.

ஆக, நீ கேட்கிறாய்: 'அன்றாட வாழ்வில் புத்தர் எப்படி முழுமையாய் பங்கேற்கிறார்?' என்று. நீ முழுமையாய் பங்கேற்க முயன்றால் அதில் முழுமை இருக்காது. எந்தவொரு முயற்சியும் முழுமை அடைவதில்லை. எந்தவோர் உத்தியும் முழுமையானதாகாது. காரணம், நீ திறமையாகக் கையாள முற்படுவாய். நீ அதிலிருந்து விலகி விடுவதால், நீ முழுமையடைய முயற்சிப்பாய். ஆனால் நீ எப்படி முழுமையடைய முடியும்? நீ தணிவு நிலையை அடைய வேண்டும். அப்போதுதான் இருப்புணர்வு முழுமை அடையும். நீ கை நழுவ விடும் நிலையில் முழுமையாகிறாய்.

முழுமை என்பது ஓர் ஒழுங்குமுறை அல்ல. எல்லா ஒழுங்கு முறைகளும் (பயிற்சிகள்) விருப்பு வெறுப்பு கொண்டதாய் ஒருதலைப்பட்சமாகவே இருக்கும். அதனால்தான் ரொம்பவும் கட்டுப்படுத்தப்பட்ட மனிதன் ஒருபோதும் மெய்ம்மையை அடைவதில்லை. காரணம் அவன் எப்போதும் சுமக்கிறான். தொடர்ந்து எதையாவது செய்து கொண்டேயிருக்கிறான். நேர்த்தியாகவோ நேர்த்தியற்றதாகவோ, மேற்பரப்பிலோ அடியாழத்திலோ அவன் எதையாவது செய்து கொண்டே இருக்கிறான். இல்லை, புத்தர் ஒரு செய்பவர் (doer) அல்லர். உண்மையில், நீங்கள் தணிவு நிலையில் இருக்கும்போது, உங்கள் முன்னே காணப்படுகிற ஒரே வழி முழுமையாய் பங்கேற்பதுதான்.

எப்படி என்பது அதில் இல்லாவிட்டாலும் உங்கள் மனதில் அந்தக் கேள்வி எழவேச் செய்யும் காரணம் விழிப்புணர்வு என்னவென்று நீங்கள் அறிய மாட்டீர்கள். 'பார்வையுடைய மனிதர்கள் எப்படித் தங்கள் கைகளில் ஒரு கோல் இல்லாமல் வழி தேடிக் கண்டுபிடிக்கிறார்கள்?' என்று ஒரு பார்வையற்றவன் கேட்கிற மாதிரிதான் இதுவும். 'அவர்களுக்குக் கோல் தேவைப்படாது. அவர்கள் துழாவிக் கண்டுபிடிக்க வேண்டியிராது' என்று நீங்கள் சொன்னால் அவனால் அதை நம்ப முடியாது. அவன் சிரிப்பான். 'என்ன விளையாடுகிறீர்களா, அது எப்படி சாத்தியம்? பார்வையுடையவர்கள் துழாவி வழிகண்டு பிடிக்கும்படி இருக்காது என்றா சொல்கிறீர்கள்' என்று கேட்பான். பார்வையற்ற ஒருவனால் அதைப் புரிந்துகொள்ள

இயலாது. அந்த அனுபவம் அவனுக்கு வாய்த்திருக்காது. அவன் எப்போதும் துழாவியபடி இருப்பான், அப்போதும்கூட திரும்பத் திரும்ப விழுந்து எழுவான். எப்படியோ சமாளித்துக் கொள்கிறான். புத்தர் அப்படியெல்லாம் சமாளிப்பதில்லை. அவர் எதையும் அவற்றின் போக்கில் விட்டுவிடுவார். எல்லாமும் இணக்கமாய் பொருந்திக் கொண்டு விடும்.

**தயவு செய்து விளக்குங்கள், தமஸ், ரஜஸ், சத்துவ குணமுடைய மனிதர்களுக்கு எந்த மாதிரியான உத்திகள் தனித்தனியே பொருந்தும் என்பதை. தாங்கள் ஏன் ஆற்றல்மிக்க தியான முறைகளையே வழங்கிக் கொண்டிருக்கிறீர்கள்?**

ஆற்றல்மிக்க தியான உத்தி என்பது உண்மையிலேயே ரொம்பவும் அரிதான நிகழ்ச்சியாகும். அது எந்தவொரு வகை உரியதல்ல. அது எல்லாவற்றிலும் உதவும். 'தமஸ்' என்கிற சோம்பலும் மந்தத் தன்மையும் உடையவரை அவருடைய 'தமஸ்'ஸில் இருந்து அது வெளிக் கொண்டு வரும். தமஸ்ஸை தகர்த்தெறியக் கூடிய அளவு ஆற்றலை - செயலூக்கத்தை அது தோற்றுவிக்கும். தமஸ்ஸை உடைய ஒருவன் அதைச் செய்யத் தயாராயிருந்தால் அது அற்புதங்களை நிகழ்த்தும். காரணம் சோம்பேறியிடம் ஆற்றல் இல்லாமலில்லை. ஆற்றல் இருக்கும். ஆனால், செயல்படுத்தும் நிலையில் இருக்காது. அது உறங்கிக் கொண்டிருக்கும். ஆற்றல் தியானம் என்பது ஒரு அலாரம் (alarm) மாதிரி வேலை செய்யும். அது செயலற்ற ஓர் தன்மையை செயல்படுவதாய் மாற்றும். அது ஆற்றலை இயங்கச் செய்யும். அது தமஸ்ஸில் இருப்பவனை தமஸ்ஸில் இருந்து வெளிக்கொண்டு வரும்.

இரண்டாவது வகை மனிதன் 'ரஜஸ்' வகையைச் சேர்ந்தவன். ரொம்பவும் சுறுசுறுப்பாய் செயல்படுவான். உண்மையில் தன்னுடைய ஆற்றலை எந்தத் துறையில் வெளிப்படுத்துவது என்பதையே கண்டறிய முடியாத அளவுக்குச் சுறுசுறுப்பாயிருப்பான். ஆற்றல் தியானம் அவனுடைய ஆற்றலை வெளிப்படுத்தி, சுமையற்றவனாய் திகழ அவனுக்கு உதவும். ஆற்றல் உத்திகளைப் பயன்படுத்திய பிறகு அவன் பாரமற்றவனாய் உணர்வான். வாழ்வில் அவனுடைய செயல்படுதற்கான தீவிரம், கருத்தாவேசம் மெள்ள மெள்ளக் குறையும். உணர்வுகளை ஆட்டிப் படைக்கும் ஆசை ஓரளவு மறையும். உண்மையில் தமஸ் வகையைச் சேர்ந்தவனைவிட இம்மனிதன் அதிக அனுகூலங்களைப் பெறுவான். காரணம், தமஸ்ஸிலுள்ளவனை

முதலில் செயல்படும் நிலைக்குக் கொண்டு செல்ல வேண்டும். அவன் ஏணியின் கீழ்ப்படியில் இருப்பவன். ஆனால் சுறுசுறுப்புடையவனாகி விட்டால் பிறகு எல்லாமே முடிகிறதுதான். அவன் சுறுசுறுப்படைந்து விட்டால் இரண்டாவது வகைக்கு வந்து விடுகிறான். தற்போது அவன் ரஜஸ் (ரஜோகுணம் கொண்டவன்) ஆகி விடுகிறான்.

ஆற்றல் தியானம் பெருமளவில் உதவுவது சத்துவ நிலையில் இருப்பவனுக்குத்தான். அவன் மந்தனில்லை. அவனுடைய ஆற்றலை மேலெழச் செய்ய வேண்டிய அவசியமில்லை. அவனது செயல்பாட்டில் பேயாட்டம் இருக்காது. அவனுக்கு உணர்ச்சியைத் தூய்மைப்படுத்த (catharsis) வேண்டிய அவசியம் கிடையாது. அவன் மற்ற இரண்டு வகையினரைவிட தூய்மையாகவே இருப்பான். மகிழ்ச்சியாயும் மகிழ்ச்சியில் உண்டாகும் ஒளியுடனும்கூட. அப்படியாயின் ஆற்றல் தியானம் அவனுக்கு எந்த விதத்தில் பயன்படும்? அதுவே ஒரு கொண்டாட்டமாகி விடும் அவனுக்கு. பாடுவதும், ஆடுவதும், பரிபூரணமான ஒன்றில் பங்கேற்பதுமாகி விடும் அது. அவனே அதிக அனுகூலங்களைப் பெறுகிறவன்.

இதுவே தாக்குதல்களிலிருந்து வாழ்க்கையைப் பாதுகாப்பதாகும். இயேசு உரைப்பார், "யார் அதிக விருப்பாற்றல் (will) உடையவரோ அவர் அதிகம் பெறுவார், யாரிடம் அது இல்லையோ அவரிடம் முன்பே இருந்ததும் இழக்கப்பட்டு விடும்."

மந்த நிலையில் இருப்பவனுக்கு மிகுதியாய் வேண்டியிருக்கும். ஆனால் அதைப் பெறும் திறன் அவனிடம் இல்லையென்பதால் அவனுக்கு மிகுதியாய் கொடுக்கப்படுவதில்லை. ஆற்றல் தியானம் அவனைச் சோம்பலில் இருந்து ஏணியின் இரண்டாம் படிக்குக் கொண்டு செல்கிறது. அவனுக்குப் பங்கேற்பது பற்றித் தீர்மானிப்பதும், அதிக அளவில் செயல்படுவதுங்கூட சிரமமாகவே இருக்கும்.

அவ்வகையைச் சேர்ந்த மனிதர்கள் என்னிடம் வருகிறார்கள் - அவர்களுடைய முகத்தைப் பார்த்தாலே ஆழ்ந்த உறக்கத்தில் இருப்பது உங்களுக்குத் தெரிய வரும்.

அவர்கள் சொல்கிறார்கள் "இத்தகைய சுறுசுறுப்பூட்டும் முறைகள் எங்களுக்குத் தேவையில்லை. அமைதியாய் இருக்கிற மாதிரி ஏதாவது சொல்லிக் கொடுங்கள்" என்று. அவர்கள் படுக்கையில் இருப்பதை அமைதியாய் இருத்தல் என்கிறார்கள், அவர்களால்

பெருமளவு முயன்று உட்கார முடியும். அதைக்கூட அவர்கள் செய்வார்கள் என்று உறுதியாய் சொல்ல முடியாது. ஆனால், தீவிர ஆற்றல் தியானம் அவர்களுக்கு ரொம்பவும் தீவிரமாய் தெரிகிறது. அவர்கள் பங்கேற்றால் பலனுண்டு. ஆனால் இரண்டாவது வகையினரின் அளவுக்குப் பயன் பெறுவதில்லை. காரணம், இரண்டாவது வகையினர் முன்பே இரண்டாவது படியில் இருப்பவர்கள். அவனுக்கு அது நிரம்பவே பயன்படும். அவன் இம்முறையில் தணிவு நிலை (relax) அடைவான், சுமையற்று இலேசாகி விடுவான். கொஞ்சம் கொஞ்சமாய் முதல் படியை நோக்கி நகரத் தொடங்குவான், உயரத்தை அடைவான்.

சத்துவ குணமுடையவனுக்குத் தூய்மையும், களங்கமற்றத் தன்மையும் பெருமளவு உதவும். அவன் நிறையவே பெறுவான், பயனடைவான். இயற்கையின் நியதி என்பது வங்கி மாதிரி. உங்களுடைய கணக்கில் பணம் இல்லையென்றால் உங்களுக்குப் பணம் கொடுக்க மாட்டார்கள். உங்களுக்குப் பணம் தேவையென்றால் ஆயிரத்தியோரு நிபந்தனைகளைப் போடுவார்கள். உங்களுடைய கணக்கில் போதிய பணம் இருந்தால் உங்களுக்குத் தேவைப்படு மளவுக்குக் கொடுக்க அவர்கள் தயார். இயற்கையின் நியதியும் மிகச்சரியாக அதைப் போன்றதுதான், உங்களுக்குத் தேவையில்லாத போது அது நிறையக் கொடுக்கும், உங்களுக்குத் தேவை இருக்கிற போது குறைவாய் கொடுக்கும். உங்களிடம் எதுவும் இல்லையென்றால் அது உள்ளதையும் கொண்டு போய்விடும், உங்களிடம் ஏதாவது இருக்குமெனில் ஆயிரத்தோரு வழிகளில் அது கொடுத்துக் கொண்டே இருக்கும்.

மேலோட்டமாய் பார்க்கிறபோது அது முரண்பட்ட கூற்றுகள் கொண்ட தொகுப்புதான் - ஏழையாயிருப்பவனுக்கு நிறைய கொடுக்கப்பட வேண்டும் என்கிற மாதிரி. 'ஏழை' என்றதன் மூலம் நான் குறிப்பிடுவது தமோ குணத்தினரைத்தான். பணக்காரனுக்கு, சத்துவ குணம் படைத்தவனுக்கு குறைந்த அளவிலும் தரப்பட வேண்டியதில்லை. ஆனால், அப்படி இருப்பதில்லை, உங்களிடம் செல்வ வளம் இருந்தால் அது மேலும் மேலும் செல்வத்தை உங்கள்பால் ஈர்த்துக் கொண்டு வரும்.

ஏழையோ வெறுப்பைக் காட்டி எதிர்க்கிறான். தன்னிடம் செல்வம் வரவொட்டாமல் செய்கிறான். அடியாழத்தில் ஏழை ஏழையாகவே

இருக்கக் காரணம் அவன் ஈர்ப்பதில்லை. செல்வத்தைத் தன்னிடம் ஈர்ப்பதற்கான வசீகர சக்தி அவனிடம் இருக்காது. யாரும் அவனை ஏழையாக்கி விடவில்லை. அவன் ஏழையாயிருப்பதற்குக் காரணம் அவனிடம் ஈர்ப்பு இல்லாததுதான். ஈர்ப்பதற்கான வசீகர சக்தியை அவன் பெற்றிருக்கவில்லை.

இவையெல்லாம் எளிமையான பொருளாதார விதிகள். உங்களுடைய சட்டைப் பையில் சில ரூபாய்கள் இருந்தால் அந்த ரூபாய் மேலும் பல ரூபாயை ஈர்த்து உங்கள் சட்டைப் பையில் விழச் செய்யும். உங்கள் சட்டைப் பை காலியாக இருந்தால் பிறகு அந்தச் சட்டைப் பையும் மறைந்து விடும். உங்களைவிட அதிகம் வைத்திருக்கிற சட்டைப்பை உங்களுடைய சட்டைப் பையை ஈர்த்துக் கொண்டு விடும். நீங்கள் சட்டைப் பையையும் இழந்து விடுவீர்கள். நீங்கள் செல்வந்தராயிருந்தால் மேலும் செல்வந்தராகி விடுவீர்கள். ஆக, அடிப்படையில் இன்றியமையாதது நீங்கள் சட்டைப் பையில் ஏதாவது வைத்திருப்பதுதான்.

தமோ குணம் உடையவனிடம் எதுவுமே இருப்பதில்லை. அவன் மண்ணுலகில் ஒரு திரட்சி (lump) அவ்வளவுதான். அவன் வேலை இல்லாமல் சோம்பேறியாயிருப்பவன். ரஜோ குணமுடையவன் மூட்டையல்ல. அவன் விரைந்து செயல்படும் ஆற்றல் கொண்டவன். விரைகின்ற ஆற்றலுக்கு அனைத்தும் சாத்தியம். உண்மையில் ஆற்றல் இல்லாவிடில் எதையும் அசைப்பதுகூட நடவாத காரியம். ஆனால், ஒரு கட்டத்தில் அவனுடைய ஆற்றல் முரட்டுத் தன்மையுடன் சிந்தனைத் தெளிவற்றதாகி விடும். காரணம், அளவுக்கு மீறிய செயல்பாட்டில் அவன் நிறையவே இழந்து விடுவான். அதிக செயல்படும் தன்மையால் அவனுக்கு எதைச் செய்வது, எதைச் செய்யக் கூடாது என்றே தெரியாமல் போய் விடுகிறது. அவன் செய்து கொண்டே இருக்கிறான். முற்றிலும் மாறானவற்றைச் செய்து கொண்டே போவான்.' ஒரு கையால் ஒன்றைச் செய்வான். மறு கையால் அந்த ஒன்றை அழித்து விடுவான். அவன் கிட்டத்தட்ட பித்துப் பிடித்தவனாகி விடுவான்.

தமஸ் (தமோ குணம்) என்கிற முதல் வகையைச் சேர்ந்தவர் ஒருபோதும் பித்தாகி விடுவதில்லை என்பதை நீங்கள் நினைவில் கொள்ள வேண்டும். அதனால்தான் கிழக்கில் சிந்தனைத் தெளிவற்ற நிலை பரவலாய்க் காணப்படுவதில்லை. பல மனநோய் ஆய்வாளர்கள்

பெரும் எண்ணிக்கையில் தேவைப்படவில்லை, பெருமளவில் மனநலக் காப்பகங்களும் தேவைப்படவில்லை. கிழக்கத்தியர்கள் களிமண் மூட்டைகளைப் போல் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். அவர்களுக்கெப்படி பித்துப் பிடிக்க முடியும்? தமஸ்ஸில் பித்துப் பிடிப்பது சாத்தியமில்லை. பித்துப் பிடிக்குமளவு நீங்கள் எதையும் செய்ய மாட்டீர்கள். மேற்கில் பித்துப் பிடிப்பது ஏறக்குறைய சர்வ சாதாரணம் என்றே சொல்ல வேண்டும். இயல்பானதற்கும் இயல்பில் இருந்து மாறுபட்டதற்கும் (abnormal) சிறு அளவுக்கூறே வேறுபாடு இருக்கும். மனநலக் காப்பகத்துக்கு உள்ளேயிருந்தாலும் சரி, வெளியே இருந்தாலும் சரி, அவர்கள் எல்லாரும் ஒரே உலகில்தான் இருக்கிறார்கள். என்ன கொஞ்சம் தரத்தில் அல்லது நிலையில் வேறுபாடு இருக்கும். அவ்வளவுதான். ஒவ்வொருவரும் எல்லைக் கோட்டில் நிற்பவர்கள்தாம். இலேசாய் ஒரு தள்ளல், நீங்கள் உள்ளே சென்று விடுவீர்கள். வாழ்வின் ஆயிரத்தியோரு செயல்களில் எது வேண்டுமானாலும் தவறாகி விடக்கூடும். ஏதாவதொன்று தவறாகி விட்டாலும் நீங்கள் உள்ளே இருப்பீர்கள். மேற்கில் உள்ளவர்கள் ரஜோ குணமுடையவர்கள் - அதீத செயல்பாடு. வேகம்தான் குறியீடு: செயல்பட்டுக் கொண்டே இருப்பார்கள். சத்துவ குணத்தினரின் சமூகம் என்று எதுவும் இல்லை. இன்றுவரை அது சாத்தியப்படவில்லை.

தங்களுடைய மக்கள் சத்துவ குணமுடையவர்கள் என்று இந்தியாவும், கிழக்கும் உறுதிப்படுத்திக் கொண்டிருக்கின்றன. அவர்கள் அப்படியில்லை, இங்கே உள்ளவர்களெல்லாம் தமஸ் வகையைச் சேர்ந்தவர்கள். அரிதாகவே ஒரு கிருஷ்ணரின் வருகையும், புத்தரின் வருகையும் நிகழ்கிறது - அதுவல்ல விசயம். அவர்கள் விதிவிலக்குகள். அவர்கள் விதியை வென்றவர்கள். கிழக்கு தமஸ் வகையினரைக் கொண்டது - ரொம்பவும் நிதான இயக்கம், இயக்கமேயில்லை என்றுகூடச் சொல்லலாம்.

நான் என்னுடைய கிராமத்திற்குச் சென்றிருந்தேன். பல வருடங்களுக்குப் பிறகு சென்றிருந்தாலும் ஊர் அப்படியேதான் இருக்கும். இரயில் நிலையத்தில் சுமைக்கூலி (porter)யாய் இருந்த அதே நபர்தான் இப்போதும் இருப்பார். அவருக்கு வயதாகி விட்டாலும் அதே ஆள்தான். அதே குதிரை வண்டிக்காரனை இப்போதும் நான் காண்பேன், காரணம் அங்கே சில குதிரை வண்டிகள் மட்டுமே உள்ளன. நான் தன்னுடைய 'சவாரி' என்று ஒருவர் எப்போதும் உரிமை

கொண்டாடிக் கொண்டிருப்பார். அவர் பலசாலி, யாரும் அவரிடம் சண்டையிட முடியாது. எனவே, அவர் என்னை வலுக்கட்டாயமாய் தன் வண்டியில் ஏற்றிக் கொண்டு விடுவார். நான் நிஜ உலகில் இல்லாமல் நினைவுலகில் இருப்பதுபோல் செயல்கள் நடந்தேறும். சாலையில் அதே மனிதரைச் சந்திப்பேன். சில சமயம் யாராவது செத்துப் போனால் அதுவே பெரிய செய்தியாகி விடும். இல்லையேல், உலகம் ஒரு வட்டத்துக்குள்ளாகவே சுற்றிக் கொண்டிருக்கும். காய்கறி கொண்டு வரும் அதே ஆள், பால் கொண்டு வரும் அதே ஆள் என்று எல்லாமும் அப்படியேதான் இருக்கும். ஏறக்குறைய இயக்கமே இல்லாத மாதிரி.

மேற்கில் எதுவும் மாற்றமின்றி நிலையாய் இருப்பதில்லை. அங்கே ஒவ்வொன்றும் செய்திதான். நீங்கள் திரும்பிச் செல்கிற போது எல்லாமும் மாறி விட்டிருக்கும். உங்கள் தாய் உங்களுடைய தந்தையை விவாகரத்து செய்து விட்டிருப்பார். உங்கள் தந்தை வேறொரு பெண்ணுடன் ஓட்டம் பிடித்திருப்பார். நீங்கள் தாய்நாட்டுக்குத் திரும்பி செல்கிறபோது அங்கே வீடு இருக்காது, குடும்பம் என்பதே இருக்காது. அமெரிக்க வாழ்க்கை முறை பற்றிச் சில செய்திக் குறிப்புகளை நான் படித்தேன். கிட்டத்தட்ட ஒவ்வொருவரும் மூன்று ஆண்டுகளுக் கொருமுறை தான் பார்த்துக் கொண்டிருந்த வேலையில் இருந்து மாறி விடுகிறார்கள். மூன்று ஆண்டுகளுக்கு ஒருமுறை தன்னுடைய ஊரையும் அவர்கள் மாற்றிக்கொண்டு விடுகிறார்கள். எல்லாமே மாறிக் கொண்டிருக்கிறது. மக்கள் பரபரக்கிறார்கள். எல்லாரும் கன வேகத்தில் ஓடிக் கொண்டிருக்கிறார்கள். ‘நீ எங்கே போயிட்டிருக்கே’ என்று யாரும் கவலைப்படுவது கிடையாது.

சத்துவ குணமுடைய சமூகம் என்று எதுவும் இருக்கவில்லை. சிலர் மட்டுமே தமஸ்ஸையும், ரஜஸ்ஸையும் சமநிலையில் கொண்டிருக்கிறார்கள். அதுவும் சில நேரங்களில். அவர்கள் செயல்படுவதற்குத் தேவையான ஆற்றலைப் பெற்றிருக்கிறார்கள். ஓய்வெடுப்பதற்குப் போதிய உணர்வும் அவர்களிடம் உள்ளது. தங்கள் வாழ்க்கையில் ஒருசீர்த் தன்மையை (rhythm) அவர்கள் முயன்று பெற்றிருக்கிறார்கள். பகலில் செயல்படுகிறார்கள், இரவில் ஓய்வாகப் படுத்துறங்குகிறார்கள்.

கிழக்கில் பகலில்கூட அவர்கள் உறங்கிக் கொண்டிருக்கிறார்கள். மேற்கில் இரவிலும் அவர்களுடைய மூளை வேலை செய்கிறது, கனவு

காண்கிறது. மேற்கத்திய கனவுகள் எல்லாமே பயங்கரக் கனவாகி விடுகின்றன. கனவென்றால் என்னவென்றே தெரியாத இனமும் கிழக்கில் உள்ளது. உண்மைதான். இந்தியாவில் சில பழங்குடி மக்களை நான் சந்தித்தேன். கனவைப் பற்றி அவர்களிடம் நீங்கள் வினவினால், 'நீங்க என்ன சொல்றீங்க?' என்று கேட்பார்கள். அரிதாகவே அது நிகழ்கிறது. யாரேனும் ஒருவர் கனவு கண்டால் அது நகரத்தின் தலைப்புச் செய்தியாகி விடும். மேற்கில் உள்ளவர்கள் காணும் கனவுகள் மிகப்பல. அவர்களுக்கு உறக்கம் சாத்தியமற்றதாகி விடுகிறது. எல்லாமே நடுக்குறும்படியாய் கொடூர வேகம். எதுவும் சமநிலையில் இருப்பதாய் தெரிவதில்லை. கிழக்கில் எல்லாமே செயலற்றிருக்கும்.

ரஜஸ் மற்றும் தமஸ் இவையிரண்டும் சமநிலையில் இருந்தால் சத்துவம் என்பது சாத்தியமாகும். எப்போது வேலை செய்வது, எப்போது உறங்குவது என்பதை நீங்கள் அறிந்திருக்கும் போது, அலுவலக வேலையை வீட்டுக்குக் கொண்டு வராமல் அலுவலகத்திலேயே முடிப்பது, அலுவலகத்தில் அலுவல் பற்றிய சிந்தையாகவே இருப்பது, அதை அலுவலகத்திலேயே விட்டுவிட்டு வீட்டுக்கு வருவது, கோப்புகளை வீட்டுக்குக் கொண்டு செல்லாமல் இருப்பது. இவற்றை நீங்கள் அறிந்திருக்கும் போது சத்துவ குணம் தன்னால் வந்துவிடும். சத்துவம் என்பது சீர்த்தன்மை, சத்துவம் என்பது சமநிலை.

சத்துவ குணமுடையவருக்கு ஆற்றல் சார்ந்த உத்திகள் பெரிய அளவில் உதவிகரமாயிருக்கும். காரணம் அவை அமைதியை மட்டுமல்ல பரம சுகத்தையும் அவருடைய வாழ்வில் கொண்டு வரும். அவர் முன்பே அமைதியாயிருப்பார். காரணம் சமநிலை அவருக்கு அசைவற்றத் தன்மையையும், அமைதியையும் தந்து விட்டிருக்கும். ஆனால், அமைதி என்பது எதிர்மறையான நடப்பு. அது ஒரு நடனமாகவோ, கீதமாகவோ, மகிழ்ச்சிக் கொண்டாட்டமாகவோ மாறாதவரை அது எதிர்மறையானதுதான். அமைதியாயிருப்பது நல்லதுதான். ஆனால், அத்தோடு நின்றுவிடக் கூடாது. அதைவிடக் கூடுதலாகவே பலவும் உங்களுக்குக் காத்திருக்கின்றன.

மருத்துவரால் நோய் நிர்ணயத்துக்குட்படுத்தப்பட்டு, தவறாக எதுவும் இல்லையென்று கண்டறியப்பட்ட ஒரு மனிதனைப் போன்றதுதான் அமைதி. ஆனால் அதுவே ஆரோக்கியமாகி விடாது.

நீங்கள் நோயில்லாதிருக்கலாம் ஆனால் அதுவே ஆரோக்கியம் என்றாகி விடாது. ஆரோக்கியம் என்பது ஒரு மாறுபட்ட நறுமணம், உயிர்ச்சக்தி. 'நோயின்மை'க்கான சான்றிதழ் ஆரோக்கியமாகி விடாது. ஆரோக்கியம் என்பது நேர்மறையான ஒரு நிகழ்வு. நீங்கள் அதைக் கொண்டுதான் துடிப்புடன் செயல்படுகிறீர்கள், அதனை பரவச் செய்கிறீர்கள். 'உங்களுக்கு நோயில்லை' என்கிற சான்றிதழைப் போன்றதல்ல அது. ஆரோக்கியம் என்பது தன்னளவில் நோயில்லாமல் இருப்பது மட்டுமல்ல, தன்னுடைய இருப்பையும் கொண்டதாயிருக்கும்.

சத்துவ குணமுடைய ஒருவன் முன்பே அமைதியாய் இருக்கிறான். அமைதியான வாழ்க்கை அவனுடையது. அமைதியானது அதில் சிரிப்பொலி இல்லை. அமைதியானது, அதில் செயல்படும் ஆற்றல் வழிந்தோடவில்லை. அமைதியானது ஆனால், பரவுதல் இல்லை. அமைதியானது ஆனால் இருண்டது. ஒளி அதனை ஊடுருவவில்லை. சத்துவ குணமுடையவனால் முற்றிலும் அமைதியாயிருக்க முடியும். ஆனால் அந்த அமைதியில் நாதம், அனாகதம், தெய்விக கீதம் ஆழமாய் உட்செல்வதில்லை. ஆற்றல் சார்ந்த தியானம் அவனை ஆடவைக்கும், ஆட்டத்தை இதயபூர்வமாக்கும், அவனுடைய உயிரின் ஒவ்வோர் அணுவிலும் பாடலைக் கொண்டு சேர்க்கும்.

உண்மையில் சத்துவ குணமுடையவன் அதிக அளவில் பயனடைகிறான், அனுகூலந்தான், ஆனால் எதையும் செய்ய இயல்வதில்லை. அதுவே இயற்கையின் நியதி. நீங்கள் கொண்டிருப்பவராயின் மேலும் வழங்கப்படுவீர்கள், நீங்கள் கொண்டிருக்கவில்லையெனில் உங்களிடம் இருந்ததும் நீக்கப்பட்டு விடும்.

**ஞானம் தனித்தன்மையுடையது என்று நீங்கள் சொன்னீர்கள், அந்தத் தனித்தன்மை ஞானம் பெற்ற பின்பும் தொடர்ந்து இருக்குமா?**

இல்லை, தனித்தன்மை (individuality) என்பது ஞானம் பெற்ற பின்பும் இருக்காது. ஆனால் ஞானம் என்பதே தனித்தன்மை கொண்டதுதான். அதை நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும். ஆறு கடலில் சென்று விழுகிறது. அந்த வீழ்ச்சிக்குப் பின் ஆறு மறைந்து விடும். ஆறு தன்னுடைய தனித்தன்மையை இழந்து விடுகிறது. ஆனால், ஆறு என்கிற தனியான ஒன்று கடலினுள் பாய்கிறது. நீங்கள்

தனி நபராய் ஞானமென்கிற கடலுக்குள் சென்று விழுகிறீர்கள். உங்களுடைய மனைவியை அல்லது நண்பரை உடன் கூட்டிச் செல்ல முடியாது. அதற்கு வழியேயில்லை. நீங்கள் தனியாய் செல்கிறீர்கள். யாரும் யாரையும் கூட்டிச் செல்ல முடியாது.

யாரேனும் ஒருவரை நீங்கள் எப்படி அழைத்துச் செல்ல முடியும்? தியானிக்கிற போது நீங்கள் தனியாகத்தான் தியானிக்கிறீர்கள். கண்களை மூடிக் கொண்ட கணத்தில் நீங்கள் சந்தடியற்ற தன்மையைக் கொண்டு விடுகிறீர்கள் - மனைவி, நண்பன், குழந்தைகள் இவர்கள் எல்லாரும் மறைந்து விடுகிறார்கள். எதுவெல்லாம் அருகில் இருந்தனவோ அதுவெல்லாம் இனியும் அருகில் இருக்காது. வெகு சமீபமாய் இருந்தனவெல்லாம் வெகு தொலைவிற்கு சென்று விடுகின்றன. உங்களுடைய அமைதியில், உணர்ச்சிகளை உள்ளுக்குள் கட்டுப்படுத்திக் கொண்ட நிலையில் நீங்கள் மட்டுமே தன்னந்தனியாய் இருக்கிறீர்கள். இந்தத் தனித்திருக்கும் தன்மைதான் கடலில் விழுந்து கலப்பது.

ஆக, ஞானம் என்பது தனியானது. உண்மையில் ஞானம் பெற்றபின் தனித்தன்மை மறைகிறது. அங்கே தனித்தன்மை இருக்காது. எனவே, இதனை நினைவில் கொள்ளுங்கள்: நீங்கள் திரளாகச் செல்ல (*en masse*) முடியாது. நீங்கள் ஓர் அமைப்பாகவோ ஒரு குழுவாகவோ செல்ல முடியாது என்பதை. 'கிறிஸ்துவர்களே வாருங்கள்' என்றோ 'இந்துக்களே வாருங்கள்' நான் ஞானம் அடையப் போகிறேன், என்னுடன் அத்தனை இந்துக்களையும் அழைத்துச் செல்வேன்' என்றோ நீங்கள் சொல்ல முடியாது. யாரையும் யாரும் கூட்டிச் செல்ல முடியாது. அது முற்றிலும் தனிப்பட்டதாகவே இருக்கிறது. அதனுடைய தூய்மையும், நேர்மையும் அதுவேயாகும். உங்களுடைய முற்றான தனிமையில் கடல் சார்ந்த *நிர்வாணத்தை நீங்கள் அடைகிறீர்கள். ஒரு கண நேரத்துக்கு முன் நீங்கள் ஆறாக இருந்தீர்கள், ஒரு கணத்துக்கு முன்னால் தனித்தன்மையின் உச்சியில் ஒரு தனியாளாய் நீங்கள் இருந்தீர்கள், ஒரு புத்தராயிருந்த மறுகணத்தில் எதுவுமே இருப்பதில்லை. நீங்கள் அதற்கு மேலும் ஆறாக இருக்க மாட்டீர்கள், கடலாகி விடுவீர்கள். இப்போது, 'நான் இருக்கிறேன்' என்றுகூட உங்களால் சொல்ல முடியாது.

---

* நிர்வாணம் - மோட்சம்

நீங்கள் அதனை இரண்டு வழிகளில் சொல்ல முடியும். ஆறு மறைந்து விட்டது என்பது ஒரு வழி. அது புத்த மார்க்கம். ஆறு கடலாகி விட்டது என்றும் நீங்கள் சொல்ல முடியும். அது மற்றொரு வழி. அது வேதாந்த மார்க்கம். ஆனால் இரண்டுமே ஒன்றுதான். 'ஆறு கடலாகி விட்டது' அல்லது 'ஆறு மறைந்து கடல் மட்டுமே இருக்கிறது' என்று எப்படிச் சொன்னாலும் அவை ஒன்றைப் பற்றியே சொல்வதாகும்.

**நாம் எங்கிருந்து வந்தோம், எப்படி உயர் தன்மைக்கு உரிய வராகிறோம்?**

எங்கிருந்துமில்லை (nowhere). 'nowhere' என்கிற இந்த வார்த்தையை 'now here' என்று இரண்டு வார்த்தைகளாய் உடைக்க முடியும். இவை இரண்டுமே இயல்பிற்கும், நியாயத்திற்கும் முரண்பாடு இல்லாத வார்த்தைகள்தாம். இரண்டும் உண்மையானவையே காரணம் இரண்டும் ஒரே அர்த்தத்தைத்தான் கொண்டுள்ளன. நீங்கள் எங்கிருந்தும் வரவில்லை அல்லது 'இங்கே இப்போதில்' வருகிறீர்கள்.

'எங்கிருந்து?' என்று நீங்கள் கேட்கிறபோது தொடக்கத்தைப் பற்றி நீங்கள் அறிய விரும்புவீர்கள். அங்கே யாரும் இல்லை. எப்போதும் நீங்கள்தான் இருந்தீர்கள், நீங்கள் மட்டுமே இருப்பீர்கள். பிரபஞ்ச இருப்பு என்பது (existence) தொடக்கமற்றதாயும், முடிவற்றதாயும் இருக்கிறது. ஏதோ ஓரிடத்தில் அது தொடங்கி விடவில்லை. அது சாத்தியமற்றது. காரணம், பிரபஞ்ச இருப்பு ஏதோ ஓரிடத்தில் ஏதோ ஒரு நாளில் தொடங்குமாயின் - கிறிஸ்துவர்கள் சொல்வார்களே அது இயேசுவிற்கு முன் தொடங்குகிறது, நான்காயிரத்து நான்கு ஆண்டுகளுக்கு முன்னால் என்கிற மாதிரி - பிரபஞ்ச இருப்பிற்கு முன்பே காலம் இருந்திருக்கிறது என்றுதான் பொருள்படும். அது அபத்தம், ஏனெனில் காலம் பிரபஞ்ச இருப்பின் ஒரு பகுதியாகவே இருக்கிறது. பிரபஞ்ச இருப்பிற்கு (existence) முன் அண்டவெளி (space) இருந்ததென்றே அது பொருள்படும்.

இடமும், காலமும் சேர்ந்துதான் ஒட்டுமொத்த பிரபஞ்ச இருப்பு உண்டாயிற்றென்று அறிவியலார் கூறுவர். ஆக, காலம் என்பது தொடக்கமல்ல. காரணம், அப்போது நீங்கள் கேட்பீர்கள், 'காலம் எப்போது தொடங்கிற்று? என்று. நான்காயிரத்து நான்கு ஆண்டு களுக்கு முன்பா? திங்கட்கிழமை காலை ஆறு மணிக்கா? என்று

கேட்பீர்கள். அவ்வேளையில் காலம் முன்பே இருந்திருக்கிறது. இல்லாவிட்டால் அது திங்கட்கிழமை என்பதையும், ஞாயிற்றுக்கிழமை கடந்து விட்டது என்பதையும் நீங்கள் எப்படி அறிய முடிந்தது? காலத்திற்கு தொடக்கமில்லை, அப்படியிருந்தால் இன்னொரு காலமும் தேவைப்படும். 'சரி, மற்றொரு காலத்தையும் அனுமதிப்போம்' என்று நீங்கள் சொல்வீர்களாயின் அப்போது அந்த மற்றொரு காலம் தொடங்க இயலாது. நீங்கள் அளவின்றிப் பின் சென்று (regression) மோசமான நிலையை அடையும்படி ஆகும். உங்களை எங்குமே இட்டுச் செல்லாத ஓர் அபத்தத்தில் (absurdity) விழுந்து விடுவீர்கள்.

அங்கே தொடக்கம் இல்லை. தொடக்கம் என்பது இல்லையாயின் முடிவென்பதும் இல்லை. காரணம் ஒருபோதும் தொடங்கியேயிராத ஒன்று முடிவடைய இயலாது. அது எப்படி முடிவடையும்?

ஆக, நீங்கள் எங்கிருந்தும் வரவில்லை. அது ஒரு விடை: நீங்கள் வரவில்லை, இங்கேயே இருந்தீர்கள் என்பது. இதிலிருந்து எழுகிறது. இரண்டாவதாயொன்று, 'nowhere' என்பதை 'now here' என்பதாய் உடைப்பது. உடைத்தாலும் பொருத்தம் உடையதாகவே இருக்கிறது.

நான் கேள்விப்பட்ட ஒரு கதை: கடவுள் நம்பிக்கையற்றவரான ஒரு வழக்கறிஞர் இருந்தார். அவர் வாத முறையில் தேர்ந்தவருங்கூட. அவர் தம்முடைய சுவரில் 'கடவுள் எங்கும் இல்லை' என்கிற பொருளில் 'GOD IS NOWHERE' என்று பெரிய எழுத்துகளில் எழுதி வைத்திருந்தார். பிறகு, அவருக்கு ஒரு குழந்தை பிறந்து அவர் தந்தையாகி விட்டார். அந்தக் குழந்தை எடுத்துகளைக் கற்றுக் கொள்ளத் தொடங்கியது. 'nowhere' என்கிற நீண்ட வார்த்தையை உச்சரிப்பது அதற்குச் சிரமமாயிருந்தது. எனவே அந்தக் குழந்தையால் 'GOD IS' என்பதை எளிதாய் படிக்க முடிந்தது. ஆனால் 'NOWHERE' என்பதைத்தான் படிக்க முடியவில்லை. அது பெரிய வார்த்தையாய் தெரிந்தது. அவன் அதை இரண்டாக உடைத்து 'GOD IS NOW HERE' என்று படித்தான். அதைக் கேட்ட தந்தை தன்னுடைய நிலையில் இருந்து மாற்றமடைந்தார் என்பதையும் நான் கேள்விப்பட்டேன். திடீரென அவருக்குள் ஏதோ ஒன்று உருகி மாற்றம் கண்டிருக்கும்: அந்தக் குழந்தை ஒரு செய்தியைக் கொண்டு வந்தது.

ஆக, நீங்களும் ஒரு குழந்தையாகி, வார்த்தையை இரண்டாக உடைத்து விடுங்கள். நான் 'NOWHERE' என்று சொல்லும்போது 'now here' என்று கிரகிக்க முயலுங்கள். ஒன்று நீங்கள் எங்கிருந்தும்

வரவில்லை அல்லது இங்கே ஒவ்வொரு கணத்திலும் நீங்கள் பிறந்து கொண்டிருக்கிறீர்கள். கணத்துக்குக் கணம் பிறப்பு. கணத்துக்குக் கணம் நீங்கள் இறந்து மறைகிறீர்கள். கணத்துக்குக் கணம் நீங்கள் மீண்டும் பிறக்கவும் செய்கிறீர்கள். நீங்கள் ஒரு செயலாக இல்லை, செயல் முறையாய் இருக்கிறீர்கள். ஒரு செயல் (பொருள்) பிறக்கிறது, நிறைவேற்றப்படுகிறது. பிறகு முடிந்து விடுகிறது. இல்லை, நீங்கள் ஒரு பொருளல்ல, இயங்காமல் நிலையாய் ஓரிடத்தில் இருந்துவிட. நீங்கள் ஒரு செயல்முறை, ஆறுபோல் ஓடிக் கொண்டேயிருப்பவர். ஒவ்வொரு கணத்திலும் நீங்கள் புதுப்பிக்கப்படுகிறீர்கள், ஒவ்வொரு கணத்திலும் உயிர்த்தெழுந்தவராகிறீர்கள். ஒவ்வொரு கணத்திலும் இறக்கிறீர்கள். ஒவ்வொரு கணத்திலும் மறுபிறவி எடுக்கிறீர்கள்.

இந்தக் கணம் பற்றிய விழிப்புணர்வு உங்களிடமிருந்தால் இந்த நிகழ்வு பற்றிய உணர்வும் உங்களுக்கிருக்கும். நீங்கள் ஒவ்வொரு கணத்திலும் ஒரு நல்லதல்லாத துவாரத்தில் (black hole) நுழைந்து மறைகிறீர்கள். மீண்டும் அதிலிருந்து புதிதாய் வெளியே வருகிறீர்கள். ஒவ்வொரு கணத்திலும் இது நிகழ்கிறது. ஆனால் நீங்கள் எச்சரிக்கை உணர்வோடு இருப்பதில்லை. அதனால்தான் தவற விடுகிறீர்கள். அந்த இடைவெளியைக் காண்பதற்கு ரொம்பவும் தீவிர கவனம் தேவைப்படும். அதன்பிறகு நீங்கள், கேள்வியின் இரண்டாவது பகுதியை, எப்படி உயர்தன்மைக்கு உரியவராகிறோம் என்பதைக் கேட்க மாட்டீர்கள். நீங்கள் எப்போதும் ஒரு நிலையில் இருந்து இன்னொரு நிலைக்குச் சென்று கொண்டிருக்கிறீர்கள். பொருந்துவது (இசைவாயிருப்பது) உங்கள் இருப்புணர்வு. நீங்கள் எப்பொழுதும் வளர்ந்து கொண்டேயிருக்கிறீர்கள். ஒவ்வொரு வழியிலும், ஒவ்வொரு பொழுதிலும். அதற்கு முடிவேயில்லை. நீங்கள் முழுமையாகிற, அதற்கு மேல் வளர வேண்டிய அவசியம் இல்லாத ஒரு நேரம் வருமென்று எண்ணி விடாதீர்கள் - காரணம், மரணம் வந்துவிடும். அதற்குக் காலம் நேரம் கிடையாது. ஒரு முழுமையில் இருந்து இன்னொரு முழுமைக்கு என ஒருவர் மேம்பட்டுக் கொண்டே இருக்கிறார்.

இமயமலைக்குப் போங்கள். மலைமுகட்டையன்றி (உச்சம்) வேறெதையும் காண மாட்டீர்கள். நீங்கள் ஓர் உச்சியை அடைகிற போது மற்ற உச்சங்களும் உங்கள் பார்வையில் படும். பிறகு மற்ற மலையுச்சிகளுக்கும் செல்வீர்கள். அப்போது மேலும் பல உச்சிகள் தெரியும். நீங்கள் எத்தனைக்கு வளர்கிறீர்களோ அத்தனைக்கு வளர்ச்சிக்கான சாத்தியங்களைக் காண்பீர்கள். நீங்கள் எந்த அளவு

பொருத்தமாயிருக்கிறீர்களோ (இசைவாய்) அந்த அளவுக்கு புதுப்புது வாசல்கள் திறக்கும், உயர்வுக்கான புதிய தோற்றங்கள், புதிய பாதைகள், புதிய பரிமாணங்கள்!

வாழ்க்கை என்பது தடையில்லாமல் தொடர்ந்து செயல்படுகின்ற ஒரு நிகழ்வு, ஒரு தொடர்ச்சி. 'நான் ஒரு நிலைக்கு வந்தாயிற்று' என்று சொல்லிக் கொள்கிற ஓர் இடத்துக்கு நீங்கள் ஒருபோதும் வருவதில்லை. அத்தகைய ஒரு நேரத்தை நீங்கள் வேண்டினால், தற்கொலையைத் தான் வேண்டிக் கேட்டுக் கொண்டவராவீர்கள். அதைக் கேட்காதீர்கள். செயல்முறையோடு இருங்கள், செயல்முறையோடு இருந்துவிட முடிந்தால் அது அருமையான விசயம். மீண்டும் மீண்டும் பிறந்து, மீண்டும் மீண்டும் இளமை வனப்புடன் திகழ்வதென்பது உணர்வற்ற ஒரு பாறையைப் போன்ற நிறைவை நீங்கள் விரும்பிக் கேட்டால் அப்போது எந்தவொரு இசைவும் (becoming) தேவைப்படாது. நீங்கள் மரணத்தையே வேண்டுகிறீர்கள்; வாழ்வின் மீது நேசம் கொண்டவரல்லர் நீங்கள். வாழ்க்கையை நீங்கள் வாழவில்லை, அறிந்து கொண்டிருக்கவுமில்லை.

வாழ்க்கையை ஏற்றிடுங்கள், வாழ்ந்து பாருங்கள், கடந்து செல்கிற கணத்தில் கவனமாயிருங்கள், உங்களுடைய விழிப்புணர்வின் முன்னிலையில் எல்லாப் புதிர்களும் உங்களுக்கு விடுவிக்கப்படும். அதைத்தவிர வேறு வழியில்லை.

நீங்கள் எங்கிருந்தும் வரவில்லை எங்கேயும் போவதில்லை. எப்போதும் இடைநிலையில் இருக்கிறீர்கள். எப்போதும் பாதையில் தான் (நெறிமுறை) இருக்கிறீர்கள். உண்மையில் நான் சொல்ல விரும்புவது நீங்களே பாதையாயிருக்கிறீர்கள் என்பதைத்தான். காரணம் பாதை உங்களிலிருந்து வேறாய் பிரிந்திருக்கவில்லை. நீங்கள் வளர்கிறீர்கள் என்று நான் சொல்கிறபோது என்னைத் தவறாய் புரிந்து கொள்ளாதீர்கள் - நீங்கள் தனியென்றும் உங்கள் வளர்ச்சி தனியென்றும் நீங்கள் நினைக்கலாம். இல்லை, நீங்களேதான் வளர்ச்சி, உயர் தன்மைக்கு உரியதாவது. வேறெதுவும் இடம் பெறுவதில்லை.

பிறகு உங்களுடைய பொருந்துகிற செயல் முறையில் ஒரு வெறுமையை, சூன்யத்தை நீங்கள் காண்கிறீர்கள். அந்த இடம் அதிசயிக்கத்தக்கது - உங்களுக்குள் இருப்பது. அந்த இடத்தைத்தான் நாம் பேரின்ப நிலை என்கிறோம்.

○

**நீங்கள் என்னை முழுவதுமாய் குழப்பமடையவும், சுருசுறுப் பற்றுப் போகவும் செய்து விட்டீர்கள். நான் பித்துப் பிடித்தாற் போலாகி விட்டேன். அந்தக் கணத்தில் எனக்கு நம்பிக்கையே இல்லாமல் போய்விட்டது. தற்போது சொல்லுங்கள் நான் என்ன செய்ய வேண்டும், எங்கே போக வேண்டும்?**

இது ஸ்வாபவ்விடமிருந்து வருவது. அறிவுத் தெளிவற்ற நிலையை நீங்கள் எதிர்பாராது சந்திக்க வேண்டியிருக்கும். தற்போது அவன் தானாகவே அதை உணர்ந்து கொண்டிருக்கிறான். இது ஓர் அருமையான கணம்.

நீங்கள் குழப்பமடையக் கூடுமென்றால் அது உங்களுடைய அறிவுத் திறனையே காட்டுகிறது. ஒரு முட்டாளால் மட்டுமே குழப்பமடைய இயலாது. ஓர் அறிவிலி மட்டுமே குழப்பமடைய மாட்டான். நீங்கள் ஓரளவு அறிவுத் திறனுடையவராயினும் குழப்பமடையக் கூடும். அறிவாளி மட்டுமே குழப்பத்திற்குள்ளாகிறான். எனவே, குழப்பத்தை ஆய்ந்து பார்க்க வேண்டியதில்லை. உங்களிடம் மதிநுட்பம் இருக்க வேண்டும். அதனால்தான். அறிவுத்திறன் என்பது, தன்னால் வருவது, காலத்தில் வருவது. குழப்பம் எப்போதுமே இருந்து கொண்டிருக்கும். ஆனால், நீங்கள் எச்சரிக்கை உணர்வோடு இருந்திருக்கவில்லை. எனவே, உங்களால் அதைக் காண இயலவில்லை. தற்போது நீங்கள் எச்சரிக்கையாய் இருக்கிறபடியால் அதைக் காண முடியும். அது மிகச் சரியாக இப்படித்தான். ஓர் இருண்ட அறையில் நீங்கள் இருக்கிறீர்கள். ஆங்காங்கே சிலந்திக் கூடுகள் இருக்கின்றன. எலிகள் இங்குமங்குமாய் ஓடிக் கொண்டிருக்கின்றன. மூலைகளில் தூய்மையற்ற பொருள்கள் பெருகிக் கொண்டேயிருக்கிறது. திடீரென்று நான் ஒரு விளக்குடன் உங்களுடைய அறைக்குள் வருகிறேன். நீங்கள் சொல்கிறீர்கள், 'உமது விளக்கை அணைத்து விடும். எனது அறையை அழுக்காக்கிக் கொண்டிருக்கிறீர். இது ஒருபோதும் அப்படியிருந்ததில்லை. இருட்டில் எல்லாமே அழகாயிருந்தன' என்று.

நான் எப்படி உங்களைக் குழப்பமடையச் செய்ய முடியும்? உங்களுடைய குழப்பங்களையெல்லாம் ஒரு முடிவுக்குக் கொண்டு வரத்தானே நான் இங்கிருப்பது. ஆனால் குழப்பங்களைப் போக்கும் செயல் முறையில் முதல் நடவடிக்கையாய் அமையவிருப்பது உங்கள் குழப்பங்களை நீங்கள் தெரிந்து கொள்வதுதான். உங்கள் அறையைச் சுத்தப்படுத்துவதாயின் முதலில் செய்ய வேண்டியது அறையில் உள்ள

நிலைமையை அறிந்து கொள்வதுதான், இல்லையேல் அதை எப்படிச் சுத்தப்படுத்துவீர்கள்? அது முன்பே சுத்தமாயிருப்பதாய் நீங்கள் நம்பினால் - இருட்டில் குவிந்து கிடக்கும் அசுத்தங்களை நீங்கள் அறியவில்லையெனில், சிலந்திகள் உங்களுடைய அறையில் செய்யும் அற்புதங்களை நீங்கள் காணவில்லையெனில், எத்தனை தேள்களும், பாம்புகளும் தங்கள் வசிப்பிடமாய் உங்கள் அறையைக் கொண்டிருக்கிறதென்பதை நீங்கள் அறியாத பட்சத்தில் - இருட்டில் நீங்கள் அயர்ந்து உறங்கிக் கொண்டிருந்தால் பிரச்சினையில்லை. யாருடைய அறிவுத்திறன் வளர்ந்து கொண்டிருக்கிறதோ அவருக்குத்தான் பிரச்சினை.

ஆக, என்னிடம் நீங்கள் எப்போது வந்தாலும், என்னை நீங்கள் புரிந்து கொண்டிருந்தீர்களாயின் குழப்பம்தான் முதல் விளைவாயிருக்கும். அது ஒரு நல்ல அறிகுறி. நீங்கள் சரியான பாதையில்தான் போகிறீர்கள், போய்க் கொண்டேயிருங்கள். கவலையே வேண்டாம். குழப்பம் என்று ஒரு நிலையிருந்தால் குழப்பமின்மை என்கிற நிலையும் இருக்கும். குழப்பத்தை நீங்கள் காணாவிடில், அங்கே தெளிவுக்கான சாத்தியம் இருக்காது. சரியாய் கவனியுங்கள்: நீங்கள் குழப்பத்திலிருப்பதாய் யார் சொன்னது? குழப்பமுற்ற மனம்கூட சொல்லாது, 'நான் குழப்பத்தில் இருக்கிறேன்' என்று. நீங்கள் பக்கத்தில் இருந்து கண்காணிப்பவராக வேண்டும் - உங்களைச் சுற்றி புகை மண்டலமாய் குழப்பம் இருப்பதை உங்களால் காண முடியும். ஆனால் அங்கே குழப்பம் இருப்பதை அறிந்து கொண்டவர் யார்? அனைத்து நம்பிக்கையும் காரண காரியத் தொடர்புக் கடங்காத இந்த நடப்பில் (phenomenon) இருக்கிறது. அது உங்களில் ஒரு பகுதி - உண்மையில் மிகச்சிறிய பகுதி, ஆனால் அதுவும்கூட தொடக்கத்தில் மிக அதிகந்தான். உங்களில் ஒரு பகுதியால் குழப்பம் முழுவதையும் கவனிக்க முடிகிறதென்றால் நீங்கள் நற்பேறுடையவர் தாம். தற்போது இந்தப் பகுதியை மேலும் வளர விடுங்கள். குழப்பத்தைப் பற்றிப் பயப்பட வேண்டாம். இல்லையேல், மீண்டும் பாதுகாப்பாய் உணரும் எண்ணத்துடன் இந்தப் பகுதியைத் திரும்பவும் கட்டாயப்படுத்தித் தூங்க வைப்பீர்கள்.

ஸ்வாபவ்வை ஆதியில் இருந்தே நான் அறிவேன். அவன் குழப்பமில்லாமல் இருந்தான், அது உண்மை - காரணம் அவன் முழு முட்டாள். அவன் பிடிவாதக்காரன், இணக்கமில்லாதவன். அவன்

அறிந்து கொள்ளாமலே எல்லாவற்றையும் அறிந்திருந்தான். தற்போது முதல் முறையாய் அவனில் ஒரு பகுதி அறிவுத்திறனை, எச்சரிக்கையை, தெரிநிலையை அடைந்திருக்கிறது. அந்தப் பகுதி சுற்றிவரப் பார்க்கிறது, சுத்தமான கலப்படமற்ற குழப்பத்தைக் காண்கிறது.

இது நேர்த்தியான விசயம். தற்போது இரண்டு சாத்தியங்கள் இங்கே உள்ளன. ஒன்று 'இது குழப்பமானது' என்று சொல்கிற பகுதியை நீங்கள் கவனிப்பது. அத்துடன் அதை மேம்படுத்துவது. அது ஒளித்தம்பமாய் மாறுகிறது. அந்த ஒளியில் அத்தனை குழப்பங்களும் மறைந்து விடும். அல்லது அச்சமும் திகிலும் கொண்டு விடுகிறீர்கள் - இந்த அறிந்து கொண்ட பகுதியிடமிருந்து நழுவத் தொடங்குகிறீர்கள், திரும்பவும் அதை இருளில் மூழ்கடிக்கத் தொடங்குகிறீர்கள். பிறகு - மீண்டும் நீங்கள் அறிபவர் ஆகிறீர்கள். பிடிவாதம், ஊடுருவித் தெரிந்து கொள்ளும் தன்மை (knowledgeable) எல்லாமும் எவ்விதக் குழப்பமும் இல்லாமல் தெள்ளத் தெளிவாய் இருக்கிறது. அதிகம் தெரிந்திராதவனும், அதிகம் அறிந்திராதவனும் மட்டுமே குழப்பமில்லாமல் இருக்க முடியும்.

உண்மையிலேயே எச்சரிக்கை உள்ளவன் எண்ணிப் பார்ப்பான், தயங்குவான் - தான் எடுத்து வைக்கிற ஒவ்வோர் அடியிலும் அவனிடம் தயக்கம் இருக்கும். காரணம், அத்தனை உறுதிப்பாடுகளும் இழக்கப்பட்டு விடுகின்றன. லாவோட்ஸு (Lao Tzu) கூறுவார், 'தான் எடுத்து வைக்கிற ஒவ்வோர் அடியிலும் புத்திசாலி ஏதோ மரண பயம் கொண்டவனைப் போல் எச்சரிக்கையாய் நடப்பான்' புத்திசாலி குழப்பத்தைப் பற்றிய எச்சரிக்கையோடு இருப்பான், அதுவே முதல் நடவடிக்கை.

அதன் பிறகு இரண்டாவது நடவடிக்கை: புத்திசாலி மிகுந்த புத்திசாலியாகி விடுகிறபோது அத்தனை ஆற்றலும் ஒளியாக மாறிவிடும். ஆக, தற்போது அதே ஆற்றல் - எது குழப்பத்தைத் தோற்றுவித்துக் கொண்டிருந்ததோ, குழப்பத்தில் ஆழ்ந்திருந்ததோ அதே ஆற்றல் அதற்குமேல் அங்கிருப்பதில்லை. அது உறிஞ்சப்பட்டு விடுகிறது. அனைத்துக் குழப்பங்களும் மறைந்து விடுகிறது. திடீரென்று அங்கே காலைப் பொழுது வந்து விடுகிறது. இருள் மிக அதிகமாயிருக்கும் போது - காலை அருகில் இருக்கிறது. ஆனால் நீங்கள் தப்பித்து விட முடியும்.

'நீங்கள் என்னை முற்றாய் குழப்பமடையச் செய்து விட்டீர்கள்...' முழுக்கவும் உண்மை. நான் அதைத்தான் செய்து கொண்டிருக்கிறேன். நீங்கள் அதற்காக எனக்கு நன்றி சொல்ல வேண்டும். '......சுறுசுறுப்பற்றுப் போகவும் செய்து விட்டீர்கள்'. ஆம். அதுவும் உண்மையே. காரணம் எனக்கு ஸ்வாபவ்வைத் தெரியும். அவன் ராஜஸ வகையைச் சேர்ந்தவன் - அதீத செயல்பாடு. அவன் என்னை முதல் முறையாய் பார்க்க வந்திருந்தபோது மிகுந்த செயலூக்கத்துடன் காணப்பட்டான். மிதமிஞ்சிய சுறுசுறுப்பு - ராஜஸ வகை. தற்போது தியானமும், புரிதலும் (understanding) அவனுடைய செயல்பாட்டை தாழ் அளவிற்கு. சமன் செய்து கொள்ளும் நிலைக்குக் கொண்டு வந்து விட்டிருக்கின்றன. ரஜோ குணமுடைய ஒருவன் தான் சமநிலை அடையும்போது. தனது வேகம் மந்தமாகிக் கொண்டிருப்பதாய் எண்ணிக் கொள்வான். அது அவனுடைய மனோபாவம். 'என்னுடைய ஆற்றல் எங்கே போயிற்று' என்று அவன் சீற்ற உணர்வு கொள்ளுவான். அவன் மந்தனாகி விட வேண்டியதுதான். அவனுக்கு என்னவாயிற்று? மிகச் சிறந்த போர் வீரனாகத்தானே அவன் இங்கு வந்தது. உலகத்தையே வெற்றிகொள்ள வேண்டியவன் அவன். அதீத சுறுசுறுப்பில் இருந்தும், அதீத முட்டாள்தன நடத்தையில் இருந்தும் அவனை மீட்டெடுக்கும் காரியத்தை அல்லவா நான் செய்து கொண்டிருக்கிறேன்.

மேற்கில் ஒரு சொலவடை உண்டு. 'வெற்றான மனம் சைத்தானின் பணிக்கூடமாகி விடும்' என்று. அது ரஜோ குணத்தினரால் உருவாக்கப்பட்டது. அது உண்மையல்ல. 'வெற்றான மனம் கடவுளின் பணிக்கூடம்' என்பதே சரி. அங்கே சைத்தான் செயல்பட முடியாது. காரணம் வெறுமையான மனத்தில் சைத்தான் நுழைய முடியாது. செயல்படும் நிலையிலுள்ள ஒரு மனத்தில் மட்டுமே சைத்தான் நுழைய முடியும். ஆக, இதனை நினைவில் கொள்ளுங்கள்: ராஜஸ மனம்தான் சைத்தானின் பணிக்கூடமாயிருக்கிறது. அதீத செயல்படும் தன்மையுள்ளவரின் செயல் மீதுதான் சைத்தான் தன்னுடைய கைவரிசையைக் காட்ட முடியும்.

இரண்டு உலகப் பெரும் போர்களை நீங்கள் கண்டிருக்கிறீர்கள்: அவை ரஜோ குணமுடையவர்களால் விளைந்தவை. ஐரோப்பாவில், ஜெர்மனி ரஜோ குணமுடையவர்களின் உடைமையாயிருந்தது. கிழக்கில், ஜப்பான் ரஜோ குணமுடையவர்களுக்குச் சொந்த

மாயிருந்தது. இந்த இரண்டுந்தான் இரண்டாம் உலகப் போரின் அனைத்து முட்டாள் தனத்துக்கும் மூலமாய் இருந்தன. அதீத செயல்படும் தன்மை. மிகச் சரியாய் சிந்தித்துப் பாருங்கள், ஜெர்மனி தமோ குணத்தினருக்கு - மந்தத் தன்மை உடையவர்களுக்குச் சொந்தமாயிருந்தால் - இட்லரால் என்ன செய்திருக்க முடியும். நீங்கள் 'வலப்புறம் திரும்பு' என்று அவர்களிடம் சொன்னால் அவர்கள் அப்படியேதான் நிற்பார்கள். உண்மையில் அவர்கள் அப்போது கீழே உட்கார்ந்து விடுவார்கள் அல்லது அவர்கள் உறங்கி விட்டிருப்பார்கள். தமோ குணத்தினர் நடுவே இட்லர் அறிவற்றவராய் தெரிந்திருப்பார். சத்துவ குணமுடைய சமூகத்தில் அவர் முழு முட்டாளாகவே ஒரு பைத்தியம் போல் காட்சியளித்திருப்பார். மக்கள் அவரைப் பிடித்துக் கொண்டு போய் சாத்வீக சமுதாயத்தில் சிகிச்சையளித்திருப்பார்கள். தாமஸ குணமுடைய சமுதாயத்தில் அவர் ஒரு முட்டாளாய், அற்பராய் தெரிந்திருப்பார். ம்ம்... மக்கள் உறங்கிக் கொண்டிருக்கிறார்கள்... நீங்கள் பாட்டுக்குத் தேவையில்லாமல் கொடியை அசைத்து கோஷங்கள் போட்டுக் கொண்டிருந்தால் உங்கள் பின்னாடி எவரும் வர மாட்டார்கள் - தனித்து நிற்க வேண்டியதுதான். ஆனால், ஜெர்மனியில் அவர் தலைவராகி விட்டார். அத்தகைய பெருந் தலைவரை ஜெர்மனி அதற்கு முன் கண்டதில்லை, அவரால் அது முடிந்த தென்றால், அதற்குக் காரணம், அந்நாட்டில் உள்ளவர்கள் ரஜோ குணத்தைக் கொண்டிருந்தது தான்.

ஸ்வாபவ் ரஜோ குண வகையைச் சேர்ந்தவன், சண்டைக்குத் தயாராய் நிற்பான். எப்போதும் கோபத்தின் விளிம்பில் நிற்கிறவன், தற்போது தணிவு நிலைக்கு வந்து விட்டான். மணிக்கு நூறு மைல் வேகத்தில் ஓடிக் கொண்டிருந்தவனை நான் மணிக்குப் பத்து மைல் ஓடுகிறவனாக்கி விட்டேன். அவன் மந்தனாய் உணர்ந்தது உண்மை. இது மந்தத்தன்மை ஆகாது. மிகச் சரியாகச் சொல்வதெனில் இது ஆவேசத்துடன் கூடிய உங்கள் செயல்நிலையை இயல்பு நிலைக்குக் கொண்டு வருவதாகும். காரணம் அங்கிருந்துதான் சத்துவத்தை அடைவது சாத்தியம். இல்லையேல் அது சாத்தியமாகாது. தமஸ்ஸிற்கும் ரஜஸ்ஸிற்கும் இடையில் ஒரு சமநிலையை நீங்கள் பெற்றாக வேண்டும். எப்படி ஓய்வெடுப்பது என்பதையும், எப்படிச் செயல்படுவது என்பதையும் நீங்கள் அறிந்திருக்க வேண்டும்.

முற்றாக ஓய்வெடுப்பது எப்போதுமே எளிதான ஒன்றாகும். முழுமையாய்ச் செயல்படுவதும் அதே மாதிரி எளிதானதுதான். ஆனால் இந்த இரண்டு எதிரிடை நிலைகளை (எதிரெதிர் கொள்கைகள் கொண்டவை) அறிவதற்கும், அவற்றுள் செயல்படுவதற்கும், ஒரு சீர்த்தன்மையைத் தோற்றுவிப்பதற்கும் சிரமப்பட வேண்டியிருக்கும் - அந்த சீர்த்தன்மைதான் சத்துவம். 'நீங்கள் என்னைக் குழப்ப மடையவும், சுறுசுறுப்பற்றுப் போகவும் செய்து விட்டீர்கள்...' உண்மை.

'நான் பித்துப் பிடித்தாற் போலாகி விட்டேன்' முழுக்கவும் உண்மை. நீங்கள் எப்போதும் இருந்ததுதான். தற்போது அதை அறிந்து கொண்டீர்கள். அதுவே பித்துப் பிடிக்காத மனிதனைப் பற்றிய விளக்கமுமாகும்.

'தான் பைத்தியம்' என்பதை ஒரு பைத்தியக்காரனால் ஒருபோதும் அறிந்து கொள்ள முடியாது. பைத்தியக்கார விடுதிக்குச் சென்று விசாரித்துப் பாருங்கள். எந்தவொரு பைத்தியக்காரனும் சொல்ல மாட்டான் 'நான் பைத்தியம்' என்று. தன்னைத்தவிர இந்த உலகமே பைத்தியம் என்றுதான் ஒவ்வொரு பைத்தியக்காரனும் நம்புகிறான். 'எனக்குப் பைத்தியம்' என்று சொல்கிற ஒரு பைத்தியக் காரனை நீங்கள் ஒருபோதும் சந்தித்திருக்க முடியாது. தான் பைத்தியம் என்று சொல்லிக் கொள்ளுமளவு அவனுக்கு அறிவு இருந்திருந்தால் அவன் முன்பே அறிவாளிதான், அவன் பைத்தியக்காரனாய் இருக்க மாட்டான். சித்தப்பிரமை ஒருபோதும் ஏற்றுக் கொள்ளப்படுவதல்ல. பைத்தியக்காரர்களிடம் அதிக அளவில் தயக்கம் இருக்கும். மருத்துவரிடம் செல்வதற்கும் அவர்கள் தயக்கம் காட்டுவார்கள். "ஏன்? எதற்காக? எனக்கென்ன பைத்தியமா? நான் நல்லாத்தான் இருக்கேன். அதற்கு அவசியமில்லை, நீங்க போகலாம்" என்பார்கள்.

முல்லா நஸ்ருத்தீன் ஒரு மனநல மருத்துவரிடம் சென்றார். 'தற்போது ஏதாவது செய்தாக வேண்டும் - எல்லாமே என் கையை மீறி விட்டதாய் தெரிகிறது. எனது பெண்டாட்டிக்குப் பைத்தியம் பிடித்து விட்டது. தான் ஒரு குளிர்பதனப் பெட்டியாகி விடடதாய் அவள் நினைக்கிறாள்' என்று சொன்னார்.

மனநல மருத்துவர் எச்சரிக்கையானார். அதுபோன்று ஒரு 'கேஸை' அவர் ஒருபோதும் எதிர்கொண்டதில்லை. அவர் சொன்னார். 'அது ரொம்ப மோசம். எனக்கு அதைப்பற்றி மேலும் சொல்லுங்கள்' என்று.

'அதற்கு மேல் சொல்வதற்கு என்ன இருக்கிறது. அவள் குளிர்பதனப் பெட்டியாகி விட்டாள். தான் குளிர்சாதனப் பெட்டியாக இருப்பதாய் நம்புகிறாள்' என்றார் முல்லா.

மனநல மருத்துவர் சொன்னார் 'ஆனால் பாருங்கள், அது வெறும் நம்பிக்கையாக (belief) மட்டும் இருந்து விட்டால் தவறில்லை. அது தீங்கற்றதுதான். விடுங்கள் அவள் நம்பிக் கொண்டிருக்கட்டும். அவள் வேறு தொந்தரவு ஏதும் தரவில்லைதானே?

நஸ்ருத்தீன் சொன்னார், 'தொந்தரவா? என்னால் தூங்கவே முடியவில்லை காரணம் அவள் வாயைத் திறந்தபடி தூங்குகிறாள் - அந்தக் குளிர்சாதனப் பெட்டியில் உள்ள வெளிச்சத்தில் என்னால் தூங்க முடியவில்லை.'

இதில் யார் பைத்தியம்? பைத்தியக்காரர்கள் தங்களை ஒருபோதும் பைத்தியமாய் கருதிக் கொள்வதில்லை.

ஸ்வாபவ், 'நான் பைத்தியம்' என்று உன்னால் எண்ண முடிவது ஓர் ஆசி. தெய்வ அருளால் பெறப்படும் கருணை. உன்னில் உள்ள தெளிந்த அறிவுப்பகுதி (sane part) அதைப் புரிந்து கொண்டிருக்கிறது. எல்லாருமே பைத்தியங்கள் தாம். எத்தனை விரைவாய் புரிந்து கொள்கிறீர்களோ அத்தனைக்கு அது சிறப்பு.

'அந்தக் கணத்தில் எனக்கு நம்பிக்கையேயில்லாமல் போய்விட்டது...' நல்லது. உண்மையிலேயே நீங்கள் எச்சரிக்கை கொண்டு விட்டால் நம்பிக்கையாய் உணர்வது கடினம். பல நிலைகள் இருக்கின்றன. ஒரு நிலை - மனிதர்கள் சந்தேகமாய் உணர்வது. பிறகு அவர்கள் அந்தச் சந்தேகத்தை அடக்கி வைக்கக் காரணம் உண்மை நம்பிக்கை ஏற்படுத்துவதால்தான்: சரணடையுங்கள், அதன்மூலம் நீங்கள் எல்லாவற்றையும் அடைவீர்கள்'. நான் உங்களுக்கு உறுதியளிக்கிறேன். 'சரணடையுங்கள், உங்களுடைய ஞானம் உறுதி செய்யப்படும்' என்று.

நம்பிக்கை அதிக நம்பிக்கையை ஏற்படுத்துவதாயிருக்கும். உங்களுடைய பேராசை தூண்டப்படுகிறது - நீங்கள் சொல்கிறீர்கள், 'ரொம்ப சரி, நாம் நம்பிக்கை வைத்து, சரணடைவோம்' என்று. ஆனால், இது நம்பிக்கையாகாது, இது பேராசை - அடியாழத்தில் நீங்கள் சந்தேகத்தை மறைத்து வைத்திருக்கிறீர்கள். நம்பிக்கை சரிதான். ஆனால் அளவுகடந்த நம்பிக்கை கூடாது. யார் கண்டது இந்த மனிதன்

ஏதோ ஒன்றைப் பின்னணியில் கொண்டிருக்கலாம், அல்லது முட்டாளாக்கவோ ஏமாற்றவோ முயலலாம் என்று நீங்கள் எச்சரிக்கையாயிருப்பீர்கள். ஆக நீங்கள் நம்புகிறீர்கள். ஆனால் உங்களுடையது அரைகுறையான நம்பிக்கை. அடியாழத்தில் சந்தேகம் இருக்கிறது.

நீங்கள் தியானிக்கிறபோது, உங்களுடைய புரிதல் (understanding) கூடுகிறபோது, நீங்கள் தொடர்ந்து என்னிடம் காது கொடுத்துக் கேட்கிற போது நான் பல்வேறு கண்ணோட்டத்தில் இருந்தும், பல பக்கங்களில் இருந்தும் நான் தொடர்ந்து சம்மட்டியால் அடித்து உங்கள் இருப்புணர்வில் பல ஓட்டைகளை உண்டு பண்ணுகிறேன். நான் பலமுறை சம்மட்டியால் அடித்து உங்களை வீழ்த்துகிறேன். உங்களுடைய முழு அமைப்பையும் நான் தகர்த்தெறிந்தாக வேண்டும். உங்களை மீண்டும் புதிதாய் உருவாக்குவதற்கு உங்களுடைய பழைய் வடிவமைப்பை அழித்தாக வேண்டும். வேறு வழியில்லை. உங்களை நான் முற்றாக அழிக்க வேண்டியிருக்கும். அப்போதுதான் புதிய வடிவமைப்பு சாத்தியப்படும்.

நான் தகர்த்துக் கொண்டேயிருக்கிறேன். பிறகு புரிதல் வருகிறது. வெளிச்சக் கீற்றுகளாய் புரிதல். அந்த வெளிச்சக் கீற்றுகளில் (விரைவான சிந்தனை, எண்ணம்) நீங்கள் நம்பக்கூட செய்யவில்லை என்பதைக் காண்பீர்கள், சந்தேகம் அங்கே மறைந்திருக்கிறது. முதலில் நீங்கள் சந்தேகப்படுகிறீர்கள். இரண்டாவதாய் அடியாழத்தில் சந்தேகத்துடன் நம்பத் தொடங்குகிறீர்கள். மூன்றாவதாய், மறைந்திருக்கும் சந்தேகம், நம்பிக்கை இவற்றை அறிந்திருக்கிறீர்கள் - நீங்கள் எப்படி ஒருசேர நம்பவும், சந்தேகிக்கவும் முடியும்? நீங்கள் தடுமாறுகிறீர்கள், குழப்பமுற்றதாய் உணர்கிறீர்கள்.

தற்போது, இந்த முனையில் இருந்து இரண்டு சாத்தியங்கள் தொடங்குகின்றன. ஒன்று நீங்கள் மீண்டும் சந்தேகத்தில் விழுகிறீர்கள், அதன் முதல்நிலையாய் என்னிடம் நீங்கள் வந்திருக்கிறீர்கள். அல்லது நம்பிக்கையை வளர்த்துக்கொண்டு அனைத்து சந்தேகங்களையும் விடுகிறீர்கள். இது ரொம்பவும் நீர்மமான நிலை. அதனைக் கெட்டிப்படுத்த இரண்டு வழிகள் உள்ளன. ஒன்று சந்தேகங்களுடன் கீழ்ப்படியிலேயே மீண்டும் இருப்பது - பொய்யான நம்பிக்கையும் மறைந்துவிட்ட நிலையில் அல்லது நம்பிக்கையை. வளர்த்துக் கொள்வது. அந்த நம்பிக்கை படிக உருவாக்கம் (crystallization)

பெறுகிறது. சந்தேகத்தின் அடக்கி வைக்கப்பட்ட பகுதி மறைந்து விடுகிறது. ஆக, இந்த நிலை ரொம்பவும் ஊறுபடத்தக்கதாய் இருப்பதால் மிகுந்த எச்சரிக்கையுடனும், கவனத்துடனும் செயல்பட வேண்டும்.

“தற்போது நான் என்ன செய்ய வேண்டும், எங்கே போக வேண்டும் என்பதை எனக்குச் சொல்லுங்கள்?” என்னிடம் நீங்கள் வந்துவிட்டால் வேறெங்கும் போக வேண்டியதில்லை. தற்போது நீங்கள் எங்கு வேண்டுமானாலும் போக முடியும், ஆனால் நீங்கள் வந்து விடுவீர்கள். என்னிடம் வருவது ஆபத்தானது; பிறகு நீங்கள் எங்கு சென்றாலும், நான் எல்லா இடத்திலும் உங்களைக் கவனித்தபடி இருப்பேன். எங்கேயும் போவதற்கில்லை.

ஒன்றும் செய்வதற்கில்லை. ஒட்டுமொத்த சூழ்நிலையையும் பற்றிய எச்சரிக்கையோடு இருந்தால் போதும். காரணம், நீங்கள் எதையேனும் செய்யத் தொடங்குவீர்களாயின், ஏதாவதொன்றைச் செய்வதற்குப் பெரிதும் விரும்புவீர்களாயின் நீங்கள் எல்லா வற்றையுமே குளறுபடி செய்து விடுவீர்கள். இருக்கிறபடி இருக்க விடுங்கள். குழப்பம் இருக்கிறது. பித்து இருக்கிறது. நம்பிக்கை போயாயிற்று. பொறுங்கள், கரையில் இருந்தபடிக்கு கவனியுங்கள். ஆறு தானே சீர்படுத்திக் கொண்டு விடும். தனக்கே உரிய விதத்தில் அது சீர் செய்து கொள்ளும். நீங்களாக எதையும் செய்ய வேண்டியதில்லை. நீங்கள் போதுமென்கிற அளவிற்கு செய்தாயிற்று – ஓய்வெடுங்கள். கவனித்திருந்தால் போதும், ஆறு எப்படி சீர் செய்கிறதென்று பாருங்கள். அது குழம்பிக் கிடக்கும். அதனுள் சேறும் இருக்கும், அதன் மேற்பரப்பில் சருகுகள் மிதக்கும் – அதனுள் குதித்து விடாதீர்கள். நீங்கள் அதனுள் குதித்து ஏதாவது செய்து தண்ணீரைத் தெளிவாக்க விரும்புவீர்கள். நீங்கள் எதைச் செய்தாலும் அதை மேலும் சேறாக்குவதாகவே இருக்கும். தவறானதைச் செய்யத் தூண்டும் கவர்ச்சியை எதிர்த்து நில்லுங்கள். கரையிலேயே இருங்கள். ஆறினுள் நுழைந்து சிக்கிக் கொள்ளாதீர்கள். கவனித்திருப் பவராயிருங்கள்.

நீங்கள் எதையும் செய்யாமல் கவனித்தபடி இருக்க முடிந்தால் அதுவே மனதின் மிகப்பெரிய தூண்டுதல் ஆகும் – மனம் சொல்கிறது, ‘எதையாவது செய், இல்லாவிடில் செயல்கள் எப்படி மாறும்?’ என்று. முயற்சியும் செய்கையும் இருந்தால்தான் ஒன்றை மாற்ற முடியும்

என்கிறது மனம். அது கொஞ்சம் தர்க்கம் பற்றியதாய் (logical), ஈர்க்கத்தக்கதாய், நம்பச் செய்வதாய் தெரிந்தாலும் - முற்றிலும் தவறானதேயாகும். உங்களால் எதையும் செய்ய முடியாது. நீங்கள்தாம் பிரச்சினை. நீங்கள் செய்யுமளவிற்கு உங்கள் இருப்பையும் உணர்கிறிர்கள். 'நான்'' (I) என்பது வலுப்பெறுகிறது. தன்முனைப்பு (Ego) வலுக்கிறது. செய்ய வேண்டாம், கவனித்திருந்தால் போதும். கவனித்திருப்பதில் தன்முனைப்பு மறைகிறது. செய்வதில் தன்முனைப்பு வலுப்படுகிறது. ஒரு சாட்சியாயிருங்கள்.

ஏற்றுக் கொள்ளுங்கள். எந்த வகையிலும் சண்டையிடாதீர்கள். குழப்பம் இருப்பதால் என்ன தவறு? மேக மூட்டமான அந்திப் பொழுது - ஆகாயத்தில் மேகங்கள் - அதிலென்ன தவறு? காலையில் பனிமூட்டம். நீங்கள் குழப்பமாய் உணர்கிறீர்கள். அதிலென்ன தவறு? பனி மூட்டத்திலும் பரவசப்படுங்கள். நிகழ்வு எதுவாயினும் கவனியுங்கள், காத்திருங்கள், களிப்படையுங்கள். ஏற்றிடுங்கள். உங்களால் ஏற்க முடியுமாயின் அந்த ஏற்றலே உருமாற்றத்தையும், நிலை மாற்றத்தையும் கொண்டு வரும்.

விரைவிலேயே நீங்கள் அங்கே அமர்ந்திருப்பதைக் காண்பீர்கள், ஆறு மறைந்து விட்டிருக்கும் - சேறு மட்டுமல்ல ஆறு முழுதுமே மறைந்து விடும். பனிமூட்டம் கலைந்திருக்கும், மேகங்கள் காணாமல் போயிருக்கும். எதையும் ஏற்றுக்கொள்ள இசைவான வானம், மிகப்பெரிய அண்டவெளி காணக் கூடியதாய் இருக்கும்.

ஆனால், பொறுமை தேவை. ஆக நீங்கள், 'தற்போது நான் என்ன செய்ய வேண்டும் என்று சொல்லுங்கள்?' என வற்புறுத்திக் கேட்டால், நான் சொல்வேன், 'பொறுமையாயிரு' என்று. 'நான் எங்கே போக வேண்டும்?' என்று நீங்கள் கட்டாயப்படுத்திக் கேட்டால் நான் சொல்வேன், 'என் அருகே வந்துவிடு' என்று.



**ஒரு நாளில் பலமுறை குளித்து உடை மாற்றும் பிராமண பழக்கத்தைப் பற்றித் தாங்கள் எனக்குச் சொல்ல முடியுமா? இன்று ஒரு சந்நியாசிக்கு மட்டுமே அது பரிந்துரைக்கப்படுகிறதா?**

பிராமணர்கள் கட்டாயப்படுத்தும் தன்மை, கருத்தாவேசம், நரம்பியக்க சீரழிவு உணர்ச்சி உடையவர்கள். சுத்தமாயிருப்பது நல்லது, தொடர்ந்து சுத்தப்படுத்திக் கொண்டிருப்பது பைத்தியக்காரத்தனம்.

மனம் உச்ச முனைகளுக்குச் செல்ல முடியும். நீங்கள் அழுக்கடைந் திருப்பீர்கள், குறிக்காமல்... ஓர் இத்தாலிய சந்நியாசினியை எனக்குத் தெரியும். அவள் என்னுடன் ஒரு முகாமில் தங்கியிருந்தாள். எனக்கு ஆச்சரியம், அவள் ஒருபோதும் குளித்ததில்லை. நான் அவளிடம் விசாரித்தபோது அவள் சொனனாள், 'ஆண்டுக்கொரு முறை' என்று. அவள் வியப்புடன் கேட்டாள். 'ஆண்டுக்கொரு தடவை குளிப்பது போதாதா?' என்று. குளிப்பதைத்தவிர வேறெதையும் செய்யாத பிராமணர்கள் இருக்கிறார்கள்.

என் உறவுக்காரர் ஒருத்தர், அவரிடம் ஏதோ ஒரு கருத்தாவேசம் (obession) இருந்தது. தம்முடைய வாழ்க்கை நெடுகிலும் ஒரு பிரம்மச்சாரியாகவே அவர் இருந்தார். எல்லா வகையிலும் நல்ல மனிதர், என்ன கொஞ்சம் வெகுளி, அந்த வெகுளித்தனத்தால் மற்றவர்களுக்கு எந்தக் கெடுதலும் நேரிட்டு விடவில்லை, அவருக்குத்தான் கேடு விளைவிப்பதாயிற்று. அவர் அதிகம் சம்பாதிக்காத காரணத்தால் ஏழையாயிருந்தார். தம்முடைய தந்தை வைத்துவிட்டுப் போனதைக் கொண்டு வாழ்ந்து வந்தார். ரொம்பவும் கருமித்தனமான வாழ்க்கை வாழ வேண்டியிருந்தது, காரணம் அவரிடம் அதிகம் இல்லை. இருப்பதைக் கொண்டுதான் வாழ்க்கையை ஓட்ட வேண்டியிருக்க வேண்டும் என்கிற கருத்தாவேசம் - அவருக்குச் சம்பாதிக்கவே நேரமில்லாது போயிற்று. நாள் முழுக்க தமது வீட்டை அவர் சுத்தப்படுத்திக் கொண்டிருப்பார். சுத்தப்படுத்த எதுவும் இல்லை. ஒற்றை அறை, அதைத்தான் அவர் சுத்தப்படுத்தியபடி இருப்பது. பிறகு அவர் தமது குளியல்களை மேற்கொள்வார். அது கருத்தாவேசத்தின் ஒரு பகுதி: யாராவது ஒரு பெண்மணியைப் பார்த்து விட்டாலும் அவர் உடனே குளித்து விடுவார், காரணம் அவர் ஒரு பிரம்மச்சாரி. தீவிர பிரம்மச்சாரி, 'பெண்ணின் நிழல் பட்டாலே தீட்டு' என்கிற அளவிற்கு.

அவர் பொதுக் குழாய் ஒன்றிலிருந்து தண்ணீர் பிடித்து வருவார். அதிகாலையிலேயே சென்று விடுவார். அப்போதுதான் யாரும் அவரை எதிர்ப்பட மாட்டார்கள். ஒரு பெண்மணி வழியில் குறுக்கிட்டு விட்டாலும் அவர் தம்முடைய பானையை மீண்டும் கழுவிக் கொள்வார், பிடித்திருந்த நீரைக் கவிழ்த்து விட்டு, பானையைச் சுத்தம் செய்து மீண்டும் தண்ணீர் பிடித்து. எடுத்துச் செல்வார். சில சமயங்களில் முபபது, நாற்பது, அறுபது தடவை ஏன் நாள் முழுக்க அப்படிச் செய்து கொண்டிருப்பார். நீங்கள் போக்குவரத்துச்

சந்தடியைத் தடுக்க முடியாது. ஆணும், பெண்ணுமாய் மக்கள் வந்து போய்க் கொண்டிருப்பார்கள். அது கடினம். அவரால் தவறவிட முடியாது - பெண்களைக் காண முயற்சிப்பதாகி விடும். அவர் தொலைவில் ஒரு பெண்மணியைப் பார்த்து விட்டாலும், உடனே... முழுநாளும் வீணாகும். அவர் மிகச்சிறந்த சுத்தக்காரர்தான். ஆனால் அந்தச் சுத்தத்தை வைத்துக்கொண்டு என்ன செய்ய? ஒட்டுமொத்த வாழ்க்கையும் குட்டிச்சுவர்.

எப்போதும் சமநிலைதான் பொருத்தம் என்பதை நினைவில் கொள்வது நல்லது. மாசு பற்றிய ஆவேச உணர்வால் மாசுற்றுவிடக் கூடாது. ஹிப்பிகளின் கருத்தாவேசம் அவர்களை அழுக்காய் தோன்றச் செய்கிறது. அது எதிர்வினை, சுதந்திரமல்ல. எதிர்வினை ஒருபோதும் சுதந்திரமாகாது. கிறிஸ்துவம் அதீத சுத்தத்தை வற்புறுத்துகிறது. 'தெய்வத் தன்மைக்கு அடுத்தது தூய்மை' என்றொரு பழமொழியும் அவர்களிடம் உண்டு. அவர்கள் சுத்தத்தை அதிக அளவில் வற்புறுத்தினார்கள். தற்போது ஒட்டுமொத்த தலைமுறை நவீன தலைமுறை அதற்கெதிராகக் கிளர்ச்சி செய்கின்றனர். ஹிப்பிகள் குளிக்கிறதில்லை, தங்கள் உடையைத் துவைத்து சுத்தம் செய்வது பற்றியும் அவர்கள் கவலைப்படுவதில்லை. அழுக்காயிருப்பதையே தங்கள் சாதனை (பயிற்சி)யாய் அவர்கள் கொண்டிருப்பார்கள் போல. அழுக்கடைவதே அவர்களுடைய ஒழுங்குமுறையாயிருக்கும். சமூகத்தின் பழைய முறையில் இருந்து தாங்கள் முழுமையாய் விடுபட்டிருப்பதாகவே அவர்கள் உணர்கிறார்கள். இல்லை, அது விடுதுலையாகாது, எதிர்வினை, கிளர்ச்சி, அது புரட்சியல்ல. நீங்கள் மற்றோர் எல்லைக்குச் செல்லலாம். ஆனாலும் அதே அமைப்பில்தான் சிக்கிக் கொள்வீர்கள். அங்கே அவர்கள் சுத்தத்தில் வெறி பிடித்தவர்ளாயிருப்பார்கள். ஹிப்பிகளோ அழுக்கடைவதில் வெறியாயிருக்கிறார்கள்.

என்னைக் கேட்டால், 'ஒரேயொரு வழிதான் இருக்குமெனில்... ஒருவர் உச்சநிலைக்குச் சென்றுவிட வேண்டும்." அப்போது நான் சுத்தத்தைத் தேர்ந்தெடுப்பேன். குறைந்தபட்சம் தூய்மையாயிருக்க முடிகிறது. ஆனால் நான் சமநிலையைத்தான் தேர்வு செய்வேன்.

உங்களுக்காக ஒழுக்க விதியை (discipline) யாரும் உருவாக்க முடியாது. உங்களுடைய உடம்பை; உங்களுடைய சமநிலைத் தன்மையை நீங்கள் உணரும்படி இருக்கும் - காரணம் சுத்தமின்மை,

அழுக்கு உங்கள் உடம்பின்மீது ஒரு பளுவைச் சுமத்திவிடும். தூய்மையாயிருப்பது (நடத்தை வகையில் நேர்மை) என்பது வேறு யாருக்காகவோ அல்லது சமுதாயத்திற்காகவே அல்ல, உங்களுக்காக - உங்களை இலேசாய் உணர்வதற்காக, மகிழ்சசியாகவும் புனிதமாகவும், தூய்மையாகவும் உணர்வதற்காக. ஒரு நல்ல குளியல் உங்களுக்குச் சிறகுகளை வழங்கும். அது உங்களை இம்மண்ணுலகில் இருந்து வானை நோக்கி பறக்கச் செய்யும் ஓரளவிற்கேனும். நிறைவான குளில் மிகமிக அவசியம். உங்களுக்கான விதியை வேறொருவர் செய்ய முடியாது. உங்கள் சரீரத்தை நீங்கள் புரிந்துகொள்ள வேண்டும். நோயுற்றிருக்கும் நேரங்களில் குளிக்க வேண்டுமென்பதில்லை, காரணம் குளியல் இடையூறு செய்வதாகி விடும். அதையே கருத்தாவேசமாய்க் கொண்டு விடாதீர்கள். சில சமயங்களில் நீங்கள் குளிப்பதற்கேற்ற மாதிரி சூழ்நிலை இருக்காது. அதுகுறித்து தளர்ச்சியடைய வேண்டாம. குற்ற உணர்வு கொள்ளாதீர்கள். குற்ற உணர்வு கொள்ளும்படியாய் அதில் ஏதுமில்லை. குளிப்பது ஓர் ஒழுக்கமாகாது. அதேபோன்று குளிக்காதிருப்பதும ஒரு குற்றம் ஆகாது. குளிப்பதை உடல்நலம் பேணும் இயல் (hygiene) எனலாம்.

உங்களுடைய உடம்பை நீங்கள் அக்கறையுடன் பராமரிக்க வேண்டும். அது கடவுளின் கோயில். அது தூய்மையாயும், நேர்த்தியாயும் இருக்க வேண்டும். நீங்கள் அதில் வசிக்கிறீர்கள், அதனுடன் நீங்கள் இருக்க வேண்டியிருக்கிறது. அது பல வழிகளிலும் உங்களைச் செயல்படும்படிச் செய்கிறது. ஒரு தூய்மையான உடம்பில், ஒரு தூய்மையான கோயிலில் ஒரு தூய்மையான மனம் இருப்பதும் சாத்தியம். தூய்மையான உடம்பில் சாத்தியக்கூறுகள் அதிகம் என்று நான் சொல்கிறேன். அவற்றை மதிப்பில் சமமானவை என்று சொல்லவில்லை. அழுக்கான உடம்பில் தூய மனம் இருக்காதென்று நான் கூறவில்லை. அதில் சாத்தியம் இருக்கிறது. ஆனால் சிறிதளவேனும் இடர்ப்பாடுடையதாய் இருக்கும்.

தியானத்தை தன்னுணர்வின் (consciousness) உள்ளார்ந்த குளில் எனலாம். குளியல் உடம்பிற்காக உடம்பின் நன்மைக்காகச் செய்யப்படுகிற தியானம்.

○

**லா வோட்சு பற்றிய உரையை நீங்கள் ஏன் தொடர முடிவ தில்லை?**

நீங்கள் என்னைப் புரிந்து கொண்டிருந்தால் நான் எப்போதும் லாவோட்சு பற்றிப் பேசுகிற மாதிரி இருக்கும். நீங்கள் என்னைப் புரிந்து கொள்ளவில்லையாயின் நான் லாவோட்சு பற்றிப் பேசிக் கொண்டிருந் தாலும் அது பலனளிக்காது. உண்மையில் நான் ஒருபோதும் பதஞ்சலிக்கோ, இயேசுவிற்கோ, மகாவீரருக்கோ புத்தருக்கோ மிகச் சரியாயிருந்ததில்லை. இல்லை, நான் ஒருபோதும் மிகச்சரியாய் இருந்ததில்லை. என்னால் அப்படி இருக்க முடியாது. லாவோட்சு தொடர்ந்து என்னுடைய பேச்சில் நுழைந்து கொண்டுதான் இருக்கிறார். நான் லாவோட்சு பற்றித் தொடர்ந்து பேசிக் கொண்டிருக்கிறேன். நான் லாவோட்சு பற்றிப் பேசிக் கொண்டிருந்தாலும், பதஞ்சலி பற்றிப் பேசிக் கொண்டிருந்தாலும் புத்தர் அல்லது இயேசுவைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தாலும் அதில் லாவோட்சு உள்ளோட்டமாய் (undercurrent) இருக்கிறார் என்பதை நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும். நீங்கள் என்னைப் புரிந்து கொள்ளாவிடில் 'தாங்கள் ஏன் லாவோட்சு பற்றித் தொடர்ந்து பேசுவதில்லை?' என்ற கேள்வி எழும்.

எனக்கு முக்கிய விவாதப் பொருளாய் இருப்பது லாவோட்சு அல்ல, பதஞ்சலிதான். பதஞ்சலி பற்றி நான் பேசுகிற பொழுது நான் பதஞ்சலி பற்றியே பேசுவேன். லாவோட்சு பற்றிப் பேசும்போது நான் லாவோட்சு பற்றிப் பேசுவதில்லை. நான் லாவோட்சையே பேசுகிறேன். இரண்டுக்குமிடையில் வேறுபாடு இருக்கிறது மிகப்பெரிய அளவில்.

○

**வெர்னர் எர்ஹார்ட் ஞான எல்லையைத் தொட்டிருக்கிறாரா?**

இது மாதுரியிடமிருந்து. எர்ஹார்டும் மாதுரியைப் போல் மிக நெருங்கி விட்டிருக்கிறார். எர்ஹார்டைப் போலவே எல்லாரும் எட்டிப்பிடிக்கிற தொலைவில்தான் உள்ளனர். உண்மையில் ஞானம் என்பது ஒரு தாவிக் குதித்தல், படிப்படியாய் நிகழ்வதல்ல அது - எடுத்து வைக்கிற ஒரேயடியில் முடிந்து போகிற பயணம்! நீங்கள் கண்களை மூடி அமர்ந்திருக்கிறீர்கள், உங்கள் கண்களைத் திறக்கிறபோது சூரியன் தெரிவது போலத்தான் அது. ஒட்டுமொத்த உலகும் ஒளியால் நிரம்பிக் கிடக்கிறது. யாரோ ஒருவர் கண்களை மூடியிருக்கிறார் என்றாலுங்கூட சூரியன் அங்கே இருக்கிறது, உலகம்

ஒளியால் நிரப்பப்பட்டிருக்கிறது. அவர் மட்டுமே கண்களை மூடி அமர்ந்திருக்கிறார். அவர் அதனை அனுபவித்து மகிழ்ந்தால் அதில் தவறேதுமில்லை, அது ரொம்ப சரி. ஆனால் அவருக்கு அதில் துன்பமிருக்குமாயின் நான் அவரிடம் கேட்பேன்; உமது கண்களை ஏன் திறந்து வைத்திருக்கக் கூடாது?' என்று. அறியாமைக்கும் அறிவுத் தெளிவுக்கும் உள்ள வேறுபாடு கண்களைத் திறப்பது போன்றதே. நீங்கள் திறந்து கொள்ளத் தயாராயிருந்தால் வேறுபாடு பெரிதாய் இருக்காது. நீங்கள் கண்களைத் திறக்கத் தயாராயில்லை என்றால் வேறுபாடு மிகப்பெரியதாகி விடும்.

எர்ஹார்டு மற்ற எவரையும் போல மிக அருகில் இருக்கிறார். ஆனால் அவரைப் பொறுத்தவரை அறிந்து கொள்ளும் திறன் (intellect) ஒரு தடை - உங்களில் பலருக்கும் அது தடையாயிருக் கிறதே அப்படி. முக்கியப் பகுதியை (point) அவர் புரிந்து கொண் டிருக்கிறார், அதை மிகத் துல்லியமாய் புரிந்து கொண்டிருக்கிறார் அறிவு சார்ந்த திறனோடு. சென்றமுறை அவருடைய வாக்கியங்களில் (கருத்துகள்) சிலவற்றைப் பற்றி நான் சொன்ன பொழுது, அவை யனைத்தையும் நான் ஆமோதித்திருந்தேன். அவை மிகச்சரியான உண்மையாகும், ஆனால் அவரைப்பற்றி நான் எதுவும் சொல்ல வில்லை. அவர் எதைச் சொல்லியிருந்தாலும் அது முழுக்க முழுக்க உண்மையாகவே இருக்கும். ஆனால் லாவோட்சுவை நீங்கள் அறிவு சார்ந்த திறனோடு படிக்க முடியும், புரிந்துகொள்ள முடியும். அதே விசயங்களை நீங்கள் காண்பீர்கள். ஆனால், புரிதலில் அறிவு சார்ந்த தென்பதும் முழுமையானதென்பதும் ஒன்றாகி விடாது. அதுதான் பிரச்சினை.

ஒருவர் எதிர் கொள்கிற மிகப்பெரிய பிரச்சினை அது. நான் சொல்கிறவற்றையெல்லாம் நீங்கள் புரிந்து கொள்கிறீர்கள்; அதை மற்றவர்களுக்கும் உங்களால் விளக்கிச் சொல்ல முடியும். ஞானம் என்பது ரொம்பவும் தொலைவில் இருப்பது. அதில் அறிவு சார்ந்த புரிதல் பிரச்சினை அல்ல. முழுமையாய் புரிந்து கொள்ளப்பட்டதா என்பதுதான் பிரச்னை - உங்களுடைய மனம் மட்டுமல்ல, ஒட்டு மொத்த இருப்புணர்வும் அதைப் புரிந்து கொள்கிறது. உங்களுடைய இதயம் மட்டுமல்ல - உங்கள் இரத்தமும், எலும்புகளும், எலும்புக்குள் இருக்கும் கொழுப்புப் பொருளும் (marrow) அதைப் புரிந்து கொள்கிறது. எதுவும் விடப்படவில்லை, உங்களுடைய முழு இருப்புணர்வும் அதைப் புரிந்து கொள்கிறது. அந்தப் புரிதலில்

மகிழ்ச்சியாய் நீந்துகிறது. அப்போது நறுமணம் வீசுகிறது. நடனம் நடக்கிறது பிறகு நீங்கள் முழு வளர்ச்சி அடைகிறீர்கள்.

ஓர் அடி எடுத்து வைத்தால் பயணம் முடிகிறது. உங்களுக்கும், எனக்கும் இடையில் இருப்பது ஓரடித் தொலைவுதான் - அதற்குமேல் இல்லை. இரண்டு அடிகள்கூட தேவைப்படாது.

ஆனால், எர்ஹார்டை மறந்து விடுங்கள். உங்களைப்பற்றி எண்ணினால் போதும், காரணம் எர்ஹார்டு அவருக்கே ஒரு பிரச்சினை, அதுபற்றிக் கவலைப்படுவது உங்கள் வேலையல்ல. பலமுறை என்னை முழுமையாய் புரிந்துகொண்ட உணர்வு உங்களுக்கிருந்திருக்கிறது இல்லையா? ஆனால் மீண்டும் மீண்டும் கை நழுவ விட்டீர்கள்தானே? ஏன்? என்னை நீங்கள் புரிந்து கொண்டிருந்தால் எதற்காகத் தவறவிடும்படி ஆகும்? நீங்கள் என்னை அறிவுசார்ந்த விதத்தில், சொற்கள் சார்ந்த அளவில், கொள்கையளவில் புரிந்து கொண்டிருக்கிறீர்கள். ஆனால், உங்களுடைய இருப்புணர்வு அதில் பங்கேற்பதில்லை. ஆக, எனக்கு அருகில் இருக்கும்போது நீங்கள் புரிந்து கொள்கிறீர்கள், இங்கிருந்து சென்றதும் அந்தப் புரிதல் வெகு சாதாரணமாய் மறைந்து விடுகிறது. நீங்கள் மீண்டும் உங்களுடைய பழைய பார்வைக் கோணத்துக்கே திரும்பி விடுகிறீர்கள், பழைய உலகத்துக்கும், அமைப்புக்கும். என்னுடன் இருக்கும் பொழுது உங்களை மறந்து விடுகிறீர்கள், எல்லாமும் தெளிவாய், படிகம் போல் தெளிவாய் தெரிகிறது. என்னிடமிருந்து விலகியதும் உங்களுடைய பொந்துக்கே திரும்பச் சென்று விடுகிறீர்கள். அந்தச் சமயத்தில் எல்லாமும் குளறுபடியாகி விடுகிறது, எதுவும் தெளிவாயிருப்பதில்லை.

ஒரு காலடித் தூரம்தான். அந்தக் காலடியை ஒட்டுமொத்த இருப்புணர்வுடன் எடுத்து வைக்க வேண்டும். நீங்கள் அந்த அடியை எடுத்து வைத்து விட்டதாய் கற்பனை செய்து கொண்டு உட்கார்ந்திருக்கிறீர்கள். ஒரு மிகப்பெரிய பயணத்தை இருந்த இடத்தில் இருந்தபடியே கற்பனை செய்து கொண்டிருக்கிறீர்கள். தொடர்ந்து அப்படிச் செய்கிறபோது, அதுவே உண்மையாய் தெரியும். ஒரு ஞானியைப் போல் பேசத் தொடங்கி விடுவீர்கள். ஆனால், அது பயனளிக்காது, கைகொடுக்காது.

நீங்கள் ஒளிபெற்றவராய் (தெளிந்த சிந்தனை, புரிந்து கொள்ளும் ஆற்றல்) திகழ வேண்டும். அது கற்பனையல்ல, எண்ணமிடுதலல்ல. அது இருப்புணர்வு, வாழும் நிலை.

25. 'ததபாவாத் ஸம்யோக பாவோ ஹானம்
தத்ருச்சே: கைவல்யம்'

அது (அறியாமை) இல்லாததால் விலக்கப்பட வேண்டிய சேர்க்கை விலக்கப்படுகிறது. அதுவே காண்பவனுடைய கைவல்யம் ஆகும்.

(கைவல்யம் - சுதந்திரம்)

26. 'விவேகக்யா திரவிப்லவா
ஹானோபாய'

விவேகத்தை இடைவிடாது பயில்வதே அறியாமையை ஒழிக்கும் வழி.

27. 'தஸ்யா ஸப்த தாப்ராந்த பூமி: ப்ரக்ஞா'

முழுமையான அறிவு - ஞானத்தின் உயர்நிலை ஏழு படிகளில் அடையப்படுகிறது.

O

எல்லா திரிபுணர்வுகளுக்கும் (*delusion), காட்சிகளுக்கும், மாய்கைகளுக்கும் காரணமாயிருப்பது அறியாமையே. ஆனால் அதிகம் தெரிந்திருப்பது அறிவு நிலையாகி விடாது. அறியாமை ஒரு வினை முதல் - காரணம் (cause). ஆனால் தெரிந்து கொள்ளும் தன்மையே பரிகாரமாகி விடாது. நீங்கள் எத்தனை தெரிந்து வைத்திருந்தாலும் அதே ஆசாமிதான். புலமை என்பது ஒரு பழக்கத்திற்கு அடிமையாகிற மாதிரி. நீங்கள் அதைச் சேர்த்துக் கொண்டே போகிறீர்கள். ஆனால் உங்கள் இருப்புணர்வு அப்படியேதான் இருக்கிறது. நீங்கள் அதிகம் அறிந்து கொள்கிறீர்கள். ஆனால் உங்களுடைய தன்மை மிகையாகி விடுவதில்லை.

* delusioin - மூட நம்பிக்கை, மருட்சி.

உங்களுடைய தன்மை அதிகரித்து விடுகிறபோது, உங்கள் இருப்புணர்வு வலுவடைகிறபோது, உங்கள் இருப்புணர்வு ஆளும் திறனைப் பெறுகிறபோது அறியாமையின் மூல காரணம் மறைந்து விடும். எல்லாத் துன்பங்களுக்கும், துயரங்களுக்கும் அறியாமையே காரணம். ஆனால் அறிவு பரிகாரமாகாது. விழிப்புணர்வு பரிகாரமாகும்.

நீங்கள் இந்த நுட்பமான வேறுபாட்டை அறிந்து கொள்ளாவிடில் முதலில் அறியாமையில் இழந்து போவீர்கள். பிறகு அறிவில் ஒரேயடியாய் அழிந்து போவீர்கள். மிக இன்றியமையாத கூற்றறிக்கை (statement) ஒன்று காணப்படுகிறது உபநிடதங்களில். அறியாமையில் மக்கள் இழந்து விடுகிறார்கள். ஆனால் அறிவிலோ மிகக் கடுமையான அழிவைக் காண்கிறார்கள் என்கிறது அந்தக் கூற்றறிக்கை. அறியாமை தவறான வழியில் நடத்திச் செல்லும், அறிவோ அதனினும் தவறான வழிநடத்தலை மேற்கொள்ளும்.

அறிவு இல்லாதிருப்பது அறியாமை ஆகாது. அறிவு இல்லாமலிருப்பதுதான் அதுவென்றால் பிறகு செயல்கள் மிக எளிதாகி விடும். கீழ்த்தரமாகி விடும். உங்களால் அறிவைக் கடன் வாங்க முடியும். இருப்புணர்வை - வாழ்தலைக் கடன் வாங்க முடியாது. உங்களால் அறிவைக் களவாடவும் இயலும். ஆனால் இருப்புணர்வை - வாழ்தலைக் களவாட இயலாது. அதன் உள்ளாகத்தான் நீங்கள் வளர வேண்டியிருக்கும். இது ஓர் அடிப்படைத் தத்துவம் - முடிவெடுக்க உதவும் நெறிமுறை (criterion) என்பதை நினைவில் கொள்ளுங்கள். ஏதேனும் ஒன்றில் இருந்து வளராத வரை அது உங்களுடையதாகாது. நீங்கள் வளரும் பொழுதுதான் அதுவரைத் தீர்மானமாகத் தெரியாதிருந்த ஒன்று உங்களுடையதாகிறது. நீங்கள் ஏதேனும் ஒன்றைப் பெற்றிருக்கலாம், பெற்றிருப்பதாலேயே தவறான வழியில் செலுத்தப்பட்டு விடாதீர்கள். உடைமைப் பொருள் என்பது தனி - அதனை உங்களிடமிருந்து ஒருவர் எடுத்துச் சென்று விடவோ, நீக்கி விடவோ முடியும். உங்களுடைய இருப்புணர்வை (being) மட்டுமே உங்களிடமிருந்து எடுத்துச் செல்ல முடியாது. எனவே, உங்களுடைய இருப்புணர்வில் அறிதல் ஏற்படும்வரை, அறியாமை மறையாது.

அறியாமை என்பது அறிவு இல்லாதிருப்பதல்ல. விழிப்புணர் வின்மையே அறியாமை. அறியாமை ஒருவகை உறக்கம், ஆழ்துயில் மாதிரி. அது தூக்கத்தில் நடப்பதைப் போன்றது. தூக்கத்தில் ஒரு காரியத்தைச் செய்வதைப் போன்றது. நீங்கள் என்ன செய்து

கொண்டிருக்கிறீர்கள் என்பதையே அறிய மாட்டீர்கள். நீங்கள் ஒளியாயில்லை, உங்களுடைய ஒட்டுமொத்த இருப்புணர்வும் இருண்டு கிடக்கிறது.* ஒளியைப்பற்றி நீங்கள் அறிய முடியும். ஆனால் ஒளியைப் பற்றிய அறிதலே ஒளியாகி விடாது. மாறாக, நீங்கள் ஒளியை நோக்கிச் செல்வதற்கு அதுவே தடையாகி விடும். காரணம், ஒளியைப் பற்றி நீங்கள் அதிகம் அறிந்து கொண்டுவிட்ட நிலையில் அந்த ஒளி இன்னும் உங்களுக்குக் கிட்டவில்லை என்பதை மறந்து விடுவீர்கள். உங்கள் அறிவே உங்களை ஏமாற்றி விடும்.

ஒரு சிறையின் இருண்ட அறையில் இருப்பது போலத்தான் அது. ஒளியைப் பற்றி நீங்கள் கேள்விப்பட்டிருப்பீர்கள். ஆனால் பார்த்திருக்க மாட்டீர்கள். ஆனால் நீங்கள் எப்படி ஒளியைப்பற்றி கேள்விப்பட முடியும், அது பார்த்தறியக் கூடியது என்கிறபோது? ஒளியைப்பற்றி அறிதற்கான ஊடகம் காதுகளல்ல, கண்கள். ஒளியைப்பற்றித் திரும்பத் திரும்பக் கேட்டுக் கொண்டிருந்தால் ஒளியை அறிந்து கொண்ட உணர்வு உங்களுக்கு வந்துவிடும். ஏறக்குறைய அறிந்திருப்பது அறிவாகாது. நீங்கள் காதில் கேட்டீர்கள். ஒளியை எப்படிக் கேட்க முடியும்? நான் இசையைப் பார்த்தேன் என்று ஒருவர் சொல்வதைப் போன்றதுதான் அது. அது முட்டாள்தனம்.

ஒளியைப்பற்றிக் கேட்டுக் கொண்டேயிருந்ததில் மனம் பேராவல் கொண்டு விடுகிறது. நீங்கள் திருமறை நூல்களில் தகவல்களைத் தேடுகிறீர்கள். முதுபெரும் அறிஞர்களைத் தேடிச் செல்லுங்கள். அதை (ஒளிக் கண்ட யாரேனும் ஒருவரைச் சந்திப்பீர்கள். ஆனால், அவர் அதைச் சொல்கிற தருணத்தில் அது உங்களால் கேட்கப்பட்டதாகி விடுகிறது. இந்தியாவில் 'ஸ்ருதி (Shriti) எனப்படும் பழைய நூல்களில் காணப்படுவதெல்லாம் கேட்டவைதாம். அது நேர்த்தியானது. அது உண்மையிலேயே நேர்த்தியானது. உண்மையை எப்படிக் கேட்டறிய முடியும்? ஸ்ருதிகளும், ஸ்மிருதிகளும் (Smritis)தான் புனித நூல்களாயிருக்கின்றன. 'ஸ்ருதி' என்றால் கேட்கப்பட்டது. 'ஸ்மிருதி' என்றால் நினைவில் வைக்கப்பட்டது. நீங்கள் கேட்டதை நினைவில் வைக்கிறீர்கள். நீங்கள் மனப்பாடம் செய்கிறீர்கள். ஆனால், மெய்ம்மையை (truth) எப்படிக் கேட்டலின் மூலம் அறிவது? நீங்கள் அதை உணர வேண்டும், உண்மையில் வாழ்ந்தாக வேண்டும்.

---

* ஒளி (Light) - இங்கே 'ஒளி' என்பது ஆன்ம அறிவு (அ) மெய்யறிவு. அறிவு விளக்கப்பாதை. அருள் ஒளி, மெய்ஞ்ஞானம் என்றும் கொள்ளலாம்.

இருண்ட குகையில் வாழும் ஒருவன் ஒளியைப் பற்றி பல தகவல்களைச் சேகரிக்க முடியும். கிட்டத்தட்ட ஒரு பெரிய அறிஞனாகவும் அவனால் வரமுடியும். நீங்கள் அவனிடம் ஆலோசனை கேட்கவும், அவற்றில் நம்பிக்கை வைக்கவும் செய்யலாம். அதுவரை ஒளியைப்பற்றிக் கூறப்பட்ட அனைத்தையும் அவன் கூறுவான், ஆனால், அதே இருட்டில்தான் வாழ்ந்திருப்பான். ஒளியை நோக்கி உங்களைச் செலுத்த முடியாது. அவனால், காரணம் அவனே பார்வைத் திறனில்லாமல் இருக்கிறான்.

இயேசு மீண்டும் மீண்டும் சொல்கிறார், 'குருடர்களின் கையைப் பிடித்து குருடர்கள் அழைத்துச் செல்கிறார்கள்' என்று. கபீர் கூறுவார், 'நீங்கள் துன்பத்திலோ துயரத்திலோ இருந்தால் எச்சரிக்கை கொள்ளுங்கள். உங்களை வழிநடத்திச் செல்பவர் ஒரு குருடராக இருக்கக் கூடும். குருடர்களால் வழிநடத்தப்படும் குருடர்கள் கிணற்றில் விழுவார்கள்' என்று. நீங்கள் எல்லாரும் துன்பக் கேணியில் விழுந்து கிடக்கிறீர்கள். நீங்கள் மெய்ம்மை பற்றி மிதமிஞ்சிக் கேள்விப்பட்டவர்கள். கடவுளைப்பற்றி நீங்கள் அளவுக்கதிகமாய் கேள்விப்பட்டிருக்க வேண்டும். ஆயிரக்கணக்கான சொற்பொழிவு மேடைகள் (pulpits) தொடர்ந்து கடவுளைப் பற்றி சமயச் சொற்பொழிவாற்றிக் கொண்டிருக்கின்றன. தேவாலயங்களில், கோயில்களில், பண்டிதர்கள் அதைப்பற்றிப் பேசுகிறார்கள்.

கடவுள் சொற்பொழிவு அல்ல, அனுபவம்.

அறிவைக் கொண்டு அறியாமையை மறையச் செய்துவிட முடியாது. விழிப்புணர்வின் மூலமே அதனை மறையச் செய்ய முடியும். அறிவை நீங்கள் கனவிலும் சேகரித்துக் கொண்டிருப்பீர்கள். ஆனால் அது கனவின் ஒரு பகுதி. அந்தக் கனவு உங்களுடைய உறக்கத்தின் ஒரு பகுதி. யாராவது உங்களைக் கிளற வேண்டியிருக்கும். யாராவது உங்களை அதிர்ச்சி ஏற்படுத்த வேண்டியிருக்கும். யாராவது உங்களைத் தூக்கத்திலிருந்து தட்டியெழுப்பியாக வேண்டும். இல்லையேல் நீங்கள் பாட்டுக்குத் தூங்கிக் கொண்டேயிருப்பீர்கள். தூக்கம் மதுவைப் போன்றது. அது ஒரு போதை மருந்து. நீங்கள் அதிலிருந்து வெளியே இழுத்து வரப்பட வேண்டும்.

நான் மிகவும் விரும்பும் ஒரு குட்டிக் கதையை உங்களுக்குச் சொல்வேன்.

திலோபாவின் சீடரான சித்த நரோபா என்பவரைப் பற்றியது.

நரோபா தம்முடைய குருவைக் காண்பதற்கு முன் அது நடந்தது. அவர் தாமாகவே ஞானம் பெறுவதற்கு முன் நடந்தது அது. ஒவ்வொரு ஆன்ம சாதகனுக்கும் அது மிகவும் அவசியமானது. அது எவரிடத்தும் நிகழ்வது. ஆக, அது நரோபாவிற்கு நடந்ததா இல்லையா என்பதல்ல விசயம் - பயணத்தில் அது இன்றியமையாத ஒன்று. அது நிகழாத வரை ஞானம் பெறுவது சாத்தியமில்லை. வரலாற்று பூர்வமாய் அது நிகழ்ந்ததா இல்லையா என்பது எனக்குத் தெரியாது. உளவியல் சார்ந்த வகையில் அது நிகழ்ந்திருக்கும் என்பதில் நான் உறுதியாயிருக்கிறேன், காரணம் அது இல்லாமல் யாரும் கடந்த நிலை (beyond)க்குச் செல்வது இயலாத காரியம்.

நரோபா மிகப்பெரிய கல்விமான், சிறந்த மேதை. புகழ்வாய்ந்த ஒரு பல்கலைக்கழகத்தின் துணைவேந்தராய் இருந்தவர் அவர். பத்தாயிரம் சீடர்களைக் கொண்ட பல்கலைக்கழகம் அது. ஒருநாள் தமது சீடர்கள் சூழ்ந்திருக்க அவர் அமர்ந்திருந்தார். அவர்களைச் சுற்றி எண்ணற்ற திருமறை நூல்கள் இறைந்து கிடந்தன. அவை மிகப் பழைமையானவை, அரிதானவையும்கூட. திடீரென்று களைப்பின் காரணமாய் அவர் உறங்கி விட்டார். உறக்கத்தில் ஒரு கற்பனை - அகக்காட்சி (vision). நான் அதைக் கனவென்று கூறமாட்டேன், காரணம், அது சாதாரண கனவல்ல. அது குறிப்பிடத்தக்க ஒன்று. அதைக் கனவென்றால் மிகச் சரியாக இருக்காது. அது ஓர் அகக்காட்சி.

ஒரு வயதான, அவலட்சணம் பிடித்த, பயங்கரத் தோற்றமுடைய பெண்மணியை அவர் கண்டார். ஒரு சூன்யக்காரி! அவளுடைய அவலட்சணமான தோற்றத்தைக் கண்டு தூக்கத்திலேயே அவருக்கு நடுக்கமெடுத்தது. தப்பியோடுகின்ற அளவிற்கு அவர் அருவருப்பும் வெறுப்பும் கொண்டார் - ஆனால் எங்கே ஓடுவது? அவர் ஏதோ வசியத்துக்குட்பட்ட மாதிரி அந்த சூன்யக்காரியிடம் சிக்கிக் கொண்டார். அவளுடைய உடம்பு அருவருப்பூட்டினாலும் கண்கள் காந்தங்களைப் போல் இருந்தன.

"நரோபா, என்ன செய்து கொண்டிருக்கிறாய்?" அவள் கேட்டாள்.

"நான் படித்துக் கொண்டிருக்கிறேன்" என்று சொன்னார் அவர்.

"என்ன படிக்கிறாய்?" அந்தக் கிழவி கேட்டாள்.

"தத்துவம், சமயம், குணவியல் (*Epistomology), மொழி, இலக்கணம், தர்க்கம் (Logic)" என்றார் அவர்.

"நீ அவற்றை அறிந்து கொண்டு விட்டாயா?" கேட்டாள் முதியவள்.

"ஆம், அவற்றை அறிந்திருக்கிறேன்" நரோபா சொன்னார்.

அந்தப் பெண்மணி மீண்டும் கேட்டாள்: நீ அறிந்தது வார்த்தையையா அல்லது பொருளையா?"

இது முதல் தடவையாய் கேட்கப்பட்டது. நரோபாவின் வாழ்க்கையில் ஆயிரக்கணக்கான கேள்விகள் கேட்கப்பட்டிருக்கின்றன. அவர் மிகச்சிறந்த போதகர் - ஆயிரக்கணக்கான மாணவர்கள் அவரிடம் கேட்டிருக்கிறார்கள், விசாரித்தறிந் திருக்கிறாக்ள் - ஆனால், இத்தகையதோர் கேள்வியை எவரும் கேட்டதில்லை, நீ அறிந்தது சொல்லா, சொல்லின் பொருளா என்ற கேள்வியை. அந்தப் பெண்மணியின் ஊடுருவலான பார்வையில் பொய் சொல்லித் தப்பிக்க முடியாது. அவளுடைய கண்களுக்கு முன்னால் தாம் முற்றிலும் வெறுமையாய், ஆடையற்று, வெளிப்படுத்தப்பட்ட நிலையில் இருப்பதாய் உணர்ந்தார் நரோபா. அந்த விழிகள் அவருடைய இருப்புணர்வின் அடியாழத்துக்கே சென்றன. அவற்றிடம் எப்படிப் பொய் சொல்ல முடியும்? வேறு யாரிடமாவது என்றால், "ஆம், நான் சொற்பொருளை அறிந்திருக்கிறேன்" என்று அவர் சொல்லியிருப்பார். ஆனால், இந்தக் கோரமான பெண்மணியிடம் அவரால் பொய் சொல்ல முடியாது. அவர் உண்மையைத்தான் சொல்லியாக வேண்டும்.

"ஆம், நான் சொற்களை அறிவேன்" என்றார் அவர்.

அந்தப் பெண்மணி மகிழ்ச்சியடைந்தாள். அவள் சிரித்தபடி நடனமாடத் தொடங்கினாள்.

அவள் மிகுந்த மகிழ்ச்சியில் இருக்க வேண்டும் என்று எண்ணிக்கொண்டு... அவளது மகிழ்ச்சியின் காரணமாய் அவளுடைய அவலட்சணம் மாறியிருந்தது. அவள் இனியும் அருவருப்பாய் தெரிய மாட்டாள். அவளுடைய இருப்புணர்வில் இருந்து ஒரு நுட்பமான அழகு வெளிப்படத் தொடங்கியது. அவர் எண்ணிக் கொண்டார். 'நான் அவளை மகிழ்ச்சியடையச் செய்து விட்டேன். ஏன் அவளுடைய

* Epistomology - மனித அறிவின் எல்லை மூலம் குணங்கள் பற்றிய ஆய்வு.

மகிழ்ச்சியை இன்னும் அதிகரிக்கக் கூடாது? என்று. "ஆகா, எனக்கு சொற்பொருளும் தெரியும்" என்றார்.

அந்தப் பெண்மணி சிரிப்பதை நிறுத்திவிட்டாள். அவளுடைய ஆட்டமும் நின்று போனது. அவள் கூக்குரலிட்டு அழத் தொடங்கினாள். திரும்பவும் அவளுடைய தோற்றம் அவலட்சணமாயிற்று – முன்னிலும் ஆயிரம் மடங்கு அவலட்சணமாய்.

நரோபா சொன்னார், "ஏன், எதற்காக இப்படி அழுது அரற்றுகிறாய்? முன்பு சிரித்து நடனமாடியது எதற்காகவாம்?"

அந்தப் பெண்மணி சொன்னாள், 'உன்னைப் போன்ற பெரிய அறிவாளி பொய் சொல்ல மாட்டான் என்பதால் நான் மகிழ்ச்சியுடன் சிரித்தேன், ஆடவும் செய்தேன்." ஆனால் நீ இப்போது என்னிடம் பொய் சொன்னதால் நான் அலறி அழும்படி ஆயிற்று. நீ சொற்பொருள் அறிய மாட்டாய் என்பது எனக்குத் தெரியும், உனக்கும் தெரியும்" என்று.

அந்த மனக்காட்சி மறைந்தது. நரோபாவிற்குள் மாற்றம் நிகழ்ந்தது. அவர் அந்தப் பல்கலைக் கழகத்திலிருந்து ஓடிப்போய் விட்டார். தமது வாழ்நாளில் மீண்டும் ஒரே ஒரு மறைநூலைக்கூட அவர் தொட்டதில்லை. அவர் முற்றிலும் அறியாதவரானார்: வார்த்தையை மட்டும் வைத்துக்கொண்டு நீங்கள் யாரை ஏமாற்றப் பார்ப்பது? வார்த்தையை மட்டும் அறிந்திருப்பவர் அருவருப்பான கிழவி போல் ஆக வேண்டியதுதான் என்பதை அவர் புரிந்து கொண்டார்.

புலமை என்பது அருவருப்பானது. நீங்கள் அறிவாளிகள் பக்கம் சென்றால் ஒரு கெட்ட நாற்றம் வீசுவதைக் கண்டு கொள்வீர்கள் – சவத்துப்போன அறிவின் வாடை.

ஞானமுற்றவனிடமும், புரிந்து கொள்ளும் திறனுடையவனிடமும் மகிழ்ச்சியையும், மணம் பொருந்திய வாழ்க்கையின் உயிரோட்டத்தையும் காண முடியும் – அது அறிவாளியிடமும், மேதையிடமும் காணக் கூடியதிலிருந்து ஒட்டுமொத்தமாய் வேறுபடும். சொல்லின் பொருளை அறிந்தவர் அழகாகி விடுகிறார். சொல்லை மட்டும் அறிந்தவர் அருவருப்பாய் தெரிவார். அந்தப் பெண்மணி புறத்தே யாராகவும் இல்லை. அது உள்ளார்ந்த ஒரு பகுதியின் வெளிப்பாடு. நரோபாவின் இருப்புணர்வு அறிவின் மூலம் அருவருப்பாயிற்று. 'நான் சொற்பொருளை (sense) அறிய மாட்டேன்' என்கிற அளவில் அருவருப்பாயிருந்தது உடனே அழகாய் மாறிவிட்டது.

தற்போது திருமறை நூல்கள் கைகொடுக்காது என்று பட்டதால் நரோபா முழு மனத்துடன் காணும் முயற்சியை மேற்கொண்டார். உயிருடன் வாழ்ந்து கொண்டிருக்கிற ஒரு குரு தேவைப்பட்டார். நீண்ட பயணங்களுக்குப் பிறகு அவர் திலோபாவைச் சந்தித்தார். திலோபாவும் இவரைத் தேடிக் கொண்டிருந்தார். காரணம், உங்களிடம் இருக்கிற ஒன்றை பரிவுணர்ச்சி கொண்டு மற்றொருவரிடம் நீங்கள் பகிர்ந்து கொள்ள விரும்புவீர்கள்தானே.

புத்த மார்க்கத்தில் 'பரிவு' என்பதற்கு 'கருணை' என்ற வார்த்தை பயன்படுத்தப்படுகிறது. ஆங்கில வார்த்தை மிகச்சரியான பொருளைக் கொண்டு வருவதில்லை. 'கருணை' என்பது மிகவும் பொருட் செறிவுடைய வார்த்தை. 'க்ரியா' (Kriya) என்கிற வடமொழி மூலத்தில் இருந்து அது பெறப்பட்டது. 'க்ரியா' என்றால் செயல்புரிதல். 'க்ரியா' மற்றும் 'கருணா' இவை 'க்ரா' (Kra) என்கிற ஒரே மூலத்தில் இருந்து வந்தவை. 'கருணா' என்கிற புத்த வார்த்தைக்கு 'பரிவுடன் செயல்படுதல்' என்று பொருள். அதுதான் இரக்கத்துக்கும் பரிவுக்கும் உள்ள வித்தியாசம். நீங்கள் இரக்கப்படுகிறபோது செயல்பட்டாக வேண்டுமென்பதில்லை - நீங்கள் இரக்கம் காட்டுவதோடு அது முடிந்து விடுகிறது. 'பரிவு' என்பது செயல்படும் நிலையைக் கொண்டது. நீங்கள் ஏதாவது செய்யும்படி இருக்கும். உண்மையிலேயே நீங்கள் பரிவு கொண்டிருந்தால் ஏதாவது செய்யத்தான் வேண்டும். நீங்கள் எப்படி இரக்கம் காட்டுவதோடு நின்று விடுவது? இரக்கம் என்பது ரொம்பவும் மிதமானது, வெளிறிப் போனது. அதில் அன்பிருக்காது. பரிவு என்பதோ ஆதரவும், அன்பும் நிறைந்தது, பரிவு என்றாலே செயல்படும் நிலையில் உள்ளது என்று பெருள்.

ஒரு மனிதன் புரிந்து கொண்டு விடும் போது பரிவு தோன்றும். திலோபா புரிந்து கொண்டவர். அவர் இறுதியில் அடையக்கூடிய ஒன்றை (Ultimate) நேருக்கு நேர் கண்டவர். அவரிடம் பரிவு தோன்றியது. ஏற்கத் தயாராயிருப்பவரை அவர் தேடிக் கொண்டிருந்தார். காரணம், புரிந்து கொள்ள முடியாத ஒருவன் முன்பாய் உங்களிடமுள்ள உன்னதத்தை எப்படி நீங்கள் வீசியெறிவீர்கள்? புதிய எண்ணங்களை ஏற்பதில் ஆர்வமுள்ள ஓர் இதயம், பெண் இயல்புகள் கொண்ட ஓர் இதயம் தேவைப்படும் ஒரு சீடன் பெண்ணியல்போடு இருக்க வேண்டுமென்றதற்குக் காரணம் குருவானவர் ஒன்றில் இருந்து மற்றொன்றுக்கு ஊற்றுபவர் என்பதோடு சீடனாகப்பட்டவன் அதற்கு இடமளிக்க வேண்டிய நிலையில் இருக்கிறான் என்பதால்தான்.

தம்மைச் சந்தித்த அவர்களிடம் திலோபா சொன்னார், 'நரோபா. நான் எதையெல்லாம் சொல்வதற்குக் காத்திருந்தேனோ அவற்றைத் தற்போது சொல்லப் போகிறேன். உனக்காக எல்லாவற்றையும் சொல்கிறேன். நரோபா, நீ வந்து விட்டாய். தற்போது என் சுமைகளை நான் இறக்கி வைக்க முடியும்.

நரோபாவின் இந்த அகக்காட்சி (கனவு) குறிப்பிடத்தக்கது. இத்தகைய பார்க்கும் திறன் கட்டாயம் வேண்டும். அறிவு பயனற்றது என்பதை நீ உணர்ந்தாலன்றி ஞானத்தை நீ தேடப் போவதில்லை. இதுதான் உண்மையான பொக்கிசம் என்று கள்ளப் பணத்தை நீ கையில் கொள்ள நேரிடும். அறிவு ஒரு கள்ளப்பணம் என்பதை நீ தெரிந்து கொள்ள வேண்டும், அது அறிதல் அல்ல, அது புரிதலும் அல்ல. அது கிட்டத்தட்ட அறிந்து கொள்ளும் திறனை நடைமுறைப்படுத்துவதாகும் – வார்த்தை புரிகிறது ஆனால் பகுத்தறிவு தொலைந்து விடுகிறது. ஒருமுறை இதனைப் புரிந்து கொண்டு விட்டால் உன்னுடைய அனைத்து அறிவையும் நீ வீசியெறிந்து விடுவாய், அறிந்தவரைத் தேடத் தொடங்கி விடுவாய், காரணம் அறிந்தவரிடமே இதயத்தோடு இதயமாய், இருப்புணர்வோடு இருப்புணர்வாய் மாற்றம் நிகழ்கிறது. ஆனால், சீடன் முன்பே புலமையுடையவனாய் இருந்தால் அந்த மாற்றம் சாத்தியமல்ல காரணம் அறிவே சுவராகி விடும்.

உன்னைச்சுற்றி ஒரு சுவரை, நுட்பமான சுவரை நான் காண்கிறேன். நீ என்னிடம் வரும் போதெல்லாம் உன்னை நான் நெருங்க முடியுமா என்று பார்க்கிறேன். நீ கையாளத்தக்கவனாய் இருந்தாலும் சரி, இல்லா விட்டாலும் சரி. நான் காண்பது ஒரு கனமான சுவராயிருக்குமாயின் ஏறக்குறைய உன்னை நெருங்குவதே சாத்தியமற்றதுதான். நான் காத்திருக்கும்படியாகும். ஒரு சின்ன விரிசலைக் காண முடிந்தாலும் நான் அதன் வழியே நுழைந்து விடுவேன். ஆனால் அச்சமுற்றவர்கள், பயத்தால் நிரம்பப் பெற்றவர்கள் – சின்ன கீறலைக்கூட விட்டு வைப்பதில்லை. அவர்கள் கெட்டியான சுவரை எழுப்பிக் கொண்டு விடுகிறார்கள். அவர்கள் தங்களைச் சுற்றி அறிவென்னும் பாதுகாப்பான கோட்டையைக் கட்டிக் கொள்கிறார்கள். பயனற்ற இரைச்சல். உண்மையில் ஒரு தொல்லை கொடுக்கிற ஒன்று. ஆனால், அதில்தான் நீங்கள் நம்பிக்கை வைத்திருக்கிறீர்கள்.

ஆக, முதலில் அறிந்திருக்க வேண்டிய சங்கதி இதுதான். அறிவென்பது அறிவு அல்ல. அறிவல்லாத விவேகம் (wisdom), புரிதல் (understanding), தெரிதல் (knowing) இவையே அறியாமையின் வேர்களை அறுத்தெறியக் கூடியவை.

விழிப்புணர்வு (awareness) என்கிற சொல்லை நினைவில் வையுங்கள். காலையில் நீங்கள் கொஞ்சம் கொஞ்சமாய் விழிப்புற்று, உறக்கத்திலிருந்து வெளிப்படுகிறீர்கள், உறக்கம் கலைந்து, மறைகிறது. மீண்டும் அதுதான் நடக்கிறது. நீங்கள் தூக்கத்தை விட்டு வெளியே வருகிறீர்கள். கொஞ்சம் கொஞ்சமாய் உங்களுடைய கண்கள் திறக்கின்றன. நீங்கள் பார்க்கத் தொடங்குகிறீர்கள். உங்கள் இதயம் பயன்படுத்தக் கூடியதாயிருக்கிறது. உங்களுடைய இருப்புணர்வு திறந்த நிலையில் இருக்கிறது. இனியும் நீங்கள் உறங்கிக் கொண்டிருந்த போது இருந்த அதே ஆள் அல்லன். நீங்கள் காலையில் விழித்துக் கொள்ளும் போது கவனித்தீர்களானால் தெரியும். நீங்கள் முற்றிலும் வித்தியாசமான ஆளாகி விட்டிருப்பீர்கள் - உறங்கிக் கொண்டிருந்த அதே ஆள் அல்லதானே நீங்கள்? நீங்கள் கவனித்தீர்கள் உறக்கத்தில் நீங்கள் முற்றிலும் வேறான ஆளாகி விட்டிருந்தீர்கள் - விழித்திருக்கும் போது உங்களால் நம்ப முடியாதவற்றை உறக்கத்தில் நம்புகிறீர்கள். ஏற்க முடியாத முட்டாள்தனங்கள் உறக்கத்தில் நம்பப்படுகிறது. விழித்திருக்கும்போது உங்கள் முட்டாள்தனத்தையும் கனவுகளையும் எண்ணிச் சிரிப்பீர்கள்.

முடிவாக நீங்கள் விழிக்கிறபோதும் அதுதான் நடக்கிறது. அப்போது நீங்கள் வாழ்ந்து பார்த்த ஒட்டுமொத்த உலகும் ஒரு கனவாய், கனவின் பகுதியாகி விடுகிறது. அதனால்தான் இந்துக்கள் உலகம் ஒரு மாயை என்று சொல்லிக் கொண்டிருப்பது. அது கனவால் நிரப்பப்பட்டது, நிஜமல்ல. விழித்துக் கொள்ளுங்கள், உங்களைச் சூழ்ந்திருந்த மாயைகள் விலகக் காண்பீர்கள். முற்றிலும் வித்தியாசமான ஒரு பிரபஞ்சக் காட்சி காணக் கூடியதாயிருக்கும் - அது சுதந்திரமாய் இருக்கும் நிலை. சுதந்திரம் என்பது மாயைகளில் இருந்து அடைகிற சுதந்திரம். உறக்கத்தில் இருந்து சுதந்திரம். எது அங்கே இல்லையோ, இருப்பதாய் தோன்றுகிறதோ அதில் இருந்து சுதந்திரம்.

மெய்ம்மையை நோக்கி வருவதானது வீட்டுக்கு வருவது போலாகும். மாயத்தில் உழல்வதே உலகத்தில் வாழ்வதாகும்.

தற்போது, பதஞ்சலியின் சூத்திரங்களைப் புரிந்து கொள்ள முயலுங்கள்.

'அது இல்லாததால் (அறியாமை) விலக்கப்பட வேண்டிய சேர்க்கை விலக்கப்படுகிறது. அதுவே காண்பவனுடைய கைவல்யம்'.

கைவல்யம் – சுதந்திரம்

எங்கிருந்து தொடங்குவது?... ஏனெனில் பதஞ்சலி எப்போதும் தொடங்குவதில் ஆர்வம் காட்டுகிறவர். தொடக்கம் தெளிவில்லை என்றால் நாம் விமோசனம் பற்றியே பேசிக் கொண்டிருப்போம். ஆனால் அது வெறும் பேச்சாகவே நின்றுவிடும். தொடக்கம் என்பது முற்றிலும் தெளிவாயிருக்க வேண்டும். ஒவ்வோர் அடியிலும் (step) தெளிவாக இருந்தால்தான் இருக்கும் இடத்தில் இருந்து நீங்கள் நகர முடியும். லாவோட்சு பேசுவதை நீங்கள் கவனமாய் கேட்டால் தெரியும். லாவோட்சு உச்சநிலையில் இருந்து, பிரக்ஞை (consciousness)யின் உச்ச நிலையில் இருந்து பேசுவார். திலோபாவென்றால் இருக்கும் இடத்தில் இருந்தே விடைகளைத் தருவார். பதஞ்சலியைக் கேட்டால் அவர் உங்கள் இடத்தில் இருந்தே பேசுவார். தன்னைப்பற்றி எதுவும் சொல்ல மாட்டார். நீங்கள் இருக்கும் இடத்தில் இருந்தே, தொடக்கத்தில் இருந்தே பேசுவார். அவர் மிகவும் நடைமுறை சார்ந்தவர். லாவோட்சு மிகவும் உண்மையானவர். பதஞ்சலி நடைமுறைக்குரியவர்.

என்றோ ஒருநாள் யாரோ ஒருவர் என்னிடம் கேட்டார். 'நீங்கள் ஏன் லாவோட்சு பற்றிய பேச்சைத் தொடர்வதில்லை' என்று. உங்களால்தான். நான் தனியாயிருந்தால் அது விரும்பத்தக்கதாகும், நிறை உண்டாக்கும். ஆனால், நீங்கள் அங்கே இருக்கிறீர்கள்; உங்களை நான் மறக்க முடியாது. லாவோட்சு பற்றி நான் பேசுவதானால் உங்களைப் பின்னாடி வெகு தொலைவில் விடும்படி இருக்கும். அப்போது நான் உடனே பதஞ்சலி பற்றிப் பேசத் தொடங்குகிறேன். அவர் உங்களையும் உங்கள் முதல் அடிகளையும் (steps) பற்றிச் சொல்கிறவர். மிகப்பெரிய வேறுபாடு இருக்கிறது.

லாவோட்சுவை நீங்கள் அனுபவித்து மகிழலாம். ஆனால் நடைமுறைப்படுத்த முடியாது காரணம் பயிற்சி(practice) பற்றி அவர் எதுவும் கூறவில்லை. அவர் எதை அடைந்தாரோ அதைப்பற்றியே பேசுவார். செயல்நிலைகள் முற்றிலும் மாறானவை. அந்தக் காட்சியில் நீங்கள் வசியப்படுத்தப்படலாம். அது உங்களை மிகவும்

ஏற்பதாயிருக்கலாம். ஆனால், அது ஒரு கவிதை என்கிற அளவிலேயே நின்றுவிடும். அது ஓர் மிகைப்படுத்தப்பட்ட விளக்கம் **(romance)**. அனுபவத்தால் அறியப்படுவதல்ல, நடைமுறைக்குரிய தல்ல. நீங்கள் போகவேண்டிய வழியை லாவோட்சுவைக் கொண்டு கண்டறிய இயலாது. எல்லாமே குறையற்றதாய் முழுமையாய் தெரியும், ஆனால் எங்கிருந்து போக? உங்களைப்பற்றி நீங்கள் அறிந்து கொண்ட கணத்தில் லாவோட்சு எங்கோ வெகு தொலைவில் இருப்பார்.

பதஞ்சலி உங்கள் பக்கமாய் இருப்பார். அவரோடு கைகோத்துக் கொண்டு நீங்கள் செயல்பட முடியும். அவர் செயலின் தொடக்கத்தை - மூலத்தைப் பற்றிப் பேசுகிறார்.

'காண்பவனுக்கும் காணப்பட்டதற்குமான தொடர்பு அறுபட்ட நிலை...' ஆக முதல் நடவடிக்கை அதிகக் கவனமாயிருப்பது. நீங்கள் காணப்பட்டதுடன் தொடர்பில்லாதவர் என்பதில் கவனம். உங்களால் காணப்பட்டது எதுவானாலும் நீங்கள் காண்பவர். மரம் அழகாய், பசுமையாயிருக்கிறது, பூத்துக் குலுங்குகிறது - ஆனால் அந்த மரம் ஒரு பொருள், நீங்கள் குறிப்பிட்ட நிலைக்கு ஒன்றைக் கொண்டு வருபவர் (கட்டுப்படுத்துகிறவர்). நன்றாகத் தெரிந்து கொள்ளுங்கள், மரம் அங்கே இருக்கிறது; நீங்கள் இங்கே இருக்கிறீர்கள். மரம் வெளியே இருக்கிறது, நீங்கள் உள்ளே இருக்கிறீர்கள். மரம் பார்க்கப்படுகிறது, நீங்கள் பார்க்கிறவர். அந்த மரத்தின் அழகும், கவர்ச்சியும் உங்களை வசியப்படுத்தி விடுவதால் அதை நினைவில் கொள்வது உங்களுக்குக் கடினமாய் தெரிகிறது. நீங்கள் தொலைந்து போனது போல், உங்களை மறந்து போனதுபோல் ஆகிவிடுகிறீர்கள். உண்மையில் எப்போது உங்களை மறக்கும் முயற்சியில் நீங்கள் ஈடுபடுகிறீர்கள், உங்களிடமிருந்தே தப்பித்தோட முயல்கிறீர்கள். உங்களுக்கு நீங்களே சலிப்படைந்தவராய் தெரிகிறீர்கள். யாரும் தன்னோடு இருக்க விரும்புவதில்லை. உங்களிடமிருந்து தப்பித்துக் கொள்ள ஆயிரத்தியோரு வழிகளை நீங்கள் தோற்றுவித்துக் கொள்கிறீர்கள். 'மரம் அழகாயிருக்கிறது' என்று சொல்லும்போது நீங்கள் தப்பித்துக் கொண்டு விடுகிறீர்கள், உங்களை நீங்கள் மறந்து விடுகிறீர்கள். அழகான ஒரு பெண் உங்களைக் கடந்து செல்லும்போது உங்களையே நீங்கள் மறந்து விடுகிறீர்கள்தானே. காண்பவர் காணப்பட்டதில் தொலைந்து விடுகிறார்.

காண்பவரை காணப்பட்டதில் தொலைத்து விடாதீர்கள். பலமுறை அது தொலைந்து, மீண்டும் கொண்டு வந்திருப்பீர்கள். போகப்போக நீங்கள் நிலையாகி விடுவீர்கள். போகப்போக வலிமை வந்து விடும். உங்களை எது கடந்து சென்றாலும், கடந்து செல்வது கடவுளே யானாலும் - 'நீங்கள் காண்பவர், அவர் காணப்படுகிறவர் என்பதை நினைவில் வையுங்கள்' என்கிறார் பதஞ்சலி. இந்த வேறுபாட்டை மறந்து விடாதீர்கள், காரணம், இந்த வேறுபாட்டை வைத்துத்தான் உங்கள் காட்சி தெளிவாகிறது. பிரக்ஞை ஒருமுகப்படுகிறது. உங்களுடைய விழிப்புணர்வு வலுப்படுகிறது. உங்கள் இருப்புணர்வு வேரூன்றி மையப்படுகிறது.

திரும்பத் திரும்ப முயற்சி செய்யுங்கள், மீண்டும் மீண்டும் உங்கள் அகநிலைப் பண்பினை (self) நினைவு கொள்ளுங்கள். தனது தனித்தன்மையை நினைவு கொள்வது நான் என்கிற அகந்தை (Ego)யை நினைவு கொள்வதாகாது. 'நான்' என்பதை நினைவு கொள்வதல்ல அது. உள்ளிருப்பவர் காண்பவர், வெளியில் இருப்பது காணப்படுவது என்பதே நினைவில் கொள்ளப்பட வேண்டியது. அது 'நான்' என்பது பற்றிய பிரச்சினையல்ல. அது பிரக்ஞை மற்றும் பிரக்ஞையால் அறியப்படும் பொருள் பற்றியதாகும்.

சிதறடிக்கப்படும் அறியாமையின் மூலம் காண்பவருக்கும் காணப்பட்டதற்கும் உள்ள தொடர்பு அறுபடுவதே பரிகாரமாகும், அதுவே விடுதலையைக் கொண்டு வருவது. உங்களைச் சுற்றியுள்ளவற்றை நீங்கள் அறிந்து கொள்ளும் அளவிற்கு உங்களைச் சுற்றியுள்ள உலகையும், உங்களைச் சுற்றிக் கொண்டுள்ள உங்களுடைய சரீரத்தையும் காலப்போக்கில் நீங்கள் கண்டறிவீர்கள். அதுகூட ஒரு பொருள்தான். என்னுடைய கையை நான் பார்க்க முடிகிறது. என்னுடைய கையை நான் உணர முடிகிறது. எனவே, நான் பிரிந்து வேறானவனாய் இருக்க வேண்டும். நான் சரீரமாயிருந்திருந் தால் என் சரீரத்தை உணர வழியிருக்காது. - யார் அதை உணர்வது? அறியாமை என்பது தொடர்பற்ற நிலையை, விலகியிருத்தலை (separation) மறப்பதன் விளைவு. அறிவதற்கு விலகியிருத்தல் அவசியம். இந்தச் சரீரம் 'வேறொன்று' என்பதை நீங்கள் அறியும்போது உங்கள் பிரக்ஞை சவுகர்ய நிலையை அடையும்.

பிறகு உங்களுடைய உணர்ச்சிகளும், எண்ணங்களும் 'வேறானது' (உங்களுடையதல்ல) என்பதை அறிவீர்கள். காரணம்

அவற்றை நீங்கள் பார்க்க முடிகிறது. நீங்கள் அவற்றைத் திரும்பத் திரும்பக் கண்டிருந்தாலும் நீங்கள் அவற்றிலிருந்து விலக்கப்பட்டவர், விலகியவர் என்பதை மறந்து விடுகிறீர்கள். உங்கள் மனத்திரையில் ஒரு சிந்தனை கடந்து செல்வதை நீங்கள் காண்கிறீர்கள். அது வானத்தில் கடந்து செல்லும் ஒருமேகம் மாதிரி. ஒரு வெண்மேகமோ; கருமேகமோ வடக்கு நோக்கி நகர்ந்து செல்வதை நீங்கள் பார்க்கிறீர்கள். ஒரு சிந்தனை கடந்து செல்லும்போது அது எங்கே செல்கிறது, எங்கிருந்து வந்தது என்பதைக் கவனியுங்கள், நிச்சயப்படுத்திக் கொள்ளுங்கள். அதனுடன் சம்பந்தப்படாதீர்கள், அதனுடன் ஒன்றாகி விடாதீர்கள். அதனுடன் சம்பந்தப்பட்டு ஒன்றாகி விடுவது அடையாளம் காட்டிக் கொள்வதாகும். 'ததாத்மியா' - அதுதான் அறியாமை. அடையாளம் காணப்பட்டால் நீங்கள் அறியாமையில் இருக்கிறீர்கள். அடையாளம் காட்டி நிரூபிக்கப்படா விட்டால் - பிரிந்திருக்கிறீர்கள், சாட்சி பாவத்தில் இருக்கிறீர்கள், கவனித்திருக்கிறீர்கள் - நீங்கள் விழிப்புணர்வை நோக்கிச் சென்று கொண்டிருக்கிறீர்கள்.

உபநிடதங்கள் 'நேத்தி.. நேத்தி' என்கிற முறை இந்த முறைதான். நீக்கும் முறை (தள்ளி வைத்தல்). நீங்கள் உலகத்தைக் காண்கிறீர்கள் - அட உலகம் நானல்ல என்பது. நீங்கள் சரீரத்தைக் காண்கிறீர்கள் - சரீரம் நானல்ல என்பது; நீங்கள் சிந்தனையைக் காண்கிறீர்கள் - அவ்வேளையில் சிந்தனை நானல்ல என்பது. நீங்கள் உணர்ச்சியைக் காண்கிறீர்கள் - அப்போது உணர்ச்சி நானல்ல என்பது. நீங்கள் தொடர்ந்து போய்க் கொண்டேயிருக்கிறீர்கள்... ஒரு தருணத்தில் காண்பவர் மட்டுமே எஞ்சியிருக்கிறார். காணப்பட்டவை அனைத்தும் மறைந்து விடுகிறது. காணப்பட்டதுடன் உலகமும்தான்.

பிரக்ஞையின் தனித்திருக்கும் நிலை மிகவும் நேர்த்தியானது, குறிப்பிடத்தக்க எளிமை கொண்டது, மாசற்றது. அந்தப் பிரக்ஞையில் அமர்ந்து, பிரக்ஞையில் மையப்பட வருத்தமேயில்லை. பதற்றம் ஏது? துன்பம் ஏது? வேதனை ஏது? வெறுப்பேது? அன்பேது? ஆத்திரமேது? எல்லாமும் மறைந்து விட்டிருக்கும். நீங்கள் மட்டுமேயிருப்பீர்கள்; 'நான்' என்கிற உணர்வுகூட அங்கே இருக்காது. 'நான் இருக்கிறேன்' என்பதாய் நீங்கள் உணர்ந்தால், அந்த உணர்வை உங்களால் அறிய முடியும் - அது உங்களிலிருந்து வேறானதென்பதை. நீங்கள் இருக்கிறீர்கள், எளிமையான நீங்கள். 'நான்' என்கிற

விழிப்புணர்வேயில்லாத அளவு எளிமை. 'இருக்கிறேன்' (amness) என்பது மட்டும். இருப்புணர்வின் விளக்கம் அது. அதனைக் கோட்பாட்டுப் பிரச்னையாய்க் கொள்ள வேண்டியதில்லை. எப்படி வரையறை செய்வது, எப்படி அனுபவித்தறிவது என்பதுதான் கேள்வி.

எல்லாமும் விலக்கப்பட்டதாய், அனைத்துக் கனவுகளும் கலைந்து, ஒட்டுமொத்த உலகமும் மறைந்தொழிகிறது - உங்களுக்குள் எதையும் செய்யாமல், நினைவின் சிற்றலைகூட இல்லாமல், உணர்ச்சியின் மென்காற்றும் உங்களைக் கடந்து செல்லாமல் நீங்கள் மட்டுமே இடம் பெற்றிருக்கிறீர்கள். எல்லாம் அசைவற்று, அமைதியாய் காணப்படுகின்றன. காலம் நின்றுவிட்டது, வெற்றிடம் இல்லையென்றானது. இது கடந்த நிலை. ஆராய்ந்து அறியாமல் நேரடியாய் உணரும் தருணம். இந்தக் கணத்தில், முதல் முறையாய் நீங்கள் அறியாமையில் இருந்து விடுபட்டவராகிறீர்கள். இது இருப்புணர்வில் நீங்கள் எப்படி வளர்கிறீர்கள் என்பது பற்றியது. உங்கள் வளர்ச்சி இத்தகையது. இப்படித்தான் நீங்கள் அறிந்தவராகிறீர்கள். அதற்காக எதையும் ஊடுருவித் தெரிந்து கொள்ளும் தன்மை உடையவர் என்பதல்ல. நீங்கள் எந்தவொரு தகவலையும் சேகரித்துக் கொண்டுவிடவில்லை, மாறாக உங்களைச் சுற்றியுள்ளவற்றைப் பிரித்து விடுகிறீர்கள், விலக்கி விடுகிறீர்கள். ஒரு சூன்யத்தைப்போல, வெற்றிடத்தைப் போல நீங்கள் நிர்வாணப்படுகிறீர்கள், பாதுகாப்பற்றவராகிறீர்கள்.

பதஞ்சலி இதனை 'அறியாமையில் இருந்து விடுதலை' என்கிறார். ஆக, முதல் நடவடிக்கை - விலக்கிக் கொண்டேயிருப்பதுதான். நீங்கள் காண்பது எதுவாயினும் 'நான் தனி' என்பதை நினைவில் கொள்ளுங்கள். உடனே ஒருவகை நிசப்தம் உங்களைச் சூழ்ந்து கொண்டு விடும். நான் காண்பவன், காணப்படுவதல்ல என்பதை நீங்கள் நினைவு கொள்ளும் கணத்திலேயே நீங்கள் உலகத்தின் ஓர் அங்கமாயிருப்பதில்லை; மேம்பட்டவராகி விடுகிறீர்கள்.

நீங்கள் மீண்டும் மறந்து விடலாம். நினைவில் வைத்துக் கொண்டேயிருப்பது தொடக்கத்தில் சிரமம். ஆனால் இருபத்து நான்கு மணி நேரத்தில் ஒரேயொரு கணப்பொழுது நினைவுபடுத்திக் கொள்ள முடிந்தாலும் அதுவே வளமான நினைவாகி விடும். காலப்போக்கில் அதிகக் கணங்கள் (moments) சாத்தியப்படும். ஒருநாள் உங்கள்

நினைவு ஒரே சீரான தன்மையைப் பெற்று விடுகிறபோது நினைவுபடுத்திக் கொள்ளும் முயற்சியே தேவையற்றதாகி விடும். அது இயல்பாகி விடும் உங்களுடைய சுவாசத்தைப்போல. நீங்கள் சுவாசிக்கிறீர்கள், நீங்கள் நினைவுபடுத்திக் கொள்கிறீர்கள். பிறகு – 'நினைவுபடுத்திக் கொள்ளல்' என்கிற வார்த்தையே சரியாயிருக்காது. அது சாதாரணமாய் நிகழ்கிறது. அது சகஜமாகி விடுகிறது. எவ்விதத் தூண்டுதலுமின்றி தானே நிகழ்வதாய்.

பிரித்தறிதலின் தடுமாற்றமில்லாத முயற்சி...

பிறகு இரண்டாவது நடவடிக்கை. முதல் நடவடிக்கை: விலக்குதல், அடையாளத்தை அழித்தல், காண்பவருக்கும் காணப்பட்டதற்கும் இடையிலான அடையாளத்தை அழித்தல். இரண்டாவது நடவடிக்கை.

'எது உண்மையானது எது உண்மையற்றது என்பதைத் தடுமாற்றமில்லாத முயற்சியின் மூலம் பிரித்தறிய அறியாமை சிதறிவிடும்.'

இது ஒரு நடவடிக்கை. இன்னொரு நடவடிக்கையும் இருக்கிறது. இரண்டும் இணைந்து செயல்படும். மற்றொன்றை இரண்டாவது நடவடிக்கை என்பது சரியாகாது – அவை ஏக காலத்தில் இயங்குகின்றன. ஆனால் முதலில் பிரித்தறிதலுடன்(discrimination) தொடங்குவதே விரும்பத்தக்கது. அப்போது அடுத்ததும் சாத்தியமாகும். காரணம் அந்த இன்னொன்று ரொம்பவும் நுட்பமானது. அது – உண்மைக்கும் உண்மையல்லாததற்கும் உள்ள வேறுபாடு.

எடுத்துக்காட்டாக, உங்களுடைய வழக்கமான வாழ்க்கையில் எல்லாமே குளறுபடியாயிருக்க, நீங்கள் குழப்பமடைகிறீர்கள். எது உண்மையானது எது மாயம் என்றே உங்களுக்குத் தெரிவதில்லை. கற்பனையும் உண்மையாய் தெரியுமளவுக்கு நீங்கள் குழம்பிக் கிடக்கிறீர்கள். அது உண்மையாகி விடுகிறபோது அதாவது நீங்கள் அதனை உண்மையாய்க் கொண்டு விடுகிறபோது அது உங்களைப் பாதிக்கத் தொடங்குகிறது. அது உங்களைப் பாதிக்கத் தொடங்கியதும் ரொம்பவும் உண்மைபோல் காட்சியளிக்கிறது. காரணம் அது உங்களைப் பாதித்துக் கொண்டிருக்கிறது. அது ஓர் இழிவான – கேடும் துன்பமும் கொடுக்கிற வட்டமாகிறது.

யாரோ ஒருவர் உங்கள் நெஞ்சின்மீது கத்தியோடு அமர்ந்து உங்களைக் கொல்லப் போவதாய் கனவு காண்கிறீர்கள் – கெட்ட கனவு.

நீங்கள் கிறீச்சிட்டு அலறுகிறீர்கள். அலறுவதால் உறக்கம் கலைந்து விடுகிறது. கண்களைத் திறந்து பார்த்தால் உங்கள் நெஞ்சின் மீது எவரும் அமர்ந்து கொண்டிருக்கவில்லை. தூக்கத்தில் தலையணையை நீங்களே உங்கள் மார்பின் மீது இழுத்துவிட்டுக் கொண்டிருக்கலாம். அதனால் ஏற்பட்ட அழுத்தம் அத்தகைய கருத்தை - உணர்ச்சி விளைவை உண்டுபண்ணியிருக்கலாம். அந்த அழுத்தத்தில் கனவு தோன்றியிருக்கலாம். அது கனவென்று தெரிந்தாலும் உங்கள் இதயம் படபடக்கிறது. அது கனவென்பதை நீங்கள் அறிவீர்கள். தற்போது நீங்கள் முற்றாக விழிப்படைந்து விட்டீர்கள் - ஆனால் உங்களுடைய உடம்பு மட்டும் ஏனோ நடுங்கிக் கொண்டிருக்கிறது. அது மீண்டும் அமைதிப்பட கொஞ்சம் நேரமாகும்.

வெறும் தோற்றத்தை மட்டுமே கொண்டிருந்த கனவு எப்படி உங்கள் உடம்பில் உண்மையாய் உணரக்கூடிய நடப்பு ஆனது? இரண்டும் சாத்தியங்கள் மட்டுமே அதற்கு உண்டு. ஒன்று - உடம்பும் உண்மையானதல்ல. அதுதான் உயிர் (வாழ்க்கைப்) பற்றிய இந்துக்களின் பார்வைக் கோணம். காரணம் ஒரு கனவால் அதைப் பாதிக்க முடியும். அது ஒரு கனவைப்போல் இருக்க வேண்டும். அது உண்மையாயிருக்க முடியாது. இரண்டாவது சாத்தியம்: நீங்கள் அந்தக் கனவை உண்மையெனக் கொண்டதால் அது உங்களைப் பாதிக்கிறது. அது உண்மையாகி விடுகிறது. மனம்தான் காரணம். நீங்கள் ஒன்றை உண்மையெனக் கருதினால் அது உண்மையாகி விடுகிறது. அது மாயம் என்று நீங்கள் புரிந்து கொண்டால் உடனே அது உங்களைப் பாதிப்பதை நிறுத்திக் கொண்டுவிடும்.

உன்னிப்பாய் கவனியுங்கள்: நீங்கள் ரொம்பவும் பசியாய் உணர்கிறீர்கள். அது உண்மையானதா, உங்கள் உடம்பின் தேவையா அல்லது தினமும் இதே நேரத்துக்கு உண்பீர்கள் என்பதாலா? இதுதான் சாப்பிடும் நேரம் என்று கடிகாரம் சொல்லிற்றா? 'பசியை உணர்வாய்' என்று கடிகாரம் சொல்ல அந்த உத்தரவிற்கு நீங்கள் அடிபணிகிறீர்கள், ஒழுங்கைக் கடைப்பிடிக்கிறீர்கள். உங்களுக்குப் பசிக்கத் தொடங்குகிறது. அது உண்மையான பசியாகுமா? அது உண்மையான பசியென்றால், நீங்கள் பசித்திருக்கும் அளவிற்கு அது வளர்ந்து கொண்டேயிருக்கும். தினமும் ஒரு மணிக்கு நீங்கள் சாப்பிடுவீர்களென்றால், ஒரு மணி அடித்ததுமே உங்களுக்குப் பசியெடுக்கும். பொறுங்கள்; ஒரு பதினைந்து நிமிடத்துக்குப் பிறகு பசியை உணர மாட்டீர்கள், ஒரு மணி நேரத்துக்குப் பின் முற்றாகவே

மறந்து விடுவீர்கள். என்னவாயிற்று? அந்தப் பசி உண்மையான தென்றால், ஒரு மணி நேரத்துக்குப் பிறகு அது இன்னும் அதிகரித் திருக்க வேண்டுமல்லவா - ஆனால் அது மறைந்து விட்டதே. அது மனதால் உண்டாக்கப்பட்டது. உடம்பின் உண்மையான தேவையல்ல, ஒரு கற்பிதமான தேவை, மாயமானது.

எது உண்மை எது மாயம் என்பதைக் கவனித்திருங்கள், பல விசயங்களை அறிந்து-கொண்டவராவீர்கள். அதன்பிறகு அவற்றை வகைப்படுத்துங்கள். வாழ்க்கை வெகு எளிமையானதாகி விடும். இதுவே சந்நியாசத்தின் பொருள். எது மாயமானது என்பதை அது குறிப்பிடும். மாயமான எதுவும் உங்கள் மீது அதிகாரம் செலுத்துவதற் கில்லை. 'இது மாயமானது' என்பதை நீங்கள அறிந்து கொள்ளும் கணத்தில் அதிகாரம் தொலைந்து விடும். அது செயலற்றதாகி விடும். அதற்கு மேலும் உங்களைப் பாதிக்காது. வாழ்க்கை மிக எளிமை யானதாய், இயல்பானதாய் மாறிவிடும்.

அதன்பிறகு தொண்ணூற்றியொன்பது சதவிகித சங்கதிகளும் மாயமானவை என்பதை நாளாவட்டத்தில் நீங்கள் புரிந்து கொள்வீர்கள். ஆம், தொண்ணூற்றியொன்பது சதவிகிதம். இறுதி நடவடிக்கைக்காக ஒரு சதவிகிதத்தை நான் விட்டு வைக்கிறேன். காரணம் இறுதி நடவடிக்கையில் அதுவும் மாயமாகி விடும். உண்மையாக இருப்பது நீங்கள் மட்டுமே. நிறைவாக, பிரக்ஞை (consciousness) மட்டுமே உண்மையாகிறது.

எடுத்துக்காட்டாக, இரவில் நீங்கள் உறங்குகிறீர்கள், கனவு காண்கிறீர்கள். இரவில் அந்தக் கனவு உண்மை போலிருக்கும். நீங்கள் அதை உண்மையாய்க் கொள்வீர்கள். நீங்கள் அதன் வழியே வாழ்கிறீர்கள் - வருத்தப்படுகிறீர்கள், கோபப்படுகிறீர்கள், அன்பு காட்டுகிறீர்கள் - அனைத்துவகை உணர்ச்சிகளும், எண்ணங்களும், வாழ்வின் அத்தனை வகைப்பாடுகளும் உங்கள் வழியே கடந்து செல்கின்றன. பிறகு, காலையில் அது மாயமாகி விடுகிறது. தற்போது நீங்கள் அலுவலகத்துக்கு, கடைக்கு, சந்தைக்கு என்று போய்க் கொண்டிருக்கிறீர்கள். தற்போது உலகம் உண்மையாய் தெரிகிறது. மாலையில் திரும்பவும் நீங்கள் வந்தடைகிறீர்கள். உறங்கப் போகிறீர்கள் - சந்தை, கடை - என்று எல்லாமும் திரும்ப மாயமாகி விடுகிறது. அயர்ந்து உறங்கும்போது சந்தை, குடும்பம், வீடு, கவலைகள் இவை உங்கள் நினைவில் இருக்காது - இவையனைத்தும் மறைந்து விடும்.

ஆனால், ஒன்று மட்டும் எப்போதும் உண்மையில் இருக்கும். அது காண்பவர். இரவில், கனவு முன் செல்லும்போது, கனவு ஒரு கனவாகவே இருக்கும். ஆனால் காண்பவர் கனவாகிவிட மாட்டார் - காரணம் ஒரு கனவு இடம் பெறுவதற்கும் அதைக் காண்பவர் அவசியம். இரண்டும் கனவுகளாகி விடாது.

நீங்கள் இளைஞராயிருக்கிறீர்கள். பிறகு முதுமை அடைகிறீர்கள், ஆனால் காண்பவர் அப்படியேதான் இருக்கிறார். நீங்கள் நோய்வாய்ப்படுகிறீர்கள், ஆரோக்கியமடைகிறீர்கள். ஆனால் காணப்பட்டது மட்டும் அப்படியேதான் இருக்கிறது. உங்களுக்குள் இருக்கும் பிரக்ஞை எப்போதும் மாறாத காரணியாய் அப்படியே இருக்கிறது - அது மெய்ம்மை (reality) உண்மை நிலை. மெய்ம்மையை எப்போதும் நிலைத்திருக்கிற ஒன்று என இந்துக்கள் வரையறை செய்திருக்கிறார்கள். அவர்களுடைய விளக்கம் இதுதான், 'எது சாசுவதமானதோ அது உண்மை ஆகும், எது குறுகிய காலத்தில் மறையுமோ அது உண்மையல்ல (மாயம்). காரணம் அற்பமானவை இந்தக் கணத்தில் இருக்கும். அடுத்த கணத்தில் இருக்காது. அதை ஏன் உண்மை என்கிறோம்? அது ஒரு கனவு எது கண நேரம் அர்த்தமுடையதாயிருந்து பிறகு அர்த்தமற்றதாகிறதோ அது கனவு. இந்துக்கள் சொல்கிறார்கள், 'ஒட்டுமொத்த வாழ்க்கையுமே ஒரு கனவுதான். காரணம் நீங்கள் இறக்கிறபோது முழு வாழ்க்கையும் அதற்கு முன் ஒருபோதுமே இருந்திராதது போல் அர்த்தமற்றதாகி விடும்' என்று.

மாயையிலிருந்து உண்மையைப் பிரித்து வகைப்படுத்த அதிலிருந்து மிகவும் நம்பத்தக்க விழிப்புணர்வு உண்டாகிறது. இந்த வகைப்படுத்தல் - உண்மை மாயைக்கிடையேயான பிரித்தறிதல் அதிகப்படியான விழிப்புணர்வை உண்டுபண்ணும் ஒழுங்குமுறை என்பதை நினைவில் கொள்ளுங்கள். நீங்கள் எது உண்மையானது, எது மாயமானது என்பதை அறிவது முக்கியமல்ல. உண்மையான கருத்து இதுதான்; எது உண்மை, எது மாயை என்று அறியும் முயற்சியில் நீங்கள் தீவிரமான விழிப்புணர்வைப் பெற்று விடுகிறீர்கள். அது ஓர் ஆராய்ச்சி முறை. எனவே, அதில் சிக்கிக் கொள்ளாதீர்கள். காரணம் மக்கள் தங்களுடைய ஆராய்ச்சி முறையில் (methodology)தான் அகப்பட்டுக் கொள்கிறார்கள். அது ஓர் ஆராய்ச்சி முறை என்பதை எப்போதுமே நினைவில் வையுங்கள். அது ஒரு சாதனம் அவ்வளவே. எது உண்மை, எது மாயை என்பதை நீங்கள் ஊடுருவி அறிந்து

கொள்வதால் என்னவாகி விடப்போகிறது? உங்களுடைய தீவிரத் தன்மைதான் அதிகரிக்கும், விழிப்புறும். வாழ்வின் காரண காரிய தொடர்புக்கடங்காத நடப்புகளுக்குள் (phenomena) உங்கள் கண்கள் ஊடுருவும், வெகு தொலைவிற்கு. அதுதான் உண்மையான கருத்து.

யோகாவைப் பொறுத்தவரை எல்லாமும் சாதனமாகி (device) விடும். உங்களைக் குறையற்ற விழிப்புணர்வுடையவராக்குவதே அதன் குறிக்கோள். அதனால் அறியாமையின் சிறுதுணுக்குக்கூட உங்கள் இதயத்தின் எந்த மூலையிலும் இடம் பிடிக்காது - மொத்த வீடும் வெளிச்ச மயம்.

'தடுமாற்றமில்லாத பயிற்சியின் மூலம் எது உண்மை எது மாயை என்பதைப் பிரித்தறிவதால் அறியாமை சிதறடிக்கப்பட்டு விடும்'. ஆக இதுதான் விசயம்: அறியாமை சிதறிப்போதல்.

இந்தியாவில் நச்சுத்தன்மை மிக்க பாம்புகள் ஒரு சிலதான் நாகப்பாம்பு மாதிரி. ஒருவரை நாகம் (நல்ல பாம்பு) கடித்து விட்டால் அவரை முப்பத்தியாறு மணி நேரத்துக்கு விழித்தேயிருக்கும்படி செய்ய வேண்டும். அவருடைய உடம்பு தன்னால் நஞ்சை வெளியேற்றி விடும். ஆனால் இதில் முக்கியக் கருத்து - அந்த மனிதரை முப்பத்தியாறு மணி நேரத்துக்கு தூங்க விடாமல் வைத்திருப்பது. ஒரு தடவை அவர் தூக்கத்தில் விழுந்தாலும் அது சாத்தியப்படாது. எனவே, இந்தியக் காடுகளில் உள்ள அல்லது ஆதிவாசிகளைச் சேர்ந்த ஒருவரை நாகம் கடித்து விட்டால், வேறு மருந்து இல்லை என்கிற நிலையில் ஒட்டுமொத்த கிராமமும் ஒன்று திரண்டு விடும். நான் ஒரு கிராமத்தில் இருந்தபோது அப்படி ஆயிற்று. முப்பத்தியாறு மணி நேர நடப்பு முழுவதையும் நான் கவனித்தேன். அது ரொம்ப நேர்த்தியான விசயம், காரணம் விழிபபுணர்வு அடைவதற்கு அது முழுமையான செயல் முறை.

இதில் பிரச்சினை என்னவென்றால் நஞ்சு மனிதனுக்குத் தூக்கத்தை உண்டுபண்ணும். தூங்கி விடுவதற்கான உந்துதலை அவன் பெரிய அளவில் உணர்வான். அது சாதாரணத் தூக்கமல்ல - தூங்குவதற்கான உள்ளக்கிளர்ச்சி அதிகமாயிருக்கும். அவனால் உட்காரவும் முடியாது. சுற்றியிருப்பவர்கள் அவனைத் தடுக்க வேண்டும், அவனைப் பற்றிக்கொள்ள வேண்டும். அவன் உட்கார்ந்திருந்தாலும் நின்றிருந்தாலும் அவனுக்கு அதிர்ச்சியூட்டியபடி இருக்க வேண்டும். அதற்கான ஒரு சூழலை - பறையடித்தும், இசைக்

கருவிகளை இசைத்தும் சுற்றியிருந்து ஆடிப்பாடியும், ஊளையிட்டும்,கத்திக் கூச்சலிட்டும் தோற்றுவிக்க வேண்டும் - ஆகவே, அவனால் தூங்க முடியாது. அவனுடைய கண்கள் மூடிக்கொள்ளும் கணத்தில் அவனுக்கு மீண்டும் மீண்டும் அதிர்ச்சியூட்டப்படும். சமயத்தில் அவனை அடிக்கவும் செய்வார்கள். பன்னிரண்டு மணி நேரம் ஆனதும் விழித்திருக்கவே முடியாத ஒரு கணம் வரும். அப்போது நீங்கள் கத்திக் கொண்டேயிருந்தாலும் அவன் காது கொடுத்துக் கேட்க மாட்டான். அவனுடைய உடம்பு சக்தியற்றதாகி விடும். அவன் உட்கார்ந்திருந்தாலும், நின்றிருந்தாலும் உங்களால் அவனைத் தாங்கிப் பிடிக்க முடியாது. அப்போது அவனைக் கடுமையாய் அடிக்க வேண்டியிருக்கும். அது மட்டுமே அவனை விழித்திருக்கச் செய்யும். முப்பத்தியாறு மணி நேரம் முடிந்து விட்டால் அப்போது உடம்பு நஞ்சை உதறிவிட்டிருக்கும். அவன் உயிரோடு இருப்பான். அவன் சில நிமிடம் தூக்கத்தில் விழுந்து விட்டாலும் அவனுடைய உயிர் போனதுதான்.

யோகாவின் முயற்சி முழுதும் அதைப் போன்றதே. எச்சரிக்கையுடன் வைத்திருக்க எத்தனையோ செய்முறைகள் உள்ளன. அதனால்தான் பலதும் தாறுமாறாகி விட்டிருக்கின்றன. எடுத்துக்காட்டாக - உணவை விலக்கியிருப்பது (fasting) விழிப்பாக இருக்கச் செய்கிற ஒருமுறை. காரணம், நீங்கள் உண்ணாமல் இருக்கும்போது எளிதில் உங்களால் தூங்க முடியாது. தூக்கம் பிடிக்க வேண்டுமானால் உடம்புக்கு உணவு தேவைப்படும். நீங்கள் சாப்பாட்டை ஒரு பிடி பிடிக்கிற போதெல்லாம் உடனே தூங்கிப் போய் விடுவீர்கள். அதிகமாய் சாப்பிட்டிருப்பதால் எங்கும் போகவோ, எதையும் செய்யவோ உங்களால் முடியாது. பிரக்ஞை தன்னை இழந்து கொண்டிருக்கும். உடம்பின் ஒட்டுமொத்த ஆற்றலும் வயிற்றுக்குள் சென்று விடும். உணவை சீரணித்தாக வேண்டுமே. அதுதான் முதலில் செய்யப்பட வேண்டிய காரியமாயிருக்கும் - அதுவே உடனடி யானதாய், இன்றியமையாததாய் ஆகிவிடும். உடம்பின் ஒட்டுமொத்த சக்தியும் வயிற்றுப்பக்கம் ஒருமுனைப்பட்டிருக்கும். நீங்கள் தூக்கம் வருவதை உணரத் தொடங்குவீர்கள்.

நீங்கள் உண்ணாமையைக் கடைப்பிடிக்கிற போது இரவில் தூங்க முடியாதது போல் உணர்வீர்கள். இப்படியும் அப்படியுமாய் புரண்டு கொண்டிருப்பீர்கள். ஏதோ ஒன்றைத் தவற விட்ட மாதிரி இருக்கும். உடம்பின் சக்தி தடையற்றதாயிருக்கும் - எதையும் சீரணித்தாக

வேண்டும் என்பதில்லையே. தடையற்றச் சக்தி உடம்பெங்கும் சென்றபடி இருக்கும். அது கவனத்தை வயிற்றில் ஒருமுனைப்படுத்த வேண்டியிருக்காது. உண்மையில் அது கிடைக்கக் கூடியதாயிருப் பதால் உங்கள் மனம் தொடர்ந்து இயங்கிக் கொண்டே இருக்கும். தூங்குவது கடினமாகி விடும். விழிப்புணர்வைத் தோற்றுவிக்க உண்ணாமை ஒரு முறை ஆகும். நீங்கள் நெடுநேரம் உண்ணாம லிருந்தால் விழிப்புணர்வின் ஒரு குறிப்பிட்ட தன்மையைப் பெறுவீர்கள். அதை நீங்கள் சாப்பிட்டுக் கொண்டேயிருக்கும் போது அடைவது கடினம். அதை உங்களால் அடைய முடியும். ஆனால், நெடுநேரம் பிடிக்கும். அதை அடைவதற்குக் குறுக்கு வழி உண்ணாமைதான்.

ஆனால், எங்கோ ஏதோவொன்று தவறாகி விட்டிருக்கும். எப்போதும் தூக்கமாகவே இருப்பவர்களுக்குத்தான் அப்படி ஆகி விடுகிறது. நீங்கள் அவர்களுக்கு எதையானும் கொடுக்கிறீர்கள். அவர்கள் ஒரு பழக்கத்துக்கு அடிமைப்பட்டவர் போலாகி விடுகிறார்கள். அவர்கள் குறிக்கோளை மறக்கிறார்கள் - அந்த வகைப்பாட்டு முறை முற்றுப் பெறுகிறது. வழிமுறையே முடிவாகிறது. தற்போது ஆயிரக்கணக்கான சமணத் துறவிகள் தொடர்ந்து உண்ணாமையை மேற்கொள்கிறார்கள் - எதுவும் நடந்துவிடவில்லை. நான் நாடு முழுவதும் சுற்றித் திரிந்து பலவகைப்பட்ட மனிதர்களைச் சந்தித்திருக்கிறேன். நான் ஆயிரக்கணக்கான சமணத் துறவிகளிடம் கேட்டிருக்கிறேன் ‘ஏன் உண்ணாமையை மேற்கொள்கிறீர்கள்?’ என்று. அவர்கள் சொல்வார்கள் ‘அது சரீரத்தைத் தூய்மைப்படுத்துகிறது’ என்று. அது முட்டாள்தனம் என்பதில் சந்தேகமேயில்லை.

அது உடம்பைத் தூய்மைப்படுத்தலாம், ஆனால், எவ்வகையிலும் அதுவே முக்கியக் குறிப்பாகி விடாது. சில சமயங்களில் அது உடம்புக்கு நன்மையளிப்பதாயிருக்கலாம், ஆனால் எப்போதுமே அப்படியல்ல. உங்கள் உடம்பில் கொழுப்பு மிதமிஞ்சிய அளவில் இருந்தால், அதைச் சுத்தப்படுத்துவதில் அது உதவும். அது கொழுப்பைக் குறைக்கும். நீங்கள் பல ஆண்டுகளாய் அதிக அளவில் சாப்பிட்டு வந்திருப்பின், உங்கள் உடம்பில் சேகரமாகியிருக்கும் நச்சுப் பொருள்களைச் சுத்தப்படுத்த அது உதவும். ஆனால், அது இரண்டாம்பட்சம். மத சம்பந்தமாய் அது எதையும் செய்வதற்கில்லை. அது இயற்கை மருத்துவம் மதம் அல்ல.

ஆனால், ஒரு சமணத்துறவி ஏன் உடம்பைச் சுத்தப்படுத்திக் கொள்ள வேண்டும்? அவர் நோய்வாய்ப்பட்டிருக்கவில்லை. அவர் நச்சுத்தன்மைக்குள்ளாகவில்லை. அவர் குறிக்கோளையே முற்றாய் மறந்து விட்டவர். அந்தக் குறிக்கோள் விழிப்புணர்வு ஆகும். அவர் வழிமுறைகளைத் தொடர்கிறார், பயன்படுத்துகிறார். ஆனால் குறிக்கோளை அறிந்திருக்கவில்லை. அவர் துன்புறுகிறார். ஆக, உண்ணாமை இனியும் உண்ணாதிருப்பதல்ல. அது பட்டினியால் வருத்தமுறும் நிலை ஆகும். இது பலமுறை நிகழ்ந்ததுதான் - ஏறக்குறைய எப்போதுமே நடக்கிறததான் - காரணம், கருத்துகள் தூக்கத்தில் இருப்பவர்க்கு வழங்கப்படுகின்றன. அவர்களால் குறிக்கோளை அறிந்து கொள்ள முடியாது, குறிக்கோள் தொலைவில் உள்ளது. அவர்கள் வழிமுறைகளைப் பற்றிக் கொள்கிறார்கள்.

நீங்கள் படங்களைப் பார்த்திருக்க வேண்டும். அல்லது படங்களில் பார்க்கவில்லை என்றால், காசிக்குச் சென்று அங்கே முட்படுக்கையில் படுத்திருப்பவர்களைப் பாருங்கள். அது விழிப்புணர்வைத் தோற்றுவிக்கிற பழைய முறை, மிகப் பழைமை யானது. விழிப்புணர்வை உண்டாக்க - அத்தகைய சாகசம் வேண்டிய தில்லை. மற்றவர்களிடம் கருத்தை உருவாக்கவும் அது தேவைப்படாது. மனிதன் காசி நகரத்து வீதிகளில் இருக்க வேண்டியதில்லை, அவன் காட்டில் மறைந்திருக்க வேண்டும், எவராலும் எட்ட முடியாத அடர்ந்த காட்டுக்குள். காரணம், அது ஒன்றும் கண்காட்சியல்ல. ஆனால், தற்போது அது கண்காட்சியாகி விட்டது.

முட்படுக்கையில் படுத்திருப்பவர்களை நீங்கள் காண்பீர்கள். அவர்களுடைய கண்களிலோ முகத்திலோ விழிப்புணர்வின் ஒற்றைப் பொறியை (spark)யும் நீங்கள் காண மாட்டீர்கள். மாறாக, தெளிவற்ற, உணர்வற்ற நபர்களை அவர்களுடைய அறிவற்ற, முட்டாள் தனங்களை உணர்வீர்கள். இது ஓர் அற்புதம். காரணம் இந்த முறை விழிப்புணர்வைத் தோற்றுவிப்பது. என்ன நேரிட்டது? அது எதற்காக என்பதையே அவர்கள் மறந்து போனார்கள். அது தனக்குள்ளாகவே முற்றுப்புள்ளி வைத்துக்கொண்டு விடுகிறது. அவர்கள் அந்தத் தந்திரத்தைக் கற்றிருக்கிறாக்ள். அந்தத் தந்திரத்தை நீங்கள் கற்றுணர்வதாயின் நீங்கள் உணர்வற்றவர்களாக வேண்டும். அதன் பிறகே ஓர் ஆணிப்படுக்கை அல்லது முட்களின்மீது நீங்கள் படுக்க முடியும். அதிகம் வருந்தாத அளவிற்கு உங்கள் உடம்பு மந்தமாகி

(அறிவுக் கூர்மையற்றதாய்) விட வேண்டும். ஆணிகளோ, முட்களோ உங்களுக்குத் தீங்கு செய்யாத அளவிற்கு அது மரத்துப் போய்விட வேண்டும். உங்கள் உடம்பைச் சுற்றி ஒரு மந்திரத்தன்மை, உணர்வற்ற தன்மையை நீங்கள் சேர்த்துக்கொள்ள வேண்டும்.

தற்போது அதற்கு எதிரிடையானதே குறிக்கோளாய் இருந்தது. உடம்பை அதன் நுட்ப உணர்வுகளுடன் அனுபவித்துணர வேண்டும். ஆணிகள் அல்லது முட்களாலான படுக்கையில் நீங்கள் படுத்துக் கொண்டால் உடம்பின் நுண் துளைகள் (pores) ஒவ்வொன்றையும் உங்களால் உணர முடியும். உடம்பு வேதனையில் இருக்க – அந்த வேதனை உங்களுக்கு அதிர்ச்சியைக் கொடுக்க, அந்த வேதனை உங்களைத் தட்டி எழுப்புகிறது, விழிப்புடையவராக்குகிறது. அது பயிற்சிப்பதற்கானதல்ல. அதை நீங்கள் பயிற்சி செய்தால் காலப்போக்கில் உடம்பு அந்தத் தந்திரத்தைக் கற்றுக்கொண்டு விடும். பிறகு, உடம்பு மரத்துப் போகும். அது உணர்ச்சி இழந்த புள்ளிகளை உண்டாக்கும். அதனால், ஆணி எங்கே உடம்பைக் குத்தினாலும் அத்தகைய புள்ளிகள் (spots) தோன்றிவிடும். உடம்பு தன்னைத்தானே காத்துக்கொள்ள வேண்டியிருக்கிறது.

ஆணிப் படுக்கையில் படுத்திருக்கும் மனிதன் முற்றாக தெரிநிலையில் இருக்க மாட்டான், உங்களைவிட மிகவும் தெரிநிலையற்று (unaware)க் காணப்படுவான். நீங்கள் அந்தப் படுக்கையில் படுத்தால் வலியில் வீறிட்டலறுவீர்கள். நீங்கள் மிகுந்த கவனமுடையவர்; உங்களுடைய நுட்ப உணர்வு அதிகம். அவனானால் மகிழ்ச்சியுடன் படுத்திருப்பான். அவன் அதில் தூங்கவும் செய்வான். அவனுடைய உடம்பு பாறை போலாகி விட்டிருக்கும். தேவையான ஒன்றை அவன் இழந்து விட்டிருப்பான், அது விழிப்புணர்வு. தற்போது எதிரிடையானது நேர்ந்திருக்கிறது.

மதப்பயிற்சிகள் அனைத்திலும் இப்படித்தான். அவை மதச்சடங்குகளாகி விட்டன. பத்து ஆண்டுகளாய் நின்று கொண்டிருக்கும் ஒருவரை நான் சந்தித்திருக்கிறேன். அவர் தூங்க மாட்டார், உட்கார மாட்டார்; அவர் நின்றபடி இருப்பார் – உணர்வை உருவாக்கும் ஹடயோக முறைகளில் அதுவும் ஒன்று. காரணம் உடம்புக்கு உறக்கம் தேவைப்படும். 'நான் தூங்க விரும்புகிறேன்' என்று உடம்பு சொல்லும். உங்களால் எவ்வளவு நேரம் நிற்க முடியும்? ஒருசில மணி நேரம் அல்லது சில நாட்களுக்குப் பிறகு நீங்கள்

தூங்குவதற்கான தூண்டுதலை மிகப்பெரிய அளவில் பெறுவீர்கள். அந்தத் தூண்டுதலை வெற்றிகொள்ள, ஒதுக்கித்தள்ள, விழிப்புட னிருக்கச் செய்வதுதான் இந்த முறையில் கிடைக்கிற பயன்.

ஆனால், நான் சந்தித்த இந்த மனிதர் ரொம்பவும் புகழ் பெற்றவர், ஆயிரக்கணக்கானவர்கள் வந்து மரியாதை செலுத்துகிறார்கள். ஆனால் அவர்களுக்குத் தெரியாது தாங்கள் என்ன செய்கிறோம், யாருக்குச் செய்கிறோம் என்று. அந்த மனிதர் ரொம்பவும் மந்தமாகி விட்டிருந்தார். நீண்ட காலமாய் நின்றதில் அவருடைய கால்கள் ஏறக்குறைய மரத்துப் போய்விட்டன. இப்போது அவரால் அவற்றை வளைக்க முடியாது. அவை யானைக்கால் நோய் வந்த கால்களைப் போலாகி விட்டன. உடம்பின் மொத்த எடையும் கால்களுக்கு வந்து விட்டது. அவர் ஒடிசலான ஆள். உடம்பின் மேல் பகுதி ரொம்பவும் மெலிந்து, கீழ்பபகுதி ரொம்பவும் பருத்துக் கனமாகி விட்டிருந்தது. அவர் சிதைந்து போனார். அவருடைய முகம் சிதைந்து காணப்பட்டது.

அவர் தன்னைத்தானே வெகுவாய் வதைத்துக் கொண்டிருந்தார் என்பதை நீங்கள் அறிய முடியும். ஆனால், அவர் கவனத்தில் கொள்ளவில்லை. சொல்லப்போனால் அந்த வதையின் மூலம் அவர் உடல் துன்பத்தோடு தன்னை இசைவாக்கி (attune)க் கொண்டார், சூழ்நிலைக்கு ஏற்ப பழகிக் கொண்டார், தற்காப்பு வலிமை கொண்ட வரானார் எனலாம். தற்போது அதுகுறித்து அவர் கவலைப்படு வதில்லை. அதன் வழியே பிரக்ஞையைப் பெறுவதற்குப் பதிலாய் அவர் இழந்து விட்டார் என்பதே சரி.

ஆக, இவையெல்லாம் முறைகள் என்பதை மனதில் கொள்ளுங்கள்: காண்பவருக்கும் காணப்பட்டதற்கும் இடையில் பிரித்தறிதற்கும், உண்மைக்கும் மாயைக்கும் இடையில் பிரித்தறிதற்கு மான முறைகள். குறிக்கோளாயிருப்பது விழிப்புணர்வு. 'தடுமாற்றமில்லாத பயிற்சியைக் கொண்டு எது உண்மை, எது மாயை என்பதைப் பிரித்தறிய அறியாமை சிதறடிக்கப்படும்.'

'ஞானத்தின் உயர்நிலை ஏழு படிகளில் அடையப்படுகிறது.'

பதஞ்சலி படிப்படியான வளர்ச்சியில் நம்பிக்கை கொண்டவர். குறிக்கோளை ஏழு படிகளில் அடையும்படி இருக்கும் என்கிறார் அவர். அதை ஒரே படியில் அடைந்து விடலாம் என்கிறேன் நான். ஆனால், பதஞ்சலியோ அந்த ஒரேபடியை ஏழு படிகளில் உங்களுக்கு

எளிதாயிருக்கும்படி உருவாக்கியுள்ளார், வேறில்லை. நீங்கள் ஒரே குதியில் ஆறு அடி, ஏழு அடி துள்ளிக் குதித்து விடலாம். நீங்கள் அதே தூரத்தை ஏழு தப்படிகளில் நடக்கவும் முடியும். பதஞ்சலிக்கு 'குதிப்பதில்' நம்பிக்கையில்லை. காரணம் அவருக்குத் தெரியும் நீங்கள் பயம் கொண்டவர். உங்களால் ஒரேயடியாய் குதிக்க இயலாது என்பது. நீங்கள் சிறு தப்படிகளாய் (steps) எடுத்து வைக்க முடியும், காரணம் சிறு தப்படிகளால் ஆபத்து இல்லை என்பதை நீங்கள் நிச்சயித்துக் கொள்ள முடிகிறது. குதிப்பது ஆபத்தானது. எங்கே தரையிறங்குவீர்கள் என்று உங்களுக்குத் தெரியாது. ஒரு சிறிய தப்படி: நீங்கள் சுற்றிவரப் பார்த்துக் கொண்டு, பாதுகாப்பாய் உணர முடியும். ஏதாவது தவறாகி விட்டால் நீங்கள் பின்னாகத் திரும்பிவிட முடியும். மிகக்குறுகிய இடைவெளிதான். ஆனால் ஏதாவது தவறாகி விட்டால் பின்னோக்கிக் குதிக்க முடியாது. குதித்தல் மிகப்பெரிய, முழுமையான மாற்றம்.

பதஞ்சலி எதைச் சொல்கிறபோதும் உங்களைக் கூர்ந்து நோக்கியபடி இருக்கிறார். தற்போது 'உடனடியாய்' - விழிப்புணர்வை அடைவது எப்படி என்பதை விவரித்த பிறகு - உடனடியாய் சொல் கிறார் 'ஞானத்தின் உயர்நிலை ஏழு படிகளில் அடையப்படுகிறது' என்று. எனவே, நீங்கள் வருத்தமின்றி, அச்சமின்றி நிதானமாய் செல்ல முடியும்.

இந்த ஏழு தப்படிகள் எவையெவை? 'ஏழு' என்கிற எண் மிக முக்கியம். அது மிகவும் முக்கியமான எண்ணாய் தெரிகிறது. வெவ்வேறு மார்க்கங்களிலும், வெவ்வேறு செயல்முறைகளிலும் அந்த எண் மீண்டும் மீண்டும் வெளியிடப்படுகிறது. நீங்கள் குருட்ஜீவிடம் கேட்டால் அவர் மனிதர்களில் ஏழு வகை இருப்பதாய் சொல்கிறார். அந்த ஏழு வகைகளும் ஏழு படிகள். நம்பத்தக்க 'கப்பலா'விடம் கேட்டால் மனிதனுக்குள் ஏழு வகை சரீரங்கள் இருப்பதாய் சொல்வார். எகிப்திய மறைபொருள்கள் ஏழு அடுக்குகள் கொண்ட சரீரம் என்று சொல்லும். அந்த ஏழு அடுக்குகளும் ஏழு படிகளாகின்றன. நீங்கள் யோகிகளிடம் கேட்டால் மனிதனுக்குள் ஏழு மையங்கள் இருப்பதாய் சொல்வார்கள். எப்படியோ 'ஏழு' அதிமுக்கியத்துவம் பெற்றதாய் தெரிகிறது. இந்த 'ஏழு' என்கிற எண்ணை நீங்கள் மீண்டும் மீண்டும் சந்திப்பீர்கள். ஆனால், அடிப்படையில் ஒரே பொருளைக் கொண்டதுதான்.

இரண்டு சாத்தியங்கள்: ஒன்று, திடுதிப்பென்று ஒரு குதிப்பை மேற்கொள்வது. ஜென் துறவிகள் (குருமார்கள்) உங்களிடம் கோருகிற மாதிரி - உங்களால் அது இயலுமென்று நான் எப்போதும் நம்புகிறேன். அந்தக் குதிப்பில்(jump) ஏழு படிகளும் ஒரே தப்படியில் கடக்கப்பட்டு விடும். ஆனால், அதிகத் துணிச்சல் தேவைப்படும். துணிச்சலுடன் பகுத்தறிவிற் கொவ்வாத துணிச்சலும் தேவைப்படும். உங்களுக்கும் நீங்கள் தரையிறங்க வேண்டிய பள்ளத்தாக்கிற்கும் இடையிலான வேறுபாடு மிகப்பெரியது. உங்களால் அதைக் கற்பனை செய்து பார்க்கவும் முடியாது. அது - அறிந்ததில் இருந்து அறியாத ஒன்றுக்கானது. இதில் படிப்படியான வளர்ச்சி என்பது இல்லை. கட்டுக்கடங்காத உணர்ச்சி அல்லது செயலுடன் எதிர்பாராது கிளர்ந்தெழுவதாகும். மற்றொரு சாத்தியம் இடத்தை ஏழாகப் பங்கிட்டுக் கொள்வது - இந்த வகையில் நீங்கள் நிதானமாய் முன்னேற முடியும். உங்களுடைய தந்திர மனம், புத்திக் கூர்மையுடன் எதையும் எளிதாய் செய்யும் திறனுடைய மனம் நிறைவடையும்.

என்னிடம் வருகிறவர்களிடம் நான் கேட்கிறேன். 'நீங்கள் எவ்வித யோசனையுமின்றி சந்நியாசத்தை மேற்கொள்ள விரும்புகிறீர்களா அல்லது அதுபற்றிச் சிந்திக்க விரும்புவீர்களா?' என்று. 'எனக்கு யோசித்துப் போதும் போதுமென்றாகி விட்டது' என்கிறார்கள் சிலர். இங்கே வந்தபோது மனீஷாவும் அதையே சொன்னாள். அவள் என்னிடம் முதல் முறையாய் வந்தபோது நான் கேட்டேன். 'நீ சந்நியாசம் எடுத்துக்கொள்ள விரும்புகிறாயா?' யோசித்து விட்டாயா? நீ முதலில் அதுபற்றி யோசித்து விடுவது பாதுகாப்பாய் இருக்கும்தானே? அல்லது இப்போதே அதற்கு தயாராகி விட்டாயா?' என்று. அவள் சொன்னாள். 'நான் யோசனை பண்ணியே களைத்துப் போனேன். யாரேனும் 'சிந்தித்துக் களைப்பது' அரிதாகவே நிகழ்கிறது.

பெரும்பாலான நிகழ்வுகளில் அவர்கள் சொல்கிறார்கள், 'நாங்கள் யோசிப்போம்' என்று. அவர்கள் வாய்ப்பை இழக்கிறார்கள், காரணம் நீங்கள் சிந்திக்கிறபோது அதைத் தொடர்ந்து விடுகிறீர்கள். நீங்கள் தீர்மானித்து விட்டால் இனியும் அது ஒரு குதிப்பாக இருக்காது. உங்களுடைய பகுத்தறிவு முதலில் பாதுகாப்பாய் உணருமெனில், பாதுகாப்பை பத்திரத் தன்மையை உணர முயற்சிக்குமெனில், எல்லாவற்றையும் புரிந்துகொள்ள முயலுமெனில், பிறகு அது உங்களுடைய இருப்புணர்வின் திருத்தம் செய்யப்பட்ட ஓர்

அமைப்பாகவே இருக்கும். பிறகு உங்களுடைய கடந்த காலமும் அதில் ஒரு பங்கேற்கும். அது ஒட்டுமொத்த மாற்றத்திற்கான புரட்சி. ஆக, 'நாங்கள் யோசிக்கிறோம்' என்கிறவர்கள் தவற விடுகிறாக்ள். அவர்கள் வருகிறார்கள். சில நாட்கள் அதுபற்றிச் சிந்திக்கிறார்கள், பிறகு வருகிறார்கள், பிறகு சந்நியாசம் எடுத்துக் கொள்கிறாக்ள். ஆனால் கூடுதலான சாத்தியங்களை, கூடுதலாய் கிடைத்திருக்க வேண்டியவற்றை அவர்கள் தவற விட்டார்கள். நீங்கள் குதிப்பை மேற்கொள்ளுங்கள் உங்களால் குதிக்க முடியுமெனில். நீங்கள் நிதானமாய் செல்வதாயின் அது உங்களால் முடிகிறதுதான். ஆனால், ஏதோ ஒன்றைத் தவற விடுவீர்கள்.

இப்படி நடப்பதை நான் பார்த்திருக்கிறேன். திடீர் ஞானத்துக்கான துணிச்சலைக் கொண்டவர்கள், படிப்படியாக் வளர்கிறவர்கள் ஒருபோதும் அடைந்திராத சிகரத்தை அடைகிறார்கள். அவர்களும் சிகரத்தை அடைகிறார்கள்தாம். ஆனால் அவர்கள் இடைப்பட்ட தொலைவைப் பல பகுதிகளாய் பிரித்துக்கொண்டு படிப்படியாய் அடைகிறார்கள். அவர்கள் அதே சிகரத்தை அடைந்தாலும் அதில் பரவசம் இருக்காது. நீங்கள் கவனித்தேயாக வேண்டும். ஒரு மீரா நடனமாடுவதை, ஒரு சைதன்யரின் களிவெறி கொண்ட ஆடல் பாடல்களை. யோகிகள்? அவர்கள் ஒருபோதும் ஆடுவதில்லை, பாடுவதில்லை. காரணம் முன்பு ஒருபோதும் அனுபவித்திராத அத்தகைய மகிழ்ச்சியை அவர்கள் படிப்படியாய் அடைகிறார்கள். அந்தப் பரவசத்தை அவர்கள் படிப்படியாய், பகுதிகளாய் அடைகிறார்கள். அவர்கள் அதைப் பல அளவுகளில் அடைகிறார்கள் - சிறு அளவுகளாய், ஓமியோபதி மருந்தின் அளவுகள் - இன்னொரு சொட்டுக்கு முன் முதலில் கொடுக்கப்பட்ட சொட்டு உட்கிரகிக்கப்பட்டு சீரணமாகி விடுகிறது. பிறகு இரண்டாவது சொட்டு கொடுக்கப்பட்டு, அதுவும் மூன்றாவது சொட்டுக்கு முன் உட்கொள்ளப்பட்டு விடுகிறது. அவர்களால் ஆட முடியாது. ஒரு யோகி ஆடுவதை நீங்கள் பார்த்திருக்க முடியாது. அவரும் அதே சிகரத்தை அடைகிறார். ஆனால் அந்தப் பாதையில் ஏதோ தவறவிடப்படுகிறது.

நான் எப்போதுமே எதிர்பாராத நடப்புக்குச் சார்பானவன். காரணம் நீங்கள் அடையப் போகிறீர்கள் என்கிறபோது ஏன் ஆடலுடன் அடையக் கூடாது? நீங்கள் அடையப் போகிறீர்கள் என்கிறபோது ஏன் இருப்புணர்வின் பரவசத்தோடு அதை அடையக் கூடாது? யோகிகள் நடைமுறையில் கவனமாயிருப்பவர்கள் - மதிப்பிடுவார்கள்.

கணக்கிடுவார்கள் - காதலர்கள் மாதிரி பித்துப் பிடித்தவர்களல்லர். ஆனால் இரண்டு வழிகளுமே திறந்திருக்கின்றன. நீங்கள்தாம் தேர்ந்தெடுத்துக் கொள்ள வேண்டும்.

அது நீங்கள் லாட்டரி பரிசை வென்ற மாதிரி - பத்து இலட்சம் ரூபாய் - அதன்பிறகு உங்களிடம் ஒரு ரூபாய் வழங்கப்படுகிறது. பிறகு மற்றொரு ரூபாய், அடுத்து இன்னொரு ரூபாய் இப்படி, கொஞ்சம் கொஞ்சமாய் நீங்கள் அதை அடைகிறீர்கள். ஆனால் ஒருபோதும் ஒரேயடியாய் பத்து இலட்ச ரூபாயை நீங்கள் அடைய இடமிருக்காது. நீங்கள் அந்தப் பத்து இலட்ச ரூபாயை அடைவதற்குமுன் ஆயிரம் ஆண்டுகள் ஓடிவிடும் - நீங்கள் எப்போதுமே ஏழ்மையில் யாசித்து வாழ்கிறவராயிருப்பீர்கள். சட்டைப் பையில் ஒரு ரூபாய். நீங்கள் அதைப் பயன்படுத்தாமல் இன்னொரு ரூபாய் கொடுக்கப்படாது. நீங்கள் அதைப் பயன்படுத்திய பிறகு மற்றொன்று கொடுக்கப்படும்.

திடீர் ஞானத்தில் ஓர் அழகு இருக்கிறது, பயங்கர அழகு: திடுதிப்பென்று பத்து இலட்ச ரூபாய் உங்களுக்குக் கொடுக்கப்படுகிறது - உங்களால் ஆட முடியும். ஆனால், உங்கள் இதயம் பலவீனமாயிருந்தால் மெதுவாய் செயல்படுவது நல்லது.

அப்படி நடந்ததாய் கேள்விப்பட்டிருக்கிறேன். ஒருவன் எப்போதும் லாட்டரி சீட்டுகளை வாங்கிக் கொண்டிருப்பான். ஆனால் ஒருபோதும் பரிசு கிடைக்கவில்லை. ஆண்டுகள் கடந்த நிலையில் அதுவே ஒரு நடைமுறையாகி விட்டது. ஒவ்வொரு மாதமும் தன்னுடைய சம்பளத்தில் இருந்து சில சீட்டுகளை வாங்குவான். ஆனால், ஒருநாள் அது நடந்தே விட்டது. அவன் அலுவலகத்தில் இருந்தான். அவனுடைய மனைவிக்குத் தெரிய வந்தது. அவன் தன்னுடைய குறிக்கோளை அடைந்து விட்டான் என்பது - பத்து இலட்ச ரூபாய் குறிக்கோள். அவள் நடுங்கி விட்டாள். அவன் மாதம் நூறு ரூபாய் ஊதியம் பெறுகிற ஓர் ஏழை. பத்து இலட்ச ரூபாய் என்பது ரொம்ப அதிகம். அது அவனைக் கவர்ந்து முடிவு கட்டி விடுமளவுக்கு அதிகம்.

அதற்காக என்ன செய்வது? அவள் தேவாலயத்தில் மதகுருவாயிருக்கும் அண்டை வீட்டுக்காரரிடம் ஓடினாள். அவர் மற்றவர்களைவிட அவளுக்குப் புத்திசாலியாய் தெரிந்தார். அவரிடம் சென்று, "நீங்கள் ஏதாவது செய்தேயாக வேண்டும். அவர் அலுவலகத்தில் இருந்து வந்து விடுவார், தனக்குப் பத்து இலட்ச ரூபாய்

கிடைத்திருப்பது அவருக்குத் தெரிந்தால் நிச்சயம் உயிர் பிழைக்க மாட்டார். எனக்கு அவரை நன்றாய் தெரியும். அவர் ஒரு கருமி, நூறு ரூபாய்க்கு மேல் கண்ணால் கண்டிருக்க மாட்டார். ஒன்று அவருக்குப் பைத்தியம் பிடிக்கும், அல்லது செத்துப் போவார். ஆனால் ஏதோ ஒன்று நடக்கப் போகிறது. நீங்கள்தான் வந்து அவரைக் காப்பாற்ற வேண்டும்'' என்றாள்.

புத்திக் கூர்மையுடைய அந்த மனிதர் சொன்னார், 'நான் வருகிறேன். நீ பயப்பட வேண்டாம். இதோ வருகிறேன்' என்று. அவர் திட்டமிட்டார். கணக்கீடு செய்யும் இயந்திரத்தைப் போன்று. வீட்டு மனிதன் வந்தபோது மதகுரு தரையில் உட்கார்ந்திருந்தார். அவர் 'இதோ பார், நீ லாட்டரியில் ஜெயிச்சிருக்கிறே. உனக்கு வாட்டரியில் ஒரு இலட்சம் பரிசு விழுந்திருக்கிறது' என்றார்.

'இது சிறு அளவுதான்' என்று அவர் எண்ணிக் கொண்டார். அவர் பத்து பகுதிகளாய் அதைப் பிரித்திருந்தார். ஒன்று, இரண்டு என அவர் கொஞ்சம் கொஞ்சமாய் அதைச் சொல்வார். அவன் அதிர்ச்சியை உள்வாங்கிக் கொண்டான் என்று தெரிந்ததும் அவர் மூன்று என்பார். அந்த மனிதன் சொன்னான், 'என்னது. ஒரு இலட்சமா? உண்மையாகவா? அது மட்டும் உண்மையாயிருந்தால் அதில் பாதியை உங்களுடைய தேவாலயத்துக்காக உங்களிடம் தந்து விடுகிறேன்' என்று.

அந்த மதகுரு அப்படியே விழுந்து செத்தார். ஐம்பதாயிரம் ரூபாய்! அவரால் அதை நம்ப முடியவில்லை. அது ரொம்ப அதிகம்.

ஆக நீங்கள் தேர்ந்துகொள்ள வேண்டும். தேர்வு உங்களுடையது. இதயத்தில் வலிமை இருந்தால் என்னிடம் வாருங்கள். இதயத்தைப் பலவீனமாய் உணர்ந்தால் மாரடைப்புக்கான சாத்தியம் இருக்கிறது. பதஞ்சலியிடம் செல்லுங்கள். அவர் கணித மேதை. அவர் சிறிய அளவுகளில் தருவார். ஆனால் நினைவில் கொள்ளுங்கள், நீங்கள் ஏதோ ஒன்றைத் தவற விடுவீர்கள். அதே செயல் நிலைகளை, அதே இருப்புணர்வை - அமைதியை, பரமசுகத்தை நீங்கள் அடைவீர்கள் - ஆனால் அதில் பரவசம் இருக்காது. ஒரு போதி மரத்தின் கீழ் அமைதியாய் அமர்கிறீர்கள். ஆனால் ஒரு மீராவைப்போல் அல்லது சைதன்யரைப் போல் நடனமாட இயலாது. அந்த நடனத்தில் ஏதோ ஒன்று இருக்கிறது. அது எப்போதும் எதிர்பாராதவிதமாய் சாதிப்பவர்களுக்கே நிகழ்கிறது.

## 4. 'நீங்கள் புத்தர்களாய் இருப்பதால்தான்...'

'ஒருவர் குதிப்பதன் மூலம் ஞானத்தை விரைவாய் அடைய முடியுமென்று தாங்கள் கூறுகிறீர்கள். அது சாத்தியமாகுமா? ஞானம் என்பது மேல் நோக்கிச் செல்வதாகும், இல்லையா? ஆனால், நாம் கீழ்நோக்கிச் செல்ல விரும்பினால்தானே குதித்தலை மேற்கொள்ள வேண்டும், பல மாடிக் கட்டடத்தில் இருந்து தரையில் குதிக்கிற மாதிரி. ஆனால், ஒருவர் தரையில் இருந்து எப்படி மாளிகையின் உச்சிக்குக் குதிக்க முடியும்? ஏதாவதொன்றில் ஏறினால்தானே ஒருவர் மேல் நோக்கிச் செல்ல முடியும். தயவு செய்து விளக்குங்கள்.'

நீங்கள் முக்கியக் கருத்தை முழுமையாய் தவறவிட்டு விடுகிறீர்கள், ஒப்புமைகளில் (analogy) தவறவிட்டு விடுகிறீர்கள். ஞானம் என்பது மேல்நோக்கியோ அல்லது கீழ்நோக்கியோ எங்கும் செல்வதில்லை. ஞானம் என்பது நீங்கள் எங்கிருக்கிறீர்களோ அங்கேயே இருப்பது - இப்போது, இந்தக் கணத்தில். அது செல்வதல்ல, இருத்தல், ஞானத்தில் நீங்கள் எங்கேயும் போக மாட்டீர்கள். புத்தர் எவரெஸ்டு சிகரத்துக்கு ஏறிச் செல்லவில்லை. நீங்கள் உள்நோக்கிச் செல்கிறீர்கள். உள்நோக்கியிருத்தலின் பரிமாணம் மேல்நோக்கியோ, கீழ்நோக்கியோ இருப்பதல்ல. அது மேல்நோக்கியிருப்பதற்குச் சொந்தமல்ல, கீழ்நோக்கியிருப்பதற்கும் சொந்தமல்ல. அவை மையத்திற்கு வெளியில் உள்ள போக்குகள் (direction). உள்ளில், நீங்கள் எங்கே இருக்க வேண்டுமோ அங்கே மிகச்சரியாய் இருக்கிறீர்கள். ஞானம் என்பது செல்வதல்ல, இருத்தல். முற்றிலும் அமைதியாய் இருப்பது. எனவே, குதித்தல் சாத்தியமாகிறது.

நீங்கள் சொல்வது உண்மை. அது மேல்நோக்கிச் செல்வதாயின் உங்களால் எப்படிக் குதிக்க முடியும்? உண்மையில் கீழ்நோக்கிச் செல்வதாயினும், எவரெஸ்டில் இருந்து குதிப்பது முட்டாள்தனம். இல்லை அது மேல்நோக்கியும் இல்லை, கீழ்நோக்கியும் இல்லை. நீங்கள் எல்லாப் பக்கங்களிலும் உங்களை மூடிக்கொண்டு விடுகிறீர்கள். கொஞ்சம் கொஞ்சமாய் உள்ளுக்குள்ளாகவே அமைதியாகி விடுகிறீர்கள்.

*'mystic'* (மிஸ்டிக்) என்கிற வார்த்தை கிரேக்கச் சொல். கிரேக்க மூலத்தில் இருந்து வந்தது. ரொம்ப ரொம்ப அழகானது. கிரேக்க மூலத்தில் 'தனக்குள்ளாகவே நிலைப்பட்டுக் கொள்வது' *(to be setup in oneself)* என்பது பொருள். அப்போது நீங்கள் ஆத்ம பலம் கொண்டவராகி விடுகிறீர்கள். (*mystic) - செல்வதுமில்லை,

---

* mystic – மறையியலைத் தொழிலாய்க் கொண்டவர். இறைத்தன்மையை உணரச் செய்யும் தியானம், பிரார்த்தனை, விரதம் இவற்றுக்காய் வாழ்க்கையை அர்ப்பணித்தவர்.

அசைவதுமில்லை. இந்தக் கணத்தில் நீங்கள் கீழாகவோ / மேலாகவோ / வலமாகவோ / இடமாகவோ / எதிர்காலத்திலோ / கடந்த காலத்திலோ எந்தப் பக்கமும் செல்லவில்லை எனில் அப்போது உங்கள் பிரக்ஞை எவ்விதத் தடுமாற்றமும் இல்லாமல் அமைதியாயிருக்கும். அதனால்தான் குதித்தல் சாத்தியம். பூனாவில் இருந்து கல்கத்தாவுக்கு எப்படிக் குதிப்பீர்கள்? அது சாத்தியமில்லை. நீங்கள் உள்நோக்கிக் குதிக்க முடியும். காரணம், முன்பே நீங்கள் அதுவாக இருக்கிறீர்கள். அவகாசம் தேவையில்லை, மனதால் உணரும் திறன் (understanding) இருந்தால் போதும். தள்ளிப் போட அவசியமில்லை, 'நாளை' என்று சொல்லவும் தேவையில்லை. மனதால் உணரும் திறன் மட்டுமே வேண்டும். நீங்கள் புரிந்து கொள்கிறீர்கள், அது உடனே நிகழ்கிறது. முழுமையான முயற்சி தேவைப்படுவதற்குக் காரணம் அங்கே மனதால் உணரும் திறன் இல்லையென்பது தான்.

ஒப்புமை (analogy)யை ஒருபோதும் சோதித்தறிய முயலாதீர்கள். நீங்கள் அதைத் தலைகீழாய் மாற்றி விடுவீர்கள். ஒப்புமை ஒரு சுட்டிக்காட்டல். நீங்கள் அதனை சொல்லுக்குச் சொல் சரியாக எடுத்துக் கொள்ள வேண்டுமென்பதில்லை. இங்கே 'குதித்தல்' என்றால் குதிப்பது என்று பொருள்படாது. 'மேல் நோக்கிச் செல்லுதல்' என்றால் மேல்நோக்கிப் போவதாய் பொருள்படாது. இவை சுட்டிக்காட்டல்கள் (குறிப்பால் தெரிவிக்கிறவை) நேர்ச்சரியாய்க் கொள்ளாதீர்கள். வாசத்தை எடுத்துக்கொண்டு, பூவை மறந்து விடுங்கள். இல்லையேல் நீங்கள் என்னைத் தவறாகவே புரிந்து கொள்வீர்கள். இப்படிப் பலமுறை இலட்சக்கணக்கான முறை நடந்திருக்கிறது, மத நம்பிக்கையுடைய மக்களிடம் அது நடக்கிறது. காரணம், அவர்கள் உவமைகளுடன் பேசுகிறார்கள். பேசுவதற்கு வேறு வழியில்லை. அவர்கள் இரு பொருள்களின் ஒப்புமைகளோடும், நீதிக் கதைகளோடும் பேசுகிறார்கள். அதன் பிறகு நீதிக்கதைகள் பகுத்தறிவின்மை வரை நீண்டு விடுகிறது. நீங்கள் நீதிக்கதையை நீட்டித்துக் கொண்டே போனால் ஒட்டுமொத்த பொருளையும் (thing) இழக்கும்படியான ஒருமுனைப்பகுதி வந்து விடும், எல்லாமும் முட்டாள்தனமாகி விடும்.

அதனால்தானோ என்னவோ பகைவர்கள் கையில் சிக்கும் மதங்களனைத்தும் முட்டாள்தனமாகி விடுகின்றன. இதுதான் தந்திரம்: நீங்கள் ஒப்புமையை நீட்டித்துக் கொண்டே போகிறீர்கள் - அதற்கு

மேலும் சமாளித்து நிலைக்க முடியாது, சிறப்பாயிருக்காது என்கிற மாதிரி ஒரு முனைப்பகுதி வருகிறது. எடுத்துக்காட்டாக இயேசு சொல்கிறார், 'விண்ணகத்தின் மீதிருக்கும் என் தந்தை' என்று. இங்கே 'என்னுடைய தந்தை' என்கிற வார்த்தை என்னுடைய தந்தை என்றே பொருள்படாது. காரணம் அதில் என்னுடையது' என்பது இருக்க முடியாது. ... 'விண்ணகத்தின் மீது இருப்பவர்' - தற்போது பொருள் முழுவதையும் நீங்கள் எளிதாய் திரித்துவிட முடியும். கிறிஸ்துவர்களின் நண்பர்கள் பயனற்றதாக்கும் போது பகைவர்கள் சர்வ நாசம் செய்யும்படி விதிக்கப்பட்டிருக்கிறார்கள். அவர்கள் மேல்நோக்கி வேண்டுதல் செய்கிறார்கள், அது அபத்தம். பிரபஞ்சத்தில் எதுவும் மேலே இல்லை, எதுவும் கீழேயில்லை. பிரபஞ்ச இருப்பை அதன் முழுமையில் எடுத்துக் கொண்டீர்களானால் எது மேலே இருக்கிறது, எது கீழேயிருக்கிறது? எதுவும் மேலாயிருப்பதில்லை, எதுவும் கீழாயிருப்பதுமில்லை - இவை தொடர்புடைய சொற்கள்.

நீங்கள் 'தந்தை' என்ற வார்த்தையை எடுத்துக் கொண்டால் அப்போது இடர்ப்பாடுகள் எழும். இந்து மதத்தின் ஒரு நவீன பிரிவான, வைராக்கியம் உடைய, முட்டாள்தனமான ஆரிய சமாஜத்தைச் சேர்ந்த ஒருவர் என்னிடம் வந்தார். 'நீங்கள் சில சமயங்களில் இயேசுவைக் குறிப்பிட்டுப் பேசுவதாய் கேள்விப்பட்டேன்' என்றார் அவர். 'நீங்கள் என்ன கிறிஸ்துவரா?' என்று கேட்டார். நான் சொன்னேன், 'ஒரு வகையில் சரிதான்'. உண்மையில் அவர் பைத்தியந்தான். அவருக்கு 'வகை' என்பதற்குப் பொருள் தெரிந்திருக்கவில்லை. 'உங்களுடைய இயேசு முழுக்க முழுக்க பொருத்தமற்றவர் என்பதை என்னால் நிரூபிக்க முடியும்' என்றார் அவர். 'விண்ணகத்தில் எந் தந்தை' - அப்படியானால் தாய் யார்? ஒப்புமைகள் இப்படி இருக்கக்கூடும். தாய் யார்? ஒரு தாய் இல்லாமல் ஒரு தந்தை எப்படி இருக்க முடியும்? மிகச் சரியான உண்மை. ரொம்ப எளிமையாய் தெரிகிறது. வாதத்தை நீங்கள் தோற்கடிக்க முடியும்.

'கடவுள் தந்தையாகிறார்' என்கிறபோது கிறிஸ்துவர்களுக்கு நடுக்கமாயிருக்கும். அவர்கள் 'இயேசு மட்டுமே தேவமைந்தன்' என்று தெளிவுபடுத்திக் கொள்ள வேண்டும். காரணம், எல்லாரும் மகன் என்றால் முக்கியக் கருத்தே அடிபட்டுப் போய்விடும். இயேசுவின் சிறப்புத் தன்மையும், இணையற்ற தன்மையும் என்னவாகிறது. எனவே அவர் மட்டுமே பெறப்பட்ட குழந்தையாகிறார். தற்போது விசயம்

படுமோசமாகி விடுகிறது. மற்றவர்கள் எல்லாம் யார்? இயேசு மட்டுமே மகன் என்றால் - உங்களைப்பற்றி என்ன சொல்வது?

ஓர் ஒப்புமையை நீங்கள் நீட்டிக்க முடியும். அது தன்னுடைய ஒட்டுமொத்த பொருளையும் பாழ் பண்ணுகிற ஒரு புள்ளி - முனைப்பகுதி வருகிறது. எவரும் நகைக்கக்கூடிய ஓர் அபத்தமான சித்திரத்தை (விளக்கம்) அது வழங்குகிறது. இதன் காரணமாக ஆழ்ந்த இரக்கத்தில் (வருத்தம்) மட்டுமே மதத்தைப் புரிந்துகொள்ள முடியும் என்கிற நிலை. நீங்கள் இரக்கமுடையவராயின் அதைப் புரிந்துகொள்ள முடியும். உங்களிடம் இரக்கம் இல்லாவிடில் தவறாகப் புரிந்து கொண்டு விடுவீர்கள். காரணம் ஒட்டுமொத்த நடப்பும் நீதிக் கதைகளில் இருக்கிறது. ஒரு நீதிக் கதையைப் புரிந்துகொள்ள மொழித் திறன் மட்டும் போதாது. காரணம் ஒரு நீதிக்கதை இலக்கணத்துக்கும், மொழிக்கும் அப்பாற்பட்டதாகும். நீங்கள் ரொம்பவும் இரக்கமுடையவர் என்றால், அப்போது மட்டுமே அதன் பொருளை விளங்கிக் கொள்கிற சாத்தியம் உங்களுக்குண்டு.

ஒப்புமை என்பது ஒரு நிரூபணம் ஆகாது. ஓர் ஒப்புமை சொல்ல முடியாத ஒன்றைச் சுட்டிக்காட்டுவதாய் (குறிப்பால் தெரிவிப்பது) இருக்கும் - வெளிப்படுத்துவதாயிருக்கும். எப்போதும் இதனை நினைவில் கொள்ளுங்கள், இல்லையேல் உங்களுடைய திறமையிலேயே நீங்கள் சிக்கிக்கொண்டு விடுவீர்கள்.

○

**ஜென் துறவிகள் உடனடி ஞானம் நேரிட வேண்டும் என்பதற்காக பத்து இருபது அல்லது நாற்பது ஆண்டுகள் கூட தங்கள் குருமார்களுடன் ஏன் இருந்திருக்கவேண்டும்?**

அவர்களுடைய முட்டாள்தனத்தின் காரணமாகத்தான். ஒற்றை நொடிப்பொழுதில் நீங்கள் ஞானம் பெற்றுவிட முடியும். நாற்பது ஆண்டுகளும் காத்திருக்கும்படியாகும். (நாற்பது ஆண்டுகள் ஏன் காத்திருப்பது). அது உங்களுடைய சுத்தமின்மையைப் பொறுத்தது. பல பிறவிகளும் நீங்கள் காத்திருக்க வேண்டியிருக்கும். அது எத்தனை தூரம் நீங்கள் அறிய வேண்டியதை அறியாதிருக்கிறீர்கள் என்பதைச் சாரும். நாற்பது ஆண்டுகள் ஒரு சீடர் காத்திருக்கும்படியாகும் என்றால் குரு அதற்கு பொறுப்பாளியல்லர். சீடன்தான் பொறுப்பு. அவன் ரொம்பவும் மந்த புத்தியுள்ளவனாய் இருக்க வேண்டும்.

அவனுடைய மனதுக்குள் எதுவும் ஊடுருவாது. அல்லது, அவன் ரொம்பவும் அறிவுத்திறன் உடையவனாயிருக்கலாம். அதனால் எதைச் சொன்னாலும் அவன் மதிநட்பத்துடன் கூடிய புரிதலைத் தோற்றுவித்துக் கொள்ளலாம் – அதே சமயத்தில் இதயத்தில் இருந்து இதயத்தால் விளங்கிக் கொள்ளக் கூடிய ஒன்றைத் தவறவிடலாம். இதயத்தோடு இதயம் சந்தித்துக் கொள்கிற ஒத்துணர்வில் 'மனதால் உணரும் திறன்' என்கிற பூ மலர்கிறது.

ஆக, நாற்பதாண்டுகள் காத்திருக்க வேண்டிய நிலையில் உள்ளவர்கள் ஒன்று மிகவும் முட்டாளாயிருக்க வேண்டும் அல்லது அதிகம் தெரிந்து கொண்டுள்ளவராயிருக்க வேண்டும். இரண்டுமே முட்டாள்தனத்தின் வகைகள்தாம். அவர்கள் ஒன்று புலமை உடையவர்களாயிருப்பார்கள். அல்லது முட்டாளாயிருப்பார்கள். இரண்டும் ஒரே மாதிரி.

புலமை மிக்கவர்கள்தாம் முட்டாள்களைவிட அதிகம் தவறவிடுகிறவர்கள். முட்டாளாவது சில நேரம் புரிந்து கொள்வான், மனதால் உணரும் திறனைப் பெற்றிருப்பான். காரணம் அவன் எளிமையானவன். அவனுடைய மனதுக்குப் புரிந்து கொள்வதில் சிக்கலில்லை. ஏதேனும் ஒன்று கூர்மையாகக் கவனிக்கப்பட்டால் அது நன்கு புரிந்து கொள்ளப்படுகிறது. ஆனால் புலமை உடையவனிடம் – ஒரு கற்றறிந்தவன், தர்க்கவல்லுநர், இறைமையியல் வல்லுநர், தத்துவமேதை – என்றால் அவனிடம் ஏறக்குறைய ஊடுருவ இயலாத பல நுட்பமான அடுக்குகள் இருக்கும். நீங்கள் எளிமையானவராயின் அது இப்போதே நிகழ்ந்து விடும். நீங்கள் எளிமையற்றவரென்றால் காத்திருக்கும்படி ஆகும். பிரச்சினையைத் தோற்றுவிக்கும் சிக்கல் எதுவென்பதை நீங்கள் பிறகு புரிந்து கொள்வீர்கள்.

நிகழ்வது எதுவாயினும் அதற்கு நீங்கள் மட்டுமே பொறுப்பு. குருவென்பவர் வெறும் இருப்பு மட்டுந்தான். நீங்கள் அவருடையதில் பங்கு கொள்ள முடியும். அவர் ஒரு சூரியன், ஒளியுமிழும் விளக்கு மாதிரி. உங்களுடைய கண்களைத் திறந்து உங்களால் காண முடியும். ஆனால், நீங்கள் கண்களைத் திறக்காவிடில், உங்கள் கண்களைத் திறக்கும்படி விளக்கு நிர்ப்பந்திக்காது. சூரியன்கூட அதைச் செய்வதில்லை. ஆனால், எப்போதும் நினைவில் வையுங்கள், நீங்கள் காத்திருந்தால் அதற்குக் காரணம் நீங்கள்தான், ஒன்று உங்களுடைய புத்திக்கூர்மை அல்லது முட்டாள்தனம். இரண்டையும் விடுங்கள்.

அவ்விதமாகவே ஒருவர் சீடராகிறார் - உங்களுடைய முட்டாள்தனத்தையும், கற்றுக்கொள்வதால் ஏற்படும் புலமையையும் விடுங்கள். நீங்கள் இரண்டையும் விடுகிற போது அங்கு தடையேயில்லை. எளிதில் ஊறுபடத்தக்கவராய், ஒளிவுமறைவு அற்றவராய் ஆகிவிடுகிறீர்கள். அந்த வாய்ப்பில் - வழியில் ஞானம் எந்தக் கணத்திலும் சாத்தியமாகி விடும்.

O

**'எதிர்பாராத கணத்தில் குதி, முழு வளர்ச்சியைப் பெற்றுவிடு' என்று ஒரு விதையிடம் நீங்கள் கூற மாட்டீர்கள் என்பதில் எனக்கு ஐயமில்லை. ஆனால் ஒரு மனிதனிடம் எதற்கு, 'உடனடியாய் குதி, புத்தாவாகி விடு' என்று எதற்காக நீங்கள் கூற விரும்புவது?'**

காரணம் ஒரு விதை விதையாகவே இருக்கும், புரிந்து கொள்வது அதற்கு முடியாத காரியம். ஒரு மனிதன் விதையல்ல, அவனால் புரிந்துகொள்ள முடியும். ஆனால், நீங்கள் ஒரு விதையாய் இருப்பின் நீங்கள் கவனமாய் கேட்க மாட்டீர்கள். ஒரு மனிதனாக இருந்தால் புரிந்து கொள்வீர்கள். அது உங்களைப் பொறுத்தது. நீங்கள் ஒரு மனிதனாய் காட்சியளிக்க விரும்பலாம் - நீங்கள் வெறும் விதையாகவோ அல்லது பாறையாகவோ இருக்கலாம். தோற்றம் உண்மையானதல்ல. நீங்கள் எல்லாருமே மனிதனைப் போல் காட்சியளிக்கலாம். ஆனால் ஒருவர் மனிதனாயிருப்பது அபூர்வம்.

'மனிதன்' என்ற வார்த்தை அழகானது. அது 'மனு' என்கிற சம்ஸ்கிருத மூலத்தைக் கொண்டது. 'மனு' என்றால் 'புரிந்துகொள்ளக் கூடியவன்' என்று பொருள். அதில் இருந்து, அதே மூலத்தில் இருந்து மன், மானஸ்வி என்கிற, 'புரிந்து கொள்ளக் கூடியவன்' என்ற பொருள் கொண்ட சொற்கள் வந்தன. மனிதன் ஓர் அழகான வார்த்தை. 'அறிந்துகொள்ள முடிந்தவன்' என்பது அதன் பொருள். அவன் புரிந்து கொள்ளக்கூடியவனும்கூட. அவனுக்குப் புரிந்து கொள்ளும் திறன் இருக்கிறது. எனவே, ஒரு விதையிடம் 'உடனடியாய் குதி, முழு வளர்ச்சி பெற்று விடு' என்று என்னால் கூற முடியாது. ஆனால், ஒரு மனிதனிடம் சொல்கிறேன். இதுதான் வஞ்சப்புகழ்ச்சி (நேர் எதிர்ப்பொருள் கொடுக்கும் சொற்றொடர்). சில நேரங்களில் ஒரு விதைகூட காது கொடுத்துக் கேட்கும், மனிதன் காதில் போட்டுக் கொள்ள மாட்டான்.

மரங்களையும், செடி கொடிகளையும் நேசிக்கிற லூதர் பர்பாங் என்கிற அமெரிக்கரைப் பற்றி நீங்கள் படித்ததுண்டா? அவர் இந்த அற்புதத்தைச் செய்தார்; அவர் விதைகளிடம் பேசினார், அவர் செடிகளிடம் பேசினார், தொடர்ந்து பேசியிருக்கிறார். அதைத்தான் நான் செய்வது - ஒரு தருணத்தில் செடிகள் அவர் சொல்வதைக் கேட்கத் தொடங்கின. அவர் முட்கள் நிறைந்த கற்றாழைச் செடியை இயங்கச் செய்து கொண்டிருந்தார் - அந்தக் கற்றாழைச் செடியிடம் 'நீ வருத்தப்படத் தேவையில்லை, தற்காத்துக் கொள்ள அவசியமில்லை, காரணம் உன்னுடைய உயிர்ச்சக்தி (life)க்கொன்றும் ஆபத்து கிடையாது' என்று தொடர்ந்து சொல்லிக் கொண்டிருந்தார்.

ஒவ்வொரு கற்றாழைச் செடியும் தன்னைக் காத்துக்கொள்ள முட்களைப் பெற்றிருக்கும். அதுதான் அதற்குக் கவசம். பாலைவனத்தில் வாழ்கிற ஒரு கற்றாழைச் செடி மிகவும் பாதுகாப்பற்றதாய் அபாயத்தில் இருக்கும். பாலைவனத்தில் ஒரு கற்றாழை தப்பிப் பிழைத்திருப்பது அதிசயந்தான். சில கற்றாழைச் செடிகள் இரண்டாயிரம் ஆண்டுகள்கூட பிழைத்திருக்கின்றன, வயது முதிர்ந்த கற்றாழைகள்! பாலைவனத்தில் தண்ணீர் இருக்காது, வாழ்க்கை மிகக் கடுமையான போராட்டமாயிருக்கும். அவை பனித்துளிகளில் ஜீவித்திருக்கும். அதனால்தான் அவற்றுக்கு இலைகளில்லை. காரணம் இலைகள் அதிக நீரை ஆவியாக வெளியேற்றி விடும். அதனுடைய தந்திரம் அதுதான் (இலைகள் இல்லாதிருப்பது). அவற்றிடமிருந்து சூரியனால் தண்ணீரை ஆவியாக்க முடியாது. தண்ணீர்ப் பற்றாக்குறை. கற்றாழைக்கு இலைகள் இல்லை, முட்கள் மட்டுமே. தன் வயிற்றின் அடியாழத்தில் அவை நீரைச் சேகரித்துக் கொண்டேயிருக்கும். மாதக் கணக்கில் தண்ணீர் இல்லையென்றாலும் அவை உயிர் வாழும். அவை உண்மையில் நீரைச் சேமிக்கிற சேமக் கலன்கள் (accumulators). அவை இலைகளையோ, வேறெதையுமோ தேவைக்குமேல் பெற்றிருக்கவில்லை. கற்றாழை இனத்தில் முட்களில்லாத வகையென்று எதுவும் இல்லை.

இந்த மனிதர் பர்பாங்கிற்குப் பைத்தியந்தான் பிடித்திருக்கும். 'அவருக்கு வெறி பிடித்து விட்டது' என்று நண்பர்கள் எண்ணத் தொடங்கினர். 'ஆனாலும் இது ரொம்ப அதிகம்: தினமும் கற்றாழைப் பக்கம் உட்கார்ந்து கொண்டு, 'நீ பயப்படத் தேவையில்லை. நான்

உன்னுடைய நண்பன். உன்னுடைய முட்களை நீ சுருக்கிக் கொள். பாதுகாப்பற்ற நிலை இல்லை - நீ ஒரு தோழனோடு. உன்னை நேசிப்பவனோடு இருக்கிறாய். நீ வீட்டில் இருக்கிறாய். பாலைவனத்தில் இல்லை. உனக்கு யாரும் தீங்கு செய்ய மாட்டார்கள்' ஏழு வருடங்கள் நீண்டதுதான்... ஆனால் அது நிகழ்ந்து விட்டதே. ஏழு வருடங்களுக்குப் பிறகு அந்தக் கற்றாழையில் முள்ளில்லாத புதிய கிளையொன்று முளைத்தது. மரங்களின் உலகத்துடன் அதுதான் மனிதனின் முதல் தொடர்பு. அந்த அரிதான நடப்பு - சொல்லாடலில் விளைந்தது.

அதனால்தான் நான் பேசிக் கொண்டிருக்கிறேன். அதற்கு ஏழு வருடமாகுமோ எழுபது வருடமாகுமோ யார் கண்டது. ஆனாலும், 'உங்களால் குதிக்க முடியும்' என்று பேசி உங்களை இணங்க வைக்கப் பார்க்கிறேன். 'இந்த பைத்தியக்காரர் தினமும் பேசிக்கொண்டே இருக்கிறார். யாரும் காது கொடுத்துக் கேட்கிறதில்லை' என்று நீங்கள்கூட எண்ணத் தொடங்கியிருப்பீர்கள். ஆனால் விதைகளுடன், கற்றாழைகளுடன், மரங்களுடன் பேசி பர்பாங்கினால் வெற்றி காண முடிகிறபோது, ஏன் என்னால் மட்டும் முடியாதா?



**'நீங்கள் லாவோட்சு'வின் கருத்தைத் தெரிவிப்பதாய் சொன்னீர்கள், பதஞ்சலி பற்றிப் பேசினீர்கள். இது உங்களைச் சார்ந்திருக்கிறதா அல்லது எங்களை அல்லது வேறு எதனை?'**

நான் தன்னந்தனியாயிருக்கும் போது நீங்கள் அங்கே இருந்திருக்கவில்லை. நான் பதஞ்சலி பற்றிப் பேசியிருக்க மாடடேன். காரணம் அது அபத்தம். நீங்கள் மட்டும் இருந்திருந்து நான் இல்லையென்றால் அப்போது நான் பதஞ்சலி பற்றித் தொடர்ந்து பேசியிருப்பேன். காரணம் அப்போது லாவோட்சு பற்றிப் பேசுவது சாத்தியமாகி இருக்காது. நீங்கள் அங்கேயும் நான் இங்கேயும் இருந்தால் பாதிக்குப் பாதிதான் (ஏற்கும் நிலை). நீங்கள் என்னிடம் லாவோட்சுவைக் கேட்க வந்தால் நான் பதஞ்சலி பற்றிப் பேசுவேன். நீங்கள் வாவோட்சுவை என்னிடம் கேளுங்கள். நான் பதஞ்சலி பற்றி அப்போது கூறுவேன். நீங்கள் பதஞ்சலியைப் பற்றி என்னிடம் கேட்க விரும்பினால் லாவோட்சு பற்றியும் கேட்டறிவீர்கள்.

உங்களுடைய மனம் படிப்படியாக சிந்திப்பதையே விரும்பும். பதஞ்சலி பற்றி நான் சொல்லும் போது அதைத்தான் கருத்தில் கொள்கிறேன். நான் பதஞ்சலி பற்றி எதுவும் சொல்லிக் கொண்டிருக்கவில்லை - தவறாய் புரிந்துகொள்ள வேண்டாம். நீங்கள் படிப்படியாய், நிதானமாய், ஒவ்வோர் அடியாய் வளர விரும்புவீர்கள் என்று பதஞ்சலி கருதுகிறார். நீங்கள் ஒத்திப்போடவும், மனதைத் தயார்ப்படுத்திக் கொள்ளவும் விரும்பக்கூடும் என்பது கருத்து.

இந்த 'P' களை நினைவில் கொள்ளுங்கள்

- *Patanjali*
- *Postponement*
- *Preparation*

பதஞ்சலியைப் பொறுத்தவரை காலம் சாத்தியம், நாளை சாத்தியம், எதிர்காலம் சாத்தியம். அவர் 'இப்போதே, சரியாக இப்போதே குதித்து விடு' என்று உங்களிடம் சொல்லிக் கொண்டிருக்கவில்லை. அவர் ரொம்பவும் தர்க்க ரீதியானவர், அறிவியல் சார்ந்தவர், வேகமில்லாதவர். அவரை நீங்கள் எளிதாய் புரிந்து கொள்ள முடியும். நீங்கள் எங்கிருக்கிறீர்களோ அங்கிருந்து அவர் தொடங்குகிறார். சாதாரணமாக லாவோட்சுவை ஏற்க முடியாது. அவர் ஒரு கவிஞரிலும் மேலாய் அறிவியல் சார்ந்த மனத்துக்குச் சற்றே குறைவாய் தோன்றுகிறார். அவரில் உங்களுக்கு மகிழ்ச்சி கிடைப்பது போலிருக்கும். ஆனால், அவர் சொல்கிற எதையும் உங்களால் செய்ய முடியாது. அதை எப்படி நீங்கள் செய்ய முடியும்? இடைவெளி மிகப் பெரியதாயிற்றே!

நான் பதஞ்சலி பற்றி உங்களிடம் பேசுகிறேன், காலப்போக்கில் நீங்கள் விழிப்பும், எச்சரிக்கையும் கொண்டு விடுவீர்கள். நான் லாவோட்சு பற்றியும் பேச்சைத் தொடர்கிறேன்: நீங்கள் பதஞ்சலியைப் புரிந்து கொண்டிருந்தால் மனதை ரொம்பவும் தயார்படுத்தியிருப்பீர்கள். பதஞ்சலி தயார்ப் படுத்துகிறார், மீண்டும் அந்த 'P' களை நினைவில் கொள்ளுங்கள். அவர் தயார்ப்படுத்துகிறார், அவர் முன்னேற்பாடுடன் இருப்பவர். ஆனால் நீங்கள் பதஞ்சலியையே தொடர்ந்து கேட்டுக் கொண்டிருந்தால், தொடர்ந்து தயார்படுவதிலேயே இருந்து கொண்டிருப்பீர்கள். நீங்கள் குதிக்கிற தருணம் வராமலே போய்விடும். அது - ஒருவர் முன்னேற்பாடுகளை எப்போதுமே செய்துகொண்டு.

வரைபடங்களை ஆராய்ந்து, வழிகாட்டிகளை ஆலோசித்துக் கொண்டு பயணம் போகாமலே இருந்து விடுவதைப் போன்றது. உண்மையில் அதுவே அவருடைய வேலையாகவும், பொழுது போக்காகவும் ஆகிவிட்டிருக்கும். அவர் போவதைப் பற்றிச் சிந்திப்பார், இமய மலைகளைப் பற்றிய புத்தகங்களை வாங்கிக் கொண்டிருப்பார் - வரைபடங்களை, வழிகாட்டிகளை, படம் போட்ட விளக்கங்களை வைத்துக் கொண்டிருப்பார் - இமய மலை பற்றிய திரைப்படங்களைப் பார்ப்பார். அங்கு சென்று வந்தவர்களுடன் அதுபற்றிப் பேசுவார், ஏற்பாடுகளைக் கவனிப்பார் - உடைகள் வாங்குவது மற்றும் பயணத்துக்குத் தேவையானவற்றை வாங்குவது என்று - ஆனால் தயார்படுத்திக் கொண்டேயிருந்து, பிறகு செத்துப் போகிறார். பதஞ்சலியைக் கவனித்துக் கேட்பதில் அந்த அபாயம் இருக்கிறது: நீங்கள் தயார்படுகிற பழக்கத்துக்கு அடிமையாகி விடுவீர்கள்.

மக்களில் பலபேர் - 'பலர்' என்பது சரியல்ல, ஏறக்குறைய எல்லாருமே தயார்ப்படுகிற பழக்கத்துக்கு அடிமையாகி விட்டிருக்கிறீர்கள். என்றாவது அனுபவித்து மகிழ்வோம் என்ற எண்ணத்தில் அவர்கள் பணம் சம்பாதிக்கிறார்கள், ஒருபோதும் அனுபவிப்பதில்லை. காலப்போக்கில் மகிழ்ச்சி கொள்வதை மறந்து பணம் சம்பாதிக்கிற பழக்கத்துக்கே அடிமையாகி விடுவார்கள், பணம் குறிக்கோளாகி விடுகிறது. தொடக்கத்தில் பணம் இருந்தால் மகிழ்ச்சியாயிருக்க முடியும் என்கிற எண்ணம் - தாங்கள் விரும்பியதையெல்லாம் தங்களால் செய்திருக்க முடியும். ஆனால் பணம் இல்லாததால் செய்ய முடியவில்லை என்கிற எண்ணம். பணம் இருந்தால் உண்மையிலேயே அவர்கள் வாழ முடியும் என்கிற மாதிரி. அதற்கு மாறாக பணம் இருக்கிற நேரத்தில் அவர்கள் சம்பாதிக்கிறதோடு தங்களைக் கட்டுப்படுத்திக் கொள்கிறார்கள். எப்படி செலவழிப்பதென்பதே அவர்களுக்கு மறந்து விடுகிறது. பிறகு பணமே குறிக்கோளாகிறது. அவர்கள் சம்பாதிக்கிறார்கள், சம்பாதித்துக் கொண்டேயிருந்து சாகிறார்கள்.

பதஞ்சலி ஒரு பழக்கத்துக்கு அடிமைப்படுகிற தன்மையாக முடியும் - அப்போது நீங்கள் தயார்ப்படுவீர்கள், அப்போது பணத்தை, செய்முறைகளைச் சம்பாதித்துக் கொண்டேயிருப்பீகள், ஆனால் ஒருபோதும் நடனமாடவோ, அனுபவித்து மகிழவோ ஆர்வமாயிருக்க

மாட்டீர்கள். தற்போது நீங்கள் தயாராயிருப்பதாக எப்போது உணர்ந்தாலும் உடனடியாய் லாவோட்சு இதயத்தின் அடியாழத்தில் தாக்கி விடுவார். நீங்கள் குதிப்பதை மேற்கொள்வீர்கள். அதனால்தான் லாவோட்சு பற்றி நான் தொடர்ந்து பேசிக் கொண்டிருப்பது.

நான் லாவோட்சு பற்றிப் பேசும்போது 'லாவோட்சுவின் கருத்துகளைப் பேசுகிறேன்' என்று சொல்வதற்குக் காரணம் அவர் எங்கிருந்து உரைக்கிறாரோ அங்கே நான் நிற்கிறேன். அவர் சொல்வது எதுவாயினும் நான் சொன்னதாகவே எண்ணிக் கொள்கிறேன். ஒரேயொரு கருத்தில் கூட அவரிடமிருந்து நான் வேறுபடவில்லை. நான் முற்றாக ஏற்றுக் கொண்டிருக்கிறேன். பதஞ்சலியை நான் நிபந்தனைக்குட்பட்டு ஏற்கிறேன், சில விசயங்கள் தொடர்புடைய தாயிருக்கும், முற்றாக இல்லை. காரணம் பதஞ்சலி சாதனமாகவும், லாவோட்சு குறிக்கோளாகவும் இருப்பதுதான்.

நீங்கள் சாதனைத்தைக் கைவிட்டு இப்போதே குதிப்பீர்கள் என்றால் அது அழகாயிருக்கும். உங்களால் முடியாவிட்டால், சிறிதளவு தயார்ப்படுத்திக் கொள்ளுங்கள். அந்தத் தயார்நிலை குதித்தலை மேற்கொள்வதற்காக அல்ல. அந்தத் தயாரிப்பு நீங்கள் துணிவைப் பெறத் தயார்ப்படுத்தும். குதிப்பது சாத்தியம், தற்போது. ஆனால், அதற்கான துணிச்சலை நீங்கள் பெற்றிருக்கவில்லை. உங்களிடம் துணிச்சல் இருந்தால் பதஞ்சலி தேவைப்பட மாட்டார். இப்போதே இக்கணத்திலேயே விட்டு விடலாம். என்றாவது ஒருநாள் பதஞ்சலியை விடத்தான் விடுவீர்கள் - குறிக்கோளை அடைந்து, பயணத்தை விடும்போது; இறுதி நிலையை அடைந்தவுடன் * சாதனங்கள் (means) விடப்படும் - ஆனால் லாவோட்சுவை ஒருபோதும் விடமாட்டீர்கள். அது உங்களுடைய உண்மையான குறிக்கோளாயிருப்பது. எனவே ஐம்பதுககு - ஐம்பது என்ற ஏற்பாடுதான்.

சில நேரங்களில் நீங்கள் லாவோட்சுவைப் பெரிதும் விரும்புவதாய் எண்ணி வியப்பீர்கள். ஆனால் விருப்பம் ஒரு பிரச்சினையல்ல. இரவில் நட்சத்திரங்களை நீங்கள் கூர்ந்து கவனிப்பீர்கள், அவற்றை விரும்புவீர்கள். ஆனால் என்ன செய்ய? அவை வெகு தொலைவில் அல்லவா இருக்கின்றன. அவற்றை எப்படி அடைவது? ஒருவர் எங்கிருக்கிறாரோ அங்கிருந்தே அவர் தொடங்க வேண்டும். பதஞ்சலி பயனளிப்பதாயிருக்கும். லாவோட்சு பயன்படாது

---

* சாதனங்கள் - விளைவுண்டாக்கும் வழிகள்.

என்பதில் சற்றும் ஐயமில்லை. பதஞ்சலியைப் பயன்படுத்துங்கள், அதனால் என்றாவதொரு நாளில் பயனற்ற லாவோட்சுவையும் நீங்கள் பயன்படுத்த முடியும். அது ஒரு சொகுசு சமாசாரம், நழுவிச் செல்வது. ஆம், லாவோட்சு ஒரு சொகுசான நிலைதான், நழுவிவிடக் கூடியது. அந்த 'எல்' (L) லை நினைவு கொள்ளுங்கள் (L-Laotsu L-Luxury). நீங்கள் விட்டுக் கொடுப்பவராயிருந்தால் அது நேர்த்தியான விசயம். உங்களால் விட்டுக் கொடுக்க முடியாவிடில் அது ஒரு வேட்கையை யும், ஏமாற்றத்தையும் தோற்றுவிக்குமே தவிர வேறெதையுமல்ல; வேட்கை - உங்களால் குதிக்க முடிந்தால் செயல்கள் (things) எப்படியிருக்கும். மிகப்பெரிய வேட்கை எழுகிறது. உங்களுடைய வேட்கையில் அவர் வெகு அருகாமையில் இருப்பதாய் உணர் கிறீர்கள், ஆனால் உங்களால் குதிக்க முடியாது. காரணம் அங்கே அதற்கான துணிச்சல் இல்லை. திடுதிப்பென்று அவர் வெகு தொலைவில் ஒரு நட்சத்திரம் போலாகி விடுகிறார் - உங்கள் மீது ஏமாற்றம் கவிகிறது.

சாதனத்துக்கும், இறுதி நிலைக்கும் இடையில், செயல் நிலைக்கும் குறிக்கோளுக்கும் இடையில் பதஞ்சலியும் லாவோட்சுவும் ஓர் ஆழ்ந்த சமநிலையாய் உள்ளனர்.



**'நாம் எல்லாரும் புத்தர்களென்றால் நாம் ஏன் அறியாமையிலும் விழிப்புணர்வற்ற நிலையிலும் விழ வேண்டும்?'**

காரணம் நீங்கள் புத்தர்களாயிருக்கின்றீர்கள். ஒரு பாறையால் விழிப்புணர்வற்ற நிலையில் விழமுடியாது. நீங்கள் புத்தர்களாய் இருப்பதால் விழ முடியும். விழிப்புணர்வு மட்டுமே விழிப்புணர்வற்ற நிலைக்குச் செல்ல முடியும். உயிரோடிருப்பவர் மட்டுமே இறக்க முடியும்; நேசிக்கிறவரால் மட்டுமே வெறுக்க முடியும். பரிவு காட்டுகிறவரால் மட்டுமே கோபப்பட முடியும். ஆக முரண்பாடு ஏதுமில்லை. மனதுக்குள் இந்தக் கேள்வி எழுகிறது. 'ஒவ்வொருவரும் புத்தராயிருந்தால், ஒவ்வொருவரும் கடவுளாயிருந்தால் நாம் ஏன் இத்தனை அறியாமையில் இருக்கிறோம்?' காரணம் நீங்கள் கடவுள்களாயிருப்பதால் - வல்லமையுடையவராயிருப்பதால் உங்களால் விழ முடியும்.

இது நடந்தது: ஜுனாயித் என்கிற மறைஞானி ஒரு காட்டு வழியே சென்று கொண்டிருந்தார். ஆழமான ஏரியின் கரையோரமாய் ஒருவன் நடந்து செல்வதை அவர் கண்டார். அந்த மனிதன் முட்டக் குடித்திருந்தான். அவன் கையிலும் ஒரு புட்டி இருந்தது. ஒரு குடிகாரனைப் போல் அவன் தள்ளாடினான் - எந்தக் கணத்திலும் அவன் ஏரியில் விழுந்து விடுவான் போலிருந்தது. ரொம்பவும் ஆபத்தான நிலை. எனவே, ஜுனாயித் அவனிடம் சென்று, அவனுடைய கையைத் தனது கையில் வைத்துக்கொண்டு, "நண்பனே, நீ என்ன காரியம் செய்கிறாய்? இது ரொம்ப ஆபத்தானது. இவ்வளவு குடித்திருக்கிற நீ இங்கே நடந்தால் விழுந்து விடுவாய். ஏரி ரொம்பவும் ஆழமானது. இங்கே பக்கத்தில் யாருமில்லை. நீ கத்திக் கூச்சலிட்டாலும் யார் காதிலும் விழாது."

குடிகாரன் தனது கண்களைத் திறந்தான். "ஜுனாயித் என்னைத் தங்களுக்குத் தெரியாமல் இருக்கலாம். ஆனால் தங்களை நான் அறிவேன். தாங்கள் எனக்குச் சொல்லிக் கொண்டிருப்பதையே நான் தங்களுக்கும் சொல்வேன். நான் விழுந்தால் பெரும்பாலும் என்னுடைய உடம்புக்குத்தான் தீங்கு ஏற்படும். ஆனால், தாங்கள் விழுந்தால் தங்களுடைய முழு பிரக்ஞையும்..." என்றான்.

ஜுனாயித் தம்முடைய சீடர்களிடம் சென்று கூறினார். "இன்று நான் ஒரு குருவைக் கண்டு கொண்டேன்" என்று.

அவரிடம் உண்மையிருந்தது. குடிகாரனும் நியாயத்தையே சொன்னான். காரணம் ஜுனாயித் உயர்ந்த இடத்தில் இருந்தார். பிரக்ஞையின் உச்சத்தில் செயல்பட்டுக் கொண்டிருந்தார். அவர் அங்கிருந்து விழுந்தால் எல்லாமே நொறுங்கி விடும். நீங்கள் உச்ச அளவில் இயங்குகிறபோது, உயரத்தில் செல்லும்போது அபாயம் அதிகம். சமதளத்தில் நடக்கிற மக்களுக்கும் கீழே விழுந்தால் என்ன ஆகும்? தீர்த்தா மாதிரி மிகச்சிறிய அளவிலேனும் எலும்பு முறிந்து விடும். அவர்கள் மருத்துவமனைக்குச் செல்வார்கள், கட்டுப்போட்டுக் கொள்வார்கள். ஆனால், நீங்கள் உயரமான இடங்களில் செல்லும்போது ஆபத்து அதிகம்.

காரணம் நீங்கள் புத்தராக இருக்கிறீர்கள். அதனால்தான் அதிக அளவில் அறியாமையில் விழுந்து வைக்கிறீர்கள். எனவே, அதுகுறித்து வருந்த வேண்டாம். நீங்கள் பள்ளத்தாக்கின்

அடியாழத்தில் இருந்தால் திரும்பவும் நீங்கள் சிகரத்தில் இருக்க முடியும் என்பதையே அது சுட்டிக்காட்டும். உச்ச நிலையில் இருப்பதற்கான திறனே விழுவதற்கான சாத்தியமாகவும் நேரிடுகிறது. அது நல்லதுதான், அதில் தவறேதும் இல்லை. காரணம் அது ஓர் அனுபவம். உங்களுடைய புத்தநிலை ரொம்பவும் தெளிவாகும். இந்த அறியாமையையும் துயரத்தையும் நீங்கள் கடந்து செல்கிறபோது, நீங்கள் மீண்டும் வீட்டுக்குத் திரும்புகிறபோது நீங்கள் விழுவதற்கு முன்பு இருந்ததைப் போல் இருக்க மாட்டீர்கள். உங்கள் விழிப்புணர்வின் தீவிரம் தற்போது வேறு தன்மையைக் கொண்டதாயிருக்கும். நீங்கள் துன்புற்றீர்கள், புரிந்து கொண்டீர்கள். நீங்கள் கூடுதலான எச்சரிக்கை கொள்வீர்கள். உங்களுடைய விழிப்புணர்வு தற்போது மிகவும் கவனமாய், தீவிரமாய், முழுமையாய், ஒளி ஊடுருவும் தூய படிகம் போலாகி விடும்.

இது நடந்தது: பணக்காரன் ஒருவன் தன்னுடைய செல்வங்களில் விரக்தி கொண்டவனானான். அது நடக்கிறதுதான். உண்மையில் ஒருவன் பணக்காரனா இல்லையா என்பதை முடிவெடுக்க உதவும் நெறிமுறையாய் இது இருக்க வேண்டும். உண்மையிலேயே பணக்காரனாக இருக்கிற ஒருவன் தன்னுடைய செல்வத்தால் விரக்திக்குள்ளாகும் நிலை இருக்கிறது. அவன் விரக்தியடையா விட்டால் அவன் இன்னமும் ஏழைதான். அவனிடம் பணம் இருக்கலாம். ஆனால் அவன் பணக்காரனல்லன் - காரணம் ஒரு செல்வந்தனுக்குத்தான் பெற்றிருக்கிற எதுவும் சிறிதளவுகூட தன்னைத் திருப்திபடுத்தாது என்பது தெரிந்திருக்க வேண்டும்.

க்டுமையான மனவருத்தமும், வெறுமையும் அவனைத் தொடரும். தற்போது அது முன்னிலும் தீவிரமாகி ஒரு தெளிவைப் பெறும். நாளைய பொழுது விரும்பத்தக்கதாயிருக்கும் என்றுதான் ஏழை எப்போதும் நம்பிக் கொண்டிருப்பான். ஆனால் ஒரு செல்வந்தன் எப்படி நம்பிக்கை கொள்ள முடியும்? நாளையும் அதே மாதிரிதான் இருக்கப்போகிறது. நம்பிக்கை செயலற்று விடுகிறது. தன்னால் பெறக்கூடியவற்றை எல்லாம் அவன் பெற்று விட்டிருக்கிறான். நாளைய பொழுது கூடுதலாய் எதையும் கொண்டு வந்து விடப்போவதில்லை. ஓர் ஆண்ட்ரூ கார்னகி - சாகும் போது இலட்சக்கணக்கான டாலர்களை விட்டுச் சென்றிருக்கிறார். நாளைய பொழுது என்னத்தைச் சேர்த்துவிடப் போகிறது? இன்னும் சில ஆயிரங்கள்? சில இலட்சங்கள்? ஆனால் அந்த இலட்சங்களை

அவனால் பயன்படுத்த முடியாது. காரணம் இப்போதே தன்னிடமுள்ள பணத்தை வைத்துக்கொண்டு என்ன செய்வதென்பது அவனுக்குத் தெரியவில்லை. முன்பே தேவைக்கதிகமாய் அவனிடம் உள்ளது.

உண்மையில், உங்களிடம் எந்த அளவு பணம் இருக்கிறதோ அந்த அளவு பணத்தின் மதிப்பு குறைந்து விடும். மதிப்பு தேவையை சார்ந்திருக்கிறது. ஏழையின் சட்டைப்பையில் இருக்கும் ஒரு ரூபாயின் மதிப்பு பணக்காரனுடைய பையில் இருக்கும் அதே ரூபாயை விட கூடுதல் மதிப்பைக் கொண்டதாகும். பணக்காரனால் அதைப் பயன்படுத்த முடியாது. நீங்கள் எந்த அளவு பணம் வைத்திருக்கிறீர்களோ அந்த அளவு அதன் மதிப்பு குறைந்து விடும். பணம் மதிப்பற்றதாகி விட்டால் ஒரு தெவிட்டு நிலை வந்துவிடும் - உங்களிடம் அது இருந்தாலும் இல்லாவிட்டாலும் வித்தியாசம் இருக்காது. செல்வந்தனாயிருப்பது என்றாலே பணத்தின் மதிப்பு அழிந்து விடுகிறது. அப்போது பணம் முக்கியத்துவமற்றதாகிறது. நீங்கள் விரும்பிய வீடு உங்களுக்குக் கிடைத்து விட்டது. நீங்கள் விரும்பிய கார்கள் உங்களிடம் இருக்கின்றன. நீங்கள் விரும்பியவற்றையெல்லாம் அடைந்து விட்டீர்கள். தற்போது பணம் வெறும் எண்ணிக்கையேயன்று வேறெதுவுமில்லை. உங்களுடைய வங்கியிருப்பில் தொடர்ந்து இலக்கங்கள் கூடுகின்றன. அப்போது திடுதிப்பென்று நம்பிக்கை செயலற்றதாகிறது. 'நான் எதையுமே சாதித்துவிடவில்லை' என்று ஒருவர் உணரத் தலைப்படுவார்.

நான் உங்களிடம் சொல்லிக் கொண்டிருந்த இந்தப் பணக்காரன் உண்மையிலேயே செல்வம் படைத்தவன், தன்னுடைய செல்வங்களில் விரக்தி கொண்டவனாய் விவேகமுள்ள ஒருவனைத் தேடி அவன் தனது மாளிகையை விட்டுச் சென்று விடுகிறான், காரணம் அவன் உண்மையிலேயே துன்புற்றவனாய், துயருற்றவனாய் இருந்தான். அவன் ஒரு விவேகியிடமிருந்து இன்னொருவன் என்று சென்று கொண்டேயிருந்தான். ஆனால், அதில் எவ்வித பயனுமில்லை. அவர்கள் நிறையப் பேசினார்கள். ஆனால் ஒருவராலும் நிரூபித்துக் காட்ட முடியவில்லை. அவன் அழுத்திக் கூறினான் - அவன் அனுபவத்தால் தெரியப்படுகிற (செயல் அனுபவம்) மனிதனாயிருக்க வேண்டும் - அவன் உறுதியாக வற்புறுத்தினான்: 'எனக்கு மகிழ்ச்சியைக் காட்டுங்கள். அப்போது நான் நம்புகிறேன். அவன் ஆய்ந்து தெளிகிறவனாயிருக்க வேண்டும். அவன் சொன்னான். 'பேச்சின் மூலம் நீங்கள் என்னை முட்டாளாக்கி விட முடியாது.

மகிழ்ச்சி எங்கேயிருக்கிறதென்று எனக்குக் காட்டுங்கள். நான் உண்மையில் அதைக் கண்டுகொண்டால்தான் உங்களுடைய சீடனாக முடியும்.'' தற்போது உங்களுக்கு நிருபித்துக் காட்டக்கூடிய குரு கிடைப்பது அரிது. மகிழ்ச்சியைப் பற்றிப் பேச ஆயிரமாயிரம் ஆசான்கள் இருக்கிறார்கள். அவர்களுடைய முகத்தை நீங்கள் கூர்ந்து நோக்கினால் அவர்கள் உங்களைவிடத் துயருற்றவராயிருப் பதைக் காண்பீர்கள்.

இந்தப் பணக்காரன் ஒரு கிராமத்துக்குச் சென்றான். அங்கிருந்தவர்கள் அவனிடம் சொன்னார்கள். 'ஆமாம், எங்களிடம் ஒரு சூஃபி மறைஞானி இருக்கிறார். அவர் உதவக்கூடும். அவர் கொஞ்சம் விசித்திரமான ஆள், அவரிடம் கொஞ்சம் எச்சரிக்கையா யிருக்க வேண்டும். ஆனால் அவர் ஒரு முக்கியமான மனிதர் – நீங்கள் அவரிடம் செல்லுங்கள்' என்று.

அந்தப் பணக்காரன் சென்றான். அவரைக் கண்டுபிடிக்க முயன்றான். அவர் தனது குடிசையில் இல்லை. அப்போதுதான் அவர் காட்டுக்குச் சென்றதாய் அங்கிருந்தவர்கள் சொன்னார்கள். எனவே, அவனும் அங்கே சென்றான். அவர் ஒரு பெரிய மரத்தடியில் ஆழ்ந்த தியானத்தில் இருந்தார். பணக்காரன் அங்கே தனது குதிரையை விட்டு இறங்கி நின்றான். அந்த மனிதர் உண்மையிலேயே மிகவும் மகிழ்ச்சியுடன் அமைதியாய் காணப்பட்டார். அவரைச் சுற்றியிருந்த மரங்களும், பறவைகளும்கூட அசைவற்றிருந்தன. அது அமைதியா யிருந்தது. அந்திப் பொழுது சாய்ந்து கொண்டிருந்தது.

பணக்காரன் அவருடைய பாதங்களில் விழுந்து, 'ஐயா, நான் மகிழ்ச்சியாயிருக்க விரும்புகிறேன். மகிழ்ச்சியைத் தவிர எல்லாமும் என்னிடம் இருக்கின்றன' என்றான்.

சூஃபி தம்முடைய கண்களைத் திறந்து, 'நான் உனக்கு மகிழ்ச்சியைக் காட்டுகிறேன். நீ உன்னுடைய செல்வங்களை எனக்குக் காட்டு' என்றார்.

ரொம்பச் சரி. நீங்கள் மகிழ்ச்சியைக் காண்பிக்கும்படி அவரிடம் கேட்டால், உங்கள் செல்வத்தை நீங்கள் காண்பியுங்கள். அவன் தனது குதிரையின் முதுகில் ஆயிரக்கணக்கான வைரங்கள் கொண்ட ஒரு பையை வைத்திருந்தான். அது அவன் வழங்குவதற்காக வைத்திருந்தது. 'யாரேனும் மகிழ்ச்சியை வைத்திருந்தால் அவன் அதற்கான விலையைக் கொடுத்து வேண்டுவான். வாழ்க்கையில்

எதையும் அதற்கான விலை கொடுக்காமல் நீங்கள் பெறுவதற்கில்லை. எனவே, அவன் தன்னுடன் அவற்றைக் கொண்டு வந்திருந்தான். அந்த வைரங்கள் இலட்சக்கணக்கில் பெறுமானம் உள்ளவை.

அவன் பையைக் கொடுத்து 'பாருங்கள்' என்றான்.

நொடிப் பொழுதுக்கும் குறைவான நேரத்தில் அந்த மறைஞானி அவனுடைய கையிலிருந்த பையை எடுத்துககொண்டு ஓடினார். அந்தப் பணக்காரனால் ஒருகணம் என்ன நடக்கிறதென்றே நம்பமுடியவில்லை. தான் காண்பதில் இருந்து உய்த்துணர்ந்தவனாய், 'நான் கொள்ளையடிக்கப்பட்டேன் என்று கத்திக் கூச்சலிட்டுக் கொண்டு அவன் ஓடினான்.

கிராமத்தில் வழி தெரிந்தவர் என்பதால் அந்த மறைஞானியால் விரைவாக ஓட முடிந்தது. அதுவுமல்லாமல் அவர் ஒரு புனித யாசகர், பலசாலி. பணக்காரனோ தனது வாழ்நாளில் யாரையும் துரத்திக் கொண்டு ஓடியதில்லை. எனவே, அழுது கூவித் துன்புற்றான். ஒட்டுமொத்த கிராமமும் கூடிவிட்டது. அவர்கள் அவனிடம், 'நாங்கள் முன்பே சொன்னோமில்லையா, போகாதே. அவர் ஒரு விசித்திரமான ஆள். அவர் என்ன செய்வார் என்று யாருக்கும் தெரியாது' என்றார்கள். கிராமம் முழுக்கக் கொந்தளிப்புற்றது. அவன் தன்னுடைய வாழ்நாள் சம்பாத்தியம் அனைத்தையும் இழந்து விட்டிருந்தான் - எவ்வித அனுகூலமும் இல்லாமல்.

ஊர் முழுக்கச் சுற்றி ஓடிவிட்டு அந்த ஞானி அதே மரத்தடிக்கு, குதிரை இன்னும் நின்று கொண்டிருந்த இடத்துக்கு வந்தார். பையைக் குதிரைக்குப் பக்கத்தில் வைத்துவிட்டு, கண்களை மூடியவாறு மரத்தடியில் அமர்ந்தார், அமைதியானார். பணக்காரன் வந்தான். தன்னுடைய வாழ்க்கையையே பணயம் வைத்து ஓடி, மூச்சுவாங்கச் சிரமப்பட்டு வியர்த்தான். கண்ணீர் உருண்டோடியது. அப்போது அவன் எதிர்பாராத விதமாய் குதிரைக்குப் பக்கத்தில் பையைக் கண்டான். அதை எடுத்து மார்போடு அணைத்துக்கொண்டு ஆடி மகிழ்ந்தான்.

அந்த மறைஞானி கண்களைத் திறந்தார். 'இதோ பார், நான் உனக்கு மகிழ்ச்சியைக் காண்பித்து விட்டேன் இல்லையா?'

துயரம் என்றால் என்னவென்று நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டும். அப்போதுதான் மகிழ்ச்சி என்னவென்பதைத் தெரிந்து

கொள்வீர்கள். ஒவ்வோர் அனுபவமும் அறிவைத் தருகிற அனுபவ மாகவே இருக்கும். தன்னை ஒரு புத்தராய் உணர்வதற்காகத்தான் புத்தர் இந்த உலகத்தில் தோன்றினார். நீங்கள் யார் என்பதைத் துன்புற்று அறியவே இந்த உலகத்துக்கு நீங்கள் வந்தீர்கள். அது இல்லாமல் சாத்தியமில்லை. நீங்கள் அந்தப் பணக்காரன் இருந்த நிலையில்தான் இருக்கிறீர்கள். எல்லாமும் பறிக்கப்பட்டு. அழுதரற்றியபடி ஞானியைச் சுற்றி ஓடிக்கொண்டு. உலகில் இந்த ஊரில் நீங்கள் எல்லாவற்றையும் பறிகொடுத்தவராய், ஓடிக்கொண்டிருப்பதை நான் பார்க்க முடிகிறது. வழி வகைகள் தெரியாதிருக்கலாம். ஆனால் நீங்கள் களவாடப் பட்டீர்கள். நீங்கள் உள்ளகத்தில் (**Core**) மகிழ்ச்சியற்றவராய், துன்புற்றவராய் காணப்படுகிறீர்கள். ஓட்டம்... ஓட்டம்... ஓட்டம். ஒருநாள் மீண்டும் அந்த மரத்தடிக்கு வருவீர்கள், திரும்பவும் அந்தப் பையைக் காண்பீர்கள். நீங்கள் ஆடுவீர்கள். பரவசப்படுவீர்கள். 'தற்போது நான் மகிழ்ச்சி என்னவென்று தெரிந்து கொண்டேன்' என்பீர்கள்.

உலகம் ஓர் இன்றியமையாத அனுபவம் அது ஒரு பள்ளிக்கூடம். ஒருவர் அதன்மூலம் தான் கடந்து செல்ல வேண்டியிருக்கும். தன்னை அறிய விரும்புகிற ஒருவர் முதலில் தன்னை இழக்க வேண்டி யிருக்கும். அதுதான் வழி. வேறு வழியேயில்லை. அதுகுறித்து வேறெதுவும் செய்வதற்கில்லை.

ஆம். அதனால்தான். நீங்கள் புத்தர்களாயிருக்கிற காரணத்தால் தான் துன்புறுவது. நீங்கள் புத்தர்கள் என்பதாலேயே விழிப்புணர்வற்ற நிலையில் விழுகிறீர்கள். என்றாவதொரு நாள் வீடு திரும்புவீர்கள். நீங்கள் மூலத்துக்கு (**source**)த் திரும்புவதைத் தீர்மானிப்பது உங்கள் கையில்தான் இருக்கிறது.

கிறிஸ்துவத்தில் ஒரு வார்த்தை மிகவும் தவறாய்ப் புரிந்து கொள்ளப்பட்டிருக்கிறது. அது. 'செய்த தவறுக்கு வருந்துவது' (**repent**) என்பதாகும். ஹீப்ரு மொழியில் '**repent**' என்றால் திரும்பி வருதல் (**return**) என்று அர்த்தம். மனம் திரும்புவதே மனம் திருந்துவதாகும். முகமதியர்களிடத்தும் அதே போன்றிருக்கும் ஒரு சொல் உண்டு - தோபா (**Toba**). 'தோபா' என்றால் திரும்புதல். அது. 'மூலத்துக்குத் திரும்பிச் செல்' என்று பொருள்படும். திரும்புதல் என்பதும் திருந்துதல் என்பதும் ஒன்றுபோல் தெரியும். ஆனால் அது திருந்துவதாகாது. சமணர்களிடம் ஒரு சொல் உண்டு. அது 'ப்ரதிக் ரமன்' என்பதாகும். அதன் பொருளும் திரும்புதல்தான்.

நீங்கள் எங்கிருந்து வந்தீர்களோ அந்த மூலத்துக்கு எப்படித் திரும்புவது என்பதே முக்கியக் கருத்தாகும். திரும்புவதை - மூலத்துக்குத் திரும்புவதையும், அதனுள் ஒரு பகுதியாய் பிரிவதையும் கொண்டதுதான் தியானம். நீங்கள் புத்தர்கள். புத்தர்களாயிருக்கிறீர்கள். புத்தர்களாயிருப்பீர்கள் - ஆனால் புத்தத் தன்மை மூன்று நிலைகளைக் கொண்டது - ஒன்று, நீங்கள் அதை இழப்பதற்கு முந்தையது, ஒரு புத்தரின் குழந்தைப்பருவம். பிறகு நீங்கள் கவனமாய் தேடுவது புத்தரின் இளமை, பிறகு, உங்களால் அடையப்படுவது முதுமை.

ஒவ்வொரு குழந்தையும் ஒரு புத்தர்தான், ஒவ்வோர் இளைஞனும் சாதகன்தான். எல்லாம் சரியாக அமைந்து விட்டால் ஒவ்வொரு முதியவரும் தகுதியானவர்தாம். அதனால்தான் கீழ்த்திசை நாடுகளில் உள்ள நாம் முதியவர்களை மிகவும் மரியாதையுடன் கவுரவிக்கிறோம். எல்லாம் நல்லவிதமாய் இருப்பின் எவனொருவர் மூலத்துக்குத் திரும்பி வருகிறார்களோ அவனே விவேகம் உள்ளவனாவான்.

கள்ளமற்றிருப்பது குழந்தை. ஆனால் அதை அவன் உணர்ந்திருக்க மாட்டான். காரணம் தொடக்கத்தில் இருந்தே அவன் அதைப் பெற்றிருக்கிறான். அவன் எப்படி அதனை உணர முடியும்? அவனுக்கு எதிரிடையான அனுபவம் தேவைப்படுகிறது. அதன்பிறகே அவன் தெரிநிலை அடைவான். மீண்டும் பழைய தன்மைக்கே திரும்புவதற்கு விரும்புவான். மீண்டும் களங்கமற்ற குழந்தையாகி விடத்தான் எல்லாரும் விரும்புகின்றனர். ஒட்டுமொத்த அனுபவமும் வியப்பூட்டுவதாகும்.

ஆனால், அந்தச் சமயத்தில் அத்தனை வியப்பளிப்பதாய் அது இருந்திருக்காது. உங்களுடைய குழந்தைப் பருவத்துக்குத் திரும்பிச் செல்லுங்கள். நினைவுபடுத்திக் கொள்வது போதாது - அதை மறுபடியும் வாழ்ந்து பாருங்கள். அது துயரளிப்பது. எந்தவொரு குழந்தைப் பருவமும் மகிழ்ச்சியளிப்பதில்லை. ஒவ்வொரு குழந்தையும் பக்குவ வயதை அடைய விரும்புகிறது. பெரிய பலசாலியாய் இருக்க விரும்புகிறது - ஆம், ஒவ்வொரு குழந்தையும். காரணம் ஒவ்வொரு குழந்தையும் தன்னை உதவியற்றதாய் உணர்கிறது. தன்னிடம் என்ன இருக்கிறது என்றே அவனுக்குத் தெரியாது. அதை இழக்காவிட்டால் நீங்கள் எப்படி அறிய முடியும். அவன் தன்னுடைய களங்கமற்ற தன்மையை இழந்தாக வேண்டும், இழிந்த குணமுள்ள இந்த உலகத்தில் அவன் உழன்றாக வேண்டும்,

பாவங்களின் அதல பாதாளம் வரை அவன் செல்ல வேண்டியிருக்கும். அவன் புனிதமானவன். புனிதம் என்பது முயன்று அடையப்படுவது அல்ல. அது இயற்கையாலமையும் கொடை.

இயற்கையால் வழங்கப்படுகிற எதையும் நீங்கள் மதிப்பிட முடியாது. அதனால்தான் எவ்வகையிலும் நீங்கள் நன்றியுடையவராய் இருப்பதில்லை.

நான் ஒரு சூஃபி கதை கேட்டிருக்கிறேன்: சூஃபி மறைஞானி ஒருத்தரிடம் வந்த ஒருவன், 'நான் விரக்தி அடைந்து விட்டேன். தற்கொலை செய்து கொள்ளப் போகிறேன்' என்றான். 'நான் ஆற்றில் என்னை மூழ்கடித்துக் கொண்டிருந்த போது, கரையில் தங்களைக் கண்டேன். ஏன் கடைசியாய் ஒரு முயற்சி செய்யக்கூடாது?' என்று நினைத்தேன். தாங்கள் என்ன சொல்கிறீர்கள் என்பதை அறிய விரும்புகிறேன்' என்று கூறினான். மறைஞானி சொன்னார், 'நீ எதற்காக இத்தனை விரக்தியடைந்தாய்? அந்த மனிதன் சொன்னான். "என்னிடம் எதுவும் இல்லை. அதனால் விரக்தி ஏற்பட்டது. கையில் ஒரு பைசா கிடையாது. உலகிலேயே ஏழ்மையான மனிதன் நான். நான் துயரத்தில் இருக்கிறேன். ஒவ்வொன்றுக்கும் நிறைய முயற்சி செய்யும்படி ஆகிறது. நான் அதில் களைத்துப் போனேன். என்னை ஆசீர்வதியுங்கள். நான் செத்துப் போகிறேன். காரணம் நான் எதைச் செய்தாலும் தோற்கிற அளவு என்னுடைய அதிர்ஷ்டம் மோசமானது. தற்கொலை செய்து கொள்வதில்கூட தோற்றுவிடுவேனோ என்று நான் அஞ்சுகிறேன்' என்று.

. மறைஞானி சொன்னார். "நீ பொறுத்திரு. உன்னிடம் ஒன்றுமில்லை என்பதற்காகத் தற்கொலை .செய்து கொள்ளப் போகிறேன் என்கிறாய், எனக்கு ஒருநாள் மட்டும் கொடு. நாளை நான் சமாளிக்கிறேன்.'

மறுநாள் காலையில் அவனைச் சக்கரவர்த்தியிடம் அழைத்துப் போனார் அவர். சக்கரவர்த்தி அந்தச் சூஃபியின் சீடராவார். அவர் அரண்மனைக்குள் சென்று சக்கரவர்த்தியிடம் பேசினார். திரும்பி வந்தார். அந்த மனிதனைச் சக்கரவர்த்தியிடம் கூட்டிச் சென்றவர், அவனிடம் 'சக்கரவர்த்தி உன்னுடைய இரண்டு கண்களையும் விலைக்கு வாங்கிக்கொள்ளத் தயாராயிருக்கிறார். நீ எந்த விலை கோரினாலும் அவர் தருவார்' என்று சொன்னார்.

அந்த மனிதன் 'எனக்கென்ன பைத்தியமா - கண்களை விற்பதற்கு? நீர் என்ன நினைத்துக் கொண்டிருக்கிறீர்?' என்று கேட்டான்.

சூஃபி சொன்னார், 'உன்னிடம் எதுவுமே இல்லையென்று நீ கூறினாய். தற்போது பத்து லட்சம், இருபது லட்சம், ஒரு கோடி ஏன் பத்து கோடி விலை கேட்டாலும், நீ கோருவது எதுவாயினும் கண்களை வாங்கிக்கொள்ள சக்கரவர்த்தி தயாராயிருக்கிறார். சில மணி நேரத்துக்கு முன்னால் உன்னிடம் ஒன்றுமேயில்லை என்று நீ சொல்லிக் கொண்டிருந்தாய் - மேலும், உன்னுடைய கண்களை விற்க நீ தயாரில்லையா? தற்கொலை செய்து கொள்ளப் போகிறேன் என்கிறாய். உன்னுடைய காதுகளையும் உன் பற்களையும், உனது கைகளையும் கால்களையும் வாங்கிக் கொள்வதற்கு நான் அரசரை இணங்க வைத்திருக்கிறேன். நீ கோருகிற விலையைக் கொடுத்து, உன்னிடமிருந்து அவற்றை வெட்டி எடுத்துக் கொள்கிறோம். நீ உலகத்திலேயே மிகப்பெரிய பணக்காரனாகி விடலாம்'' என்று.

அந்த மனிதன் சொன்னான், 'உம்மை விவேகமுள்ளவர் என்று நினைத்துக் கொண்டிருந்தேன் - உம்மைப் பார்த்தால் ஒரு கொலைகாரராய் தெரிகிறதே!' என்று. அங்கிருந்து அவன் தப்பியோடினான். ''யாருக்குத் தெரியும்; நான் அரண்மனைக்குள் பிரவேசித்தால்... அந்த அரசனும் இப்படிப் பைத்தியம் பிடித்தவனாய் இருந்து அவர்கள் எனது கண்களைத் தோண்டியெடுத்து...''

அவன் நழுவியோடினான். ஆனால், கண்களுக்கு என்ன விலை கோரலாம் என்பதை முதன் முதலாய் அவன் தெரிந்து கொண்டான். ஆனால், ஒருபோதும் அதற்காக நீங்கள் கடவுளுக்கு நன்றி சொல்வதில்லை. உயிரோடு இருக்க முடிவதற்காக ஒருபோதும் நீங்கள் நன்றி தெரிவித்ததில்லை. நீங்கள் இக்கணத்தில் சாவதாய் இருந்து யாரேனும் கூடுதலாய் ஒருநாளை உங்களுக்கு ஒதுக்கித் தந்தால் நீங்கள் எவ்வளவு கொடுக்க முன்வருவீர்கள்? உங்களிடம் இருப்பதையெல்லாம் கொடுக்கத் தயாராகி விடுவீர்கள். ஆனால் ஒருபோதும் நீங்கள் நன்றி செலுத்தியதில்லை... காரணம் அதை விலையேதும் கொடுக்காமல் பெற்றீர்கள். நீங்கள் ஒரு வெகுமதியாய் அதை அடைந்தீர்கள், யாராவது வெகுமதிகளைப் பாராட்டுவார்களா என்ன?

குழந்தைப் பருவம் ஒரு வெகுமதி. அங்கே கள்ளமற்ற தன்மை இருக்கிறது. ஆனால் குழந்தைக்கு அது தெரிந்திருக்காது. அவன் அதனை இழக்கும்படியாகலாம். அவன் இழக்கும்போது - தனது இளமையில் அவன் சுற்றித் திரிவான், உலகச் செயல்முறைகளில் கலந்து விடுவான், முற்றிலும் கலக்கம் கொண்டவனாய், களங்கமுற்றவனாய், பாவியாகி - ஆசைமிக்கவனாவான். அப்போது அவன் அறிவான் தான் எதையெல்லாம் இழக்க நேர்ந்ததென்பதை. அதன்பிறகு அவன் தேவாலங்களுக்கும், கோயில்களுக்கும், இமய மலைக்கும் போவான். குருமார்களைத் தேடிச்சென்று ஒன்றை மட்டும் கேட்பான். 'என்னுடைய கள்ளமற்ற தன்மையைத் திருப்பிக் கொடுங்கள்' என்று. எல்லாம் சரியாய் நடந்து கொண்டிருந்தால், அவன் துணிச்சலுள்ள மனிதனாய் இருந்தால் முடிவில் - மரணமடையப் போகிற சமயத்தில், அந்தக் கள்ளமற்ற தன்மையை அவன் மீண்டும் அடையக் கூடும்.

ஆனால் ஒரு முதியவன் குழந்தையாகி விடுவதென்பது முற்றிலும் வேறானதாகும். ஒரு துறவியின் விளக்கம் இது: முதுமையுற்று ஒருவன் மீண்டும் குழந்தையாய் கள்ளமற்றவனாய் மாறுகிறான். ஆனால் அவனுடைய கள்ளமின்மை வேறு பண்பைக் கொண்டதாயிருக்கும். காரணம், அவன் அறிந்து கொள்கிறான் அது இழக்கப்படும் என்பதை. மேலும் அவன் அறிவான், அது இழக்கப்படும் நிலையில் ஒருவர் மோசமான அளவு வலியையும், துன்பத்தையும் அனுபவிக்க வேண்டியிருக்கும் என்பதை. தற்போது அவன் அறிந்து கொள்கிறான் இந்தத் தீங்கற்ற தன்மை (innocence) இல்லாவிட்டால் எல்லாமே நரகமாகி விடும் என்பதை. கள்ளமின்மையே பரம சுகத்தை அளிப்பது, அது மட்டுமே விடுதலை என்பதை தற்போது அவன் அறிகிறான்.

உங்களுடைய விழிப்புணர்வுக்கும் அதுவேதான் நேரிடுகிறது. நீங்கள் அதைப் பெறுகிறீர்கள், இழக்கிறீர்கள், மீண்டும் அதைப் பெறுகிறீர்கள். அது ஒரு வட்டமாகிறது. அதனால்தான் இயேசு சொல்கிறார்; நீங்கள் குழந்தையாகாதவரை, குழந்தையைப் போல் மாறாதவரை என்னுடைய இராஜ்யத்தில் நீங்கள் பிரவேசிக்க முடியாது' என்று. அது திரும்புகிறது, வட்டம் முழுமை பெறுகிறது.

வருந்துதல் (repent) என்ற வார்த்தையை மறந்து, திரும்புதல் (return) என்ற வார்த்தையை அந்த இடத்தில் வையுங்கள். அந்த

வருந்துதல், 'வருந்துதல்' என்கிற வார்த்தைதான் ஒட்டுமொத்த துன்பத்தையும் உருவாக்கியது. திரும்புதல் அழகானது. வருந்துதல் அருவருப்பான நிகழ்வு. மதம் உங்களுக்குள் குற்ற உணர்வை உண்டுபண்ணக் கூடாது. அது துணிச்சலைத் தோற்றுவிக்க வேண்டும். குற்ற உணர்வு பயத்தைக் கொடுக்கும். தேவையானது ஒன்று மட்டுமே, அது துணிச்சல் - அச்சமற்றிருத்தல் - மீண்டும் வீட்டுக்குத் திரும்புவது.



**போதை மருந்துகளின் துணையோடு ஒருவர் குதித்தலை மேற்கொள்ள முடியுமா?**

இல்லை. அது போதை மருந்தின் துள்ளலாயிருக்கும், உங்களுடையதாயிருக்காது. நீங்கள் குதிக்க வேண்டும், மருந்தல்ல. அதுதான் கருத்து. போதை மருந்துகள் அறிவுத் தெளிவைக் காண முயல்வதில்லை. அவை முற்றிலும் இருக்கிறபடிதான் இருக்கும். நீங்கள் ஒரு மருந்தை உட்கொண்டு உங்களுக்கு ஏதாவது நேரிட்டால், உண்மையில் அது உங்களுக்கல்ல, அந்த மருந்துக்கு நேரிட்டதாகும். அது உடம்பின் வேதியியலுக்கு நேரிடுகிறதேயன்றி உங்களுடைய பிரக்ஞை (Consciousness)க்கல்ல. அது ஒரு கனவு, மருட்சி. (இல்லாதது இருப்பது போல் தோன்றும் தோற்றம்).

சில நேரங்களில் அது அழகாயிருக்கும் - சில நேரங்களில் என்பதை நினைவில் கொள்ளுங்கள். சில நேரங்களில் அதுவே மோசமான நரகமாகிவிடக் கூடும். அதனால்தான் நான் சொல்கிறேன் போதை மருந்து உங்கள் உடம்பின் வேதியியலில் (body chemistry) ஒரு நிலையை மட்டுமே உண்டுபண்ண முடியும் என்று. ஆனால், உங்கள் மனம் அந்த நரகத்தின் வழியே செல்லுமானால், அந்த மனம் தொடர்ந்து அவ்வழியில்தான் செல்லும். தற்போது அந்த நரகம் வலுவடையும். அவ்வளவே. காரணம் தற்போதைய வேதியியல் மாறுபட்டதாயிருப்பது. நீங்கள் நரகத்தை நோக்கிச் செல்வீர்கள். ஆனால், இச்சமயம் விரைவாய் செல்வீர்கள். போதை மருந்து உங்களுக்கு வேகத்தைக் கொடுக்கக் கூடும். ஆக, போதை மருந்துகளை 'வேகம்' என்று அழைப்பது சரியாயிருக்கும். அவை வேகத்தை மட்டுமே தரும், வேறெதையுமல்ல. நீங்கள் நேர்த்தியாகவும், தகுதியாகவும் உணர்ந்திருந்தால், 'வேகத்துடனும்' அந்த நேர்த்தியை, தகுதியை உணர்வீர்கள். ஆனால் அவற்றால்

உங்களை மாற்ற முடியாது. நீங்கள் எப்படிப்பட்டவராயினும் அப்படியேதான் இருப்பீர்கள்.

அவற்றால் நீங்கள் முட்டாளாக்கப்படுவீர்கள் என்பதே அதிலுள்ள அபாயம். ஒருமுறை நீங்கள் முட்டாளாக்கப்பட்ட நிலையில், 'இது பரவசப்படுத்துகிறது. இதுதான் வேண்டியிருந்தது' என்று எண்ணமிடுவீர்கள். அப்போதே தொலைந்து விடுவீர்கள். பிறகு - 'போதை மருந்தை உட்கொண்டால் கடவுளனுபவம் கிட்டும்' என்கிற பாங்கில் எப்போதும் எண்ணிக் கொள்வீர்கள். நீங்கள் எதையும் அனுபவித்துணர்வதில்லை, காரணம் கடவுள் எவ்வகையிலும் ஓர் அனுபவமல்ல. அது அத்தனை அனுபவத்துக்கும் ஒரு நிறுத்தம் (cessation) ஆகும். எல்லாப் பொருள்களும் மறைகிறபோது - அனுபவம் ஒரு பொருள் - உணர்வில் அமைந்தது (subjectivity) மட்டுமே தங்கியிருக்கும் போது - பிரக்ஞை அறிவதற்கு ஏதுமில்லை. ஆனால் அறிபவர் மட்டும் - அங்கே அப்போது கடவுள் இருக்கிறார். கடவுள் ஒரு பொருளல்ல. கடவுள் உள்ளுணர்வை மட்டுமே சார்ந்ததாகும். எந்தவொரு போதை மருந்தாலும் அதை உங்களுக்குக் கொடுக்க இயலாது.



***'படிப்படியாய் ஞானம் பெறும் பாதையில் தாங்கள் பயணம் செய்து வந்தவர் என்று நான் எண்ணினால் அது சரிதானே? ஞானம் நேரிட்ட போது தாங்கள் நடனமாடினீர்களா?'***

நான் இன்னமும் ஆடிக் கொண்டுதானிருக்கிறேன். நீங்கள் அதைக் காணவில்லையென்றால் நான் என்ன செய்யட்டும்?

படிப்படியாய் அடைகிற ஞானம் என்பதில்லை. ஞானம் பெறுதல் எதிர்பாராத நிகழ்வாகும். நீங்கள் படிப்படியாய் அதற்கான முன்னேற்பாடுகளைச் செய்யலாம், திடுதிப்பென்றும் செய்யலாம். ஆனால் ஞானம் என்பது எதிர்பாராமல் அமைவது. அது ஒற்றைக் கணத்தில் நிகழ்ந்து விடும். ஐம்பது சதவிகித ஞானம் பெற்றவர்கள், அறுபது சதவிகித ஞானம் பெற்றவர்கள், எழுபது சதவிகித ஞானம் பெற்றவர்கள் என்பதெல்லாம் கிடையாது. ஒரு கணத்துக்கு முன் நூறு சதவிகித ஞானம் பெற்றிருந்தவர், ஒரு கணத்துக்குப் பிறகு நூறு சதவிகித ஞானம் பெற்றவர் என்பதும் இல்லை. அது எதிர்பாராமல் நிகழ்வது. இல்லையேல் அதில் 'அளவுகள் இருந்திருக்கும். அளவுகள் கிடையாது.

அது மரணத்தைப் போன்றது. அது ஒற்றைக் கணத்தில் நிகழ்வது. ஒருவர் பாதியளவு மரணமடைந்தார் என்று நீங்கள் கூறமுடியாது. அவர் பாதியளவு செத்துவிட்டதாய் தெரிந்தாலும் முழுசாய் உயிரோடிருக்கிறார். அது தோற்றம் மட்டுமே. ஒரு மனிதர் 'கோமா' **(Coma)** நிலையில் பிரக்ஞையற்றுக் கிடக்கலாம். ஆனால் அப்போதும் அவர் வாழ்ந்து கொண்டிருப்பவர்தாம். ஒன்று இந்த வகையில் அல்லது அந்த வகையில் இருந்தாக வேண்டும். வேறு வழியில்லை. ஞானம் எப்போதுமே உடனடியானது.

முன்னேற்பாடு? இது புரிந்து கொள்வதற்கு மிகவும் நுட்பமான விசயம். தயார்ப்படுதல் என்பது ஞானத்திற்காகவல்ல. உங்கள் துணிவைத் திரட்டிக் கொள்கிற முன்னேற்பாடுதான் அது. துணிச்சலுள்ளவன் அதை இப்போதே மேற்கொள்ளவாம். ஒரு கோழை தன்னைத் தயார்ப்படுத்திக் கொள்ள ஆண்டுகள் பலவாகும். ஒட்டுமொத்த பிரச்சினையே அச்சந்தான். அச்சத்தை விட்டு விட்டால் நீங்கள் சுதந்திரமாய் இருப்பீர்கள். உங்களுடைய அச்சத்தைப் பேணிக்காத்து அதிலேயே கவனம் வைத்திருந்தால் நீங்கள் ஒருபோதும் விடுபட மாட்டீர்கள். எனவே, ஒரு தெளிவான கருத்தாய் மனதில் அதனை வைத்துக் கொள்ளுங்கள். ஞானத்துக்கு முன்னேற்பாடு என்பதில்லை; நீங்கள் அச்சத்தில் இருப்பதாலேயே முன்னேற்பாடு செய்து கொள்கிறீர்கள். ஆக, அது உங்களைச் சார்ந்திருக்கிறது. நீங்கள் அச்சத்தை விடுவதென்று தீர்மானிக்கிறபோது, அது நிகழ்கிறது.

உங்களுக்கு வெளியே இருக்கிற ஏதோவொன்றை அடைவதல்ல அது. நீங்கள் அதனை முன்பே உங்களுடன் சுமந்து கொண்டிருப்பதுதான். அது குழந்தை பிறப்பது மாதிரி: ஒரு பெண் கர்ப்பத்தைச் சுமந்து கொண்டிருக்கிறாள் - குழந்தை முன்பே உள்ளில் இருக்கிறது. வேகமாய் அடித்துக் கொண்டும், உதைத்துக் கொண்டும் இயக்கத்தில் இருக்கிறது - ஆனால், அந்தப் பெண் ரொம்பவும் அச்சத்தில் இருந்தால் பிறப்பதற்கு (ஈன்றெடுக்க) நீண்ட அவகாசம் பிடிக்கும். அவள் அதிக பயத்திலும், இறுக்க உணர்விலும் இருந்தால், அந்தக் குழந்தை கருவறையை விட்டு வெளிப்பட விரும்புகிறபோது அவள் தனது ஒட்டுமொத்த சக்தியையும் அச்சத்தில் பற்றிக்கொண்டு, குழந்தை வெளிவர இடம் கொடுக்க மாட்டாள். குழந்தை வெளிவருவதற்கு ஒரு தளர்வான பாதை வேண்டும். அந்தப் பெண்ணோ குழந்தை. வெளிவர இயலாத அளவிற்கு

இறுக்கமடைந்திருப்பாள். குழந்தை வெளியில் வந்துவிட விரும்பும், காரணம் கருவறையில் இன்னும் சில நாள் கூடுதலாயிருந்தால் அவன் செத்தே போவான். எனவே, வெளியில் வருவதற்கு எல்லா முயற்சிகளையும் அந்தக் குழந்தை செய்யும். அவள் இறுக்கமாயிருப்பாள். அங்கே ஒரு மோதல் நிகழும். அந்த மோதல் வலியைத் தோற்றுவிக்கும்; இல்லையேல் குழந்தைப் பிறப்பில் வலி இருந்தேயாக வேண்டும் என்பதில்லை. அதற்கான தேவை இல்லை. அது இன்றியமையாத ஒன்றுமல்ல.

இந்தியாவின் மூத்த பழங்குடியினரிடத்துச் சென்று பாருங்கள். குழந்தைப் பிறப்பு வெகு எளிதாய், இயல்பாய் நிகழ்ந்து விடுகிறது. அதில் வலி இருக்கும் என்பதை அவர்கள் ஒருபோதும் கேள்விப்பட்டதில்லை. ஒரு பெண் வயலில் வேலை செய்து கொண்டிருப்பாள், குழந்தை பிறந்து விடும். அவளைப் பேணிக் காக்க ஒருவரும் இருக்க மாட்டார்கள்; அவள் தன்னைத்தானே கவனித்துக் கொள்ளும்படி இருக்கும். அவள் குழந்தையை மரத்தடியில் கிடத்திவிட்டு, தன்னுடைய நாள் முழுதுமான வேலையைச் செய்து முடிப்பாள் - வீடு திரும்ப அவசரம் காட்ட மாட்டாள் - அந்தி சாயும் வேளையில் குழந்தையை எடுத்துச் செல்வாள். விலங்குகளுக்கு நிகழ்கிற மாதிரி எளிதாய், ரொம்ப எளிதாய் நிகழ்ந்து விடுகிறது எந்தப் பிரச்சினையுமில்லாமல்.

தாயே பிரச்சினையைத் தோற்றுவிப்பது. அந்தத் தாய் இறுக்கத்திலும் அச்சத்திலும் இருப்பாள். அந்த இறுக்கம், குழந்தையின் வெளிவரும் முயற்சி ஒரு போராட்டத்தைத் தோற்றுவிக்கும். பிறகு, அது அவ்காசம் மேற்கொள்ளும்.

குழந்தை எந்தக் கணத்தில் வெளிப்படத் தயாராயிருக்கிறது. நீங்கள் கருத்தரித்த முழு வளர்ச்சிப் பருவத்தை (gestation period) கடந்து விட்டிருப்பீர்கள் எல்லாரும் ஒன்பதாம் மாதத்தில் இருந்திருப்பவர்கள்தாம். தற்போதுள்ள பிரச்சினையே எப்படித் தளர்வடைவது, குழந்தையை வெளியேற விடுவது என்பதுதான். நீங்கள் பயமில்லாதிருந்தால்தான் முறுக்கேறிய உணர்ச்சிகளில் இருந்து விடுபட முடியும். ஏற்றுக் கொள்ளுங்கள். அச்சப்பட வேண்டாம். வாழ்க்கையை ஏற்றுக் கொள்ளுங்கள். அது நண்பனேயன்றி பகைவனாகாது. இப்பிரபஞ்சம் முழுதும் ஒரு வீடு. இங்கே நீங்கள் முன்பின் தெரிந்திராதவரல்லர். உயிர் பிழைத்தல்,

போராடுதல், வெற்றி பெறுதல் என்று டார்வின் (Darwin) சொல்கிறதை யெல்லாம் மறந்து விடுங்கள். எல்லாமே பொருளற்றவை. அது ஒரு வீடென்று சொல்பவர்களைக் காது கொடுத்துக் கேளுங்கள், காரணம் அவர்கள் உண்மையானவர்கள். வேறு விதமாயிருக்கச் சாத்தியமில்லை.

நீங்கள் வாழப் பிறந்தவர்கள் - அது எப்படி உங்களுக்கு எதிராக முடியும்? ஒரு தாய் எப்படித் தனது குழந்தைக்கு எதிராக முடியும்? நீங்கள் மீண்டும் அங்கே திரும்பி விடுவீர்கள்: ஓர் அலை உயர எழுந்து, சூரிய ஒளியில் நடனமாடித் திரும்பிச் செல்கிற மாதிரி. கடல் எப்படி அலைக்கு மாறாகி விட முடியும்? அலையின் முழு வலிமையும் உண்மையில் கடலால் வழங்கப்பட்ட வெகுமதி (திறன்) அல்லவா! அது மேலெழுகிறது, மேலெழுவது 'அது'வென்றாகாது காரணம் அதனுள் எழுவது கடல்.

பிரக்ஞை என்கிற பிரபஞ்சக் கடலில் நீங்கள் வெறும் அலைகளாயிருக்கிறீர்கள். அதை உணருங்கள். வீட்டில் இருப்பதாய் உணருங்கள். நீங்கள் இங்கே பழக்கமில்லாதவர்களல்லர். பிரபஞ்சத்தால் அன்புடன் நேசிக்கப்படுபவர்கள். அதன்பிறகு நீங்கள் துணிவைச் சேகரிக்கிறீர்கள், காரணம் அங்கே அச்சம் என்பது இல்லை.

ஞானம் பெறுதல் திடீரென்று நிகழ்வது. நீங்கள் படிப்படியாய் செல்வதாயின், உங்களுடைய ஏற்புத்தன்மை இல்லாத மனமே அதற்குக் காரணமாயிருக்கும். அச்சமும், எச்சரிக்கையாயிருப்பதும் கூடத்தான்.



**என்னை எப்படி மகிழ்ச்சி வெறி கொள்ளச் செய்வதென்று உண்மையிலேயே தாங்கள் அறிவீர்கள். தற்போது அறிவூட்டுவதும் பயன் தருமளவு போதுமானதாயிருக்காது. இல்லை, அது சற்றும் எதிர்பாராத நடப்பாய் இருக்க வேண்டும். இல்லையேல் நாங்கள் தவறவிடும்படி ஆகும். நான் எப்போதேனும் கடவுளை நேரில் கண்டால் அவரைச் சுட்டு விடுவேன். ஞானம் பெறுவதை மறந்து விட்டு, இயல்பாக வாழும்படித் தாங்கள் வற்புறுத்திக் கொண்டிருந்தால், என்னுடைய சமநிலையை நான் கண்டறிவேன் என்று தாங்கள் எப்படி எதிர்பார்க்க முடியும்? ஏதேனும் செய்யக்கூடியதாய் இருக்குமாயின் அது பொறுமையைக் கடைப்பிடிப்பதுதான். அதன்பிறகு, திடீர் நிகழ்வாய் நான் எழ முடியும். ஓரடியாய் எடுத்து வைக்க - துணிவுடன் குதித்தாக**

*வேண்டும். இதுவெல்லாம் எங்களை ஒரு நம்பிக்கையற்ற நிலைக்குத் தள்ளிவிடுந்தானே?*

உண்மை.

நீங்கள் கடவுளை எதிர்கொள்ளும்போது அவரைச் சுட்டு விடும்படியும் நான் உங்களுக்குச் சொல்வேன். காரணம் அதுதான் கடைசித் தடையாய் இருக்கும். அவரை உடனடியாய் சுட்டு விடுங்கள், அப்போது உங்களுடைய தனித்திருக்கும் நிலையில் நீங்கள் மட்டுமே இருப்பீர்கள். இல்லையேல் அவரே அனுபவமாய், உலகமாய் ஆகிவிடுவார்.

உங்களுக்கு நன்றாகத் தெரியும், நீங்கள் கிறுக்குப் பிடித்த நிலைக்குத் தள்ளப்படுவீர்கள் என்பது. உங்களுடைய பொருளில்லாத ஆசை போதும் போதும் என்றாகி விடுகிற அளவுக்குப் பைத்தியமாய், எதிர்பாராதவிதமாய் அதிலிருந்து துள்ளிக் குதித்து விடுகிறீர்கள். இல்லையேல் அதைவிட்டு நகர மாட்டீர்கள். உங்களுடைய ஆர்வம் மிக்க (பித்து) நிலையில் நீங்கள் வீட்டில் இருந்தால் எப்படி அதிலிருந்து குதிப்பீர்கள்? எனவேதான் ஒட்டுமொத்த சூழ்நிலையையும் நான் நம்பிக்கையற்றதாக்குகிறேன். மிகக் கடுமையான அளவு நம்பிக்கை யற்றதாக்குகிறேன், நீங்கள் திடுமென்று குதித்து, தடையற்றவராய் விடுமளவிற்கு.

O

*அனைத்து குணங்களும், தன்மையும் எங்கிருந்து தோன்று கிறதோ அந்த இருப்புணர்வற்ற (நிர்க்குண) மையத்தையும் தாங்கள் குறிப்பிடும் பரவசத்தையும் நான் அனுபவித்திருக்கிறேன். ஆயினும் நான் கேட்கிறேன்...*

நிர்க்குணமானதை நீங்கள் அனுபவித்திருந்தால் கேட்க வேண்டிய அவசியம் ஏது? நீங்கள் அதை அனுபவித்திருந்தால் ஆயினும் (*if*) என்பதற்கு இடமேயில்லை. நீங்கள் கேட்பதாயின் இருப்புணர்வற்ற நிலையை அனுபவித்து விட்டதாய் கற்பனை செய்து கொண்டிருக்க வேண்டும் - காரணம் இருப்புணர்வற்ற நிலையில் கேள்விகள் எழுவதில்லை. ஒரு தடவை சூன்யத்தை, வெறுமையை நீங்கள் அறிந்து கொண்டு விட்டால் எதுவும் மேலெழாது.

நீங்கள் கற்பனை செய்து கொண்டிருக்க வேண்டும், அத்துடன் அது நிகழ்கிறது. ஒருவர் அந்த நிலையை எட்டுவதற்கு முன்

ஆசையின் காரணமாய் பலமுறை அதைக் கற்பனை செய்திருப்பார். தொடர்ந்து நான் சொல்வதைக் கேட்டுக் கேட்டு ஓர் இச்சையை நீங்கள் உண்டாக்கிக் கொள்கிறீர்கள்: எப்படி ஞானம் பெறுவது, எப்படி இந்தத் துயரங்களிலிருந்து விடுபடுவது என்று. அந்த இச்சையே கனவுகளைத் தோற்றுவிக்கிறது. அந்த இச்சை தீவிரமாயிருந்தால் கனவுகளும் நிஜம்போல் தெளிவாயிருக்கும். அவை நடைமுறையில் காண்பதைவிட ரொம்பவும் இயல்பாயிருக்கும். அதன்பிறகு நீங்கள் அனுபவித்துணர்ந்ததாய் எண்ணிக் கொள்வீர்கள். அப்படியில்லை.

இருப்புணர்வற்ற அனுபவம் நிகழுமாயின் - எல்லாக் கேள்வி களும் மறைந்துவிடும். அவற்றுக்கெல்லாம் விடை காணப்பட்டதாய் ஆகிவிடாது. எந்தக் கேள்விக்கும் விடை காணப்படவில்லை. எல்லாக் கேள்விகளும் அபத்தமானவை, அறிவிற்குப் பொருந்தாதவை. அவற்றுக்கு விடை காண முடியாது. எல்லாக் கேள்விகளும் நகைப்பிற்குரியவை. நான் இப்படிச் சொல்கிறபோது இதனைக் கருத்தில் கொள்கிறேன்: 'சிவப்பு நிறத்தின் மணம் என்ன?' என்று யாரேனும் கேட்பார்களாயின்,அந்தக் கேள்வி இலக்கணம் சார்ந்த வகையில் சரியாக இருக்கலாம். ஆனால், அது நகைப்பிற்குரியது. காரணம் சிவப்பு வண்ணமோ, அல்லது வேறு எந்த வண்ணமோ எந்தவொரு வாசனையுடனும் தொடர்புடையதல்ல. ஆனால் யாரேனும் கேட்கிறார்கள், சிவப்பு நிறத்துக்கு என்ன வாசனை? என்று. எல்லாக் கேள்விகளும் நகைப்பிற்குரியவை. அவற்றுக்கு விடை காணப்பட வேண்டும் என்பதில்லை.

நீங்கள் அமைதியாய், முற்றிலும் அமைதியாயிருக்கிற போதெல் லாம் கேள்விகளின் அபத்தத்தை உடனே புரிந்து கொள்வீர்கள். அத்துடன் அனைத்துக் கோட்பாடுகளையுந்தான். கேள்விகள் விடையளிக்கத் தக்கவை என்ற கருத்தையே கோட்பாடுகள் சார்ந்திருக்கின்றன.

இல்லை, உங்களால் கற்பனை செய்ய முடியும். நீங்கள் கற்பனை செய்கிற போது இது நிகழக்கூடும்.

எல்லாக் குணங்களும் தன்மைகளும் இருப்புணர்வற்ற மையத்தில் இருந்து எழுவதையும்; தாங்கள் குறிப்பிடுகிற பரவசத்தையும் நான் அனுபவித்திருக்கிறேன். ஞானத்தில் குதிப்பதற்கு நான் செய்ய வேண்டுமென்று கேட்பேனாயின்...?

ஆனால் அதற்கு அவசியமிருக்கிறதா என்ன? இருப்புணர்வற்ற மையத்தை நீங்கள் எட்டியதாயும் பரவச நிலையை அனுபவத்தறிந்த தாயும் சொல்கிறீர்கள். இதுவே ஞானம். பிறகு எந்தக் குதிப்பும் அதிலிருந்து வெளியே குதிப்பதுதான். எனவே, தயவு செய்து குதிக் காதீர்கள். தற்போது குதிப்பது ஆபத்தானது. நீங்கள் உலகத்துக்குள் மீண்டும் குதித்து விடுவீர்கள். 'ஞானத்திற்குள் குதியுங்கள்' என்று நான் சொல்வது உலகாயதமானவர்களுக்குத்தான், முயன்று அடைந்துவிட்ட புத்தர்களுக்காகவல்ல. அவர்கள் குதிக்க வேண்டியதில்லை. அவர்கள் குதித்தலை, குதித்தலுக்கான தூண்டுதலைத் தவிர்க்க வேண்டும். இல்லையேல் அவர்கள் இந்த உலகத்துக்குத் திரும்பி விடுங்கள், பிறகு மீண்டும் இடர்ப்பாடு தோன்றும்.

கற்பனைக்குப் பலியாட்களாய் (victims) மாறிவிடக் கூடாது என்பதை நினைவில் வையுங்கள். கற்பனையாய் குறிப்பிடத்தக்க ஆட்டங்களை (games) ஆடமுடியும் - உங்களுடன் மட்டுமல்ல, அது ஒவ்வொருவருடனும் ஆடுகிறது, எல்லாருடனும் ஆடுகிறது. நீங்கள் கோருவது எதுவாயினும் அது வழங்கி விடும்.

அது நிகழ்ந்தது: முல்லா நஸ்ருத்தீன் கப்பலில் வேலை கேட்டு விண்ணப்பித்திருந்தார். அவர் நேர்காணலுக்கு அழைக்கப்பட்டிருந் தார். அவரிடம் நேர்முகத் தேர்வு நடத்தியவர் கேட்டார். "புயல் வருமாயின் நீர் என்ன செய்வீர்?" என்று.

அவர் சொன்னார் "நங்கூரத்தை நாட்டுவேன்" என்று.

"முன்னைவிட பெரியதாய் இன்னொரு புயல் வருகிறது. அப்போது நீர் என்ன செய்வீர்?" அந்த மனிதர் கேட்டார்.

"நான் இன்னொரு நங்கூரத்தை நாட்டுவேன்" என்றார் அவர். இப்படியாய், இந்த மாதிரியாய் அது போய்க் கொண்டிருந்தது.

"..... பத்தாவது புயல்!"

நஸ்ருத்தீன் சொன்னார் "நான் இன்னொரு நங்கூரத்தை நாட்டுவேன்."

அந்த மனிதர் கேட்டார். "ஆனால் இத்தனை நங்கூரங்களை நீர் எங்கிருந்து பெறுவீர்?" என்று.

அதற்கு நஸ்ருத்தீன் சொன்னார். "தாங்கள் எங்கிருந்து புயல்களைப் பெறுகிறீர்களோ அங்கிருந்துதான்."

28. 'யோகாங்கானுஷ்டானாத சுத்தி க்ஷயே ஞான
தீப்திரா விவேக்யாதே'

*யோகத்தின் பல்வேறு அங்கங்களாய் சொல்லப்படுகிறவற்றைப் பயிற்சி செய்து மனதின் அசுத்தங்களைத் துடைத்தெறிய, அங்கே மெய்ம்மையின் விழிப்புணர்வை வளர்க்கும் ஆன்மாசார்ந்த ஒளி மேலெழும்.*

29. 'யம நியமாஸன பிராணயாம ப்ரத்யாஹார
தாரணா த்யான ஸமாதயோ அஷ்டாவங்கானி'

*யமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்யாஹாரம், தாரணை, தியானம், சமாதி என்பன யோகத்தின் எட்டு அங்கங்கள்.*

*நீங்கள் தேடும் ஒளி உங்களுக்குள் இருக்கிறது. எனவே, உங்களுடைய தேடுதல் உள்நோக்கிய தேடலாய் இருக்க வேண்டும். அது புறவெளியில் ஏதோவொரு குறிக்கோளை அடைதற்கான பயணமல்ல. அது உள்ளிருக்கும் பரப்பில் மேற்கொள்ளப்படும் பயணம். உங்களுடைய மையத்தை நீங்கள் அடைந்தாக வேண்டும். எந்தவொன்றை நீங்கள் தேடிக் கொண்டிருக்கிறீர்களோ அது முன்பே உங்களுக்குள் இருக்கிறது. நீங்கள் வெங்காயத்தைத் தோலுரிக்க வேண்டும். அறியாமை பல அடுக்குகளாய் அங்கே இருக்கின்றன. வைரம் மண்ணில் புதையுண்டு கிடக்கிறது. வைரம் உண்டுபண்ணப்படுவதல்ல. வைரம் முன்பே அங்குள்ளது. மண்ணின் அடுக்குகளை மட்டுமே அகற்றியாக வேண்டும்.*

*இது அடிப்படையாய் புரிந்து கொள்ளப்பட வேண்டியது: கருவூலம் (பெரும் நிதிக்குவியல்) முன்பே அங்கிருக்கிறது. உங்களிடம் திறவுகோல் இல்லாதிருக்கலாம். திறவுகோலைத்தான் கண்டுபிடித்தாக வேண்டும், கருவூலத்தையல்ல. இது அடிப்படையானது, அவசியமானது, காரணம் முழு முயற்சியும் மனதால் உணரச் சார்ந்திருக்கிறது. பெரும் நிதியை உருவாக்குவதாயின், அது நீண்ட*

காலச் செயல் முறையைக் கொண்டதாயிருக்கும். அது உருவாக்கப்படுமா இல்லையா என்பது யாருக்கும் நிச்சயமாய் தெரியாது. திறவுகோல் மட்டுமே கண்டபிடிக்கப்பட வேண்டியது. கருவூலம் வெகு அருகில் இருக்கிறது. பூட்டுகளின் சில அடுக்குகளை மட்டுமே அகற்ற வேண்டும்.

அதனால்தான் உண்மைக்கான தேடல் எதிர்மறையாய் இருக்கிறது. அது உறுதியான தேடலாயிருப்பதில்லை. உங்கள் இருப்புணர்வின் முக்கியத்துவத்தை அதிகப்படுத்துகிற விதமாய் நீங்கள் எதையும் இணைக்க வேண்டியதில்லை. சிலவற்றை அகற்ற வேண்டியிருக்கும். ஏதோ ஒன்றை வெட்டியெடுக்கும்படியாகும். உண்மைக்கானத் தேடல் அறுவை சார்ந்த சிகிச்சை. அது மருந்துச் சிகிச்சையாகாது. அது அறுவை சார்ந்தது. உங்களிடம் அதிகப்படியாய் எதையும் சேர்க்க வேண்டியதில்லை. மாறாக, உங்களிலிருந்து ஏதோவொன்றை அகற்ற வேண்டியிருக்கும், மறுக்க வேண்டியிருக்கும். இதுபற்றி, உபநிடதங்களில் 'நேதி, நேதி' என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. மறுப்பதற்கான சாத்தியம் இல்லாத வரையிலும் தொடர்ந்து மறுத்துக்கொண்டே போவது, நீங்கள் மட்டுமே எஞ்சுவீர்கள். உங்களுடைய உள்ளகத்தில் நீங்கள், விடமுடியாத பிரக்ஞையிலும் நீங்கள் - காரணம் யாரால் அதை விடமுடியும்? எனவே தொடர்ந்து மறுத்திடுங்கள் 'நான் இதுவும் அல்ல அதுவும் அல்ல' என்று. தொடருங்கள் 'நேதி, நேதி...' பிறகு நீங்கள் மட்டுமே மறுப்பவர் மட்டுமே இருக்கிற ஒரு முனைப்பகுதி வருகிறது. அங்கே அறுத்தெடுக்க (cut) வேறெதுவும் இருக்காது. அறுவை முடிந்து விடுகிறது. நீங்கள் கருவூலத்தை வந்தடைய வேண்டியதுதான்.

இது சரியாய்ப் புரிந்து கொள்ளப்பட்டால் பிறகு சுமை ரொம்பக் கனமாய் இருக்காது. தேடல் இலகுவாகி விடும். நீங்கள் எளிதாய் செல்ல முடியும், வழியில் கருவூலம் மறக்கப்படலாம். ஆனால் அது தொலைந்து விடாது. அது மிகச் சரியாக எங்கே இருக்கிறது என்பதை அறியும் திறன் உங்களிடம் இல்லாதிருக்கலாம். ஆனால், அது உங்களுக்குள் இருக்கிறது. நீங்கள் நம்பிக்கையோடு ஓய்வெடுக்கலாம். அது குறித்து நிச்சயமற்றதாய் எதுவும் இல்லை. உண்மையில் நீங்கள் அதை இழக்க விரும்பினாலும் உங்களால் அதை இழக்க முடியாது, காரணம் அது உங்களுடைய துல்லியமான இருப்புணர்வு. அது உங்களுக்கு வெளியே இருப்பதல்ல, அது உள்ளார்ந்தது.

மக்கள் என்னிடம் வருகிறார்கள். 'நாங்கள் கடவுளைத் தேடுகிறோம்' என்று சொல்கிறார்கள். நான் அவர்களிடம் கேட்கிறேன், 'நீங்கள் அவரை எங்கே தொலைத்தீர்கள்? எதற்காகத் தேடுகிறீர்கள்? அவரை எங்காவது தொலைத்து விட்டீர்களா? அவரை எங்கேனும் தொலைத்திருந்தால் என்னிடம் சொல்லுங்கள் தொலைத்த இடம் எதுவென்று, காரணம் அங்கு மட்டுமே அவரை நீங்கள் கண்டுகொள்ள முடியும். அவர்கள் சொல்கிறார்கள், 'இல்லை, நாங்கள் அவரைத் தொலைக்கவில்லை' என்று. அப்படியானால் நீங்கள் தேடுவது எதற்காக? அப்போது உங்கள் கண்களை மூடிக் கொள்ளுங்கள். உங்கள் தேடலின் விளைவாய் நீங்கள் அவரைக் கண்டபிடிக்க முடியாமல் போகலாம். தேடலில் நீங்கள் மிகுந்த அக்கறை கொண்டவராய் இருக்கலாம். உங்களுடைய இருப்புணர்வை நீங்கள் கூர்ந்து நோக்கவில்லை, மன்னாதி மன்னரானவர் முன்பே அங்கு அமர்ந்திருக்கிறார், நீங்கள் வீடு வந்து சேர்வதற்காய் காத்திருக்கிறார். நீங்கள் மிகப்பெரிய சாதகராயிருக்கிறீர்கள். எனவே, மெக்கா, மெதீனா, காசி, கயிலாயம் என்று போகிறீர்கள். உலகெங்கும் போய்க் கொண்டிருக்கிறீர்கள் ஓரிடத்தைத் தவிர - அது நீங்கள் இருக்குமிடம். கண்டுபிடிப்பவரே கண்டுபிடிக்கப்பட வேண்டியதாயிருக்கிறார்... ஒருவர் அமைதியாய், அசைவற்று இருக்கும்போது கண்டடையப் படும்.

புதிதாய் எதையும் முயன்று அடைவதில்லை. வெளியே பார்த்துக் கொண்டிருப்பதால் தவறவிட நேரும் என்கிற கருத்தை ஒருவர் எளிதாய் புரிந்துகொள்ளத் தொடங்குகிறார். உள்ளே பார்க்கிறபோது அங்கே அது இருக்கிறது. அது எப்போதும் அங்கேயிருக்கிறது. அது இல்லாத கணமொன்று ஒருபோதும் இருந்ததில்லை - காரணம், கடவுள் வெளியே இருப்பவரல்லர், உண்மை வெளியே நீங்கள் காணும்படியாய் இருப்பதல்ல. நீங்கள்தான் மேன்மைப்படுத்தப்படுவது, நீங்கள்தானே உங்களுடைய குறிப்பிடத்தக்க சிறப்புடன் இருப்பதும் நீங்கள்தான் உங்களுடைய முழுமையான தூய்மையுடன் இருப்பதும்.. இதனை நீங்கள் புரிந்து கொண்டால், பதஞ்சலியின் இத்தகைய சூத்திரங்கள் உங்களுக்கு எளிமையாகி விடும்.

'யோகத்தின் பல்வேறு அங்கங்களாய் சொல்லப்படுகிறவற்றை பயிற்சி செய்து மனதின் அசுத்தங்களைத் துடைத்தெறிய, அங்கே மெய்ம்மையின் விழிப்புணர்வை வளர்க்கும் ஆன்மாசார்ந்த ஒளி மேலெழும்.

ஏதோவென்று தோற்றுவிக்கப்பட வேண்டும் என்று அவர் சொல்லவில்லை, ஏதோவொன்று அழிக்கப்பட வேண்டும் என்று சொல்கிறார். நீங்கள் முன்பே உங்களுடைய இருப்புணர்வைக் காட்டிலும் கூடுதலாயிருக்கிறீர்கள் – இதுதான் பிரச்சினை. உங்களைச் சுற்றி நிறையவே நீங்கள் சேர்த்துக் கொண்டீர்கள், வைரத்தில் நிறைய மண் சேர்ந்திருக்கிற மாதிரி. மண்ணைக் கழுவி விட்டதும், சற்றும் எதிர்பாராத விதமாய் வைரம் இருக்கிறது. 'யோகத்தின் பல்வேறு அங்கங்களைப் பயிற்சி செய்து மனதின் அசுத்தங்களைத் துடைத்தெறிய....' அது தூய்மையை, புனிதத் தன்மையை கடவுள் தன்மையை உருவாக்குவது அல்ல. அது தூய்மையற்றதை அழிப்பது அவ்வளவே. நீங்கள் தூய்மையாகி விடுகிறீர்கள், நீங்கள் புனிதத்தன்மை கொண்டவராகிறீர்கள். பாதை முற்றிலும் வேறாகி விடுகிறது. அப்போது சிலவற்றை வெட்டியெறிய அல்லது விட்டுவிட வேண்டியிருக்கும். சிலவற்றை விலக்க வேண்டியிருக்கும்.

இதன் அடியாழத்தில் இருக்கிறது சந்நியாசத்தின், துறக்கும் செயலின் பொருள். அது வீட்டைத் துறப்பதற்கல்ல, குடும்பத்தைத் துறப்பதற்கல்ல, குழந்தைகளைத் துறப்பதற்கானதல்ல – அது ரொம்பக் குரூரமாய் தெரிகிறது. பரிவுள்ள மனிதனால் அந்தக் காரியத்தை எப்படிச் செய்ய முடியும்? மனைவியைத் துறப்பதற்கானதல்ல அது. காரணம் எந்த வகையிலும் அது பிரச்சினையாகாது. மனைவி கடவுளைத் தடுத்துக் கொண்டிருக்கவில்லை. குழந்தைகளோ அல்லது வீடோ தடையேற்படுத்திக் கொண்டிருக்கவில்லை. இல்லை, நீங்கள் அவற்றைத் துறந்தால் நீங்கள் புரிந்து கொள்ளவில்லை என்றாகும். உங்களுக்குள் சேர்த்துக் கொண்டிருக்கும் சிலவற்றை விட்டு விடுங்கள்.

நீங்கள் வீட்டைத் துறக்க விரும்பினால் உண்மையான வீட்டைத் துறந்து விடுங்கள். அது நீங்கள் தங்கி வாழ்ந்து கொண்டிருக்கும் உடம்பு. துறத்தலின் மூலம், 'போ, தற்கொலை செய்துகொள்' என்று நான் குறிப்பிடவில்லை, காரணம், அது துறத்தலாகாது. 'இந்த உடம்பு நீங்களல்ல' என்பதை அறிவதே போதுமானது. உங்கள் உடம்புக்கும் நீங்கள் கொடுந்துன்பம் கொடுக்க வேண்டும் என்கிற அவசியமில்லை. நீங்கள் உடம்பாக இல்லாதிருக்கலாம்; ஆனால் அந்த உடம்பும் கடவுளுடையது. நீங்கள் உடம்பாக இல்லாதிருக்கலாம், ஆனால், உடம்பு தன்னளவில் இயக்கமுள்ளது. அது வாழ்க்கையில் பங்கெடுக்கிறது. அது இந்த முழுமையின் ஒரு பகுதி. அவனிடம்

கொடூரமாய் நடந்து கொள்ளாதீர்கள். அதனிடம் வன்முறை சக்தியைப் பயன்படுத்த வேண்டாம். தனனைத்தானே வதைத்து இன்பம் காண்பவராகி விடாதீர்கள்.

மத நம்பிக்கை உடையவர்கள் ஏறக்குறைய தன்னைத்தானே வதைத்து இன்பம் காண்பவர்கள் (masochists) தாம். சுயவதை செய்பவராயிராதீர்கள். சித்ரவதை செய்பவர்களும், வன்முறையை மேற்கொள்பவர்களும் இரண்டு வகை. ஒன்று, பிறரைத் துன்புறுத்தி மகிழ்பவர்கள் - அரசியல்வாதிகள், அடால்ஃப் இட்லர்கள். அடுத்து, தன்னைத்தானே துன்புறுத்திக் கொள்பவர்கள் இருக்கிறாக்ள் - மத நம்பிக்கை இருப்பதாய் காட்டிக் கொள்பவர்கள், துறவிகள், மகாத்மாக்கள். இவர்கள் தங்களை வதைத்துக் கொளகிறார்கள். இவர்கள் தம்மைத்தாமே வதைத்து இன்பம் காண்பவர்கள். இரண்டு வகையும் ஒரே மாதிரியானவையே. அதே வன்முறை. நீங்கள் வேறொருவரின் உடம்பைத் துன்புறுத்தினாலும் அல்லது உங்களுடையதை என்றாலும் அதில் வேறுபாடில்லை - உங்கள் துன்புறுத்தல்கள் ஒரே மாதிரியானவைதாம்.

துறக்கும் செயல் சுய-வதை (self-torture) ஆகாது. அது சுயவதையானால், அதன் தலை மீது நிற்பது அரசியலாகத் தானிருக்கும். மற்றவர்களைத் துன்புறுத்திச் சமாளிக்க முடியாத கோழையாய் நீங்கள் இருககலாம். அதன்பின் உங்கள் உடம்பையே நீங்கள் துன்புறுத்திக் கொள்ளக்கூடும். மத நம்பிக்கை உடையவராய் காட்டிக்கொள்கிற நூறு பேரில் தொண்ணூற்று ஒன்பது பேர் தன்னைத்தானே துன்புறுத்திக் கொள்ளும் கோழைகள்தாம். அவர்கள் பிறரைத் துன்புறுத்த விரும்பினார்கள், ஆனால் அச்சமும், அபாயமும் இருந்தபடியால் அவர்களால் அதைச் செய்ய முடியவில்லை. எனவே, அவர்கள் மாசற்ற ஒரு பலியாளை(victim), எளிதில் ஊறுபடத்தக்கதை, உதவியற்ற ஒன்றைக் கண்டுபிடித்தார்கள்: அவர்களுடைய சொந்த உடம்பு. அவர்கள் இலட்சோபலட்சம் வழிகளில் அதைத் துன்புறுத்தினார்கள். இல்லை, துறக்கும் செயல் விழிப்புணர்வைக் குறிக்கும். துறத்தல் என்பதை மெய்யாக உணர்தல் எனலாம் - உடம்பல்ல நீங்கள் என்ற உண்மையை உணர்வது. நீங்கள் அதுவல்ல என்பது நன்றாகத் தெரிந்தும் அதனுள் வசிக்கிறீர்கள். ஒத்திருக்காவிட்டாலும் உடம்பு அழகானது. பிரபஞ்சத்தின் மிகப்பெரிய புரிந்துகொள்ள முடியாத புதிர்களில் அதுவும் ஒன்று. அரசர்களுக் கெல்லாம் அரசரானவர் மறைந்திருக்கும் கோயில் அது.

துறவு என்றால் என்னவென்று நீங்கள் புரிந்து கொள்ளும் போது, இது 'நேதி, நேதி' என்பதையும் புரிந்து கொள்வீர்கள். 'இந்த உடம்பு நானல்ல, ஏனெனில் இந்த உடம்பை நான் அறிவேன், அதுபற்றிய விழிப்புணர்வு என்னை வேறாகவும், வித்தியாசமாகவும் செய்திருக்கிறது' என்று நீங்கள் சொல்கிறீர்கள். இன்னும் ஆழத்துக்குப் போங்கள். வெங்காயத்தை உரித்துக் கொண்டே இருங்கள். 'எண்ணங்களல்ல நான். அவை வந்து செல்கிறவை. ஆனால் நான் இருக்கிறேன். உணர்ச்சிகள் நான் அல்ல... அவை சில சமயங்களில் வலுமிக்கதாயிருக்கும். அவற்றில் உங்களை முற்றாக மறந்து விடுகிறீர்கள். ஆனால் அவை போகிறவை. அவை இல்லாமல், நீங்கள் இருந்த காலமொன்று இருந்தது. அவை இருந்து அவற்றில் நீங்கள் மறைக்கப்பட்ட காலமொன்றும் இருந்தது. அவையெல்லாம் சென்று, நீங்கள் மட்டும் அங்கே அமர்ந்திருக்கிற காலம் மீண்டும் இருக்கிறது. நீங்கள் அவை முடியாது. நீங்கள் அவற்றில் இருந்து பிரிக்கப்பட்டவர்.

வெங்காயத்தை தோலுரித்துக் கொண்டே இருங்கள். இல்லை. உடம்பல்ல நீங்கள், சிந்தனையல்ல நீங்கள், உணர்வல்ல நீங்கள். இந்த மூன்று அடுக்குகளும் நீங்களல்ல என்பதைத் தெரிந்து கொண்டு விட்டால் உங்களுடைய 'நான்' என்கிற அகந்தை (Ego) தடயமே இல்லாமல் மறைந்து விடும். காரணம், இம்மூன்று அடுக்குகளுடன் உங்களை அடையாளப்படுத்திக் கொள்வதன்றி வேறல்ல அகந்தை. அப்போது நீங்கள் இருக்கிறீர்கள். ஆனால் 'நான்' என்று உங்களால் சொல்ல முடியாது. வார்த்தை பொருளை (meaning) இழக்கிறது. அகந்தை அங்கே இல்லை. நீங்கள் வீட்டை அடைகிறீர்கள்.

இதுவே சந்நியாசத்தின் பொருள். எதுவெல்லாம் நீங்கள் இல்லையோ எதையெல்லாம் நீங்கள் அடையாளமாய்க் கொண்டீர்களோ அவற்றை அது மறுக்கிறது. இதுவே அறுவை சிகிச்சை. இதுவே அழித்தல்.

"யோகாவின் பல்வேறு அங்கங்களைப் பயிற்சி செய்து அசுத்தத்தைத் துடைத்தெறிய..." இதுதான் அசுத்தம். நீங்கள் எதுவாக இல்லையோ அதுவாக உங்களை எண்ணிக் கொள்வதே அசுத்தம். என்னைத் தவறாய் புரிந்து கொள்ளாதீர்கள், உடம்பு அசுத்தமானது என்பதைப் புரிந்து கொள்வதற்கான சாத்தியம் எப்போதுமே உள்ளது. நான் அதைச் சொல்லவில்லை. நீங்கள் ஒரு கொள்கலனில் சுத்தமான பாலையும், மற்றொன்றில் சுத்தமான நீரையும் எடுத்துக் கொள்ளுங்கள்.

இரண்டையும் கலந்திடுங்கள். தற்போது அந்தக் கலவை இருமடங்கு சுத்தமானதாகி விடாது. இரண்டும் சுத்தமாகவே இருந்தன: நீர் சுத்தமாயிருந்தது, கங்கையிலிருந்து கொண்டு வரப்பட்டது, அத்துடன் பாலும் சுத்தமாயிருந்தது. இரண்டு தூய்மைகளை நீங்கள் கலந்தீர்கள், அதில் தூய்மையற்ற ஒன்று தோன்றியது – தூய்மை எதற்காக நீரும் பாலும் கலந்த இக்கலவையை அசுத்தமானது – தூய்மையற்றது என்கிறீர்கள்? அசுத்தம் புறப்பொருள் (foreign element) ஒன்றின் நுழைவைக் குறிப்பது. அது சொந்தமானதல்ல, அதன் இயல்புடையதுமல்ல. அத்துமீறி அதன் எல்லையில் பிரவேசித்த ஒன்று. பால் மட்டுமல்ல நீரும் அசுத்தந்தான். இரண்டும் தூய்மைகள் பொருந்தவும் தூய்மையற்றதாகி விடுகின்றன.

அக, தூய்மையற்றவற்றைத் துறக்கும்படி நான் சொல்கிறபோது, உங்கள் உடம்பு தூய்மையற்றது என்று நான் கருத்தில் கொள்ளவில்லை. உங்களுடைய மனம் தூய்மையற்றது என்று நான் குறிப்பிடவில்லை. உங்கள் உணர்வு தூய்மையற்றது என்றுகூட நான் கருதவில்லை. எதும் தூய்மையற்றதாகாது – ஆனால், நீங்கள் அடையாளம் காட்டி நிரூபிக்கிற போது அந்த அடையாளம் காணலே (identification) தூய்மையற்றதாகிறது. எல்லாம் தூய்மையாயிருக் கிறது. உங்கள் உடம்பு தன்னுடைய பொறுப்பில் இயங்கும்போது குறையற்றதாயிருக்கும், அதில் நீங்கள் தலையிடாதீர்கள். உடம்பின் தலையீடின்றி தானே முற்பட்டு இயங்கும்போது உங்கள் விழிப்புணர்வு குறையற்றதாயிருக்கும். தலையீடு இல்லாத பிரபஞ்ச இருப்பில் வாழும்போது நீங்கள் தூய்மையாயிருப்பீர்கள். எல்லாமே தூய்மையாயிருக்கிறது. நான் உடம்பைப் பழித்துக் கூறவில்லை. நான் எதையும் பழிப்பதில்லை. நான் குற்றம் சுமத்துகிறவனல்லன். அதனை எப்போது நினைவில் வைக்கக்கூடிய முக்கியக் கருத்தாக்கிக் கொள்ளுங்கள். இருக்கிறபடியே ஒவ்வொன்றும் அழகானவைதாம். ஆனால் அடையாளம் காணல் தூய்மையின்மையைத் தோற்று விக்கிறது.

நீங்கள் சிந்திக்கத் தொடங்கும்போது நீங்கள்தான் உடம்பாக இருக்கிறீர்கள், அந்த உடம்பின் மீது அனுமதியின்றி நுழைகிறீங்கள். அந்த உடம்பில் நீங்கள் நுழைகிறபோது உடம்பு உடனே எதிர்வினை புரிகிறது, உங்கள் மேல் நுழைகிறது. அப்போது தூய்மையற்ற தன்மை உண்டாகிறது.

பதஞ்சலி கூறுகிறார், "யோகாவின் அங்கங்களைப் பயிற்சி செய்வதன் மூலம் அசுத்தங்களைத் துடைத்தெறிய..." அடையாளத்தை, அடையாளம் காணலை அழிப்பதற்காக, உங்களுக்குள் இருக்கும் குளறுபடிகளை - குழப்பத்தை அழிப்பதற்காக, எங்கே ஒவ்வொன்றும் வேறொன்றாய் ஆகிவிட்டிருக்கிறதோ அங்கே அவற்றை அழிப்பதற்கு. எந்த மையமும் தானாக இயங்குவதில்லை, நீங்கள் ஒரு திரளாய், தொகுதியாயிருக்கிறீர்கள். ஒவ்வொன்றும் மற்றொன்றின் இயல்பில் தலையிட்டுக் கொண்டே இருக்கும். இதுதான் தூய்மையற்றத் தன்மை.

'...அசுத்தங்களைத் துடைத்தெறிய அங்கே ஆன்மா சார்ந்த ஒளி மேலெழுகிறது...' ஒருமுறை அசுத்தமானது அழிக்கப்பட்டு விட்டால் உடனே அங்கு ஒளியூட்டப்படுகிறது. அது வெளியில் இருந்து வருவதல்ல. அது உங்களுடைய உள்ளார்ந்த இருப்புணர்வின் தூய்மை. அதன் களங்கமின்மை, கன்னித்தன்மை. உங்களுக்குள் ஓர் ஒளி திகழும் தன்மை (luminosity) தோன்றுகிறது. எல்லாமும் தெளிவாயிருக்கிறது: குழப்பத்திரள் மறைந்து விடுகிறது, கண்டுணரும் திறன் தெளிவடைகிறது. தற்போது எதையும் உள்ளது உள்ளபடி பார்க்க உங்களால் முடிகிறது. முனைப்புறுதல்கள் (projections) இல்லை. எந்தவொரு நடைமுறையிலும் தவறான போக்கு இல்லை. நீங்கள் உள்ளது உள்ளபடி எதையும் வெளிப்படையாய் காண்கிறீர்கள். உங்களுடைய கண்கள் வெறுமையாயிருக்கின்றன, உங்களுடைய இருப்புணர்வு அமைதியாயிருக்கிறது. தற்போது உங்களுக்குள் எதுவும் இல்லை, எனவே உங்களால் முனைப்புற முடிவதில்லை. நீங்கள் அமைதியான பார்வையாளராய், சாட்சியாய் மாறி விடுகிறீர்கள் - அதுவே இருப்புணர்வின் தூய்மை. 'அங்கே மெய்ம்மையின் விழிப்புணர்வை வளர்க்கும் ஆன்மா சார்ந்த ஒளி மேலெழுகிறது.' பிறகு யோகத்தின் எட்டு அங்கங்கள். மிகவும் நிதானமுடன் என்னைப் பின்பற்றுங்கள், காரணம் பதஞ்சலியின் முக்கியமான விளக்கம் இங்கிருக்கிறது.

யமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்யகாரம், தாரணை, தியானம், சமாதி என்பன யோகத்தின் எட்டு அங்கங்கள்.

யமம் - தீமைகளைச் செய்யாமல் கட்டுப்பாட்டுடன் இருத்தல்

நியமம் - கடைப்பிடிக்க வேண்டிய பல்வேறு விதிகள்

ஆசனம் - உடலின் தோற்ற அமைவு
பிராணாயாமம் - மூச்சை அடக்குதல்
ப்ரத்யாஹாரம் - புலனுக்குரியவற்றில் இருந்து மனதை விலக்கிக் கொள்ளல்
தாரணை - மனதை ஒருமுனைப்படுத்துதல்
தியானம் - ஆழ்ந்து எண்ணும் நிலை
சமாதி - மெய்ம்மறந்த நிலை

யோகத்தின் எட்டு அங்கங்கள். ஒற்றை வார்த்தையில் ஒற்றை மூலத்தில் இருக்கிறது. ஒட்டுமொத்த யோக அறிவியலும். பல விசயங்களும் மறைமுகமாய் குறிப்பிடப்பட்டுள்ளன. முதலில் ஒவ்வொரு படியின் மிகச்சரியான பொருளைச் சொல்லி விடுகிறேன். ஒன்றை ஞாபகத்தில் வையுங்கள். பதஞ்சலி அவற்றைப் படிகள் என்றும் அங்கங்கள் என்றும் அழைக்கிறார். அவை இரண்டுமாய் இருக்கின்றன. ஒன்றன் பின் ஒன்றாய் அவை பின்பற்றப்படுவதால் படிகள் எனப்படுகின்றன. வளர்ச்சியின் தொடர்ச்சி இருக்கிறது. ஆனால் அவை படிகள் மட்டுமல்ல. யோக அமைப்பின் அங்கங்களுமாகும். அவை உள்ளார்ந்த இசைவை - ஒருமையைப் பெற்றிருக்கின்றன, உடலுறுப்புகள் சார்ந்த ஒருமை (unity) யையுங்கூட. அதுதான் அங்கங்களின் பொருள்.

எடுத்துக்காட்டாக - எனது கைகள், எனது பாதங்கள் எனது இதயம் இவை தனித்தனியே இயங்குவதில்லை. அவை தனித்தனியானவை யல்ல. அவை உறுப்புகள் சார்ந்த ஒருமையைக் கொண்டுள்ளன. இதயம் நின்றுவிடுமாயின் அப்போது கை வேலை செய்யாது. ஒவ்வொன்றும் ஒன்றோடொன்றாய் இணைந்துள்ளன. அவை ஓர் ஏணியின் படிகள் அல்ல, காரணம் ஏணியின் ஒவ்வொரு குறுக்குச் சட்டமும் தனித்தனியானவை. ஒரு குறுக்குச்சட்டம் உடைந்து விட்டால் ஏணியே உடைந்து விட்டதாகி விடாது. எனவேதான் பதஞ்சலி கூறுகிறார், அவற்றைப் படிகள் என்று. காரணம் அவை உறுதியான, ஒன்றையொன்று தொடர்ந்து வருகிற வளர்ச்சியைக் கொண்டுள்ளன. ஆனால் அவை அங்கங்களும்கூட, ஓர் உடலின் உறுப்புகள். நீங்கள் அவற்றுள் எதையும் விட முடியாது. படிகளை விட முடியும், உறுப்புகளை விட முடியாது. நீங்கள் இரண்டு படிகளை ஒரே தாவலில் கடக்கலாம். ஒரு படியை விடலாம். ஆனால், அங்கங்களை விடமுடியாது. அவை இயந்திரத்தின் பாகங்களல்ல, நீங்கள் அவற்றை

நீக்க முடியாது. அவை உங்களை உருவாக்குகின்றன. அவை முழுமைக்குச் சொந்தமானவை, அவை தனித்தனியானவை அல்ல. அவற்றின் மூலம் நடைபெறும் வேலைகள் ஓர் இணக்கமான தொகுப்பு ஆகும்.

ஆக, யோகத்தின் எட்டு அங்கங்களையும் படிகள் எனலாம். ஒன்றை இன்னொன்று பின்பற்றி வருவதாலும், அவை ஆழ்ந்த தொடர்பினைக் கொண்டிருப்பதாலும் அவற்றைப் படிகள் என்றும் அறியலாம். முதலாவதற்கு முன்பாய் இரண்டாவது வரமுடியாது. முதவாவது முதலாவதாகவும், இரண்டாவது இரண்டாவதாகவும் இருக்க வேண்டும். எட்டாவது எட்டாவதாகவே வரும் - அது நான்காவதாக முடியாது, முதலாவதாக முடியாது. எனவே அவை படிகளாயுள்ளன, உடலுறுப்புகள் சார்ந்த ஒருமையுடனும் இருக்கின்றன.

யமம் என்றால் தன்னைத்தானே கட்டுப்படுத்திக் கொள்வது என்று பொருள். ஆங்கிலத்தில் சொல் சிறிதளவு வேறுபடும். சிறிதளவென்ன 'யமம்' என்பதன் பொருள் முழுமையாகவே இழக்கப்பட்டு விடுகிறது. காரணம், ஆங்கிலத்தில் தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்வதென்பது (self restraint), மறைத்து வைப்பது (suppression), அடக்கி வைப்பது (repression) போன்றவையே. அடக்கி வைத்தல், மறைத்து வைத்தல் என்கிற இந்த இரண்டு சொற்களும், ஃப்ராய்டுக்குப் பிறகு விகாரம் (ugly) என்கிற நான்கு எழுத்துகளைக் கொண்ட சொல்லானது. தன்னைத் தானே கட்டுப்படுத்திக் கொள்வது அடக்கி வைப்பதாகாது. பதஞ்சலி 'யமம்' என்ற சொல்லைப் பயன்படுத்திய காலத்தில் அது முற்றிலும் வேறான பொருளைக் கொண்டிருந்தது. சொற்கள் மாறிக்கொண்டே போகின்றன. தற்போதும், இந்தியாவிலும் கூட 'ஸம்யம்' ('யம்'மிலிருந்து வந்தது) என்றால் கட்டுப்படுத்துதல், அடக்கி வைத்தல் என்று பொருள்படுகிறது. பொருள் இழக்கப்பட்டு விடுகிறது.

நீங்கள் ஒரு சுவையான நிகழ்ச்சியைக் கேட்டிருப்பீர்கள். இங்கிலாந்து மன்னர் முதலாம் ஜார்ஜ் என்பவரைப் பற்றியது. அவர் புனிதர் - ஜானின் தேவாலயம் உருவாகிக் கொண்டிருந்த போது அதைப் பார்க்கச் சென்றார். அது கலையின் தலைசிறந்த படைப்பு. அதை உருவாக்குகிற கட்டடக் கலைஞர், ஓவியர் அங்கிருந்தார். அவருடைய பெயர் கிறிஸ்டோபர் ரென் என்பதாகும். அரசர் அவரைக் கூர்ந்து நோக்கினார், பாராட்டினார். அவர் மூன்றே சொற்களைத்தாம் சொன்னார். 'அது வேடிக்கையாயிருக்கிறது, அச்சத்தையூட்டுகிறது,

செயற்கையாய் இருக்கிறது' என்று சொன்னார். கிறிஸ்டோபர் ரென் அந்தப் பாராட்டுகளைக் கேட்டு மகிழ்ச்சியடைந்தார். அந்தச் சொற்கள் ஒரே மாதிரியான பொருளைக் கொண்டிருக்கவில்லை. அந்த நாளில் மூந்நூறு ஆண்டுகளுக்கு முன் வேடிக்கையாயிருக்கிறது (amusing) என்ற சொல் வியப்படையச் செய்கிறது (amazing) என்றே பொருள் கொள்ளப்பட்டிருக்கிறது. அச்சத்தையூட்டுகிறது (awful) என்ற சொல் பயபக்தியைத் தூண்டுகிறது (awe inspiring) என்றும், செயற்கையாயிருக்கிறது (artificial) என்ற சொல் கலைத்திறன் கொண்டது (artistic) என்றும் பொருள் கொள்ளப்பட்டிருக்கிறது.

ஒவ்வொரு சொல்லுக்கும் ஒரு வாழ்க்கை வரலாறு உண்டு. அது பலமுறை மாறுகிறது. வாழ்க்கை மாறுவதைப் போல் ஒவ்வொன்றும் மாறும். சொற்கள் புதிய பண்புகளை, விளக்கங்களைப் பெறும். உண்மையில் மாறும் திறன்கொண்ட சொற்களே உயிரோட்டத்துடன் இருக்கும். இல்லையேல் அவை செயலற்றுப் போகும். பழங்காலச் சொற்கள் மாறுவதில் தயக்கம் காட்டும், மடிந்து விடும். உயிருள்ள வார்த்தைகள் ஒரு புதிய பொருளை (meaning)த் தேடிக் கொள்பவை, அவை மட்டுமே வாழும். அவை பல்வேறு பொருள்களுடன் நூற்றாண்டுகளாய் வாழ்கின்றன. பதஞ்சலியின் காலத்தில் 'யமம்' ஓர் அழகான வார்த்தை, அழகானவற்றுள் ஒன்றாயிருந்தது... ப்ராய்டுக்குப் பிறகு அந்த வார்த்தை விகாரமடைந்து விட்டது - பொருள் மட்டுமா மாறிப்போனது, வார்த்தையின் தரமும், சுவையும் கூடத்தான்.

பதஞ்சலியைப் பொறுத்தவரை தன்னைத்தானே கட்டுப்படுத்திக் கொள்வதென்பது அடக்கி வைத்தலாகாது. அதன் பொருள் ஒருவரின் வாழ்க்கையை வழிப்படுத்துவதாகும், வழிகாட்டலை - அதற்கான அறிவுரையை வழங்குவதாகும். காரணம் நீங்கள் வாழ்கிற வாழ்க்கை எதிரிடையான திக்குகளில், பல்வேறு திக்குகளில் போய்க் கொண்டிருப்பது - அப்போது நீங்கள் எங்கேயும் போய்ச் சேர மாட்டீர்கள். அது ஒரு கார் மாதிரி. ஓட்டுநர் வடக்கே சில மைல்கள் போகிறார், பிறகு மனதை மாற்றிக்கொள்கிறார், தெற்கில் சில மைல்கள் போகிறார். பிறகு மனதை மாற்றிக் கொண்டு மேற்கே செல்கிறார். மீண்டும் மனதை மாற்றிக் கொண்டவர் இந்த வழியில் செல்கிறார். அவர் எங்கே பிறந்தாரோ அங்கேயே மடிகிறார். அவர் எங்கேயும் சென்றடைவதில்லை. நிறைவான உணர்வை அவர் ஒருபோதும் பெறுவதில்லை. நீங்கள் பல வழிகளிலும் போய்க் கொண்டிருப்பீர்கள். ஆனால் ஒரு குறிப்பிட்ட போக்கினை மேற்கொள்ளாதவரை நீங்கள்

பயனில்லாது போகிறவர்தாம். நீங்கள் மேலும் மேலும் ஏமாற்றத்துக்குள் ளாவீர்கள். வேறெதுவும் நடக்காது.

தனக்குத்தானே கட்டுப்படுத்தலைத் தோற்றுவித்துக் கொள்ள முதலில் உங்கள் உயிர்ச்சக்திக்கு ஒரு ஏவுரையை (direction)க் கொடுக்க வேண்டும். நீங்கள் அதனை அறிவிற்கு பொருத்தமில்லாத, அறிவுறுத்தப்படாத வழிகளில் பயன்படுத்தினால், நீங்கள் எவ்விடத்தையும் சென்றடைய மாட்டீர்கள். சற்று முன்பாகவோ பின்பாகவோ உங்கள் சக்தி தீர்ந்து போகும். அதனால் ஏற்படும் வெறுமை ஒரு புத்தருடைய வெறுமையாகாது. அது ஒரு மறுக்கக்கூடிய வெறுமையாகவே இருக்கும். உள்ளே ஏதுமற்ற காலிப்பாத்திரமாய். நீங்கள் உயிரற்றுப் போவதற்கு முன்பே செயலற்றுப் போவீர்கள். இத்தகைய கட்டுப்படுத்தப்பட்ட சக்திகள் இயற்கையும், பிரபஞ்ச இருப்பும், கடவுளும் உங்களுக்கு வழங்கியதாகும். இந்த வரம்புக்குட்பட்ட சக்திகளை வரம்பற்ற ஒன்றுக்கு வாசலாய் பயன்படுத்த முடியும். நீங்கள் சரியாகச் செயல்படுவீர்களாயின், நீங்கள் பிரக்ஞையோடு, எச்சரிக்கையோடு செயல்படுவீர்களாயின், உங்களுடைய சக்திகளைத் திரட்டிக்கொண்டு ஒரே திக்கில் செல்வீர்களாயின், நீங்கள் ஒரு திரளாக இல்லாமல் தனிநபர் என்கிற நிலையை அடைவீர்களாயின் - அதுவே 'யமம்' என்பதன் பொருளாகும்.

பொதுவாக, உள்ளுக்குள் பல குரல்களுடன், ஒரு கூட்டமாய் நீங்கள் இருப்பீர்கள். இந்தத் திக்கில் போ' என்று ஒரு குரல் சொல்லும். 'அது பயனில்லை, இப்படிப் போ' என்று மற்றொன்று சொல்லும். ஒன்று கூறும் "ஆலயத்திற்குச் செல்" என்று. மற்றொன்று கூறும், "திரையரங்கிற்குச் செல்வதே சிறந்தது" என்று. அதுவுமல்லாமல், நீங்கள் எந்தவோர் இடத்திலும் தொல்லையில்லாமல் இருந்ததில்லை, காரணம், எங்கிருந்தாலும் வருந்திக் கொண்டிருப்பீர்கள். நீங்கள் திரையரங்கிற்குச் சென்றால், ஆலயத்திற்கு போகச் சொன்ன குரல், உங்களைத் தொல்லைப்படுத்திக் கொண்டேயிருக்கும். "இங்கே எதற்காக நேரத்தை வீணடித்துக் கொண்டிருக்கிறாய்? நீ ஆலயத்தில் அல்லவா இருந்திருக்க வேண்டும்... பிரார்த்தனை அருமையான விசயம். அங்கே என்ன நடக்கிறதென்று யாருக்கும் தெரியாது. இது நீ ஞானம் பெறுவதற்கு வாய்ப்பாக இருக்கலாம். ஆனாலும் நீ தவற விட்டுவிட்டாய்" என்று கூறும். நீங்கள் ஆலயத்திற்குச் சென்றாலோ,

திரையரங்கிற்குப் போகச்சொல்லி வற்புறுத்திய அதே குரல். "நீ இங்கு என்ன செய்து கொண்டிருக்கிறாய்? ஒரு முட்டாள் மாதிரி இங்கே உட்கார்ந்திருக்கிறாய்?" என்று கேட்கும். உங்களைச் சுற்றி முட்டாள்கள் அமர்ந்திருப்பதை, பயனற்ற காரியங்கள் செய்து கொண்டிருப்பதை நீங்கள் காண்பீர்கள் - எதுவும் நிகழ்வதில்லை. திரையரங்கில் கிளர்ச்சியும், பரவசமும் எந்த அளவு சாத்தியம் என்பது யாருக்குத் தெரியும்? நீங்கள் தவற விடுகிறீர்கள்.

நீங்கள் தனியாக இல்லாமல் குழுவில் ஒருவராய் இருந்தால், எங்கிருந்தாலும், எப்போதும் தவறவிடுவீர்கள். நீங்கள் எவ்விடத்திலும் வீட்டில் இருப்பதில்லை. எப்போதும் எங்காவது சென்று கொண்டிருக்கிற நீங்கள் ஒருபோதும் ஓரிடத்தை அடைய மாட்டீர்கள். 'யமம்' என்கிற அங்கத்திற்கு மாறான வாழ்க்கை பித்து நிலையை அடையும். நீங்கள் பைத்தியமாகி விடுவீர்கள். கிழக்கில் இருப்பவர்களைவிட மேற்கில்தான் பித்துப் பிடித்தவர்கள் அதிகம் என்றால் ஆச்சரியப்படுவதற்கில்லை. கிழக்கு - தெரிந்தோ தெரியாமலோ இன்னமும் ஓரளவேனும் தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டு வாழ்கிற வாழ்க்கையைத் தொடர்கிறது. மேற்கில் சுய கட்டுப்பாடு (*self-restraint*) பற்றி எண்ணுவதே அடிமை நிலையாய் தெரிகிறது. சுய கட்டுப்பாட்டுக்கு மாறாக இருப்பதே தடையற்றதாய், சுதந்திரமாய் தெரிகிறது அவர்களுக்கு.

நீங்கள் தனித்தன்மையுள்ளவராக இல்லாவிடில் தடையற்றவராய் இருக்க முடியாது. உங்கள் சுதந்திரமே ஒரு வஞ்சனையாகி விடும், அது தற்கொலையன்றி வேறில்லை. உங்களை நீங்களே கொன்று விடக்கூடும், உங்கள் சாத்தியங்களை அழித்து விடுவீர்கள், உங்கள் சக்திகளையுந்தான். அத்துடன் நீங்கள் மனப்பூர்வமாக முயன்று பார்த்த இந்த வாழ்க்கையில் இருந்து எதுவுமே பெறப்படவில்லை என்பதை, அதில் எந்த வளர்ச்சியும் காணப்படவில்லை என்பதையும் ஒருநாள் உணர்வீர்கள்.

தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்வதென்பது வாழ்க்கைக்கு ஒரு வழிகாட்டுதலை அளிப்பதாகும். தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்வது கூடுதலாய் மையம் கொள்வதையும் குறிக்கும். நீங்கள் இன்னும் கொஞ்சம் கூடுதலாய் மையம் கொள்வது எப்படி? ஒருமுறை உங்கள் வாழ்விற்கு நீங்கள் வழிகாட்டுதலை அளித்து விட்டால் உடனே உங்களுக்குள் ஒரு மையம் நிகழத் தொடங்குகிறது. வழிகாட்டுதல்

மையத்தை உருவாக்குகிறது. பிறகு மையம் வழிகாட்டலை வழங்குகிறது. அவை ஒன்றையொன்று நிறைவு செய்வதாயிருக்கும்.

நீங்கள் சுயகட்டுப்பாட்டுடன் இல்லாவிடில் இரண்டாவது சாத்தியமற்றதாகும் - அதனால்தான் பதஞ்சலி அவற்றைப் படிகள் என்கிறார். இரண்டாவது நியமம்; கடைப்பிடிக்க வேண்டிய பல விதிகளை நிலையாக்குதல்: ஒரு கட்டுப்பாடுள்ள வாழ்க்கை, ஓர் ஒழுங்குமுறை கொண்ட வாழ்க்கை, மிகத் தீவிரமில்லாமல் ஒழுக்கத்துடன் வாழ்கிற வாழ்க்கை முறையானது... அதுவும் கூட உங்களுக்கு அடிமைத்தனம் போல் ஒலிக்கும். பதஞ்சலியின் காலத்தில் இருந்த அழகான வார்த்தைகளெல்லாம் இன்று அருவருப்பான தோற்றம் கொண்டு விட்டன. ஆனால் நான் சொல்கிறேன். உங்கள் வாழ்க்கையில் ஓர் ஒழுங்கு முறை கட்டுப்பாடு இல்லாவிட்டால் உங்களுடைய உள்ளுணர்வுகளுக்கே நீங்கள் அடிமையாக நேரிடும் - இதனை உங்கள் சுதந்திரமாய் நீங்கள் எண்ணிக் கொள்ளலாம். ஆனால் அலைந்து திரிகிற எண்ணங்கள் அனைத்துக்கும் அடிமையாகி விடுவீர்கள். இதுவல்ல சுதந்திரம். கண்ணுக்குத் தெரியக்கூடிய ஒரு குருவை நீங்கள் அடையாதிருக்கலாம். ஆனால் பல கண்ணுக்குத் தெரியாத பல குருமார்கள் உங்களுக்குள் இருக்கிறார்கள். அவர்கள் தொடர்ந்து உங்கள் மீது அதிகாரம் செலுத்துவார்கள். ஒழுங்கு முறையோடு கூடிய ஒருவர்தான் என்றாவது ஒருநாள் குருவாக முடியும்.

அதுகூட இன்னமும் தொலைவில்தான் இருக்கிறது - காரணம் உண்மையான குருநிலை எட்டாவது படியை எட்டிப் பிடித்த பிறகே வாய்க்கிறது - அதுவே அடைய விரும்பும் முடிவு (goal). அப்போது ஒருவன் 'ஜினா'வாகிறான் (வெற்றி கொள்பவன்).பிறகு அவன் விழிப்புற்ற ஒரு புத்தராகிறான். பிறகு ஒருவன் கிறிஸ்துவாய், ஓர் இரட்சகனாய் மாறுகிறான், காரணம் நீங்கள் இரட்சிக்கப்பட்டால், உடனே, மற்றவர்களுக்கு ஓர் இரட்சகனாகி விடுவீர்கள். நீங்கள் அவர்களைக் காக்க முயற்சிக்கிறீர்கள் என்பதற்காகவல்ல, உங்களுடைய முன்னிலையே அவர்களைக் காப்பாற்றுகிற சக்தியாயிருக்கும். நியமம் இரண்டாவதாயிருக்கிறது, விதிகளை நிலையாக்குதல்.

மூன்றாவது உடலின் தோற்ற அமைவு (posture). ஒவ்வொரு முந்தைய படியும் முதலாவது படியில் இருந்தே வருகிறது. உங்கள் வாழ்க்கையில் ஒழுங்குமுறையைக் கடைப்பிடித்தால் மட்டுமே

ஆசனத்தை - உடலின் தோற்ற அமைவை நீங்கள் அடைய முடியும். ஆசனத்தை சிலமுறை செய்து பாருங்கள். அமைதியாய் உட்கார்ந்திருக்க முயலுங்கள். உங்களால் முடியாது - உடம்பு உங்களுக்கெதிராய் கிளர்ச்சி செய்ய முற்படும். எதிர்பாராத விதமாய் உடம்பில் இங்கும் அங்கும் வலியை உணரத் தொடங்குவீர்கள். கால்கள் செயலற்றுப் போய்விடும். உடம்பின் பல இடங்களில் ஓர் அமைதியற்ற தன்மையை திடீரென்று உணரத் தொடங்குவீர்கள். ஒருபோதும் அதை நீங்கள் உணர்ந்ததில்லை. அமைதியாய் உட்கார்ந்திருக்கும்போது ஏன் இப்படிப் பிரச்சினைகள் எழுகின்றன? எறும்புகள் மேலே ஊர்ந்து செல்கிற மாதிரி நீங்கள் உணர்வீர்கள். கவனியுங்கள், எந்தவோர் எறும்பும் அங்கே இல்லை, உடம்பு உங்களை ஏமாற்றுகிறது. உடம்பு கட்டுப்படத் தயாராயில்லை. உடம்பு பாழ்பட்டு விட்டது. நீங்கள் சொல்வதைக் கவனித்துக் கேட்க உடம்பு விரும்புவதில்லை. அது தனக்குத்தானே குருவாகி விடுகிறது. நீங்கள் எப்போதுமே அதைப் பின்பற்றுகிறீர்கள். தற்போது, சில நிமிடங்களுக்கு அமைதியாய் அமர்ந்திருப்பதும் சாத்தியமற்றதாகிறது.

நீங்கள் அமைதியாய் உட்கார்ந்திருக்கும்படி மக்களிடம் சொன்னால் அவர்களும் அத்தகைய நரகத்தின் வழியாகத்தான் வந்தாக வேண்டும். நான் யாரிடமாவது இதனைக் கூறினால் அவர் சொல்வார். "ஒன்றும் செய்யாமல் அப்படியே உட்கார்ந்திருக்க வேண்டுமா?" - 'செய்தல்' ஒரு கருத்தாவேசம் (obsession) ஆகிவிடுகிறது. அவர், "குறைந்தபட்சம் ஒரு மந்திரத்தையாவது கொடுங்கள், நான் பாட்டுக்கு உள்ளுக்குள் செபித்துக் கொண்டு இருக்க முடியுமே" என்பார். அவருக்கு ஏதாவதொரு வேலை வேண்டும். சும்மா உட்கார்ந்திருப்பது கடினமாய் தெரிகிறது. அதுதான் ஒரு மனிதனுக்கு நேரிடக்கூடிய அருமையான சாத்தியம்: எதுவுமே செய்யாமல் அமைதியாய் உட்கார்ந்திருப்பது.

ஆசனம் என்பது இறுக்கம் தளர்ந்த ஒரு தோற்ற நிலை. அந்நிலையில் நீங்கள் மிகவும் தணிவாய், அமைதியாயிருக்கிறீர்கள். எவ்வகையிலும் உடம்பை அசைக்கிற அவசியமில்லை. அந்தத் தருணத்தில், திடீரென்று நீங்கள் உடம்பைக் கடந்து உயர்நிலைக்குச் செல்கிறீர்கள்.

உடம்பு உங்களைக் கீழே கொண்டுவர முயலும். 'இதோ பார், எறும்புகள் பலவும் மேலே ஊர்ந்து செல்கின்றன' என்று சொல்லும். அல்லது கீறல், அரிப்பு மாதிரி ஏதோ ஒன்று கிளர்ச்சியை ஏற்படுத்தும்.

உடம்பு சொல்லிக் கொண்டிருக்கும் 'ரொம்ப தூரத்திற்குப் போய்விடாதே. திரும்பி வந்துவிடு. எங்கே போய்க் கொண்டிருக்கிறாய்?' என்று - காரணம் பிரக்ஞை மேல்நோக்கி நகர்வது, உடல் சார்ந்த இருப்பிலிருந்து வெகு தொலைவிற்குச் சென்று விடுவது. ம்...? உடம்பு கிளர்ச்சி செய்யத் தொடங்குகிறது. நீங்கள் ஒருபோதும் அத்தகைய செயலைச் செய்திருக்க மாட்டீர்கள். உடம்பு பிரச்சினைகளைத் தோற்றுவிக்கும் உங்களுக்காக, ஒருமுறை பிரச்சினை தோன்றிவிட்டால் நீங்கள் திரும்பி வந்து விடுவீர்கள். உடம்பு உங்களுடைய கவனத்தை வேண்டுகிறது. 'உனது கவனிப்பைக் கொடு' என்று கேட்கும். அது வலியை உண்டுபண்ணும். அது அரிப்புணர்வை உண்டாக்கும். நீங்கள் அரிப்பதாய் உணர்வீர்கள். உடம்பு திடீரென்று வழக்கத்துக்கு மாறாகி விடும். அது கிளர்ச்சி செய்யும். அது உடல்சார்ந்த அரசியல். நீங்கள் திரும்பவும் அழைக்கப்படுவீர்கள். "வெகு தூரம் போய்விடாதே. சுவாதீனமாயிரு, இங்கேயே இரு" - உடம்போடும், உலகோடும் உன்னைக் கட்டி வைத்திரு. நீங்கள் வானை நோக்கிச் செல்கிறீர்கள், உடம்பு அச்சமாய் உணர்கிறது.

கட்டுப்பாடான, விதிகளைக் கடைப்பிடிக்கிற, ஒழுங்குமுறையோடு கூடிய வாழ்க்கை வாழும் ஒருவருக்கே ஆசனம் அமையும், அப்போதுதான் தோற்ற நிலையும் சாத்தியமாகும். பிறகு உங்களால் எளிதாய் அமர முடியும். காரணம், நீங்கள் ஒழுங்கு முறையைக் கடைப்பிடிப்பவர் என்பதை உடம்பு அறிகிறது. நீங்கள் அமர விரும்பினால் அமர முடியும் - உங்களுக்கு மாறாக எதையும் செய்ய முடியாது. உடம்பு பல விசயங்களையும் சொல்லிக்கொண்டே இருக்கும்... கொஞ்சம் கொஞ்சமாய் அது நின்றுவிடும். கவனித்துக் கேட்க யாரும் இருக்க மாட்டார்கள். அது கட்டுப்படுத்துதல் அல்ல. நீங்கள் உடம்பைக் கட்டுப்படுத்திக் கொண்டிருக்கவில்லை. மாறாக உடம்பு உங்களைக் கட்டுப்படுத்த முயற்சிக்கும். அது கட்டுப்படுத்தல் ஆகாது. உடம்பைச் செயல்படும்படி நீங்கள் எதையும் சொல்லிக் கொண்டிருக்கவில்லை. நீங்கள் ஓய்வில் இருக்கிறீர்கள். ஆனால், உடம்பு ஓய்வென்பதை அறியாது. காரணம் நீங்கள் ஒருபோதும் அதற்கு ஓய்வு கொடுத்ததில்லை. எப்போதும் அமைதியற்றவராயிருக்கிறீர்கள். ஆசனம் என்ற சொல்லுக்கு மிகச்சரியான பொருள் அமைதி. ஆழ்ந்த அமைதியில் இருத்தல். உங்களால் அது முடியுமானால் பல செயல்களும் உங்களுக்குச் சாத்தியமாகி விடும்.

உடம்பு ஓய்வில் இருந்தால் அப்போது சுவாசத்தை உங்களால் முறைப்படுத்த முடியும். நீங்கள் ஆழ்ந்து செயல்படுகிறீர்கள், காரணம் மூச்சு உடம்புக்கும் உயிருக்கும் ஒரு பாலமாயிருக்கிறது. உங்களால் சுவாசத்தை முறைப்படுத்த முடிந்தால் - அது பிராணாயாமம் - உங்கள் மனதின் மீது நீங்கள் அதிகாரம் பெறுகிறீர்கள்.

மனம் மாறுகிற போதெல்லாம், மூச்சின் சீர்த்தன்மை (rhythm) உடனே மாறுவதை நீங்கள் எப்போதாவது கவனித்திருக்கிறீர்களா? நீங்கள் எதிரிடையானதைச் செய்தால் - மூச்சின் சீர்த்தன்மையை மாற்றினால் - மனம் உடனே மாறிவிடும். நீங்கள் கோபமாயிருக்கும் போது உங்களால் அமைதியாகச் சுவாசிக்க முடியாது. இல்லையேல் கோபம் மறைந்து விடும். முயன்று பாருங்கள், நீங்கள் கோபமாய் உணரும்போது உங்கள் மூச்சு தாறுமாறாகி விட்டிருக்கும். அது ஒழுங்கற்றதாகும். சீர்த்தன்மையை இழக்கும், பெருங்கூச்சலிடும், அமைதியற்றதாகும். இனியும் அது ஒரு சீர்த்தன்மையாயிருக்காது. ஒரு முரண்பாடு அங்கே இருக்கத் தொடங்கும். இணக்கத்தன்மை இழக்கப்பட்டு விடும். ஒன்றைச் சோதித்தறியுங்கள். நீங்கள் கோபப்படுகிற போது - கொஞ்சம் தளர்வு நிலை அடைந்து, மூச்சை சீராக விடுங்கள். எதிர்பாராத விதமாய் உங்கள் கோபம் மறைந்து விட்டிருக்கும். உங்கள் உடம்பில் ஒரு குறிப்பிட்ட வகையான சுவாசம் இல்லாமல் கோபம் இடம்பெற முடியாது.

நீங்கள் உடலுறவில் ஈடுபடும்போது உங்கள் மூச்சு மாறுகிறது. ரொம்பவும் உணர்ச்சி வேகம் கொண்டு விடுகிறது. நீங்கள் பாலியல் பண்பால் நிரம்பி விடுகிறபோது மூச்சு மாறுகிறது. அது உணர்ச்சி வேகம் கொண்டு விடுகிறது. உடலுறவு தன்னுள் சிறிதளவு வன்முறை உடையது. காதல் புரிபவர்கள் ஒருவரையொருவர் கடிப்பது, தெரிந்ததுதான். சில நேரங்களில் ஒருவருக்கொருவர் வன்முறையாய் நடந்து கொள்கிறார்கள். உறவாடுகிறவர்கள் ஏதோ ஒரு வகையில் போரிடுகிறார்கள். அதில் கொஞ்சம் வன்முறை கலந்திருக்கும். இருவரும் தாறுமாறாய் மூச்சு விடுவார்கள், அவர்களுடைய மூச்சுகளில் சீர்த்தன்மையோ, ஒத்திசைவோ இருக்காது.

தந்த்ராவில் பாலுறவு பற்றியும், பாலுறவின் மாற்றம் பற்றியும் நிறையவே ஆய்வு மேற்கொள்ளப்பட்டிருக்கிறது. மூச்சின் சீர்த்தன்மை குறித்து அவர்கள் ஆய்வு செய்திருக்கிறார்கள். காதல் கொண்ட இருவர் கலவி புரியும்போது சீராக மூச்சு விட்டுக்கொண்டு

ஒத்திசைவுடன் இருக்க முடிந்தால், இருவரிடமும் ஒரே சீர்த்தன்மை இருந்தால் அப்போது வெளிப்பாடு (ejaculation) இருக்காது. அவர்கள் மணிக்கணக்கில் உறவு கொள்ள முடியும். காரணம், மூச்சு சீராக இல்லாத போதுதான் வெளிப்பாடு நிகழ்த்தப்படுகிறது. அப்போது உடம்பு சக்தியை வெளியே உமிழ்ந்து விடுகிறது. மூச்சு சீர்த்தன்மையுடன் இருந்தால் உடம்பு சக்தியை உறிஞ்சிக் கொள்கிறது. வெளியே வீசி எறிவதில்லை. மூச்சின் சீர்த்தன்மையை மாற்றுவதற்கான உத்திகள் பலவற்றை தந்த்ரா வளரச் செய்திருக்கிறது. பிறகு நீங்கள் மணிக்கணக்கில் உடலுறவு கொண்டிருக்க முடியும், சக்தியை இழக்க மாட்டீர்கள். வேறுவிதமாய் சொல்வதெனில் நீங்கள் முன்னேற்றம் காண்கிறீர்கள். எவ்வாறெனில் கலவியின் போது ஓர் ஆண் பெண்ணுக்கும், ஒரு பெண் ஆணுடனும் உறவு கொள்கிறார்கள், தங்களை மீண்டும் புதுப்பித்துக் கொள்ள ஒருவருக்கொருவர் உதவிக் கொள்கிறார்கள் - காரணம் அவர்கள் மாறுபட்ட சக்திகள். ஒன்றுக்கொன்று மாறுபட்ட சக்திகள் எதிர்கொள்ளும்போது பொறி பறக்கின்றன, அவை ஒன்றுக்கொன்று மின்னாற்றலை ஊட்டிக் கொள்ளும். இல்லையேல் சக்தி இழக்கப்படும், கலவிக்குப் பிறகு, நீங்கள் ஏமாற்றப்பட்டதாய், வஞ்சிக்கப்பட்டதாய் உணர்வீர்கள் - நிறைய நம்பிக்கையுடனும், வெற்றான கைகளுடனும் இருக்க நேரிடும்.

ஆசனத்திற்குப் பிறகு வருவது பிராணாயாமம் என்கிற சுவாசத்தை முறைப்படுத்தல் ஆகும். சில நாட்கள் கவனித்திருந்து, குறிப்பெடுங்கள். நீங்கள் கோபமுற்றிருக்கும் போது உங்கள் மூச்சின் சீர்த்தன்மை எப்படி இருக்கிறது - வெளிமூச்சு நெடியதாயிருக்கிறதா அல்லது உள்மூச்சு நெடியதாயிருக்கிறதா அல்லது அவை ஒரே மாதிரியானவைதாமா, அல்லது உள்மூச்சு குறுகியதாயும் வெளிமூச்சு மிக நெடியதாயும் இருக்கிறதா என்பதைக் கண்டறியுங்கள். உள்மூச்சு மற்றும் வெளிமூச்சின் விகிதத்தைக் கவனியுங்கள். நீங்கள் பாலியல் ரீதியாய் கிளர்ச்சியுறும் போதும் கவனித்து குறிப்பெடுங்கள். சில சமயம் இரவில் ஆகாயத்தைப் பார்த்தபடி அமைதியாய் உட்கார்ந்திருப்பீர்கள். உங்களைச் சுற்றியிருக்கிற ஒவ்வொன்றும் அசைவில்லாமல் இருக்கும், அப்போது உங்கள் சுவாசம் எப்படியிருக்கிறது என்பதைக் கவனியுங்கள். நீங்கள் பரிவுணர்ச்சியால் நிரம்பியிருக்கும் போது கவனித்து குறிப்பெடுங்கள். உங்கள் சுவாசம் பற்றிய வரைபடத்தை (அட்டவணை)த் தயாரித்துக் கொள்ளுங்கள். அப்போது நீங்கள் நிறையவே தெரிந்து கொள்வீர்கள்.

பிராணாயாமம் என்பது போதிக்கக் கூடியதில்லை. நீங்களாக அதைக் கண்டறிய வேண்டும். காரணம், ஒவ்வொருவருடைய மூச்சும் வெவ்வேறு சீர்த்தன்மை கொண்டதாயிருக்கும். ஒவ்வொருவருடைய மூச்சும் அதன் சீர்த்தன்மையும் பெருவிரல் இரேகை மாதிரி அதிக அளவில் வேறுபடும். சுவாசித்தல் என்பது தனி நபருக்குரிய நிகழ்வு. அதனால்தான் நான் அதை ஒரு காலத்திலும் போதிப்பதில்லை. உங்களுடைய சீர்த்தன்மையை நீங்கள்தாம் கண்டுபிடிக்க வேண்டும். உங்கள் சீர்த்தன்மை வேறொருவருடைய சீர்த்தன்மையாகாது. அல்லது வேறொருவருக்கு அது தீங்கு விளைவிப்பதாயிருக்கலாம். உங்களுடைய சீர்த்தன்மையை - நீங்கள்தான் கண்டறிய வேண்டும்.

அது ஒன்றும் கடின காரியமல்ல. சிறப்பறிவு கொண்ட எவரிடமும் கேட்டறிய வேண்டிய அவசியமில்லை. உங்களுடைய மனநிலைகள், வாழ்க்கை இயல்புகள் (நிலைமைகள்) பற்றி ஒரு மாதத்துக்கான வரைபடத்தைத் தயார் செய்யுங்கள். நீங்கள் எந்தச் சீர்த்தன்மையில் மிகவும் அமைதியாய், ஓய்வாய் உணர்கிறீர்கள், எந்தச் சீர்த்தன்மையில் தொல்லையற்றதாய், கிளர்ச்சியற்று உணர்கிறீர்கள், எந்தச் சீர்த்தன்மையில் அறிந்திராத ஒன்றால் நிரப்பப்பட்ட, நிரம்பி வழிகிற பரமசுகத்தை உணர்கிறீர்கள் என்பதை அப்போது அறிவீர்கள். அந்தக் கணத்தில் நீங்கள் மிகுதியான அளவில் பெற்றிருப்பீர்கள். உலகம் முழுமைக்கும் கொடுத்தாலும் அது தீர்ந்து போகாது. பிரபஞ்சத்துடன் நீங்கள் ஒன்றாகும் அந்தக் கணத்தைக் கவனியுங்கள், அனுபவித்துணருங்கள். அங்கே அதற்கு மேலும் விலகல் இல்லை; பாலமிடப்பட்டிருக்கிறது என்பதை உணர்வீர்கள். மரங்களுடனும், பறவைகளுடனும், நதிகளுடனும், பாறைகளுடனும், கடல் மற்றும் மணலுடனும் நீங்கள் ஒன்ற முடிவதை உணருங்கள், கவனியுங்கள். உங்கள் மூச்சில் பல சீர்த்தன்மைகள் இருப்பதை, மிகப்பெரிய நிறமாலை (spectrum)யைக் கண்டு கொள்வீர்கள். மிகவும் உணர்ச்சி வேகம் மிக்க, அருவருக்கத்தக்க, நரகம் போன்ற கொடுமையான பிரிவில் இருந்து, மிகவும் அமைதியான சொர்க்கப்பிரிவு வரை பல சீர்த்தன்மைகள்.

அதன்பிறகு உங்களுடைய சீர்த்தன்மையை நீங்கள் கண்டறிந்ததும் அதைப் பயிற்சி செய்யுங்கள், உங்கள் வாழ்வின் ஒரு பகுதியாக்கிக் கொள்ளுங்கள். காலப்போக்கில் அது பிரக்ஞையற்றதாகி விடும். பிறகு நீங்கள் மட்டுமே அந்தச் சீர்த்தன்மையில் சுவாசித்துக்

கொண்டிருப்பீர்கள். அந்தத் தன்மையோடு உங்கள் வாழ்க்கை ஒரு யோகியின் வாழ்க்கையைப் போலாகி விடும். நீங்கள் கோபப்பட மாட்டீர்கள். உங்களிடம் பால்சார்ந்த உணர்வும் மிகுதியாயிருக்காது. முடிந்தவரை விரோத மனப்பான்மையையும் கொண்டிருக்க மாட்டீர்கள். திடீரென்று உங்களிடம் ஓர் உருமாற்றம் (transmutation) நிகழ்வதாய் உணர்வீர்கள்.

மனிதப் பிரக்ஞைக்கு நேரிட்ட மிகப்பெரிய கண்டுபிடிப்புகளுள் ஒன்று பிராணாயாமம். பிராணாயாமத்துடன் ஒப்பிட்டால் நிலவுக்குச் செல்வது ஒன்றுமேயில்லை. அது கிளர்ச்சியூட்டுவதாயிருக்கும். ஆனால் அது ஒன்றுமில்லாத நிலைதான், காரணம் நீங்கள் நிலவை அடைந்தாலும் நீங்கள் இருந்தபடியேதான் இருப்பீர்கள். இங்கே செய்து கொண்டிருந்த பயனற்ற காரியங்களையே அங்கேயும் செய்து கொண்டிருப்பீர்கள். பிராணாயாமம் என்பது அக முகப் பயணம். அத்துடன் பிராணாயாமம் எட்டு படிகளில் நான்காவது படி ஆகும். பிராணாயாமத்துடன் அரைவாசிப் பயணந்தான் முடிகிறது. ஆசிரியர் இல்லாமல் பிராணாயாமம் கற்ற ஒருவர் - ஆசான் வழி கற்பது செயற்கையானது. அதை நான் ஏற்பதில்லை - தன்னுடைய சொந்தக் கண்டுபிடிப்பில், விழிப்புடனிருத்தலில் தனது சீர்த்தன்மையை அறிந்து கொண்டவர் குறிக்கோளில் பாதியை முன்பே அடைந்தவராவார். பிராணாயாமம் குறிப்பிடத்தக்க கண்டுபிடிப்புகளில் ஒன்று.

பிராணாயாமத்திற்கு அடுத்த மூச்சுக்கட்டுப்பாடு பிரத்யாஹாரம், பிரித்தெடுத்தல். நான் உங்களிடம் நேற்று சொல்லிக் கொண்டிருந்த அதே போன்றதுதான் பிரத்யாஹாரம். கிறிஸ்துவர்களின் வருந்துதல் (repent) உண்மையில் ஹீப்ரு மொழியில் உள்ள திரும்புதல் (return) ஆகும் - வருந்துவதல்ல, திரும்புவது, திரும்பிச் செல்வது. அதுவும் வருந்துதல் என்பதன் பொருளையே, பண்பையே கொண்டிருக்கும். முகமதியர்களின் 'தோபா' (toba) வருந்துதல் அல்ல, அதுவும் திரும்புதலேயாகும். பிரத்யாஹாரமும் மீண்டும் திரும்புதலாகும். திரும்ப வருவது - உள்ளே வருவது, உள்ளில் திரும்புவது, வீட்டுக்கு வருவதாகும். பிராணாயாமத்துக்குப் பிறகு பிரத்யாஹாரம் நிகழ்த்தக் கூடியதாய் உள்ளது. ஏனெனில் பிராணாயாமம் உங்களுக்கு சீர்த்தன்மையை வழங்குகிறது. தற்போது நிறமாலை உங்களுக்கு முழுமையாய் தெரிய வருகிறது. எந்தவொரு சீர்த்தன்மையில் நீங்கள் வீட்டுக்கு அருகில் இருக்கிறீர்கள். எந்த சீர்த்தன்மையில்

உங்களிடமிருந்து வெகு தூரத்தில் இருக்கிறீர்கள் என்பதை நீங்கள் தற்போது அறிவீர்கள். உணர்ச்சி வேகம், பால்சார்ந்த தன்மை, கோபம், பொறாமை, உடைமைக்குணம் இவற்றில் உங்களிடமிருந்து வெகு தொலைவில் நீங்கள் இருப்பதைக் கண்டு கொள்ளலாம். பரிவு, அன்பு, பிரார்த்தனை, நன்றி இவற்றில் நீங்கள் வீட்டுக்கு வெகு அருகில் இருப்பதை நீங்களே கண்டு கொள்வீர்கள். பிராணாயாமம், பிரத்யாஹாரம் இவற்றுக்குப் பிறகு திரும்புதல் சாத்தியமாகிறது. தற்போது உங்களுக்கு வழி தெரிகிறது. எப்படிப் பின்னோக்கி அடி வைப்பதென்பதையும் அறிந்திருக்கிறீர்கள். பிறகு வருகிறது தாரணை. பிரத்யாஹாரத்துக்குப் பிறகு, நீங்கள் வீட்டருகே திரும்பி வரத் தொடங்கும்போது, உங்களுக்குள்ளேயிருக்கும் மையப் பகுதிக்கு வருகையில், உங்களுடைய இருப்புணர்வின் வாயிலில் நீங்கள் நிற்கிறீர்கள். பிரத்யாஹாரம் உங்களை வாயிலருகே கொண்டு சேர்க்கிறது. பிராணாயாமம் வெளியில் இருந்து உள்ளே செல்வதற்கான பாலம். பிரத்யாஹாரம் - திரும்புதல், வாயிலாகிறது. அதன்பிறகு தாரணை - மனதை ஒருமுனைப்படுத்துதல். தற்போது ஓர் இலக்கை நோக்கி உங்கள் மனதைக் கொண்டு வரும் திறன் உங்களிடம் உள்ளது. முதலில் உங்கள் உடம்புக்கு வழிகாட்டுதலைத் தந்தீர்கள். உங்களுடைய உயிர்ச் சக்திக்கும் வழிகாட்டுதலைத் தந்தீர்கள் - தற்போது உங்களுடைய பிரக்ஞைக்கும் வழிகாட்டுதலைத் தருகிறீர்கள். தற்போது பிரக்ஞையை எங்கேயும் எந்தவோர் இடத்துக்கும் செல்ல அனுமதிக்கக் கூடாது. தற்போது ஓர் இலக்கை நோக்கி அது கொண்டு செல்லப்பட வேண்டும். அந்த இலக்கு தாரணை - மனதை ஒருமுனைப்படுத்துதல். உங்கள் பிரக்ஞையை ஒரு புள்ளியில் நிலைக்கச் செய்கிறீர்கள்.

பிரக்ஞையை ஒரு புள்ளியில் நிலைத்திருக்கச் செய்யும் போது எண்ணங்கள் நின்று விடும். காரணம், உங்களுடைய பிரக்ஞை நிலையிழக்கும் போது - அது இங்கிருந்து அங்கும், அங்கிருந்து வேறெங்கோ செல்கையில் எண்ணங்கள் சாத்தியமாகும். உங்களுடைய பிரக்ஞை குரங்குபோல் தொடர்ந்து தாவிக் கொண்டிருந்தால் அங்கே எண்ணங்கள் பல சூழும் - உங்கள் மனம் நெரிசல்மிக்க சந்தையாகி விடும். பிராணாயாமம், பிரத்யாஹாரம் இவற்றுக்குப் பிறகு உங்கள் மனதை ஒரு புள்ளியில் ஒருமுனைப்படுத்த சாத்தியம் இருக்கிறது.

உங்களால் ஒரு புள்ளியில் மனதை ஒருமுனைப்படுத்த முடிந்தால் அப்போது தியானம் சாத்தியம். ஒருமுனைப்படுத்தலில் உங்கள் மனதை ஒரு புள்ளிக்குக் கொண்டு வருகிறீர்கள். தியானத்தில் அந்தப் புள்ளியையும் விட்டு விடுகிறீர்கள். தற்போது நீங்கள் முழுமையாய் மையம் கொண்டு விடுகிறீர்கள், எங்கும் போவதற்கில்லை. காரணம் நீங்கள் எங்காவது செல்வதாயிருந்தால் அது எப்போதுமே வெளியில் செல்வதாயிருக்கும். ஒற்றைச் சிந்தனையில் ஒருமுனைப்படுவதும் உங்களுக்கு வெளியே நிகழ்வதுதான் - பொருள் வெளியேயிருக்கிறது. நீங்கள் தனியே இல்லை, அங்கே இருப்பவை இரண்டு. ஒருமுனைப்படுவதிலும் இரண்டு இருக்கிறது; பொருள் மற்றும் நீங்கள். ஒருமுனைப்பட்டபின் பொருள் கைவிடப்பட வேண்டியது.

அனைத்து ஆலயங்களும் ஒருமுனைப்படுகிற நிலை வரைதான் உங்களை அழைத்துச் செல்கிறது. அதற்குமப்பால் அவற்றால் அழைத்துச் செல்ல முடியாது. காரணம், எல்லா ஆலயங்களும் தங்களில் ஒரு பொருளைக் கொண்டுள்ளன. கடவுளின் வடிவம் ஒருமுனைப்படுத்தும் பொருளாயிருக்கிறது. ஆலயங்கள் உங்களை ஒருமுனைப்படுத்துகிற நிலை வரை - தாரணை வரை அழைத்துச் செல்லும். அதனால்தான் மதம் உன்னதத்தை அடைந்த நிலையில் ஆலயமும், வடிவமும் மறைந்து விடுகின்றன. அவை மறைந்தாக வேண்டும். ஆலயம் முற்றிலும் வெறுமையாய் இருக்க வேண்டும். அந்த முறையில்தான் நீங்கள் - உங்களைத் தவிர யாருமில்லாமல், வேறு யாருமில்லாமல், எந்தப் பொருளுமில்லாமல், அங்கே இருப்பீர்கள் - அகவுணர்வு மட்டும்.

தியானம் சுத்தமான அகவுணர்வு, ஆழ்ந்த சிந்தனை. ஏதோ ஒன்றைச் சிந்தித்திருப்பதல்ல, காரணம், ஏதோவொன்றைச் சிந்தித்திருந்தால் அது ஒருமுனைப்படுதல். ஆங்கிலத்தில் அதைவிட சிறப்பான வார்த்தை இல்லை. ஒருமுனைப்படுத்துதல் என்றாலே ஒருமுனைப்பட ஏதோவொன்று அங்கே இருக்கிறதென்று பொருள். தியானம் என்பது ஆழ்ந்து எண்ணும் நிலை, அங்கே வேறெதுவுமில்லை. எல்லாம் கைவிடப்படும். ஆனால் நீங்கள் விழிப்புணர்வின் தீவிர நிலையில் இருக்கிறீர்கள். பொருள் கைவிடப்படும். ஆனால் பிரஜை (subject) தூங்கி விட மாட்டார். எந்தவொரு பொருளுமின்றி கடுமையாய் ஒருமுனைப்படுகிற போதும் - 'நான்' என்கிற உணர்வு தொடர்ந்து இருக்கும். அது சுற்றித் திரிந்து

கொண்டிருக்கும். பொருளின் நிலை வீழ்ச்சியுற்றாலும் 'பிரஜை' அங்கேதான் இன்னும் இருக்கிறார். நீங்கள் இருப்பதை இன்னும் நீங்கள் உணர்கிறீர்கள்.

இது அகந்தை அல்ல. சம்ஸ்கிருதத்தில் நாம் இரண்டு சொற்களைப் பெற்றிருக்கிறோம். அகங்கார், அஸ்மிதா என்று. அகங்காரம் என்றால் 'நான் இருக்கிறேன்' என்று பொருள். அஸ்மிதா என்பதற்கு 'இருக்கிறேன்' என்று பொருள். ஒருமை வினைமுற்று வடிவத்தில் (amness) - அகந்தை இருக்கவில்லை, வெறும் நிழல் மட்டுமே எஞ்சியிருக்கும். ஏதோ ஒருவகையில் 'நீங்கள் இருக்கிறீர்கள்' என்ற உணர்வு உங்களுக்கிருக்கிறது.

இது ஓர் எண்ணம் அல்ல. இது ஒரு எண்ணமாயிருந்தால் 'நான் இருக்கிறேன்' என்பது ஓர் அகந்தையாகும். தியானத்தில் எண்ணம் முற்றாய் மறைந்து விடுகிறது. ஆனால் 'இருக்கிறேன்' ஒரு நிழல் போன்ற தோற்ற நிலை, உங்களைச் சுற்றித் திரியும் உணர்வு - மூடுபனி மாதிரி. காலையில் உங்களைச் சுற்றித் திரிந்தலையும். தியானத்தில் அது காலைப்பொழுது, சூரியன் இன்னும் உதித்திருக்காத காலை, அது பனி சார்ந்ததாயிருக்கும் தெளிவற்றதாய்: அஸ்மிதா என்றால் இருக்கிறேன், என்பது, இன்னும் அங்கே இருக்கிறது.

நீங்கள் மறுபடியும் தொடங்க முடியும். ஒரு சின்ன அமைதிக் குலைவு - யாரோ பேசுகிறார்கள், நீங்கள் காது கொடுத்துக் கேட்கிறீர்கள், நீங்கள் காது கொடுத்துக் கேட்பதோடு, அதுபற்றிச் சிந்திக்கவும் தொடங்கி விட்டால் ஒருமுனைப்படுதலும் மறைந்து விடும். நீங்கள் மீண்டும் பிரத்யாஹாரத்துக்கு வரும்படி ஆகும். நீங்கள் சிந்திப்பதோடு, அந்தச் சிந்தனையுடன் உங்களை அடையாளப் படுத்திக் கொள்ளவும் செய்தால் பிரத்யாஹாரமும் மறைந்து விடும். எண்ணம் எங்களை ரொம்பவும் சுவாதீனப்படுத்திக்கொள்ள, உங்களுடைய சுவாசத்தின் சீர்த்தன்மையும் இழக்கப்படுமாயின் பிராணாயாமமும் மறைந்து விடும். நீங்கள் ஆசன நிலையில் இறங்கி விடுவீர்கள். ஆனால் எண்ணத்துடன், மூச்சும் ஒழுங்கற்றதாகி (disturbed) விட்டால் உடம்பு நடுங்க ஆரம்பிக்கும் அல்லது அமைதியற்றதாகி விடும். ஆசன நிலையும் மறைந்து விடும். அவை ஒன்றுக்கொன்று தொடர்பில் இருப்பவை.

ஒருவர் தியானத்தில் இருந்து வீழ்ச்சியடையக் கூடும். தியானம் உலகிலேயே மிகவும் அபாயகரமான பகுதி. காரணம் அந்த உயர்ந்த

முனைப்பகுதியில் இருந்தே நீங்கள் வீழ்வது, அது மோசமான வீழ்ச்சியாயிருக்கும். இந்தியாவில் நாம் 'யோகப்ரஸ்தம்' என்றொரு சொல்லைப் பெற்றிருக்கிறோம். யோக நிலையில் இருந்து வீழ்ந்தவர். இந்தச் சொல் ரொம்ப விசித்திரமானது. அது ஒருங்கே பாராட்டவும் பழித்துக் கூறவும் செய்கிறது. நாம் ஒருவரை யோகி என்று சொல்வது மிகப்பெரிய பாராட்டு, மதிப்பீடு. நாம் ஒருவரை யோகப்ரஷ்டா என்று சொல்வது பழிப்புரை. யோகத்திலிருந்து வீழ்ச்சியுறுதல் ஆகும். இந்த மனிதர் தம்முடைய போன பிறவியில் தியானம் வரை சென்றிருக்கிறார், அதன்பிறகு வீழ்ந்து விட்டார். தியானத்திலிருந்து உலகத்துக்கு திரும்பிச் செல்வதற்கான சாத்தியம் இன்னும் அங்கே இருக்கிறது – காரணம் அஸ்மிதா 'இருக்கிறேன்' என்பது. விதை உயிர்ப்போடு இருக்கும். அது எந்தக் கணத்திலும் முளைவிடக் கூடும். ஆக, பயணம் முடிந்து விடவில்லை.

அஸ்மிதாவும் முடிகிறபோது, நீங்கள் இருக்கிறீர்கள் என்பதை இனிமேலும் அறிந்திராதபோது – உண்மையில் நீங்கள் இருக்கிறீர்கள் என்றாலும் அதுபற்றிய சிந்தனை இல்லாதிருத்தல் நான் இருக்கிறேன் அல்லது இருக்கிறேன் என்பதுங்கூட இல்லாதிருக்கும் நிலையில் சமாதி, மெய்மறத்தல், பரவசம் இவை நிகழும். சமாதி என்பது கடந்து செல்வது. அப்பால் சென்றவர் இப்பால் வருவதில்லை. சமாதி என்கிற முனைக்குச் சென்றால் திரும்புவது கிடையாது. அங்கிருந்து யாரும் வீழ்வதில்லை. சமாதி அடைந்த மனிதர் கடவுளுக்குச் சமானம். நாம்புத்தரை கடவுள் என்கிறோம், மகாவீரரைக் கடவுள் என்கிறோம். சமாதியில் உள்ளவர் அதற்கு மேலும் இந்த உலகத்துக்கானவரல்லர். அவர் இந்த உலகத்தில் இருந்தாலும், உலகத்துக்குரியவராய் இருக்கமாட்டார். அவர் அயலார்தான். அவர் இங்கே இருக்கலாம். ஆனால் அவருடைய வீடு வேறு எங்கோ இருக்கும். அவர் இந்த நிலத்தின் மீது நடக்கலாம். ஆனால் இனியும் நிலத்தின் மீது நடப்பவரல்லர். சமாதி நிலையில் உள்ள மனிதரைப் பற்றி இது சொல்லப்பட்டது. அவர் இந்த உலகில் தங்கி வாழலாம். ஆனால் உலகம் அவருள் தங்கியிருப்பதில்லை.

இவையே எட்டுப் படிகளும் எட்டு அங்கங்களுமாகும். அவை ஒன்றுக்கொன்று மிகவும் தொடர்புடையன, உறுப்பு சார்ந்த தொடர்புடையன என்பதால் அங்கங்கள் ஆகும். நீங்கள் ஒவ்வொன்றாய் கடக்கும்படி இருத்தலால் அவை படிகளாயின – எங்கோ ஓரிடத்தில் இருந்து நீங்கள் தொடங்கிவிட முடியாது; நீங்கள்

யமம் என்பதில் இருந்தே தொடங்க வேண்டும். தற்போது மேலும் சில கருத்துகள், காரணம் நீங்கள் மேலும் சிலவற்றைப் புரிந்து கொள்வீர்கள் என்பதால் பதஞ்சலியில் இதனை முக்கியமான தோற்றநிலைக் கொள்கை (phenomenon) எனலாம். 'யமம்' என்பது உங்களுக்கும் மற்றவர்களுக்கும் இடையிலான பாலம். சுய கட்டுப்பாடு என்பது உங்கள் நடந்து கொள்ளும் முறையைக் கட்டுப்படுத்துவதாகும். யமம் என்பது உங்களுக்கும் சமூகத்துக்கும் இடையிலான நிகழ்வு. அது மிகவும் பிரக்ஞையுள்ள நடத்தை: தன்னுணர்வற்றவராய் நீங்கள் எதிர்வினை புரிவதில்லை. ஒரு 'ரோபோ'வ் போல், ஓர் எந்திரத்தைப் போல் நீங்கள் எதிர்வினை புரியமாட்டீர்கள். நீங்கள் மிகுந்த உணர்வுடன் இருப்பீர்கள், எச்சரிக்கையுடையவராகி விடுவீர்கள். முற்றிலும் தவிர்க்க முடியாத நிலையில் மட்டுமே எதிர்வினை புரிவீர்கள். அப்போதும் அது ஒரு பதில் குறிப்பாய் (response) இருக்கும்படி பார்த்துக் கொள்வீர்களேயன்றி அதனை எதிர்வினையாக்க மாட்டீர்கள்.

பதில் குறிப்பு என்பது எதிர்வினையில் இருந்து வேறுபட்டது. முதல் வேறுபாடு எதிர்வினை தானே இயங்குவது (automatic), பதில் குறிப்பு உணர்வுடன் செயல்படுவது. உங்களை யாரோ இழிவு படுத்தி விடுகிறார். உடனடியாய் நீங்கள் எதிர்வினை புரிகிறீர்கள் - அவரைப் பதிலுக்கு இழிவு படுத்தி விடுகிறீர்கள். என்ன ஏது என்று புரிந்துகொள்ள கணநேர இடைவெளியும் இருக்காது: அது எதிர்வினை. சுய கட்டுப்பாடு உள்ளவரோ பொறுமையாய் தனக்கு ஏற்பட்ட இழிவைக் கவனித்து, அதுபற்றிச் சிந்திப்பார்.

குருட்ஜீவ் தன்னுடைய ஒட்டுமொத்த வாழ்க்கையும் மாறிவிட்டதாய் சொல்வார். காரணம் அவருடைய பாட்டனார் சாகும்போது அவருக்கு ஒன்பது வயது இருக்கும். அந்தப் பாட்டன் அவரை அழைத்து, 'நான் ஒரு ஏழை. உனக்குக் கொடுப்பதற்கு என்னிடம் ஏதுமில்லை. ஆனாலும் நான் ஏதாவது கொடுக்க விரும்புகிறேன். ஒரு பொக்கிஷத்தைப் போல் நான் போற்றி வருகிற பொருளொன்று உண்டு. அது என்னுடைய தந்தையார் எனக்குத் தந்தது... நீ ரொம்பவும் வயதில் இளையவன் ஆனாலும் அதை நினைவில் வைத்துக் கொள். என்றாவதொரு நாள் புரிந்து கொள்வாய் - அதை நினைவில் வைத்துக் கொண்டால் போதும். ஒருநாள் புரிந்து கொள்வாய் இப்போது உன்னால் புரிந்துகொள்ள முடியும் என்று நான் நம்பவில்லை. ஆனால் அதை நீ மறந்து விடாமல் இருந்தால்

என்றாவதொரு நாள் புரிந்து கொள்வாய். குருட்ஜீவிடம் அவர் சொன்னது இதுதான், "யாரேனும் உன்னை அவமதித்து விட்டால் இருபத்து நான்கு மணி நேரம் கழித்து நீ அவர்களுக்குப் பதில் கொடு.'

அது ஓர் இயல்பு மாற்றம். காரணம் இருபத்து நான்கு மணி நேரம் கழித்து நீங்கள் எப்படி எதிர்வினை புரிவீர்கள்? எதிர்வினைக்குத் தேவை உடனடித் தன்மை. குருட்ஜீவ் சொல்கிறார், 'யாரேனும் என்னை அவமதிக்கக் கூடும் அல்லது தவறாக எதையேனும் சொல்லிவிடக் கூடும். அந்நிலையில் நான் 'நாளை வருவேன், இருபத்து நான்கு மணி நேரத்துக்குப் பிறகே நான் பதில் சொல்ல இடமளிக்கப்பட்டிருக்கிறது - செத்துப்போன என்னுடைய பாட்டனாருக்கு நான் வாக்களித்திருக்கிறேன், அந்த வாக்குறுதியை என்னால் மீற முடியாது. ஆனால் நான் வருவேன்" என்று சொல்வேன். எதிராளி திரும்பிச் செல்வான். என்ன விசயம் என்று புரிந்து கொள்ளும் திறமை அவனுக்கிருக்காது.

மேலும், குருட்ஜீவ் அதுபற்றிச் சிந்திப்பார். அவர் எந்த அளவு சிந்திக்கிறாரோ அந்த அளவு அது பயனற்றதாய் தெரியும். சில சமயம் அந்த ஆள் எதைச் சொல்லியிருந்தாலும் அதில் உண்மை யிருப்பதாகத் தோன்றும். 'எனக்குத் தெரிந்திராத ஒன்றை நீர் தெரியப்படுத்தி விட்டீர்' என்று குருட்ஜீவ் அந்த மனிதருக்கு நன்றி சொல்லிவரப் போவார். சில சமயம் அந்த மனிதர் முற்றிலும் தவறானவர் என்பது அவருக்குத் தெரிய வரும். அவர் தவறானவர் என்றால் ஏன் அதுபற்றிக் கவலைப்பட வேண்டும். பொய்களைப் பற்றி யாரும் கவலைப்பட மாட்டார்கள். உங்களுடைய மனம் புண்பட்டதாய் நீங்கள் உணரும்போது அதில் கண்டிப்பாய் உண்மை இருக்கும். இல்லையேல் நீங்கள் புண்பட மாட்டீர்கள் அப்போதும்கூட நடப்பதில் அர்த்தமில்லை.

அவர் சொல்வார், 'என்னுடைய பாட்டனாரின் கொள்கையை நான் பலமுறை சோதித்து விட்டேன். கொஞ்சம் கொஞ்சமாய் கோபம் மறைந்தது' என்று. கோபம் மட்டுமல்ல, காலப்போக்கில் உணர்ச்சிகளுக்கும் அதே உத்தியைப் பயன்படுத்தலாம் என்பதை அவர் தெரிந்து கொண்டார். அத்துடன் எல்லாமும் மறைந்து போயிற்று. அவருடைய காலத்தில் குருட்ஜீவ் ஒரு புத்தராய், உச்சநிலை அடைந்தவர்களுள் ஒருவராய் இருந்திருக்கிறார். ஒட்டுமொத்தப் பயணமும் எடுத்து வைக்கிற முதலடியில் இருந்தே தொடங்குகிறது.

மரணத்தறுவாயிலிருந்த ஒரு கிழவருக்கு அவர் கொடுத்த வாக்குறுதி அவருடைய ஒட்டுமொத்த வாழ்க்கையையும் மாற்றி விட்டது.

யமம் உங்களுக்கும் மற்றவர்களுக்கும் இடையேயான பாலம் - பிரக்ஞையுடன் வாழுங்கள், பிரக்ஞையுடையவராய் மக்களுடன் தொடர்பு கொள்ளுங்கள். அடுத்த இரண்டும் நியமம், ஆசனம் என்பவை உங்கள் உடம்புடன் தொடர்புடையதாயிருக்கும். மூன்றாவது பிராணாயாமம். இதுவும் ஒரு பாலந்தான். முதலாவதாய் கூறப்பட்ட யமம் உங்களுக்கும் மற்றவர்களுக்கும் இடையில் பாலமாய் இருப்பது போலவே, அடுத்த இரண்டும் இன்னொரு பாலத்துக்கு முன்னேற்பாடு ஆகும் - உங்கள் உடம்பு நியமம், ஆசனம் இவற்றால் தயார் படுத்தப்படும் - பிறகு பிராணாயாமம் உடம்புக்கும், மனதுக்கும் இடையில் ஒரு பாலமிடும். பிறகு பிரத்யாஹாரம் மற்றும் தாரணை இவை மனதின் முன்னேற்பாடாய் இருக்கும். தியானம் மனதுக்கும் ஆன்மாவுக்கும் இடையே ஒரு பாலமாய் விளங்கும். சமாதி சிறந்த ஒன்றை அடையும் தகுதி. அவை ஒன்றோடொன்று சங்கிலித் தொடராய் இணைக்கப்பட்டிருக்கும். இதுதான் உங்களுடைய ஒட்டுமொத்த வாழ்க்கையும்.

மற்றவர்களுடனான உங்களுடைய தொடர்பு மாறும்படி ஆகும். எவ்வாறு தொடர்புற்றிருந்தீர்கள் என்பது மாறிவிடும். நீங்கள் எப்போதும் போலவே, அதே வழியில் அடுத்தவர்களுடன் உள்ள தொடர்பைத் தொடர்ந்தால் மாறுவதற்கு சாத்தியம் இருக்காது. உங்களுடைய தொடர்பை நீங்கள் மாற்றிக்கொள்ள வேண்டும். உங்கள் மனைவியுடன் எப்படி நடந்து கொள்கிறீர்கள், அல்லது நண்பருடன் அல்லது குழந்தைகளிடம் எப்படி நடந்து கொள்கிறீர்கள் என்பதைக் கவனியுங்கள். அதை மாற்றுங்கள். உங்கள் தொடர்பில் மாற்றும் படியாய் ஆயிரத்தியோரு செயல்கள் இருக்கின்றன. யமம் என்கிற கட்டுப்பாடு, கட்டுப்படுத்துவதன்றி அடக்கி வைப்பதல்ல. புரிந்து கொள்வதன் வழியே அடையப்படுவது கட்டுப்பாடு. ஒருவர் அறியாமையில் தொடர்ந்து கட்டாயப்படுத்துகிறார், அடக்கி வைக்கிறார். எப்போதும் புரிந்து கொண்டு எதையும் செய்யுங்கள். உங்களுக்கோ மற்றவர்களுக்கோ ஒருபோதும் நீங்கள் தீங்கிழைக்க மாட்டீர்கள்.

யமம் என்பது உங்களைச் சுற்றி ஓர் இணக்கமான (congenial) சூழ்நிலையை உருவாக்கிக் கொள்வதாகும். நீங்கள் எல்லாரிடமும்

பகைமையுடையவராய் - சண்டையிட்டுக் கொண்டு, வெறுப்பும், கோபமும் கொண்டிருந்தால் - எப்படி நீங்கள் உள்நோக்கிச் செல்ல முடியும்? இவையெல்லாம் நீங்கள் நகரவும் இடமளிக்காது. நீங்கள் மேற்பரப்பிலேயே நிரம்பவும் அமைதிக்குலைவுக்குள்ளாகி, அகமுகப் பயணம் சாத்தியமற்றதாகி விடும். உங்களைச் சுற்றி ஓர் இணக்கமான, நட்பார்ந்த சூழலை உருவாக்குவதே யமம் ஆகும். நீங்கள் மற்றவர்களுடன் நேர்த்தியாயும், தன்னுணர்வோடும் தொடர்பு கொண்டிருப்பின் உங்கள் அகமுகப் பயணத்தில் அவர்களால் தொல்லையிருக்காது. அவர்கள் உங்களுக்கு உதவியாயிருப்பார்கள், அவர்கள் உங்களுக்குத் தடையாயிருக்க மாட்டார்கள். உங்கள் குழந்தையை நீங்கள் அன்புடன் நேசித்தால், நீங்கள் தியானம் செய்கிற வேளையில் அவன் உங்களுடைய அமைதியைக் கலைக்க மாட்டான். அவன் மற்றவர்களிடம் சொல்வான் 'சப்தம் போடாதீர்கள், அப்பா தியானத்தில் இருக்கிறார்' என்று. ஆனால் உங்கள் குழந்தையை நீங்கள் நேசிக்கவில்லை என்றால், நீங்கள் தியானம் செய்கிறபோது எல்லா வகையிலும் தொல்லைகளை உண்டுபண்ணுவான். அவன் - தன்னையறியாமலே பழிவாங்க விரும்புவான். உங்கள் மனைவியை நீங்கள ஆழமாய் நேசித்தால் அவள் உதவியாயிருப்பாள். இல்லையேல் நீங்கள் பிரார்த்தனை செய்யவோ, தியானத்தில் இருக்கவோ அவள் இடமளிக்க மாட்டாள் - நீங்கள் அவளுடைய ஆதிக்கத்தைக் கடந்து செல்கிறீர்கள்.

நான் எப்போதும் இதனைப் பார்க்கிறேன். கணவன் சன்யாசத்தை மேற்கொள்கிறான். மனைவி கூக்குரலிடுகிறாள் - "நம்முடைய குடும்பத்துக்கு என்ன செய்தீர்கள்? நீங்கள் நாசப்படுத்தி விட்டீர்கள்" என்று. அந்தக் கணவன் தன்னுடைய மனைவியை நேசிக்கவில்லை என்பது எனக்குத் தெரியும், இல்லையேல் அவள் மகிழ்ச்சியாய் இருந்திருப்பாள். அவளுடைய கணவன் தியான நிலைக்குச் சென்று விட்டான் என்று கொண்டாடியிருப்பாள். ஆனால் அவன் அவளிடம் நேசம் கொண்டிருக்கவில்லை. தற்போது அவன் நேசிக்காதிருந் தாலும்கூட, அவன் உள்நோக்கிச்சென்று கொண்டிருப்பதால், அவனிடமிருந்து எதிர்காலத்திலும் அவள் அன்பைப் பெற சாத்தியமில்லை. நீங்கள் ஒருவரை நேசித்தால் அவர் உங்களுடைய வளர்ச்சிக்குத் துணையாயிருப்பார். காரணம் நீங்கள் வளர்ச்சி யடையுமளவுக்கு அன்பு செய்வதில் மேலும் திறன் பெற்று விளங்குவீர்கள் என்பது அவனுக்கு அல்லது அவளுக்குத் தெரியும்.

அன்பின் ருசியை அவள் அறிவாள். தியானங்கள் அனைத்தும் நீங்கள் மேலும் அன்புடையவராய், அருமையானவராய் திகழ உதவும். ஆனால், இது அன்றாடம் நிகழவே செய்கிறது.

ஷீலாவின் சகோதரிக்கு இது நேரிட்டது. அவள் ஒரு முகாமில் இருந்தால், அவள் சன்யாசம் மேற்கொள்ள விரும்பினாள். ஆனால் கணவனுக்குச் சம்மதமில்லை. கணவன் ரொம்பவும் படித்தவன். ம்... அமெரிக்க ஆராய்ச்சி நிலையமொன்றில் இயக்குநராயிருந்தான். பிறகு அவள் வீட்டுக்குச் சென்றாள். அங்கே இடைவிடாமல் சண்டையாயிற்று. அவள் சன்யாசத்தை விரும்பினாள், தீட்சை பெற விரும்பினாள், ஆனால் அவன் அனுமதிக்கவில்லை. பிறகு அவன் என்னிடம் வந்தான் - "யாரிவர், நம்முடைய வாழ்க்கையில் குழப்பத்தை உண்டு பண்ணிக் கொண்டிருந்தது?" அவன் சன்யாசத்தை மேற்கொண்டான். தற்போது மனைவி இடையூறு பண்ணிக் கொண்டிருக்கிறாள். அவள் முற்றிலும் எதிரிடையாயிருக்கிறாள். அவன் ரொம்பவும் எளிமையானவன், உண்மையிலேயே அருமையான ஆள். அவன் தொடர்ந்து எனக்கு எழுதிக் கொண்டேயிருப்பான். 'என்ன செய்யட்டும் - நான் அவளை நேசிக்கிறேன், ஆனால் நான் சன்யாசம் மேற்கொண்டதைக் கேள்விப்பட்டதும் அவள் முற்றிலும் மாறிவிட்டாள்" என்று. இப்படித்தான் இருக்கிறது நடப்பு. ஒவ்வொருவரும் அடுத்தவர் மீது ஆதிக்கம் செலுத்தவே முயல்கிறார்கள்.

யமத்தைக் கடைப்பிடிக்கிறவர் தம்மைக் கட்டுப்படுத்திக் கொள்கிறார், மற்றவர்களையல்ல. மற்றவர்களைச் சுதந்திரமாயிருக்க விட்டுவிடுகிறார். நீங்களோ உங்களைக் கட்டுப்படுத்திக் கொள்ளாமல் மற்றவர்களைக் கட்டுப்படுத்த முயல்கிறீர்கள். யமத்தில் நிற்கிற மனிதனோ தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்கிறான், மற்றவர்களுக்குச் சுதந்திரத்தைக் கொடுக்கிறான் - சுதந்திரம் கொடுக்குமளவு நேசிக்கிறான், தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ளுமளவு அவன் தன்னை நேசிக்கிறான். இது புரிந்து கொள்ளப்பட வேண்டியது. தன்னுடைய ஆற்றல்களை வீணடிக்காத அளவுக்கு, ஒரு வழிகாட்டலைத் தருமளவுக்கு அவன் தன்னை நேசிக்கிறான்.

பிறகு - நியமமும் ஆசனமும் உடம்பிற்கானவை. முறையான வாழ்க்கை உடம்புக்கு நலமளிப்பதாகும், காரணம், உடம்பு இயந்திர நுட்பம் (mechanism) உடையது. முறையற்ற வாழ்க்கை நடத்தினால்

உடம்பை நீங்கள் கோளாறடையச் செய்து விடுவீர்கள். இன்று உங்கள் உணவை ஒரு மணிக்கு உட்கொள்கிறீர்கள், நாளை பதினோரு மணிக்கு உட்கொள்கிறீர்கள், நாளை மறுநாள் பத்து மணிக்கு உட்கொள்கிறீர்கள் - ஆக உடம்பைத் தாறுமாறாக்கி விடுகிறீர்கள். உடம்பு தன்னுள் உயிரியல் சார்ந்த (biological) ஒரு கடிகாரத்தை வைத்துக் கொண்டிருக்கிறது. அது ஓர் அமைப்பில் செயல்படுகிறது. நீங்கள் தினமும் குறிப்பிட்ட அதே நேரத்தில் உங்கள் உணவை உட்கொள்வீர்களாயின் என்ன நடக்கிறது என்பதைப் புரிந்து கொள்ளும் நிலையில் உடம்பு எப்போதும் இருக்கும். அது நிகழ்வுக்குத் தயாராயிருக்கும். சாறுகள் (juices) உரிய நேரத்தில் வயிற்றில் சுரக்கும். இல்லையேல் நீங்கள் விரும்பிய போதெல்லாம் உண்ண முடியும். ஆனால் சாறுகள் தடையின்றி வெளிப்படாது. நீங்கள் உணவையுண்டு சாறுகள் வெளிப்படவில்லை என்றால் அப்போது அந்த உணவு கடினமாகி சீரணிப்பதில் சிரமம் ஏற்படும்.

உணவு சூடாக இருக்கும்போதே அதை ஏற்பதற்குச் சாறுகள் தயார் நிலையில் இருக்க வேண்டும். அப்போது உடனடியாய் அது உறிஞ்சப்படத் தொடங்கும். சாறுகள் தயார் நிலையில் இருந்தால் உணவு ஆறு மணி நேரத்தில் உட்கிரகிக்கப்பட்டு விடும். சாறுகள் காத்திருக்கவில்லையென்றால் பன்னிரண்டு முதல் பதினெட்டு மணி நேரம் வேண்டியிருக்கும் சீரணமாவதற்கு. அப்போது நீங்கள் கனமாயும், மந்தமாயும் உணர்வீர்கள். அந்நிலையில் உணவு உங்களுக்கு உயிர்ச்சக்தியைக் கொடுக்கலாம். ஆனால், அது தூய்மையானதாயிருக்காது. அது உங்கள் மார்பின் மீது பாரமாய் அழுத்தும். எப்படியோ சிரமத்துடன் சுமப்பீர்கள். உணவு அத்தகைய தூய்மையான சக்தி - ஆனாலும், அப்போதும் ஒரு முறையான வாழ்க்கை தேவைப்படும்.

நீங்கள் தினமும் பத்து மணிக்கு உறங்கச் செல்கிறீர்கள். உடம்புக்குத் தெரியும். சரியாய் பத்து மணிக்கு உடம்பு உங்களுக்கு எச்சரிக்கை மணி மாதிரி ஓர் அறிவிப்பை வழங்கும். கருத்தாவேசமாகி விடுவது (obsessive) பற்றி நான் சொல்லவில்லை - உங்கள் தாய் செத்துக் கொண்டிருக்கிற போதும் நீங்கள் பத்து மணிக்குப் படுக்கச் செல்வதாய். நான் அதைச் சொல்லவில்லை. காரணம், மக்கள் கருத்தாவேசமாகி விடுவதுண்டு.

இமானுவல் கண்ட் என்பவரைப் பற்றி பல கதைகள். அவர் ஒழுங்கு முறையில் கருத்தாவேசம் கொண்டவர்,அது ஒரு பித்தாகவே மாறிவிட்டிருந்தது. கருத்தாவேசம் கொண்டு விடாதீர்கள். அவர் ஒரு நிலையான நடைமுறை ஒழுங்கைக் கொண்டவர், நொடிக்கு நொடி தீர்மானிக்கப்பட்டிருக்கும். யாரேனும் விருந்தாளி வந்து விட்டால், அவர் கடிகாரத்தை நோக்குவார். ஒன்றும் பேச மாட்டார், பேசுவதில் நேரம் கடந்து விடும் என்பது போல. அவர் படுக்கைக்கு ஒரே தாவாய் தாவி, போர்வையால் உடம்பு முழுவதையும் சுற்றிக் கொண்டு விடுவார். விருந்தாளி அங்கே உட்கார்ந்திருந்தாலும் அவர் தூங்கி விட்டிருப்பார். வேலைக்காரன் வருவான். 'தாங்கள் இப்போது போகலாம். அது அவருடைய நேரமாகும்' என்று சொல்வான். 'உங்கள் உணவு தயார், தற்போது நீங்கள் உறங்க வேண்டும்' என்றெல்லாம் சொல்ல அவசியமில்லாத அளவுக்கு 'கண்ட்'டுடன் அவன் இசைவு மிக்கவனாயிருந்தான். நேரத்தை மட்டும் சொன்னால் போதும். அவன் அவருடைய அறைக்கு வந்து 'ஐயா, பதினோரு மணி ஆகிறது என்பான். அவர் உடனே புரிந்த கொண்டு நடப்பார், காரணம் அதற்கு மேல் சொல்லத் தேவைப்படாது.

வேலைக்காரன் ஒரு சர்வாதிகாரியாகி விடுமளவுக்கு அவர் ஒழுங்கான முறையில் இருந்தார் - காரணம் அவன் எப்போதும் அவரை மிரட்டிக் கொண்டிருந்தான். "என்னுடைய சம்பளத்தை உயர்த்துங்கள் இல்லையேல் நான் போய்விடுவேன்" என்று. உடனடியாய் சம்பளம் உயர்த்தப்பட்டு விடும், காரணம் புதிதாய் வருகிற வேலைக்காரன் அமைதியைக் குலைத்து விடுவான். ஒருமுறை அப்படி முயன்றும் பார்த்தாகி விட்டது. 'ஒரு புதிய வேலைக்காரன் வந்தான். ஆனால் அவனுக்கு அது சாத்தியப்படவில்லை, கண்ட் நொடிக்கு நொடி வாழ்பவராயிருந்தார்.

அவர் பல்கலைக் கழகத்துக்குச் செல்வார். அவர் ஒரு சிறந்த ஆசான் என்பதோடு, புகழ் பெற்ற தத்துவ மேதையாயும் இருந்தார். ஒருநாள் மழை பெய்து, சாலை சகதியாகிக் கிடந்தது. அவருடைய காலணிகளிலொன்று சகதியில் சிக்கிக் கொண்டது - எனவே, அவர் அங்கேயே அதை விட்டுவிட்டார். இல்லையேல் அவருக்குத் தாமதமாகி விடும். ஆக, ஒற்றைக் காலணியுடன் அவர் சென்றார். கோனிக்ஸ்பர்க் பகுதியில் உள்ள அந்தப் பல்கலைக் கழகத்தில் உள்ளவர்கள் அவரைக் கண்டதும் தங்கள் கடிகாரத்தை சரிசெய்து

கொள்வார்கள் என்று பேசிக் கொள்ளப்பட்டது, காரணம் எல்லாமும் கடிகார முள் நகரும் திசையிலேயே நடந்து கொண்டிருந்தது.

கண்ட்டினுடைய வீட்டுக்குப் பக்கத்தில் இருந்த வீட்டை வாங்கிக்கொண்டு, ஒரு புதியவர் அண்டை வீட்டுக்காரராய் வந்து சேர்ந்தார். அவர் புதிதாய் மரங்கள் நடத் தொடங்கினார். தினமும் மாலை ஐந்து மணிக்கு கண்ட் வீட்டின் அந்தப் பக்கமாய் வருவது வழக்கம். வந்து, சன்னலருகே உட்கார்ந்தபடி ஆகாயத்தைப் பார்த்துக் கொண்டிருப்பார். தற்போது மரங்கள் சன்னலை மறைத்துக் கொண்டபடியால், அவரால் ஆகாயத்தைப் பார்க்க முடியவில்லை. அவர் மிகவும் கவலையுற்றவராய் நோய்ப்படுக்கையில் விழுந்தார். அவரிடம் என்ன கோளாறு என்பதை மருத்துவர்களால் கண்டுபிடிக்க முடியவில்லை. காரணம், அவர் அப்படியோர் ஒழுங்குமுறையான ஆளாயிருந்தார். உண்மையிலேயே அவர் குறிப்பிடத்தக்க ஆரோக்கியத்துடனிருந்தார். அவர்களால் எதையும் கண்டுபிடிக்க முடியவில்லை. அவர்களால் நோய் நிர்ணயம் செய்ய முடியவில்லை. அப்போது வேலைக்காரன் சொன்னான், “கவலைப்படாதீர்கள். காரணத்தை நான் அறிவேன். அந்த மரங்கள் அவருடைய ஒழுங்குமுறையில் வம்படியாய் தலையிட்டு விட்டன. தற்போது அவரால் சன்னலண்டை உட்கார்ந்து, ஆகாயத்தைப் பார்க்க முடியவில்லை. ஆகாயத்தைப் பார்க்க சாத்தியமில்லாமல் போய்விட்டது” என்று. பக்கத்து வீட்டுக்காரர் இணங்க வைக்கப்பட்டார். மரங்கள் வெட்டப்பட்டன. அவர் சரியாகி விட்டார்; நோய் மறைந்து விட்டது.

ஆனால், கருத்தாவேசம் என்பது இதுதான். ஒரே எண்ணத்தால் ஆட்டுவிக்கப்பட்டுக் கொண்டிருக்க வேண்டும் என்பதில்லை. எல்லாமும் அறியும் திறனுடன் செய்யப்பட வேண்டியவை.

நியமம் மற்றும் ஆசனம். ஒழுங்குமுறை மற்றும் உடலின் தோற்ற அமைவு: அவை உடம்புக்கானவை. கட்டுப்படுத்தப்பட்ட உடம்பு ஓர் அதிசயிக்கத்தக்க நிகழ்வு - ஒரு கட்டுப்படுத்தப்பட்ட ஆற்றல், அழகொளி, தேவைப்படுவதைவிட கூடுதலாக இருப்பது. எப்போதும் சுறுசுறுப்பானது ஒருபோதும் மந்தமாய், செயலற்றிருப்பதில்லை. அந்நிலையில் உடம்பும் அறிவுத் திறனுடையதாகி விடும். உடம்பும் விவேகமுடையதாகும், ஒரு புதிய விழிப்புணர்வுடன் உடம்பு ஒளிவீசும்.

சமூகம் இருக்கிறது. சமூகத்தில் இருந்து உங்களுக்கு யமம் என்கிற பாலமிடப்படுகிறது. உடம்பு இருக்கிறது. உடம்புக்காக ஒழுங்குமுறையும், தோற்ற நிலையிலும். மறுபடியும் ஒரு பாலம்: வெவ்வேறு பரிமாணமுள்ள மனதுக்கு உடம்பில் இருந்து: பிராணாயாமம். அந்நிலையில் மனதில் ஒரு பயிற்சி: பிரத்யாஹாரம் மற்றும் தாரணை, வீட்டுக்குத் திரும்புதல், மனதை ஒருமுனைப் படுத்துதல். அப்போது மற்றுமொரு பாலம். இதுவே கடைசிப் பாலம்: தியானம். அதன் பிறகு நீங்கள் இலக்கை அடைகிறீர்கள்: சமாதி.

சமாதி ஓர் அழகான வார்த்தை.

எல்லாவற்றுக்கும் தீர்வு காணப்பட்டதை அது குறிக்கிறது. அது சமாதானம் என்று பொருள்படும். எல்லாமும் அடையப்பட்டது. தற்போது ஆசை ஏதுமில்லை. இனி அடைய வேண்டியது ஒன்றுமில்லை. வீடு தொலைவில் இல்லை, நீங்கள் வீட்டுக்கு வந்து விட்டீர்கள்.

***உங்கள் பாதை எது? எங்களுக்கு நீங்கள் வெளிப் படுத்திய பாதையா அது?***

அது எவ்வகையிலும் பாதையாகாது, நீங்கள் அதில் பயணிக்கிறதுமில்லை. சொல்லப் போனால் அது ஒரு மனதால் உணரும் திறன் மட்டுமே. நீங்கள் பயணம் மேற்கொள்வதை நிறுத்தி விடுங்கள். பாதை என்பது பயணத்துக்குத்தான், எங்காவது போவதற்குத்தான். ஏதோ ஓரிடத்தைச் சென்று சேர்வதற்கும். ஏதோ ஒன்றை அடைவதற்கும் பாதை இருக்கிறது. பாதை ஒரு வழிவகையாயும், முடிவு தொலைதூர எதிர்காலத்திலும் இருக்கிறது. நான் சொல்வது எதுவாயினும் அது பாதையைப் பற்றியதல்ல என்றே குறிப்பிடுகிறேன். அது ஒரு மனதால் உணரும் திறன் மட்டுமே. நீங்கள் புரிந்து கொள்வீர்களாயின், நீங்கள் முன்பே உங்களுடைய இலக்கை அடைந்தாயிற்று. நீங்கள் புரிந்து கொள்வீர்களாயின் எப்போதுமே நீங்கள் அடைய விரும்பிய இலக்கில்தான் இருக்கிறீர்கள், ஒரு கணப்பொழுதும் அதை விட்டு விலகி விடவில்லை. நீங்கள் வேறோர் இடத்துக்குப் போய்விட்டதாய் கனவு காணலாம். ஆனால், ஒரு கணமும் உங்கள் வீட்டை விட்டு நீங்கள் போகவில்லை.

இது ஒரு பாதை அல்ல. நீங்கள் அந்தச் சொல்லுக்காக வற்புறுத்துவீர்களென்றால் அல்லது அந்தச் சொல்லால் கவரப்பட்டீர்களென்றால் அதை பாதையல்லாத பாதை என்று அழையுங்களேன். ஆனால் என்னைப் புரிந்துகொள்ள முயலுங்கள், இது ஒரு பாதை அல்ல. நான் உங்களுக்கு வழிவகையைத் தரவில்லை, இறுதி முடிவை (End)யே தருகிறேன்.

***உங்களிடம் வரத் தொடங்கியதில் இருந்து ஒரு தியானத்தோடு கூடிய வாழ்க்கையை வாழ்வது எளிதாயும், மிக இயல்பான நிகழ்வாயும் இருக்கிறது. ஆயினும், ஞானத்துக்கான அத்தனை நம்பிக்கைகளையும் நான் நடைமுறையில் விட்டுவிட்டேன். இத்தகைய போக்குகள் முரண்பாடானவையா?***

எவ்வகையிலும் இல்லை. ஞானத்தைச் சென்றவடைவது கட்டாயமானதாகும் - அதற்கான அத்தனை நம்பிக்கையையும், விருப்பத்தையும் நீங்கள் இழந்தாக வேண்டும். இல்லையேல் ஞானத்துக்கான விருப்பம் தன்னளவில் ஒரு கெட்ட கனவாகி விடும். நீங்கள் அதை விரும்பும் அளவுக்கு அதில் இருந்து வெகுதூரம் விலகிச் சென்று விடுவீர்கள். விருப்பம் பெரிதானால் இடைவெளியும் பெரிதாகும். அதற்கான விருப்பமனைத்தையும், நம்பிக்கைகளையும் விட்டு விடுங்கள். நீங்கள் உண்மையிலேயே ஞானம் குறித்த விருப்பமில்லாதவரென்றால், எந்தக் கணத்திலும் அது உங்களுக்குச் சாத்தியமாகிவிடும். இடைவெளி கொடுங்கள், அதற்கான விருப்பத்தால் அந்த இடத்தை நிரப்பி விடாதீர்கள்.

ஞானத்துக்குப் பெரிய தடை அதற்கான பேராவல்தான். காரணம் ஆவலும், விருப்பமும் கொண்ட மனம் எப்போதுமே இறுக்கத்துடன் இருக்கும். நீங்கள் விருப்பமற்றிருக்கும் போது நீங்களே நிர்வாணம் (மோட்சம்), நீங்களே ஞானம். விருப்பம் உங்கள் அமைதியைக் குலைக்கும். அது ஒரு ஏரியில் தோன்றும் சிற்றலைகள் மாதிரி... சிற்றலைகள் மறையும், ஏரி நிசப்தமாய் இருக்கும்.

உலகப் பொருள்கள் மீதுள்ள விருப்பத்தை விடுவது ரொம்பவும் எளிது. உண்மையில் அவற்றைப் பற்றிக் கொண்டிருப்பது முட்டாள்தனம் என்பதில் சந்தேகமில்லை. முட்டாள்கள் மட்டுமே உலகாயதப் பொருள்களைப் பற்றிக் கொண்டிருப்பார்கள். காரணம் அவை உங்களிடமிருந்து பறிக்கப்பட்டு விடும் என்பதை எவரும் கண்டுகொள்ள முடியும். எல்லாப் பற்றும் பலனற்றவைதாம், பயனற்றவைதாம். சிறிதளவே அறிவுத்திறன் உடையவரும் பெருந்திரளாகச் சேர்க்கின்ற பொருள்களெல்லாம் உங்களுக்கு வளத்தைத் தந்துவிடாது என்பதில் விழிப்புடன் இருப்பாக்ள். சொல்லப் போனால் அது உங்களை மேலும் மேலும் ஏழையாக்கி விடும். நீங்கள் எந்த அளவு பெற்றிருக்கிறீர்களோ அந்த அளவு வெறுமையாய் உணர்வீர்கள்.

ஒரு செல்வந்தன் அடியாழத்தில் மிகவும் ஏழைதான். சக்கரவர்த்திகளைவிட பெரிய பிச்சைக்காரர்களை நீங்கள் பார்த்திருக்க முடியாது. தங்களால் விரும்பக்கூடிய அனைத்தும் தங்களிடம் இருப்பதை அவர்கள் நன்கறிந்திருந்தாலும், உள்ளுக்குள் எதுவும் மாறி விடவில்லை என்பதை முதல் முறையாய் கண்டு

விழிப்படைகிறார்கள். மனதுக்கு நிறைவாய் எதுவும் நடந்துவிட வில்லை, தெவிட்டுண்டான (satiety) நிலை இல்லை. ஒவ்வொன்றும் எப்போதும் உள்ள அளவிலேயே குழப்பமும், கொந்தளிப்புமாய் இருக்கிறது. ஒட்டுமொத்த முயற்சியும் உபயோகமற்றதானது, முழு வாழ்க்கையும் அதில் வீணாயிற்று.

இல்லை, உலகாயத விருப்பங்களை விடுவதொன்றும் கடினமில்லை, ஆனால், உலக விருப்பங்களை நீங்கள் கைவிட்ட உடனேயே மனம் மறு உலக விருப்பங்களைத் தோற்றுவிக்கும்: மோட்சம், நிர்வாணம், ஞானம், கடவுள் என்று. தற்போது நீங்கள் இவற்றுக்காகப் பெரிதும் விரும்பி நிற்கிறீர்கள். சந்தர்ப்ப சூழ்லை அப்படியேதான் இருக்கிறது - நீங்கள் விருப்பத்தில் இருக்கிறீர்கள். நோக்கம் பொருத்தமற்றதாய் காணப்படுகிறது, விசயம் உண்மையில் நீங்கள் விரும்புகிறீர்களா அல்லது இல்லையா என்பதுதான். உண்மையான கருத்து நீங்கள் எதை விரும்புகிறீர்கள் என்பதல்ல. உங்களுடைய ஆன்மிக ஆசான்கள் -. அப்படி அழைக்கப்படுகிற வர்கள் உங்களைத் தவறாக வழிநடத்துகிறவர்கள், 'உங்கள் விருப்பத்திற்கான பொருளை மாற்றுங்கள், உலகாயதப் பொருள்களை விரும்பாதீர்கள், கடவுளை விரும்புங்கள்' என்று சொல்லிக் கொண்டேயிருப்பார்கள். ஆனால், நான் உங்களுக்குச் சொல்கிறேன், "நீங்கள் கடவுளை விரும்பினால், அந்தக் கடவுள்தானே உலகப் பொருளாகவும் மாறுவார்." என்னைப் பொறுத்தவரை இதுதான் உலகத்துக்கான விளக்கம்: விரும்பப்படுகிற எதுவும் உலகமாகிறது.

கடவுளை விரும்ப முடியாது. நீங்கள் கடவுளை உங்கள் விருப்பத்திற்குரிய பொருளாக்க முடியாது. அது புனிதத் தன்மையை அவமதிப்பதாகும். ஞானம் விரும்பக்கூடியதல்ல, காரணம் விருப்பமற்ற நிலையில்தான் அது நேரிடுகிறது. ஞானம் என்பது வெளியில் இருந்து வருகிற ஏதோவொன்றல்ல. மனம் விருப்பத்தில் இருந்து விடுபடுகிற போது, திடீரென்று அரசர்களுக்கெல்லாம் அரசனாகிய இறைவன் உங்களுக்குள் அமர்ந்திருப்பதை உணர்வீர்கள். அவர் எப்போதுமே அங்குதான் இருக்கிறார், ஆனால் நீங்களோ விரும்புவதிலும், அடைவதிலும், பெறுவதிலும், நிறை வேற்றுவதிலும் மிகுந்த கவலையுடையவராயிருந்தீர்கள்.

முயன்று அடைகிற மனமே ஒரு தடை. எனவே, உங்களுடைய ஞானத்துக்கான நம்பிக்கைகளை விட்டுவிடுவதே நன்மையளிப் பதாகும்.

ஆனால், நீங்கள் நம்பிக்கையனைத்தையும் விட்டிருப்பீர்கள் என்று நான் நினைக்கவில்லை - இல்லையேல் அது நிகழ்ந்திருக்கும். நீங்கள் சரியான முறையில் இருக்கலாம். ஆயினும்: நடைமுறையில் ஞானத்துக்கான நம்பிக்கையனைத்தையும் விட்டுவிட்டிருக்கலாம். ஆனால், அடியாழத்தில் இன்னும் அதைப்பற்றிக் கனவு காண்பவராகவே இருக்கிறீர்கள். நடைமுறையில் நீங்கள் அதை விட்டிருக்கலாம், ஆனால் ஆழத்தில் அதற்கான விருப்பம் இருக்கவே செய்யும். இல்லையேல் - ஞானம் ஏன் நேரிடவில்லை என்ற கேள்வி எழுந்திருக்காது. அது உடனடியாய் நிகழப்பட வேண்டியது - கண நேர இடைவெளியும் அதில் இருப்பதில்லை. அது முற்றிலும் நிச்சயம்: விருப்பம் உங்களை முற்றாய் முழுமையாய் விடும்போது, அது அங்கிருக்கிறது. உண்மையில் அது ஒன்றுமே இல்லை - விருப்பம் அற்ற நீங்க. எனவே உங்களுக்குள் இன்னும் கொஞ்சம் ஆழத் தோண்டுங்கள், உள்ளார்ந்த தேடலை மேற்கொள் ளுங்கள். நீங்கள் மறுபடியும் விருப்பங்களை, விருப்பங்களின் அடுக்குகளைக் காண்பீர்கள். அவற்றை வீசியெறியுங்கள். உங்களுடைய வெங்காயத்தை அதன் நடுப்பகுதிக்கும் உள்ளாய் தோலுரியுங்கள்.

ஒருநாள் அது நிகழப் போகிறது. அது என்று வேண்டுமானாலும் சாத்தியமாகும். விருப்பம் இல்லாத, விருப்பத்தின் சிறு 'மினுக்' (*flicker*)கும் இல்லாத - நடுக்கம் இல்லாத, தடுமாற்றம் இல்லாத - பிரக்ஞை ஒளி வீசுகிற - புகையில்லாமல் பிரக்ஞையின் தீச்சுடர் கொழுந்து விட்டெரிகிற எந்தக் கணத்திலும்... திடீரென்று நீங்கள் சிரிக்கத் தொடங்குகிறீர்கள், நீங்கள் எதனைத் தேடிக் கொண்டிருக்கிறீர்களோ அது எப்போதும் உங்களுக்குள் இருப்பதை சற்றும் எதிர்பாராத விதமாய் நீங்கள் அறிந்து கொள்கிறீர்கள். 'கடவுளின் இராஜ்யம் உங்களுக்குள் இருக்கிறது' என்று இயேசு அழுத்தமாய் கூறும்போதெல்லாம் அதையே கருத்தில் கொண்டிருக்கிறார். அது வெளிப்புறத்தில் இருந்தால் விரும்ப வேண்டியதுதான். அது வெளியில் இருந்தால் ஒரு பாதையின் மூலம் அதை அடைய முடியும். அதுவாக இருப்பது நீங்கள். அதனால்தான் உங்களுக்கு வழங்க என்னிடம் வழிவகை (path) எதுவும் இல்லை. என்னுடைய அறியும் திறனை (understanding) மட்டுமே உங்களுடன் பகிர்ந்து கொள்கிறேன்.

○

**இந்த உலகம் என்னை நேசிக்கிறதா?**

இது கேட்பதற்குப் பொருத்தமில்லாத கேள்வி. நீங்கள் வேறுவிதமாய் கேட்டிருக்க வேண்டும், "இநத் உலகை நீங்கள் நேசிக்கிறீர்களா?" என்று. காரணம் உலகம் ஒரு தனி நபரல்ல. அது உங்களை நேசிக்க முடியாது. அதற்கு மையம் இல்லை. அல்லது அதற்கு எங்கும் மையம் இருக்கிறது என்றோ நீங்கள் சொல்ல முடியும். ஆனால், அது ஒரு தனி நபரல்லாத தோற்ற நிலை. தனி நபரல்லாத பிரபஞ்ச இருப்பு எப்படி உங்களை நேசிக்க முடியும்? நீங்கள் நேசிக்க முடியும்.

ஆனால், நீங்கள் நேசிக்கிறபோது இவ்வுலகம் பதிலளிக்கிறது. நிச்சயமாய் பதிலளிக்கிறது. நீங்கள் உலகத்தை நோக்கி ஓரடி எடுத்து வைத்தால், உலகம் உங்களை நோக்கி ஆயிரத்தியோரு அடிகள் எடுத்து வைக்கும். ஆனால், அதுதான் மறுமொழியாகும்.

லாவோட்சு என்ன சொல்கிறார் என்பதை நீங்கள் புரிந்துகொள்ள வேண்டும். பிரபஞ்ச இருப்பின் இயல்பு பெண்மை சார்ந்தது. ஒரு பெண் காத்திருக்கிறாள். அவள் ஒருபோதும் தொடங்கி வைப்பதில்லை. ஆண்தான், தொடங்கி வைத்து இயங்குவது. ஆண்தான் காதல் முயற்சியில் ஈடுபட்டு, அழைப்பு விடுத்து, இணங்க வைக்க வேண்டியிருக்கும். நீங்கள் துவக்கி வைக்கிறீர்கள்... அதன் பிறகு உலகம் உங்கள் மீது பொழிகிறது - எண்ணற்ற வழிகளில் பொழிகிறது அளவிற்குட்படாத வகையில் நிரப்புகிறது. ஒரு பெண்ணைப் போலத்தான்: நீங்கள் அவளை இணங்கச் செய்து விட்டால் அவள் பெரிய அளவில் பொழிகிறாள்.

காதலில் ஒரு பெண்ணின் ஈடுபாடு ஆணுக்கு இருக்க முடியாது. ஆண் எப்போதும் பகுதியளவே காதலிப்பவராயிருக்கிறான். அவனுடைய ஒட்டுமொத்த இருப்புணர்வும் காதலில் ஈடுபட்டு விடுவதில்லை. பெண்ணோ அதில் முழுமையாய் இருக்கிறாள், அதுவே அவளுடைய முழுமையான வாழ்க்கையாகிறது, மூச்சாகிறது. ஆனால், அவள் காத்திருக்கிறாள். அவள் ஒருபோதும் தொடங்கி வைப்பதில்லை. அவள் உங்களை வேட்டையாடுவதில்லை. ஒரு பெண் உங்களைத் துரத்தினால் அவள் எத்தனை அழகானவளாய் இருந்தாலும் - நீங்கள் அவளால் திகிலடித்துப் போவீர்கள். அவள் பெண்மையுடன் காட்சியளிக்க மாட்டாள். அவள் எரிச்சலூட்டுகிற விதமாய் நடந்து கொள்வதில் அவளுடைய மொத்த அழகும்

அருவருக்கத் தக்கதாய் மாறிவிடும். பெண் எதிர்ப்பு தெரிவிக்காத வளாய், எதிர்க்காது துன்பம் ஏற்கிறவளாய் இருக்கிறாள். 'எதிர்ப்பு தெரிவிக்காதவள்' என்கிற வார்த்தையை நினைவு கொள்ளுங்கள்.

உலகம் தாயாயிருக்கிறது. கடவுளை 'தந்தை' என்று அழைப்பதைவிட 'தாய்' என்று அழைப்பதே சிறப்பு. 'தந்தை' என்பது அத்தனை பொருத்தமாயில்லை. உலகம் தாயாயிருக்கிறது. பெண்ணியல்பு கொண்டதாய் உங்களுக்காகக் காத்திருக்கிறது - அது காத்திருக்கிறது உங்களுக்காக எப்போதைக்குமாய் - ஆனாலும் நீங்கள் கதவைத் தட்டியாக வேண்டும். நீங்கள் தட்டினால் அது உடனே திறந்து கொள்ளக் காண்பீர்கள். ஆனால், நீங்கள் தட்டாவிடில், கதவருகே காலமெல்லாம் காத்திருக்க வேண்டியதுதான். பிரபஞ்ச இருப்பு அதைத் திறக்கப் போவதில்லை, அது தலையிடாது. காதலில் கூட அது தலையிடுவதில்லை. அதனால்தான் நான் சொல்கிறேன், அது ஏற்ற பதிலைக் கொடுக்கும் என்று.

ஆனால் நியாயமற்ற, தவறான கேள்வியைக் கேட்டு வைக்காதீர்கள். 'இந்த உலகம் என்னை நேசிக்கிறதா?' என்று கேட்காதீர்கள். உலகத்தை நேசியுங்கள். அத்துடன் உங்கள் நேசம் ஒன்றுமே இல்லை என்பதைப் புரிந்து கொள்வீர்கள். உலகம் அத்தகைய அளவிட முடியாத அன்பை உங்களுக்கு வழங்கும். உங்கள் அன்பை எல்லையற்ற விதத்தில் அது திருப்பித் தரும்... ஆனால் அது ஒரு மறுமொழியாகவே (*response*) இருக்கும் - உலகம் ஒருபோதும் தொடங்கி வைப்பதில்லை. அது காத்திருக்கிறது. காத்திருப்பதிலும் அழகிருக்கிறது. இல்லையேல் அன்பின் ஒட்டுமொத்த அழகும் இழக்கப்பட்டு விடும்.

ஆனாலும் இந்தக் கேள்வி எழுகிறது: அது உங்கள் மனதுக்குப் பொருத்தமானதா என்ற கேள்வி. மனித மனம் இப்படித்தான் வேலை செய்கிறது. 'மற்றவர் என்னை நேசிக்கிறாரா?' என்று எப்போதும் அது கேட்கிறது. கணவன் கேட்டுக் கொண்டேயிருக்கிறான், 'என் மனைவி என்னை நேசிக்கிறாளா?' என்று. மனைவி கேட்கிறாள், 'கணவர் என்னை நேசிக்கிறாரா?' என்று. குழந்தைகள் எண்ணமிடுகின்றன. 'என்னுடைய அம்மா, அப்பா என்னை நேசிக்கிறார்களா?' என்று. அவ்வாறே பெற்றோர்களும் எண்ணிப் பார்க்கிறார்கள் குழந்தைகள் தங்களை நேசிக்கிறார்களா என்று. நீங்கள் எப்போதுமே அடுத்தவரைப் பற்றித்தான் கேட்கிறீர்கள். நீங்கள் நியாயமில்லாத ஒரு

கேள்வியைக் கேட்கிறீர்கள். நீங்கள் தவறான திசையில் சென்று கொண்டிருக்கிறீர்கள். ஒரு சுவரை நீங்கள் எதிர்கொள்கிறீர்கள், அங்கே கதவிருக்காது. சுவரில் மோதிக் கொண்டு விடுவோமோ என்று நீங்கள் தொந்தரவாய் உணர்கிறீர்கள். தொடக்கமே தவறாகி விட்டிருக்கிறது. "நான் மனைவியை நேசிக்கிறேனா?", "நான் கணவரை நேசிக்கிறேனா?", "நான் குழந்தைக்ளை நேசிக்கிறேனா?", "என்னுடைய தந்தையை, என்னுடைய தாயை நான் நேசிக்கிறேனா?" என்றுதான் நீங்கள் எப்போதும் கேட்டுக்கொள்ள வேண்டும். அது எப்போதும் உங்களில் இருந்தே தொடங்குகிறது - நீங்கள் நேசிக்கிறீர்கள்தானே.

இதுவே புரிந்துகொள்ள முடியாததும், விளக்கம் காண முடியாததுமான மறைபொருளாய் (mystery) இருக்கிறது. நீங்கள் நேசித்தால், சற்றும் எதிர்பாராத விதமாய் எல்லாரும் உங்களை நேசிக்கத் தொடங்கி விடுகிறார்கள். மனைவியை நீங்கள் நேசித்தால், அவள் உங்களை நேசிக்கிறாள். நீங்கள் கணவரை நேசித்தால் அவர் உங்களை நேசிக்கிறார். நீங்கள் குழந்தைகளிடம் அன்பு காட்டினால் அவர்களும் உங்களிடம் அன்பு வைக்கிறார்கள். இதயபூர்வமாய் நேசிக்கிற ஒருவருக்கு எங்கிருந்தும் மறுமொழி கிடைக்கிறது. அன்பு ஒரு போதும் பயனில்லாமல் போய் விடுவதில்லை. அது செழிப்புடன் விளங்குகிறது.

ஆனால் நீங்கள் சரியான விதத்தில், சரியான பாதையில் தொடங்க வேண்டும். இல்லையேல் "அடுத்தவர் என்னை நேசிக்கிறாரா?" என்று எல்லாரும் கேட்டுக் கொண்டிருப்பார்கள். அடுத்தவரும் அதே கேள்வியைத்தான் கேட்டுக் கொண்டிருப்பார். பிறகு யாருமே நேசிக்க மாட்டார்கள். அந்நிலையில் நேசம் என்பது சற்றும் கட்டுப்பாடில்லாத கற்பனையாகி விடும். அந்நிலையில் நேசம் இந்த மண்ணைவிட்டே மறைந்து விடும். கவிஞர்களின் கவிதைகளில் - கற்பனைகளாய், கனவுகளாய் மட்டுமே அது இருக்கும். நடைமுறை என்பது முற்றிலும் அன்பில்லாததாகவே இருக்கிறது. காரணம் நீங்கள் ஒரு தவறான கேள்வியோடுதான் தொடங்கினீர்கள்.

அந்தக் கேள்வியை ஒரு பிணி மாதிரி விட்டுவிடுங்கள். அதை நழுவ விடுங்கள். அதிலிருந்து விலகி விடுங்கள். 'நான் அன்பு செய்கிறேனா?' என்று கேளுங்கள் எப்போதும். அதுதான் திறவு கோலாகும். அந்தத் திறவுகோலைக் கொண்டு எந்த இதயத்தையும்

நீங்கள் திறக்க முடியும். அந்தத் திறவுகோலைக் கொண்டு காலப்போக்கில் பிரபஞ்ச இருப்பையே திறக்குமளவு மிகவும் திறமை உடையவராகி விடுவீர்கள். பிறகு, அது பிரார்த்தனையாகும். 'இந்த உலகம் உங்களிடம் இறைஞ்சி மனம் உருகிக் கேட்டல் நிற்கிறதா? என்கிற கேள்வியைக் கேள்வியைக் கேளுங்கள். பிறகு அது முட்டாள் தனமாய்த் தெரியும், பொருந்தாததாய்ப்படும். 'உலகம் உங்களிடம் இறைஞ்சி நிற்கிறதா,' நீங்கள் அதைக்கூட கேட்பதற்கில்லை. ஆனால், பிரார்த்தனை என்பது அன்பின் மலர்ச்சியன்றி வேறெயென்ன.

நீங்கள் உலகிடம் இறைஞ்சுகிறீர்கள். அந்நிலையில் அன்பின் சிற்றாறுகள் எங்கிருந்தெல்லாமோ உங்களை நோக்கிப் பாய்ந்தோடி வரும். நீங்கள் நிறைவடைந்தவராவீர்கள். உங்களுக்கு வழங்க உலகம் அதிக அளவில் வைத்திருக்கிறது. ஆனால் நீங்கள் வெளிப்படையாய் இருக்க வேண்டும். உங்களிடம் அன்பிருந்தால் திறப்பு (opening) சாத்தியம். அப்போது நீங்கள் ஏற்றுக்கொள்ள இசைவாயிருப்பீர்கள். இல்லையேல் நீங்கள் மூடிக்கிடக்க வேண்டியதுதான். உங்கள் மூடிய நிலை எதிர்நோக்குகிற உலகும் உதவியற்றதாக 'விடும்.



'ஒருவர் தன்னுடைய இருப்புணர்வின் பகுதியை வெளியே யுள்ள நிலைமைகள் மற்றும் தவறான எண்ணங்களைக் கொண்டு மறைக்கவோ அல்லது தவிர்க்கவோ செய்கிறபோது அவர் உயர் நிலைகளுக்கு ஏறுவது சாத்தியப்படுமா?' இல்லை, அது சாத்தியமில்லை. 'ஏணியில் பகுதியளவாய் மேலேற முடியுமா?' என்று நீங்கள் என்னிடம் கேட்கிறீர்கள். உங்களில் ஒரு பகுதி கீழேயும், இன்னொரு பகுதி ஏணியில் ஓரிடத்திலும் இருக்கிறது. அந்த ஒரு பகுதி மட்டும் உச்சியை அடைய வேண்டும் என்றால் அது எப்படி சாத்தியமாகும்? நீங்கள் ஒன்றாய் (unity) இருக்கிறீர்கள். உறுப்பு சார்ந்த ஒருமையைப் பெற்றிருக்கிறீர்கள். உங்களைப் பிரிக்க முடியாது. அதுவே 'ஒருவர்' (individual) என்ற சொல்லுக்குப் பொருள். அது பிரிக்க முடியாதது. நீங்கள் ஒற்றையானவர். உங்களுடைய முழுமையுடன் நீங்கள் இறைத்தன்மை வாய்ந்த வாசலுக்குச் செல்ல வேண்டும், எதுவும் விடப்படுவதற்கில்லை.

அதனால்தான் நான் மறுபடியும் மறுபடியும் வற்புறுத்துகிறேன், உங்களுடைய கோபத்தை நீங்கள் மறைத்து வைத்தால் கடவுட்

தன்மையுடைய கோயிலில் நீங்கள் நுழைவது இயலாத காரியம். ஏனெனில், நீங்கள் அதைத்தான் செய்து கொண்டிருக்கிறீர்கள்: நீங்கள் கோயிலுக்கு வெளியில் கோபத்தை விட்டுவிட்டு, உள்ளே நுழைய முயற்சிக்கிறீர்கள். நீங்கள் எப்படி உள்ளே நுழைய முடியும். காரணம், கோபத்தை வெளியில் விட்டவர் யார்? அது நீங்கள்தான். நீங்கள் பாலுணர்வை மறைக்க முயன்றால் அந்நிலையில் கடவுட் தன்மையுள்ள கோயிலுக்குள் உங்களால் நுழைய முடியாது. காரணம் பாலுணர்வு யார்? அது நீங்கள், உங்களுடைய சக்தி. எதையும் வெளியில் விட்டுச்செல்ல முடியாது. நீங்கள் எதையேனும் வெளியில் விடுவீர்களாயின் உங்களுடைய முழுமை (totality)யும் அத்தோடு விடப்பட்டு விடும். அப்போது ஒரேயொரு சாத்தியந்தான் இருக்க முடியும். நீங்கள் வெளியில் இருந்து கொண்டு, உள்ளே நுழைந்து விட்டதாய் கனவு காண்பதுதான் அது. உங்களுடைய 'மகாத்மாக்கள்' பலரும் அதைத்தான் செய்து கொண்டிருக்கிறார்கள். அவர்கள் கோயிலுக்கு வெளியில் இருந்தபடி, தாங்கள் உள்ளே நுழைந்து விட்டதாயும், கடவுளைக் காண்பதாயும், தாங்கள் சொர்க்கத்தில் (மோட்சம்) இருப்பதாயும் கனவு காண்கிறார்கள்.

உங்களுடைய முழுமையோடுதான் நுழையக்கூடும் – ஒரேயொரு பகுதியைக்கூட பின்னால் விட்டுச்செல்ல முடியாது. எனக்குத் தெரியும், அருவருக்கத்தக்க பாகங்கள் இருக்கின்றன. உங்களுடைய குழப்பநிலை எனக்குப் புரிகிறது. நீங்கள் அந்த அருவருப்பான பாகங்களைத் தெய்வத்திடம் கொண்டு செல்ல விரும்ப மாட்டீர்கள். உங்களுடைய தொந்தரவும், வேதனையும் உள்ள நிலை எனக்குப் புரிகிறது: உங்கள் பிரச்சினையுந்தான். நீங்கள் பாலுணர்வு, கோபம், பொறாமை, பகைமை என்று சகலத்தையும் ஒரேயடியாய் விட்டுவிட விரும்புவீர்கள். நீங்கள் களங்கமற்ற கன்னிப் பெண்ணாய் இருக்க விரும்புவீர்கள். உங்கள் சிந்தனை சரியானது ஆனால் அதைச் செய்வதற்கு நீங்கள் முயற்சித்துக் கொண்டிருக்கும் வழி சாத்தியமற்றது. ஒரே வழி: மாற்றம். உங்களுடைய பாகங்களை வெட்ட வேண்டாம், அவற்றை உருமாற்றம் (transform) செய்து விடுங்கள். அருவருப்பானது அழகாகி விடும்.

தோட்டத்தில் என்ன நடக்கிறது என்பதை நீங்கள் கவனித்திருக் கிறீர்களா? நீங்கள் பசுமாட்டுச் சாணத்தைக் கொண்டு வருகிறீர்கள் – நாற்றமடிக்கிறது – உரங்கள் – உரம் மோசமாய் நாற்றமடிக்கிறது. ஆனால் சில மாதங்களில், உரம் மண்ணில் மறைந்துவிடும். தற்போது

நேர்த்தியான மணத்துடன் கூடிய அழகிய பூக்களாய் அது தலையெடுக்கிறது. இதுவே மாற்றம். கெட்ட நாற்றம் நறுமணமாகிறது. உரத்தின் அருவருக்கத்தக்க வடிவம் அழகிய பூக்களாய் மாறுகின்றது. வாழ்க்கைக்கு மாற்றம் தேவைப்படுகிறது. நீங்கள் முழுமையுடன் - மாறியவராய் கடவுளின் கோயிலுக்குள் நுழைய முடியும். எதையும் மறைக்காதீர்கள். அதை மாற்றுதற்கான சாதனத்தைக் கண்டறிய முயலுங்கள்.

கோபம் இரக்கமாய் உருவெடுக்கிறது - கோபமில்லாத ஒருவர். இரக்கத்தோடு நடந்து கொள்வது ஒருபோதுமில்லை. ஆம் ஒரு போதுமில்லை. இருபத்து நான்கு தீர்த்தங்கரர்களும் சத்திரியர் களாகவே பிறந்ததும் வீரர்களாயிருந்ததும் கோபக்காரர்களாய் இருந்ததும் ஒரே காலத்தில் நிகழ்ந்த சம்பவம் அல்ல. அவர்கள் அகிம்சையையும், இரக்கத்தையும் போதிப்பவர்களாயினர். புத்தர் ஒரு வீரர், சத்திரியக் குடும்பத்தில் இருந்து வந்தவர். அவர் ஒரு * சாமுராய். அவர் இரக்கவுணர்வில் பூத்த சிறந்த மலர். ஏன்? அவர்கள் உங்களைவிட அதிகக் கோபம் உடையவர்கள். கோபம் மாறும்போது. மாற்றப்படும் போது உண்மையிலேயே அது மிகப்பெரிய சக்தியாகி விடுகிறது.

உங்களுக்குக் கோபம் தேவை. நீங்கள் தற்போதுள்ள நிலையிலேயே அது உங்களுக்குத் தேவைதான். நீங்கள் மாற்றமடைகிற போதும் அது உங்களுக்குத் தேவைப்படும். காரணம் அந்நிலையில் அது எரிபொருளாய், சக்தியாய் மாறும். அது தூய்மையான சக்தியாகிறது. ஒரு சிறிய குழந்தை. சில நேரங்களில் உண்மையிலே கோபத்துடன் இருப்பதை நீங்கள் பார்த்திருக்கிறீர்களா? அந்தச் சிறு குழந்தை - பிரகாசமாய், உயிர்த் துடிப்புடன், வெடித்து, இந்த உலகத்தையே அழித்து விடுவது போலிருக்கும். ஒரு சிறிய, மிகச்சிறிய குழந்தை - சிவந்த முகத்துடன், குதித்து, கூச்சலிட்டு அணுசக்தியாய் காட்சியளிக்கிறது - சக்தி, தூய சக்தி. உங்களால் குழந்தையைக் கட்டுக்குள் வைத்து, இந்தச் சக்தியை எப்படிப் புரிந்து கொள்வது என்று போதிக்காவிடில், அவனை அடக்கி வைக்க எந்த அவசியமுமில்லை, அதே சக்தியை மாற்றிவிட முடியும்.

* சாமுராய் (Samurai): ஜப்பானிய மெய்க்காவலர் படை வகுப்பினர். நாட்டுக்காகத் தமது உயிரைத் தாமே முன்வந்து விரும்பிக் கொடுப்பவர். அவர்கள் வாழும்போதே மரணத்தை வெற்றி கொண்டவர்கள்.

நீங்கள் கவனியுங்கள்: வானத்தில் மேகங்கள் திரள்கின்றன. அந்நிலையில் பெரிய அளவில் மின்னலும், இடியும் இருக்கும். இந்த மின்னல், சில நூறு ஆண்டுகளுக்கு முன்பாயிருந்தால் மனித வாழ்க்கையில் ஓர் அச்சமூட்டும் காரணியாய் (factor) இருந்திருக்கும். மனிதன் மின்னலைக் கண்டு மிகவும் பயந்தான் - தற்போது உங்களால் கற்பனை செய்ய முடியாது. காரணம் அதே மின்னல் தற்போது மின் சக்தியாகி விட்டிருக்கிறது. அது வீட்டில் பணி செய்யும் வேலையாகி விட்டது. அது உங்கள் குளிர்பதனப் பெட்டியை இயங்கச் செய்கிறது. வெப்பக் கட்டுப்பாட்டுக் கருவியை (air conditioner) இயங்கச் செய்கிறது. அது இரவும், பகலும் வேலை செய்கிறது - எந்தவோர் அடிமையும் அந்த வகையில் வேலை செய்ய மாட்டான். அதே மின்னல்தான் ஒரு பெரிய, அச்சுறுத்தும் காரணியாய் மனித வாழ்வில் இருந்திருக்கிறது.

முதல் கடவுள் மின்னலில் பிறந்தது - அச்சத்தில். இந்திரன் தோன்றினான், அவனே இடி, மின்னலுக்கான கடவுள். மக்கள் அவனை வழிபடத் தொடங்கினர். காரணம் இந்த மின்னல் ஒரு தண்டனை என்று மக்கள் கருதினார்கள். ஆனால், தற்போது யாரும் அதைப்பற்றிக் கவலைப்படுவதில்லை, தற்போது உங்களுக்கு அந்த இரகசியம் தெரியும். சாதனத்தை நீங்கள் கண்டு கொண்டீர்கள். இந்திரனின் தண்டனையாய் கருதப்பட்ட அதே மின்சக்தி தற்போது ஓர் அடிமையைப் போல் வேலை செய்கிறது. இந்திரன் உங்களுடைய வெப்பக்கட்டுப்பாட்டுக் கருவிக்குப் பின்னால் செயல்பட்டுக் கொண்டிருக்கிறார். இந்திரன் உங்களுடைய குளிர்பதனப் பட்டியை இயக்கிக் கொண்டிருக்கிறார். தற்போது இனிமேலும் இந்திரன் ஒரு கடவுளல்லர், ஒரு பணியாள். அத்தகைய பணியாள். ஒருபோதும் வேலை நிறுத்தம் செய்வதில்லை, ஊதிய உயர்வு கேட்பதில்லை. எதுவும் இல்லை. முற்றாக, முழுமையாக ஓர் அடிமை.

மனிதனின் உள்ளிருக்கும் ஆகாயத்திலும் அதுவே போல நிகழ்கிறது - கோபம் மின்னலாகிறது. புத்தரில் அது இரக்க உணர்வாயிற்று. தற்போது பாருங்கள் புத்தரின் முகம் எத்தனை பிரகாசமாயிருக்கிறதென்பதை. இந்த ஒளிர்கின்ற கதிரொளி எங்கிருந்து வந்தது? அது மாற்றப்பட்ட கோபம். நீங்கள் பாலுணர்வு பற்றிப் பயப்படுகிறீர்கள். ஆனால் ஒரு வீர்யமில்லாத மனிதன் ஞானம் பெற்றதாய் நீங்கள் கேள்விப்பட்டிருக்கிறீர்களா? சொல்லுங்கள். வீர்யமில்லாத, பாலுறவு சார்ந்த ஆற்றல் இல்லாத எந்தவொரு

மனிதனாவது ஒரு தீர்க்கதரிசியாய் - ஒரு மகாவீரர், ஒரு புத்தர், ஓர் இயேசு என்று வந்திருப்பதைக் கேள்விப்பட்டிருக்கிறீர்களா? நீங்கள் அதுபற்றிய விவரங்களை அறிவீர்களா? அப்படி ஒருபோதும் நடப்பதில்லை - நடக்க முடியாது - காரணம், அந்தச் சக்தி துல்லிய அளவில் இல்லை என்பதுதான். பாலுறவுக்கான சக்தி மேலெழுகிறது. பாலுறவு சக்தியே கணப்பொழுதில் மாற்றம் அடைவது: அதுவே சமாதி நிலை அடைகிறது.

பாலுறவு சக்தி சமாதி என்கிற மேம்பட்ட உணர்வாய் மாறுகிறது. நான் சொல்கிறேன், நீங்கள் எந்த அளவு பால் சார்ந்தவராய் (sexual) இருக்கிறீர்களோ அந்த அளவு சாத்தியம் இருக்கிறது. எனவே அஞ்சாதீர்கள். அதிக பால்சார்ந்த பண்பு (sexuality) உங்களிடம் அதிக அளவில் சக்தி இருப்பதையே வெளிக்காட்டுகிறது. ரொம்பவும் சாதகமானது, விரும்பத்தக்கது. நீங்கள் கடவுளுக்கு நன்றி சொல்ல வேண்டும். ஆனால் நீங்கள் நன்றி பாராட்டவில்லை - சொல்லப் போனால் குற்ற உணர்வு கொண்டு விடுகிறீர்கள். அதைவிடவும் கடவுளிடம் குறை கூறுகிற மாதிரி உணர்கிறீர்கள், 'இந்தச் சக்தியை எனக்கு ஏன் கொடுத்தீர்?' என்று குறைபடுகிறீர்கள். இந்தச் சக்தியால் எதிர்காலத்தில் நிகழக்கூடியது என்னவென்று உங்களுக்குத் தெரியாது. புத்தர் வீர்யமற்றவரல்லர். அவர் மிகவும் நிறைவு தரக்கூடிய பால் சார்ந்த வாழ்க்கையை வாழ்ந்திருக்கிறார் - சாதாரண பாலுறவு வாழ்க்கையல்ல அது. அவருடைய தந்தை தமது ராஜ்யத்தில் உள்ள அழகான பெண்களை அவருக்குப் பணிவிடை செய்ய வரும்படி உத்தரவிட்டார். அழகிகள் அவருக்குப் பணிவிடை செய்து கொண்டிருந்தார்கள்.

சக்தி தேவைப்படுகிறது. சக்தி எப்போதுமே நேர்த்தியானது. நீங்கள் அதை எப்படிப் பயன்படுத்துவதென்று அறியாவிடில் அது அருவருக்கத் தக்கதாகி விடுகிறது. உடலுறவு உங்கள் இருப்புணர்வின் தாழ்வான மையம். ஆனால் அதுவே எல்லாமுமாகி விடாது: உங்கள் இருப்புணர்வில் ஏழு மையங்கள் உள்ளன. சக்தி மேல் நோக்கிச் செல்லும்போது, அதை மேல் நோக்கி வெளியிடுவதற்கான சாதனத்தை நீங்கள் அறிந்திருந்தால் அது ஒரு மையத்திலிருந்து இன்னொரு மையத்திற்குச் செல்லும்போது பல மாற்றங்களை நீங்கள் உணர்வீர்கள். அந்த சக்தி இருதய மையத்தில் உள்ள சக்கர நிலைக்கு வரும்போது நீங்கள் அன்பால் நிறைந்து அன்பாகவே மாறிவிடுவீர்கள். அந்தச் சக்தி மூன்றாவது கண்ணான மையத்துக்கு வரும்போது நீங்கள்

பிரக்ஞையும், விழிப்புணர்வும் கொண்டவராகி விடுவீர்கள். அந்தச் சக்தி கடைசிச் சக்கரமாகிய சஹஸ்ரத்துக்கு வரும்போது நீங்கள் செழிப்புடன் பூத்துக் குலுங்க உங்களுடைய வாழ்வென்னும் மரம் ஒரு நிறைவை அடைகிறது. நீங்கள் புத்தராகி விடுகிறீர்கள். ஆனால், சக்தி அதே சக்திதான்.

பழித்துக் கூறாதீர்கள், அடக்கி வைக்கப் பார்க்காதீர்கள், மாற்றுங்கள். அதிகம் புரிந்து கொள்ளும் திறனுடன், கவனமுடன் இருங்கள். அதன் பிறகே முழுமையில் நுழையும் திறன் பெற்றவராவீர்கள். வேறு வழியில்லை. இன்னொரு வழி உண்டென்றால் அது கனவு காண்பதும், கற்பனை செய்வதுந்தான்.



ஜென்னைப் பொறுத்தவரை, ‘பசித்தபோது உண்ணுங்கள், தாகம் எடுத்தால் பருகுங்கள். பதஞ்சலிக்கு அது. ‘ஒழுங்குமுறையாய் – நியமமாயிருக்கிறது. ஒழுங்கான முறையில் நிகழ்வதையும் தானாகவே (திட்டமிடாமல்) நிகழ்வதையும் எப்படி வேற்றுமை அகற்றி சமரசப்படுத்துவது?’ செயற்கையாக ஒன்றை உருவாக்க வேண்டிய அவசியம் இல்லை. நீங்கள் புறத்தூண்டுதலின்றித்தானே செய்பவராயின் உங்களை முறைப்படுத்திக் கொண்டுவிட முடியும். வேற்றுமை அகற்றி சமரசம் செய்து கொள்ள வேண்டிய அவசியம் இல்லை. நீங்கள் சமரசப்படுத்த முயன்றால், நீங்கள் குழப்பமடையும்படி ஆகும். எனவே ஒன்றைத் தேர்வு செய்துகொண்டு மற்றொன்றைப் பற்றி மறந்து விடுங்கள். நீங்கள் ஜென்னைத் தேர்ந்தெடுத்துக் கொண்டால், பதஞ்சலியை, அவர் ஒருபோதும் இருந்ததில்லை என்பதாய் மறந்து விடுங்கள். தானாக இயங்கும் நிலையைத் தொடர்ந்து ஒழுங்கான முறை வருவதை ஒருநாள் சற்றும் எதிர்பாராத விதமாய் கண்டு கொள்வீர்கள்.

அது எப்படி நிகழ்கிறது? நீங்கள் தானே எதையும் செய்பவராயின், பசிக்கிற போது உண்பவரென்றால் – நீங்கள் பசியாய் உணர்கிறபோது மட்டுமே உண்பவரென்றால் நீங்கள் ஒருபோதும் உங்கள் விருபபத்துக்கு மாறாய் உண்பவரல்லர். விருப்பத்துக்கு அதிகமாயும் உண்ண மாட்டீர்கள். நீங்கள் எப்போதும் உங்கள் தேவையைப் பின்பற்றுகிறவர் – காலப்போக்கில் ஒழுங்கு முறையோடு பொருந்திக் கொண்டு விடுவீர்கள். காரணம், இந்த உடம்பு இயந்திர

நுட்பம் உடையது. மிகவும் நேர்த்தியான உயிரியல் நுட்பம். பிறகு, ஒவ்வொரு நாளும் அதே நேரத்தில் உங்களுக்குப் பசியெடுப்பதை நீங்கள் கண்டு கொள்வீர்கள். வாழ்க்கை முறையானதாகி விடும்.

ஆனால், தானாக இயங்கும் நிலைகுறித்து நீங்கள் அச்சம் கொண்டிருக்கிறீர்கள். மக்கள் அஞ்சுவதற்குக் காரணம் கலாசாரம், நாகரிகம், மதம் - என்கிற நச்சுத் தன்மைகள். அவர்கள் உங்கள் மனதில் நஞ்சூட்டினர், தானாக செயல்படுவது பற்றிய அச்சத்தை உங்களுக்கு ஏற்படுத்தி விட்டனர். உங்களுக்குள் ஒரு மிருகத்தை ஒளித்து வைத்துக் கொண்டிருப்பதாய் அவர்கள் சொல்கின்றனர். நீங்கள் யாருடைய தூண்டுதலுமின்றி செயல்படுவீர்களாயின் சரியான பாதையை விட்டு விலகியவராகி விடுவீர்கள்.

பதஞ்சலி எப்போதுமே எனக்கு இரண்டாவதுதேர்வுதான், ஒருபோதும் முதலாவதில்லை. அது சரி நுட்பம் இல்லாதவர்களுக்கும், கலாசாரத்தால் சிதைவுற்றவர்களுக்கும், இயற்கைக்குப் புறம்பானவர்களுக்கும், நாகரிகத்தால் மதத்தால் நஞ்சூட்டப்பட்டவர்களுக்கும், குருமார்களால் உபதேசிகளால் அழிந்து போனவர்களுக்கும் உரியது. அந்நிலையில் பதஞ்சலி, பதஞ்சலிதான் பிணி நீக்குவதாகும். எனவேதான் நான் சொல்கிறேன் பதஞ்சலி தொண்ணூற்றியொன்பது சதவிகித மக்களுக்குப் பயன்படும் என்று, காரணம் தொண்ணூற்றியொன்பது சதவிகித மக்களும் சரிநுட்பம் இல்லாதவர்களாயிருக்கிறார்கள். இந்த உலகம் ஒரு பெரிய மருத்துவமனை. பதஞ்சலி ஒரு மருத்துவர், விஞ்ஞானி.

ஜென் இயல்பானவர்களுக்கும், களங்கமற்ற குழந்தைகளுக்கும், நேர்மையானவர்களுக்கும் உரியது. ஓர் அழகான உலகம் என்றாவது அமையும்போது பதஞ்சலி மறக்கப்பட்டு விடுவார். ஜென் எஞ்சியிருக்கும். உலகம் மேலும் மேலும் பிணியுற்று விடுமெனில் ஜென் மறக்கப்பட்டு விடும். பதஞ்சலி மட்டுமே அங்கிருக்கும். 'இயல்பாயிருங்கள்' என்கிறது ஜென். நீங்கள் இயற்கையைக் கவனிக்கிறீர்களா? நீங்கள் இயற்கையின் தானாக செயல்படுதல் மற்றும் ஒழுங்குமுறை என்கிற இரண்டையும் புரிந்து கொள்கிறீர்கள்தானே? மழை வருகிறது, கோடை வருகிறது, குளிர்காலம் வருகிறது - அவை ஓர் ஒழுங்கு முறையைப் பின்பற்றுகின்றன. நீங்கள் ஏதேனும் அமைதிக் குலைவைக் கண்டால் அதற்குக் காரணம் நீங்களாகத் தானிருக்கும். காரணம் மனிதன் தட்பவெப்ப நிலைக்குத்

தடையாகிறான். மனிதன் சுற்றுப்புறவியலை (Ecology)க் குழப்பி விட்டான். இல்லையேல், இயற்கை மிகவும் உறுதிப்பாட்டுடன், தானே நிகழ்வதாய் இருந்திருக்கும். இளவேனிற் காலம் எப்போது வரும் என்பதை எப்போதுமே உங்களால் அறிய முடியும். இளவேனிற் காலம் எடுத்து வைக்கும் முதலடிகளை - பறவைகளின் கீதங்களில், மரங்களில் என்று எங்கும் கேட்க முடியும், மகிழ்ச்சி பரவி நிற்கும். அது முற்றிலும் உறுதியானதாய், ஒழுங்கு முறையோடு கூடியதாயிருந்தது. தற்போது எதிலும் ஒழுங்குமுறை இல்லாமல் போய்விட்டது. மழை எப்போது வரும் என்று உங்களுக்குத் தெரியாது. இந்த ஆண்டு மழை அதிகமாயிருக்குமா, குறைவாயிருக்குமா என்பதை நீங்கள் அறிய மாட்டீர்கள். இந்தக் கோடையின் வெப்பம் எத்தனை கடுமை யாயிருக்கும் என்பதும் உங்களுக்குத் தெரியாது. இயற்கையின் ஒழுங்குமுறை உங்களால் குலைக்கப்பட்டு விட்டது, காரணம் அதன் வட்டத்தை நீங்கள் தகர்த்து விட்டீர்கள். இல்லையேல் இயற்கை முற்றிலும் தானாக நிகழ்வதாயிருக்கும் (spontaneous) - இயற்கைக்கு எந்தவொரு பதஞ்சலியும் தேவைப்பட்டிருக்காது. தற்போது அதற்குத் தேவைப்படுகிறது. தற்போது சுற்றுப்புறவியலை சரிசெய்ய ஒரு பதஞ்சலி தேவைப்படுகிறார்.

ஆக, நீங்கள் தேர்வு செய்தாக வேண்டும். நீங்கள் ஜென்னைத் தேர்வு செய்தால் பதஞ்சலியை மறந்து விடுங்கள். இல்லையேல் நீங்கள் குழப்பத்துக்குள்ளாகி விடுவீர்கள். நான் சொல்கிறேன் பதஞ்சலி தானாக வந்து விடுவார், நீங்கள் கவலைப்படத் தேவையில்லை. ஆனால் நீங்கள் ரொம்பவும் சரி நுட்பம் இல்லாதவராய் உணர்ந்தால் உங்களில் நீங்கள் நம்பிக்கை வைக்க முடியாது. உங்களால் தானாக செயல்படவும் முடியாது. ஜென்னை மறந்து விடுங்கள், அது உங்களுக்கானதல்ல. ஆரோக்கியமான ஒருவருக்கு உடற்பயிற்சி பற்றிய புத்தகம் இருக்கிற மாதிரி... ம்...? அவரோ உலக ஒலிம்பிக் போட்டியில் பங்கெடுக்கப் போகிறவர். நீங்கள் விரும்பினால் அதைப் படிக்கலாம், ஆனால் அதைச் சோதித்தறிய முற்படாதீர்கள் - நீங்கள் ஆபத்தில் சிக்கிக் கொள்வீர்கள். நீங்கள் மருத்துவமனையில் படுத்திருப்பவர். உங்கள் நிலையுடன் அந்தப் புத்தகத்தை எப்படிப் பொருத்திக் கொள்வதென்று கேட்காதீர்கள். நீங்கள் கேட்காதீர்கள். மருத்துவர் சொல்வதைக் கவனித்துக் கேளுங்கள், பின்பற்றுங்கள். என்றாவதொரு நாள் நீங்கள் நலமடைகிறபோது, உங்களுடைய இயல்பான, தானாக இயங்கும் இருப்புணர்விற்குத் திரும்புகிறபோது

இந்தப் புத்தகத்தை நீங்கள் படிக்கலாம். ஆனால், தற்போது அது உங்களுக்கானதல்ல.

பதஞ்சலி நலக்குறைவானவர்களுக்குப் பயன்படுவது. ஆனால் கிட்டத்தட்ட எல்லாருமே நலக்குறைவுடன் இருக்கிறார்கள். ஜென் இயல்பானவர்களுக்குரியது. உங்களைப்பற்றி நீங்கள்தாம் தீர்மானிக்க வேண்டும். உங்களுக்காக வேறொருவர் அதைத் தீர்மானிக்க முடியாது. ஆனால், ஒன்றை நினைவில் கொள்ளுங்கள், நீங்கள் வேற்றுமை அகற்றி சமரசம் செய்ய வேண்டியதில்லை - ஒருபோதும் அதைச் செய்யாதீர்கள். ஒன்றைத் தேர்வு செய்யுங்கள், மற்றொன்று பின்தொடரும். நீங்கள் நலக்குறைவாய் உணர்ந்தால், முன்பே களங்கமுற்றிருந்தால் உங்களால் தானாக இயங்க முடியாது. ஒழுங்குமுறையை முயலுங்கள். ஒழுங்கு முறை காலப்போக்கில் ஆரோக்கியத்தையும், தானாக நிகழும் நிலையையும் உங்களுக்கு ஏற்படுத்தும்.



***நான் தங்களுக்கெதிராய் செய்திகளைப் பரப்ப விரும்புகிறேன், தாங்கள் என்னை அசீர்வதிப்பீர்களா?***

இது ஒரு சரியான யோசனை. நான் உங்களை முழுமையாய் ஆசீர்வதிக்கிறேன். காரணம் எனக்கெதிராய் பிரசாரம் செய்வது எனக்கு ஆதரவாய் பிர்சாரம் செய்வது போலத்தான். தெரிந்தோ தெரியாமலோ யாரேனும் என்னைப்பற்றி எனக்கெதிராய் ஒன்றைச் சொல்கிறார், யாருக்கும் தெரிந்திருக்காது. எனக்கெதிராய் ஒருவரிடம் நீங்கள் பேசுகிறீர்கள், அவரோ என்னைப்பற்றித் தெரிந்து கொள்ள வேண்டும் என்று விருப்பம் கொள்வார். எனவே, என்னுடைய பரிபூரண ஆசீர்வாதத்துடன் நீங்கள் சென்று பிரசாரம் செய்யுங்கள்.



***ஞானத்தை அடைந்தவரால் மட்டுமே அன்பு செய்ய முடியும் என்று அண்மைக் காலத்தில் தாங்கள் சொன்னீர்கள், வேறு சில நேரங்களில், ஒருவர் அன்பு செய்யாதவரை அவரால் ஞானம் பெற முடியாது என்றும் சொல்லியிருக்கிறீர்கள். எந்த வாசலின் வழியே நுழைவது?***

இது ஆனந்த் பிரேமின் கேள்வி. அவள் பல வருடங்களாய் வாசற்படி அருகிலேயே நின்று கொண்டிருக்கிறாள். உண்மையில்

உள்ளே நுழைய வேண்டியதுதான். வாயிற் கதவு பொருத்தமற்றதாய் இருக்கிறது. எந்த வாசலின் வழியே நுழைகிறீர்கள் என்பது அர்த்தமற்றது. தயவு செய்து நுழையுங்கள். அன்பென்னும் வழியே நீங்கள் பிரவேசிக்க விரும்பினால் பிறகு அந்த வாசல் வழியாய் வரவேண்டியதுதானே. ஞானம் பின்தொடரும், அன்பு செய்யும் இதயத்தின் மிகவும் உயரமான சிகரம் அது. நீங்கள் அன்பு பற்றிய அச்சம் கொண்டவரென்றால்... மக்கள் அப்படித்தானே இருக்கிறார்கள், காரணம் சமுதாயம் உங்களை காதல், வாழ்க்கை பற்றி அஞ்சும்படிச் செய்திருக்கிறது. தான் எங்கே போய்க் கொண்டிருக்கிறார் என்பதே ஒருவருக்குத் தெரிந்திருக்காது. அது ஒரு வகை பித்து - அழகாயிருந்தாலும் இன்னும் பித்து நிலையிலேயே இருப்பது. நீங்கள் அதுகுறித்த அச்சத்தில் இருந்தால் அவ்வேளையில் தியானத்தில் நுழைந்து விடுங்கள். தியான நிலையை அடையுங்கள். நீங்கள் உண்மையிலேயே தியானத்தில் இருந்தால் சற்றும் எதிர்பாராத விதமாய் ஒரு சக்தி பொங்கி எழுவதை உணர்வீர்கள். அத்துடன், அன்பார்ந்தவராகி விடுவீர்கள்.

ஆனால், தயவு செய்து வாசற்படியிலேயே நின்று கொண்டிருக்காதீர்கள். கதவுகள்கூட உங்களைக் குறித்துக் களைத்துப் போயிருக்கும். ஏதாவது செய்து உள்ளே நுழையுங்கள். இனியும் பொறுத்துக் கொள்ள முடியாது. நீங்கள் நீண்ட காலமாய் காத்திருந்தாயிற்று.



**பூனாவில் உள்ள செய்தித்தாட்கள் இப்போதெல்லாம் உங்களுக்கெதிராக, உங்கள் ஆசிரமம் மற்றும் சீடர்களுக்கெதிராக அதிக அளவில் பிரசாரம் செய்கின்றன. சாதாரண மனிதர்களின் மனங்களில் இது தவறான புரிதலை உண்டுபண்ணியிருக்கிறது. இத்தகைய மக்கள் மத்தியில் வாழும் ஒரு சாதகனால் நிலையை எப்படிச் சமாளிக்க முடியும்?**

நீங்கள் எவ்வகையிலும் சமாளிக்க வேண்டியதில்லை, நீங்கள் சிரித்து விட வேண்டும். அதுபற்றித் தீவிரமாகி விட வேண்டாம். உங்களால் மகிழ்ச்சி கொள்ள அனுபவித்து மகிழ முடியுமென்றால் அதை நீங்கள் சமாளிக்க வேண்டியதில்லை. எதிர்வினை புரிய வேண்டுமென்பதில்லை. எனக்குப் பாதுகாப்பு கொடுக்க முயற்சிக்காதீர்கள். என்னைப் பாதுகாக்க யாராலும் முடியாது. என்னை நியாயப்படுத்த முயலாதீர்கள் - எனக்காக யாரும் சரியான

காரணங்களுடன் விளக்கமளிக்க முடியாது. பகுத்தறிந்து வாதம் செய்ய முயல வேண்டாம் - அதற்கு அவசியமில்லை. நீங்கள் அதில் அக்கறை காட்ட வேண்டியதில்லை.

உலகம் தன் பாட்டுக்கு அதன் வழியில் போய்க் கொண்டிருக் கிறது. மக்கள் தங்களுடைய சொந்த மனங்களையும், கருத்துகளையும் கொண்டிருக்கிறார்கள்... நான் கருத்துகளைத் தகர்க்கிறவன், மரபுகளை உடைக்கிறவன்.நான் மிகப்பெரிய அளவில் அதிர்ச்சியளிப்பவன், சாதாரண மக்கள் குழப்பமடைவது இயல்புதான். செய்தித்தாள்களுக்கு எப்போதுமே பரபரப்பான செய்திகள்தாம் வேண்டும், செய்தித்தாள்கள் அதைத்தான் நம்பியிருக்கின்றன. ஆனால், இவற்றை ஆராய்ந்து கொண்டிருப்பவர்கள் இதுபற்றிக் கவலைப்படத் தேவையில்லை.

நீங்கள் சிரித்து, மகிழ வேண்டும்; அதில் தவறேதும் இல்லை. நீங்கள் புண்படுவதாய் எண்ண வேண்டாம். அதற்கான அவசிய மில்லை. அது இயல்பானது. யாராவது எனக்கெதிராய் ஒன்றைச் சொன்னால், அவர்கள் என்னை எவ்வகையிலும் அறிந்திராதவர் கள்தாம். அவர்கள் சொல்வதைக் கேட்டு என்னை நீண்ட காலமாய் அறிந்த நீங்கள் மனம் புண்ணடைகிறீர்கள். அதை எதிர்த்துச் சண்டையிட விரும்புவீர்கள். அதை எதிர்க்க வேண்டாம், காரணம் அந்த முயற்சி வீணானது. அலட்சியப்படுத்துதல், முற்றிலும் அலட்சியப்படுத்துவதுதான் உங்களிடம் வேண்டப்படுவது. என்னைப் புரிந்து கொண்டவர்கள் தொடர்ந்து போய்க் கொண்டேயிருப்பார்கள், நீங்கள் எதிர்வினை செய்வதாயின் அவர்களை ஊக்குவியுங்கள். நீங்கள் அக்கறையற்றவராயிருங்கள். அவர்கள் தாங்களாகவே அமைதியாகி விடுவார்கள், காரணம் யாரும் எதிர்வினை புரியவில்லை என்கிறபோது மொத்தக் கருத்தும் இழக்கப்பட்டு விடுகிறது. சாதாரண மக்களை நம்பச் செய்ய நான் இங்கேயிருக்க வில்லை. சாதாரண மக்கள் கூட்டத்திடம் எனக்கு ஆர்வம் கிடையாது. நான் தெரிவு செய்யப்பட்ட சிலரிடம் மட்டுமே ஆர்வம் காட்டுகிறேன், நான் அவர்களுக்காக ஆற்றலைப் பயன்படுத்துகிறேன்.

ஆக, இந்தத் தொல்லைதான் திரும்பத்திரும்ப வந்து கொண்டிருக்கிறது. இங்கே என்ன நடக்கிறது என்று அவர்களுக்குத் தெரியவில்லை. அவர்களால் அறிய முடியாது. அவர்கள் வந்தாலும்கூட, என்னைப் புரிந்துகொள்ள மாட்டார்கள், நான் என்ன சொல்கிறேன் என்பதையுந்தான். அவர்கள் அதைத் தவறாய் புரிந்து

கொள்வார்கள். எனவே, அவர்களை மன்னித்து விடுங்கள், மறந்து விடுங்கள்.

O

**"நீங்கள் குற்றத் தீர்ப்பளிக்க வேண்டாம் என்று வலியுறுத்துவது சாயிபாபா, கிருஷ்ணமூர்த்தி மற்றும் அமெரிக்கக் குருமார்கள் பற்றிய உங்கள் விமர்சனத்துடன் முரண்படுகிறதே".**

ஏதோ ஒன்று குறித்து, நான் முரண்பாடாய் பேசுவதாக நீங்கள் எப்போது உணர்ந்தாலும், அதுபற்றி அமைதியிழக்க வேண்டாம். நான் சுயமுரண்பாடு உடையவன். நீங்கள் அதை அறிந்து கொள்ள வேண்டிய நேரம் இது. என்னையே நான் மறுத்துக் கொண்டிருக் கிறேன். நான் பயன்படுத்துகிற வழிகளில் அதுவும் ஒன்று. நீங்கள் கலக்கமடையாதிருப்பின் உங்கள் மனம் நிச்சயம் பளிங்காகியிருக்க வேண்டும். நான் மறுத்துக் கொண்டேயிருக்கிறேன், நான் சொன்னவற்றையெல்லாம் மறுப்பேன். என்னுடைய கூற்றில் (statement) நான் எதையும் மறுத்துக் கூறாமல் விடவில்லை. அதில் ஒரு செய்முறை இருக்கிறது. நீங்கள் எந்தவொரு பார்வைக் கோணத்தோடு நின்று விடுவதையும் நான் விரும்பவில்லை. நீங்கள் என்னுடைய கருத்துகளையே பற்றிக் கொண்டிருக்க வேண்டும் என்றும் நான் விரும்பவில்லை. ஒரே வழிதான் இருக்கிறது. என்னுடைய கருத்துகளை நான் மறுத்தாக வேண்டும். ஒரு நேரம் வரும். இந்த மனிதன் வெறும் கோட்பாடுகளை மட்டும் உங்களுக்கு வழங்கி விடவில்லை என்பதைப் புரிந்து கொள்வீர்கள். காரணம் எல்லாமே முரண்பாட்டுடன் இருக்கிறது. எந்தக் கோட்பாடும் அப்படியே இருந்து விடவில்லை. ஒவ்வொன்றும் மற்றொன்றை மறுத்து இல்லாததாக்குகின்றன. நீங்கள் கடுமையான சூன்யத்தில் விடப்படுகிறீர்கள். இதுவே என்னுடைய முயற்சியாகும்.

நான் உங்களுக்கு ஒரு தத்துவத்தை வழங்கவில்லை. நான் தத்துவ மேதையாயிருந்தால் நான் ஒருபோதும் என்னிடமே முரண்பட மாட்டேன். நான் ஒரே சீரில் (consistent) இருந்திருப்பேன். ஆனால், நான் தத்துவ மேதையல்ல. ஏறக்குறைய ஒரு கவிஞன் என்றே என்னை நீங்கள் அழைக்கலாம். ஒரு கவிஞனிடமிருந்து முரண்பாடின்மையை (consistency) நீங்கள் எதிர்பார்க்க முடியாது. உங்களுக்குத் தெரியும் ஒரு கவிஞன் கவிஞனாகவே இருப்பான். அவன் எதையும் முறைப்படுத்திக் கொண்டிருப்பவனல்லன் அவன். இன்று சொல்வது

ஒன்றாகவும், நாளை சொல்வது வேறொன்றாகவும் இருக்கும். ஆனால், நீங்கள் என்னைத் தொடர்ந்து புரிந்து கொண்டிருந்தால் ஒரு நேரம் வரும், நான் சொன்னது எதுவாயினும் அது மறுக்கப்பட்டு விடும் - நானே மறுத்து விடுவேன். நீங்கள் பற்றுவதற்கு ஏதுமின்றி வெற்றிடத்தில் விடப்படுவீர்கள் - எந்தவொரு கொள்கையோ, முறையோ (system) சாஸ்திரமோ இல்லாத இடத்தில்.

அந்த ஏதுமற்ற நிலையில் (nothingness) மட்டுமே என்னை நீங்கள் புரிந்து கொள்ள முடியும். காரணம் நான் ஏதோவொன்றைப் பற்றிச் சொல்லிக் கொண்டிருக்கவில்லை. அந்த ஒன்றாக உங்களுக்கு நானேயிருக்கிறேன். நான் உங்களுக்கு வழங்குவது ஒரு செய்தியல்ல. நானே செய்தியாய் இருக்கிறேன். நீங்கள் முற்றிலும் வெறுமை யடைகிற போதுதான் அதை உங்களால் புரிந்து கொள்ள முடியும்.

இரண்டாவதாக, சாயிபாபா மறைஞானியல்ல, அவர் ஒரு மந்திர வித்தைக்காரர் என்று நான் சொன்னால், நான் அவரை குறைகூறாமல், விமர்சிக்காமல் உண்மையை மட்டுமே சொல்கிறவன் ஆவேன். இது காலை, ஒன்பது மணி என்று நான் சொன்னால், இது பகல் இரவல்ல என்று நான் சொன்னால் நான் இரவைப் பழித்துரைப்பவனா, இரவை விமர்சிப்பவனா? நான் ஓர் உண்மையை மட்டுமே சொல்கிறேன். சத்ய சாயிபாபா ஒரு மந்திர வித்தைக்காரர், மறைஞானியல்ல. என்னைப் பொறுத்தவரை இது உண்மை. நான் அவரை விமர்சிக்கவில்லை, நான் அவருக்கு எதிரானவன் அல்லன்.

கிருஷ்ணமூர்த்தி ஞானம் பெற்றவர்தான், ஆனால் தோற்று விட்டார். அவரால் யாருக்கும் உதவ முடியவில்லை - அவர் மிகச்சிறந்த அளவில் விளைவுகளை ஆய்வு செய்திருக்கிறார்; உண்மையில் அத்தனை கடுமையாய் யாரும் முயன்றதில்லை - அவர் ஞானி, அவர் எதைச் சொன்னாலும் அது உண்மை. ஆனால் யாருக்கும் அவருடைய உதவி கிட்டவில்லை என்று நான் சொன்னால் அது விமர்சனமாகாது. யாரும் பயனடையவில்லை என்று நான் சொல்கிறேன். அவரால் அனுகூலமடைந்த யாரையேனும் கொண்டு வந்து அந்த உண்மையை மறுக்கப் பாருங்கள்.

கிருஷ்ணமூர்த்தியைப் பின்பற்றும் ஆயிரக்கணக்கானவர்களை நான் சந்தித்திருக்கிறேன், அவர்கள் பயனடைந்து விடவில்லை. தாங்கள் இருபது அல்லது முப்பது, ஏன், நாற்பது வருடங்களாய் அவர் சொல்வதைக் கவனித்துக் கேட்டதாய் - கிருஷ்ணமூர்த்தியை

முழுமையாய் புரிந்து கொண்டிருப்பதாய் தாங்களாகவே அவர்கள் என்னிடம் வந்து சொல்லியிருக்கிறார்கள். காரணம், அவர் ஒன்றையே தொடர்ந்து சொல்லிக் கொண்டிருப்பவர். நாற்பது ஆண்டுகளாய் ஒரே இசைக்குறிப்பைத்தான் அவர் வாசித்துக் கொண்டிருக்கிறார் - குரலின் நிலையை (pitch), தொனி (tone)யைக்கூட அவர் மாற்றிக் கொள்ளவில்லை. அவர் உலகிலேயே மிகவும் அபூர்வமான, சீரான மனிதர். சலிப்பூட்டுகிற விதமாய் அவர் சொன்ன விசயத்தையே திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருக்கிறார். அவருடனிருந்தவர்கள் என்னிடம் வந்து, தாங்கள் அவருடைய அறிவுத்திறனைப் புரிந்து கொண்டிருப்பதாயும், ஆனால் எதுவும் நடக்கவில்லை என்று சொல்கிறார்கள்.

கிருஷ்ணமூர்த்தியைக் கவனித்துக் கேட்டுக் கொண்டிருந்த யாருக்கேனும் அது நிகழ்ந்திருந்தால், கிருஷ்ணமூர்த்தி இல்லாமலும் அந்த நபருக்கு அது நிகழ்ந்திருக்கும் - காரணம் கிருஷ்ணமூர்த்தி எந்த முறையையும் வழங்கவில்லை. அவர் எந்தவொரு சாதனை (பயிற்சி)யையும் வழங்கி விடவில்லை. அவரைக் கவனித்துக் கொண்டிருந்த யாருக்கேனும் அது நிகழ்ந்திருந்தால், பறவைகள் எழுப்பும் ஓசைகளைக் கேட்டுக் கொண்டிருந்த ஒருவருக்கும் அது நிகழக்கூடும். 'பைன்' மரங்களின் வழியே கடந்து செல்லும் மென்காற்றைக் கவனித்திருந்தவர்க்கும் அது நிகழ்ந்திருக்கும். அந்த மனிதர் ஆயத்தமாய் இருந்தார். ஆனால் அவருக்கு உதவியது கிருஷ்ணமூர்த்தியல்ல.

இது கிருஷ்ணமூர்த்தியாலும் அறியப்பட்டதுதான். உண்மையில் அவர் அறிந்திருக்கிறார். அவர் நம்பிக்கையற்றவரானார் - அவருடைய ஒட்டுமொத்த வாழ்க்கையும் ஒரு வறண்ட நிலத்தில் வீணடிக்கப்பட்டது. நான் குறிப்பிடுவது ஒரு உண்மையைத்தான், விமர்சிக்கவில்லை.

அமெரிக்கக் குருமார்களைப் பற்றி நான் ஏதாவது சொல்வதாயின் அவர்களுக்கெதிராய் எதையும் சொல்லப் போவதில்லை. முதலாவது, குருமார்களில் நூற்றுக்கு தொண்ணூற்றியொன்பது சதவிகிதம் போலிகள்தாம். அமெரிக்கக் குருமார்கள் என்கிறபோது, உங்களுக்குத் தெரியும் - இந்திய குருமார்களில் நூற்றுக்கு தொண்ணூற்றி யொன்பது சதவிகிதம் போலியானவர்கள் என்பது. எனவே அமெரிக்கக் குருமார்கள் என்கிறபோதும் அப்படித்தான். பாவனைகளைப் பின்பற்றுகிறவர்கள்(**imitators**).

ஆனால், நான் யாருக்கும் எதிரானவன் அல்லன். இவை உண்மைகள் மட்டுமே. கண்டனம் எதுவும் குறிப்பாகத் தெரிவிக்கப்பட வில்லை. உண்மையில் அவர்களைப்பற்றி நான் எதுவும் சொல்லவில்லை, நிலையைப் பற்றித்தான் சொல்கிறேன். தனிப்பட்ட முறையில் எதுவும் குறிப்பிடவில்லை. ஒருவரையும் குறிப்பிடாத கூற்றுகள் அவை.



**'தாவோ' மதத்தைச் சேர்ந்த குரு ஒருவர் தாவோ சொற்பாங்கில் ஒரு கருத்தை விளக்கினார். அவரைக் கவனிப்பவர்கள் அவரிடம் கேட்டனர். 'தாமே ஒரு குருவைக் கொண்டிராத போதும் அவர் எந்தக் கருத்தின் நோக்கில் 'தாவோ'வைக் கண்டறிந்தார்?' என்று. 'நான் புத்தகத்தில் இருந்து அதைப் பெற்றேன்' என்று அவர் சொன்னார். இது சாத்தியமாகுமா?**

ஆம், ஓரோர் சமயத்தில் அது சாத்தியமாகிறதுதான். கிருஷ்ணமூர்த்தியிடம் கேட்டதன் மூலம் ஒருவன் ஞானம் பெற்றதாய் சொல்லிக் கொண்டிருந்தேனில்லையா அப்படித்தான் அந்த மனிதனும் இருந்திருக்க வேண்டும். அந்த மனிதன் பறவைகளைக் கவனித்து ஞானவானாகியிருப்பான். ஆனால், அதுவோர் விதிவிலக்கு, விதி ஆகாது. சில நேரங்களில் அப்படி ஆகியிருக் கிறது: ஒரு மனிதன் உண்மையிலேயே விழிப்புடனிருந்தால் அந்நிலையில் ஒரு புத்தகங்கூட உதவுவதாயிருக்கும். நீங்கள் விரைந்து தூங்கி விடுகிறவர் என்றால் அப்போது ஒரு புத்தராலும் பயனிருக்காது. புத்தர்கூட உதவ முடியாது - நீங்கள் அவருடைய முகத்துக்கு நேராய் குறட்டை விடுவீர்கள். அவரால் என்ன செய்ய முடியும்? வாழ்கிற புத்தரே உங்களால் பயனற்றவர் என்று நிரூபிக்கப்பட்டு விட்டார். ஆனால் நீங்கள் விழிப்புடன் இருந்தால் ஓர் உயிரற்ற புத்தகமும் உதவக் கூடியதாகி விடும். அது நிலையைச் சார்ந்திருக்கிறது. புத்தகங்களைப் படித்ததால் மட்டுமே விழிப்படைந்த அத்தகைய ஒரு மனிதரைக் காண்பது கடினம் - ஆனால், அதற்கான சாத்தியம் இருக்கவே செய்கிறது. அது கிட்டத்தட்ட சாத்திய மற்றதுதான். ஆனால், சாத்தியமில்லாத செயல்களுங்கூட நடந்தேறி விடுகின்றன.



*சத் சங்கமென்றால் ஞானமுற்ற, விடுவிக்கப்பட்ட ஒருவரின் முன்னிலையில் இருப்பது முக்கியம். ஆனால் நாம் ஏன் ஒருநாளில் ஒன்றரை மணி நேரம் மட்டுமே ஒருவரோடொருவர் செலவிடுகிறோம்?*

அதிக அளவு என்பது உங்களுக்கு ரொம்ப அதிகம். அது அஜீரணத்தை உண்டு பண்ணி விடும். அதைவிடக் கூடுதலாய் என்னிடமிருந்து நீங்கள் கிரகிக்க முடியாது. நான் இருபத்து நான்கு மணி நேரமும் உங்களுடன் இருக்க முடியும். ஆனால், உங்களால் முடியாது. உங்களுக்கு ஓமியோபதி மருந்தளவுகள்தாம் தேவைப்படும்.



*நேற்றுக் காலையில் யோக சாதனையின் எட்டு நிலைகளைத் தாங்கள் குறிப்பிட்டீர்கள். எண் ஒன்றில் இருந்து எட்டாம் எண்ணுக்கு என்ற வரிசையில் தாங்கள் செல்வதாய் முக்கியத்துவம் கொடுத்துச் சொன்னீர்கள். தனிப்பட்ட நிகழ்வுகளில் ஒருவர் ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட வேறு நிலைகளை முதலில் அடைய முடிவது சாத்தியமில்லையா? அதன்பிறகு அவன் அல்லது அவள் தன்னுடைய சொந்த வரிசை முறையில் எட்டு நிலைகளுக்கும் செல்லலாம்தானே?*

அது சாத்தியந்தான். ஆனால் சாத்தியமென்று நான் சொல்கிற போது அரிதாக வெகு அரிதாகவே குறிப்பிடுவேன். ஒவ்வொரு விதியுடனும் விதிவிலக்குகள் இருக்கின்றன. ஆனால் பதஞ்சலி பேசும்போது விதியைப்பற்றியே பேசுகிறார். விதிவிலக்குகள் பற்றிப் பேச வேண்டியதில்லை. மனித இனத்தின் மிகப்பெரிய கூட்டம் எந்தவோர் இடத்தில் இருந்தும், வேறெந்த வழியிலும் அடைய முடியவில்லை. அவர்கள் - ஒன்றில் இருந்து இரண்டு, இரண்டில் இருந்து மூன்று எனப் படிப்படியாகத்தான் தொடர வேண்டியிருந்தது. அவர்கள் அமைப்பு சார்ந்த விதத்தில் கூட்டு சேர்ந்து செயல்பட்டார்கள். ஆனால், தான்தோன்றித்தனமாய் தாவிக்குதித்துச் சென்றவர்களும் உண்டு. அவர்களும் திரும்பி வந்து, விட்டுப் போனதைக் கிரகித்துக் கொள்ள வேண்டியிருந்தது. அவர்களுடைய ஒழுங்குபடுத்தப்பட்ட நிலை மாறுபட்டது. அது சாத்தியம்.

நீங்கள் பிராணாயாமத்துடன் தொடங்க முடியும், ஆனால், அப்போதும் நீங்கள் ஆசனத்துக்கு வந்தாக வேண்டும், யமம் என்கிற நிலைக்கும் வந்தாக வேண்டும். நீங்கள் தியானத்தின் மூலம் தொடங்க

முடியும். ஆனால் அப்போதும் விடப்பட்ட மற்ற பகுதிகளுக்கும் செல்ல வேண்டியிருக்கும். ஆனால், அந்த எட்டுமே வளர்க்கப்பட வேண்டியவை என்பதால் அந்த எட்டுக்குமிடையில் ஓர் ஒத்திசைவு (unison) ஏற்படுத்தப்படும். அந்த வகையில் நீங்கள் ஓர் அமைப்பு சார்ந்த கூட்டுக்கு வருகிறீர்கள்.

சில நேரங்களில் ஒருவர் எல்லாப் படிகளையும் பூர்த்தி செய்யாமல் ஏழாவது படியை அடைவதும் நிகழ்கிறது. ஆனால் மற்றவற்றைப் பூர்த்தி செய்யாமல் எட்டாவது படியை அடைந்தவர் யாருமில்லை. ஏழு வரை சாத்தியம் இருக்கிறது. நீங்கள் சிலவற்றை விட்டுவிட்டு ஏதேனும் ஒன்றைச் செய்து ஏழாவது நிலையை அடைய முடியும். ஆனால் பிறகு அங்கேயே ஊசலாடிக் கொண்டிருப்பீர்கள். தியானம் வரை நீங்கள் சென்றடைய முடியும். ஆனால், சமாதி வரை அல்ல. காரணம், சமாதிக்கு உங்களுடைய முழு இருப்புணர்வு (being)ம் தேவைப்படும். எதையும் விடுவதற்கில்லை, எதையும் அரைகுறையாய் விட்டுச் செல்வதற்கில்லை, நிறைவேற்றிவிட வேண்டும். அதன்பிறகு ஏழாவது நிலையில் கொஞ்ச காலத்துக்கு நீங்கள் பொருந்தியிருப்பீர்கள். ஏழாவது நிலை வரை உள்ள எல்லாவற்றையும் பூர்த்தி செய்தால்தான் எட்டாவது - சமாதி சாத்தியமாகும்.

சோக்யம் த்ரங்பா போன்ற குருமார்கள் எப்போதோ நிகழ்கிற கொண்டாட்டங்களின் போது தங்களைத் தூக்கிக் கொண்டு போய் வீட்டில் சேர்க்குமளவுக்கு அதிகமாய் குடித்து விடுகிறார்களே அதை என்னவென்பது? மகிழ்ச்சிக்காகக் குடித்து வைக்கிற மது சாதகர்களின் உறுதியான விழிப்புணர்வைக் குலைத்து விடாதா? இந்த ஆள் ஒரு குருவென்று உங்களுக்கு யார் சொன்னது? பல குருமார்களும் இடம் பெற்றிருந்த மரபில் வந்தவர் அவர். ஆனால் அவர் சவத்துப் போனவற்றைத்தான் சுமந்து கொண்டிருந்தார்: மார்பா, மிலரேபா, நரோபா, திலோபா போன்ற பெரியவர்கள் - பெருஞ்சித்தர்கள் வந்த மரபு அவருடையது - அவர்கள் எல்லாருமே மதுவருந்துகிறவர்கள் தாம், இது கொஞ்சம் சங்கடமானது என்றாலும் அவர்கள் குடியிலேயே மூழ்கியிருந்து விடவில்லை.

தந்த்ராவின் வழிகளுள் இதுவும் ஒன்று. இது ஒருமுறை. ஒருவர் மதுவின் அளவைக் கூட்டிக்கொண்டே போவார். அதனுடன் இசைவாகி (attuned) விடுவார். ஆனால், பிரக்ஞையோடு இருப்பார்.

ம்ம்...? முதலில் ஒரு தேக்கரண்டியளவு நீங்கள் உட்கொள்கிறீர்கள், உணர்வோடு இருக்கிறீர்கள். பிறகு இரண்டு, மூன்று என்று தொடர் கிறீர்கள். அடுத்து புட்டி முழுவதையும் காலி செய்து விடுவீர்கள். ஆனால், தற்போது உங்களுடைய பிரக்ஞை குலைந்து விடாத அளவிற்கு இசைவாகி விடுகிறீர்கள். அடுத்து, மது வேலை செய்யாத நிலை ஏற்படும். அப்போது இன்னும் ஆபத்தான போதை மருந்து களைத் தேடிச் செல்வீர்கள்.

தந்த்ரா மரபில் ஒரு சமயம் பாம்புகள், நச்சுப் பாம்புகள் பயன்படுத்தப்பட்டிருக்கின்றன. காரணம் ஒருவர் அனைத்து வகை போதை மருந்துகளுக்கும் இசைவாகி விட்டிருந்தார். அந்நிலையில் கடைசி சோதனையாக நல்ல பாம்பு (நாகம்) இருந்தது. அந்த மனிதனின் நாவில் நல்ல பாம்பைக் கடிக்கச் செய்தார்கள் - அப்போதும் அவர் பிரக்ஞையோடு இருந்தார்.

இது ஓர் இரகசியமான சோதனை, வளர்ச்சி. உடம்பு முழுவதும் மதுவால் நிரப்பப்பட்டும் நீங்கள் அதனால் பாதிக்கப்படுவதில்லை. அத்தகைய படிகமாகும் (crystallization) நிலையை உங்கள் பிரக்ஞை அடைந்து விடுகிறது. தந்த்ராவில் சரீரத்துக்கப்பால் போவது ஒரு முக்கியப் பகுதி. இது சரீரத்தைக் கடந்து செல்வது.

இந்த ஆள் அந்த மரபில் வந்தவர், குடிப்பதற்கான அனுமதியைத் தமது மரபு வழியில் பெற்றவர். ஆனால், அவர் குடித்து விட்டால் ஒட்டுமொத்தக் கருத்தையுமே தவறவிட்டு விடுவார். அவர் ஒரு குருவல்லர். அவர் உணர்வோடு இருக்கவில்லை. ஆனால் அமெரிக்காவில் தற்போது எல்லாமே சாத்தியமாகி விட்டது. பழைய மரபினை அறியாமல் இந்த மனிதர், 'நம்முடைய குருமார்களும் குடித்துக் கொண்டிருந்தார்கள்' என்று சொல்லக் கூடும்.

சாதாரணமாய் தடை செய்யப்பட்ட செயல்கள் எல்லாம் தந்த்ராவில் அனுமதிக்கப்பட்டுள்ளது. தாந்த்ரீகர் மாமிசம் உண்ண இடமளிக்கப்பட்டது - சாதாரணமாய் அது விலக்கப்பட்டதாகும். அவர் மதுவருந்துவது ஏற்றுக் கொள்ளப்பட்டது - வழக்கத்தில் அது தடை செய்யப்பட்டதுதான். அவர் பாலுறவு கொள்வதும் ஏற்கப்பட்டிருக்கிறது - பொதுவாக ஒரு சாதகனுக்கு அது தடை செய்யப்பட்டதுதான். வழக்கத்தில் தடை செய்யப்பட்ட எல்லாமே தந்த்ராவில் சாத்தியமாகும்படி செய்யப்பட்டது. ஆனால் சில நிபந்தனைகளுடன்

அவை அனுமதிக்கப்பட்டன. அந்த நிபந்தனைகளை மறந்தவர், முழுக் கருத்தையும் மறந்துவிட வேண்டியதுதான்.

ஒருவர் உடலுறவு கொள்ளலாம். ஆனால் வெளிப்பாடு எதுவும் இருக்கக்கூடாது. விந்து வெளிப்பாடு இருந்தால் அப்போது அது சாதாரண உடலுறவு என்றாகி விடும், அந்நிலையில் அது தந்த்ராவாக இருப்பதற்கில்லை. நீங்கள் கலவி புரிந்து, வெளிப்பாடு இல்லாமலிருந்தால், மணிக்கணக்கில் பெண்ணுடன் சேர்ந்திருக்கும் வெளிப்பாடு நிகழவில்லையென்றால் இது தந்த்ரா. இது ஒரு சாதனை.

மதுவருந்துவது அனுமதிக்கப்பட்டது. ஆனால் குடியிலேயே மூழ்குவது அனுமதிக்கப்படவில்லை. உங்களுக்குப் போதை தலைக்கேறி விட்டால் நீங்கள் சாதாரண குடிகாரன்தான் - அதில் தந்த்ராவை உள்ளே கொண்டு வரத் தேவையில்லை.

மாமிசம் அனுமதிக்கப்படும். ஆனால் சில சமயத்தில் மனிதச் சதையையும், செத்துப்போன உடல்களிலிருந்து சாப்பிட வேண்டியிருக்கும். ஆனால், நீங்கள் விருப்பு வெறுப்பற்று இருக்க வேண்டும். நீங்கள் கலங்காமல் இருக்க வேண்டும் - 'ஏதோவொன்று தவறாகி விட்டது' என்று உங்கள் உணர்வில் சின்ன அசைவுகூட இருக்கக் கூடாது.

எல்லாத் தளைகளும் (பிணைப்புகள்) வெல்லப்பட வேண்டும், கடந்து செல்லப்பட வேண்டும் என்கிறது தந்த்ரா. கடைசித்தளை ஒழுக்க முறைமை (morality) அதுவும் கடக்கப்பட வேண்டியது. நெறிமுறைகளைக் கடந்தாலன்றி உலகத்தை நீங்கள் கடந்து செல்ல முடியாது. சைவ உணவுக் கொள்கை (புலால் உண்ணாமை) இந்தியர்களின் விழிப்புணர்வு மையம் வரை ஊடுருவியிருக்கும் இந்தியாவில் மாமிசம் உண்பது ஏற்கப்பட்டது. ஆனால் அசைவர்கள் மாமிசம் உண்கிற வழியில் அல்ல. ஒருவர் தனது முழு வாழ்க்கையையும் அதற்காகத் தயார்படுத்திக் கொள்ள வேண்டியிருக்கும். அவர் சைவராக இருந்திருப்பார். ஒரு சாதகர் என்ற முறையில் அவர் சைவராகத்தான் இருந்திருப்பார்.

பத்து ஆண்டுகள், பன்னிரண்டு ஆண்டுகள் என்று காலம் செல்ல அவர் சைவ உணவுக்காரராகவே இருந்திருப்பார். அவர் எந்தப் பெண்ணுடனும் உறவு கொண்டிருக்க மாட்டார். போதை தரக்கூடிய எதையும் பருகியிருக்க மாட்டார். அத்துடன் எந்தவொரு போதை

மருந்தையும் பயன்படுத்தியிருக்க மாட்டார். அந்நிலையில் பன்னிரண்டு ஆண்டுகள், பதினைந்து ஆண்டுகள் ஏன் இருபது ஆண்டுகளுக்குப் பிறகு குருவானவர் அவரைப் பாலுறவுக்கு அனுமதித்திருப்பார். ஆனால் தாம் உறவு கொள்ளும் பெண்ணை ஒரு பெண் தெய்வமாய் மதித்து இயங்க வேண்டும். அது சிற்றின்பமாய் இருக்காது. ஆண் அவளுடைய பாதங்களைத் தொட்டு வழிபட வேண்டும். பால் சார்ந்த வேட்கை சிறிதளவு எழுந்தாலும் அவர் தகுதியற்றவராகி விடுவார். பிறகு அவர் ஆயத்தமாயிருக்க மாட்டார்.

அது ஒரு சிறந்த முன்னேற்பாடு என்பதுடன் ஒரு பெரிய சோதனையும் ஆகும் - மனிதனுக்காகத் தோற்றுவிக்கப்பட்ட மிகப்பெரிய சோதனை ஆகும். வேட்கையில்லாமல், சிற்றின்ப இச்சையில்லாமல் அந்தப் பெண்ணை ஒரு தாயைப் போல் அவன் உணர வேண்டும். அவன் தகுதியானவன் என்பதை குருவானவர் கண்டறிந்து, தெரிவித்து விட்டால் - அவன் பால்சார்ந்த பண்பு தோன்றாமல் ஓர் ஆடவனைப் போலில்லாமல், குழந்தையைப்போல் அந்தப் பெண்ணினுள் தங்கியிருப்பான். அவனது மூச்சு பாதிக்கப்படுவதில்லை, அவனுடைய உடலின் சக்தி பாதிக்கப்படாது. அந்தப் பெண்ணுடன் அவன் ஒன்றாய்ச் சேர்ந்து நான்கு மணி நேரம் இருப்பான். வெளிப்பாடு இருக்காது. ஓர் ஆழ்ந்த அமைதி ஊடுருவிப் பரவும். அதுவே ஆழ்ந்த தியானமுமாகும்.

இருபது ஆண்டுகள் சைவ உணவினராக இருந்த நீங்கள் உண்பதற்கு திடீரென மாமிச உணவு வழங்கப்படுகிறது. உங்களுடைய முழு இருப்புணர்வும் பின்னுக்குத் தள்ளப்பட்டு விடும். நீங்கள் வெறுப்பாக உணர்ந்தால் அப்போது தந்த்ரா கூறும். ‘நீ ஒதுக்கப்பட்டாய். அப்பால் சென்று விடு. தற்போது வழங்கப்படுவது எதுவாயினும் அதை நன்றியோடு ஏற்றுக் கொள்’ என்று. நீங்கள் கட்டாயம் தெரிந்து கொள்ள வேண்டும், ஓராண்டு சைவ உணவு உண்டிருந்தாலும் திடீரென மாமிச உணவு வழங்கப்பட்டிருப்பின் உங்களுக்கு உமட்டல், வாந்தி வருவது போல் உணர்வீர்கள். அப்படி வந்தால் அந்த நபர் இன்னும் எண்ணங்களில் வாழ்ந்து கொண்டிருக்கிறார் என்று பொருள். காரணம், இது காய்கறி என்பதும் / இது மாமிசம் என்பதும் வெறும் எண்ணந்தான்.

காய்கறியும் மாமிசந்தான். காரணம் அது மரத்தின் உடம்பில் இருந்து பெறப்படுகிறது. மாமிசமும் காய்கறிதான். மனித உடம்பு அல்லது மிருக உடம்பு என்கிற மரத்தில் இருந்து அது பெறப்படுகிறது. இதுவே நெறிமுறைகளைக் கடத்தல் ஆகும்.

அதன்பிறகு அவன் கடுமையான போதைப் பொருள்களை உட்கொள்ளத் தயாராகிறான். அவன் உண்மையிலேயே விழிப்புடன் இருந்தால் அப்போது கொடுக்கப்படுவது எதுவாயினும் அவனுடைய உடம்பின் வேதியியலை மாற்றுமேயன்றி அவனுடைய பிரக்ஞையை யல்ல. உடம்பின் வேதியியல் (body chemistry) மீது அவனுடைய உணர்வு மிதந்தபடி இருக்கும்.

நீங்கள் கற்பனை செய்யுமளவுக்கு மதுவைப் பயன்படுத்துகிற வர்தாம் குருட்ஜீவ். ஆனால் ஒருபோதும் உணர்வை இழந்து விடவில்லை. ஒருபோதும் குடியில் மூழ்கிக் கிடக்கவில்லை. அவர் ஒரு தாந்த்ரீக குரு. நீங்கள் மேற்கில் யாரையேனும் ஆராய விரும்பினால் அவர் ஜார்ஜ் குருட்ஜீவாகத்தான் இருக்க வேண்டாம், திபெத்திய அகதிகளல்லர்.

30. 'அஹிம்ஸா ஸத்யாஸ்தேய ப்ரஹ்மசர்யா
பரிக்ரஹ யமா'

சுய கட்டுப்பாடு (யமம்) என்பது யோகத்தின் முதற்படி. அது அகிம்சை, உண்மை, நேர்மை, பால்சார்ந்த இச்சைகளைக் கட்டுப் படுத்துதல் மற்றும் உடைமைத் தனமின்மை என்கிற ஐந்து உறுதிமொழிகளை உள்ளடக்கியதாகும்.

31. 'ஜாதி தேசகால ஸம்யானவச்சின்னா
ஸார்வ பௌமா மஹாவ்ரதம்'

இந்த ஐந்து உறுதிமொழிகளும் ஒரு மகாவிரதத்தை உண்டாக்கும். அது சமுதாயப்பிரிவு, இடம், காலம் அல்லது சந்தர்ப்ப சூழ்நிலை இவற்றைக் கருதாமல் ஞானத்தின் ஏழு நிலைகளுக்கும் நீட்சியுறு வதாகும்.

இந்த ஐந்து உறுதிமொழிகளும் - அகிம்சை, சத்யம், அசவுர்யம், பிரம்மச்சர்யம், அபரிக்ரகம் என்கிற ஐந்து - உண்மையான அடித் தளமும், அடிப்படைக் கொள்கையுமாகும். அவை முடிந்த அளவு ஆழப்புரிந்து கொள்ளப்பட வேண்டும். காரணம், 'யமம்' என்பதன் முதற்படியை உண்டாக்கும் ஐந்து நடவடிக்கைகளை நிறைவேற்றாமல் செல்கிற ஒரு சாத்தியம் இருக்கிறது.

முதல் படியின் ஐது நடவடிக்கைகளையும் நிறைவேற்றாமல் செல்கிற யோகிகளையும், புனித யாசகர்களை (பக்கீர்)யும் இந்த உலகெங்கும் நீங்கள் காணமுடியும். அந்நிலையில் அவர்கள் ஆற்றலுடையவராகிறார்கள். ஆனால் அவர்களுடைய ஆற்றல் வன்முறையானது. அவர்கள் மிக மிக ஆற்றலுடையவர்களாயினும் அந்த ஆற்றல் ஆன்மா சார்ந்ததல்ல. அவர்கள் ஒரு வகை மந்திர வித்தைக்காரர்கள். அவர்களால் மற்றவர்களுக்குத் தீங்கு விளைவிக்க முடியும். ஆற்றல் அபாயகரமானது. அது உதவும், கேடு செய்யும். அது அடுத்தவர்க்கு மட்டும் ஆபத்தை உண்டுபண்ணுவதல்ல. அந்த நபருக்கும் அது ஆபத்தானதுதான். அது உங்களை அழித்துவிடும்.

அது உங்களுக்கு மறுபிறவியையும் தரக்கூடும். அது சார்ந்திருப்பது. இந்த ஐந்து உறுதிமொழிகளும் ஓர் உத்தரவாதம். அதனால் ஒழுக் கத்தில் இருந்து தோன்றுகிற ஆற்றல் தவறாகப் பயன்படுத்தப் படுவதில்லை.

தங்கள் ஆற்றலைக் காண்பிக்கும் 'யோகிகளை' நீங்கள் பார்த்திருப்பீர்கள். அது யோகிக்கு சாத்தியமானதல்ல, காரணம் இந்த ஐந்து உறுதிமொழிகளையும் உண்மையிலேயே நிறைவேற்றி யிருந்தால் அவர் இனிமேலும் தனது திறமைகளை வெளிக்காண்பிக்க விரும்புபவராய் இருக்க மாட்டார், அவரால் வெளிக்காட்ட முடியாது. அவர் இனியும் சித்து வேலைகளில் ஈடுபட மாட்டார் - அது அவருக்குச் சாத்தியமாகாது. அவரைச் சுற்றி அற்புதங்கள் நிகழும். ஆனால், அவர் அவற்றைச் செய்பவராயிருக்க மாட்டார்.

இந்த ஐந்து உறுதிமொழிகளும் உங்களுடைய அகந்தையை முற்றாய் அழித்துவிடும். ஒன்று அகந்தை இருக்க வேண்டும். அல்லது இந்த ஐந்து உறுதிமொழிகளும் நிறைவேற்றப்பட வேண்டும். இரண்டுமே சாத்தியமற்றவை. நீங்கள் ஆற்றல் உலகில் நுழைவதற்கு முன் - யோகாதான் ஆற்றல் உலகம், அதனுடைய ஆற்றல் முடிவற்றது - கோயிலுக்கு வெளியே உங்கள் அகந்தையை விட்டுச்செல்ல அது அவசியம் தேவைப்படும். உங்களோடு அகந்தையும் இருந்தால் ஆற்றல் தவறாகப் பயன்படுத்தப்பட எல்லாவித சாத்தியமும் இருக்கிறது. அந்நிலையில் ஒட்டுமொத்த முயற்சியும் பயனற்றதாய், ஏளனத்துக்குரியதாய் ஆகிவிடும். உண்மையில் நகைக்கத்தக்கது.

இந்த ஐந்து உறுதிமொழிகளும் உங்களைத் தூய்மைப்படுத்துதற் காகவும், கீழிறங்குதற்கான ஆற்றலுக்கு உங்களை ஒரு சாதனமாக்கவும், நலந்தரும் சக்தியாக்கவும், மற்றவர்களுக்கு மகிழ்ச்சியளிக்கவும் உள்ளவை. அவை கட்டாயமானவை. யாரும் அவற்றை விலக்கிச் செல்ல முடியாது. நீங்கள் விலக்கிச் செல்ல முடியும். உண்மையில் அவற்றின் வழியே செல்வதைவிட அவற்றை விலக்கிச் செல்வது எளிது, காரணம், அவை கடினமானவை, ஆனால் அப்போது உங்களுடைய கட்டடம் அடித்தளமற்றதாகி விடும். அது என்றாவதொரு நாள் விழுந்து விடும். என்றாவதொரு நாள் விழுந்து நொறுங்கிப் போகும். அண்டை அயலாரைச் சாகடித்து விடும். உங்களையுங்கூட அது சாகடித்து விடலாம். இதுதான் புரிந்து கொள்ளப்பட வேண்டிய முதல் கருத்து.

இரண்டாவது. அன்றொரு நாள் நரேந்திரா ஒரு கேள்வியைக் கேட்டான். ரொம்பவும் பொருத்தமான ஒன்று. அவன் சொன்னான், 'சம்ஸ்கிருதத்தில் 'யம்' என்றால் மரணம் என்று பொருள். 'யம்' என்றால் 'ஒழுங்கு முறை' என்றும் பொருள்படும். மரணத்துக்கும், உள்ளார்ந்த ஒழுங்குக்கும் (discipline) ஏதேனும் தொடர்புள்ளதா?' என்று. இருக்கிறது. அதுவும் புரிந்து கொள்ளப்பட வேண்டியதுதான். சம்ஸ்கிருதம் ஆற்றல்மிக்க ஒரு மொழி. அதனுடன் ஒப்பிடக்கூடிய ஆற்றல் படைத்த மொழி உலகில் வேறெதுவும் இல்லை. ஒவ்வொரு வார்த்தையும் மிகுந்த கவனத்துடனும், முயற்சியுடனும் கண்டுபிடிக்கப் பட்டவை - சம்ஸ்கிருதம் இயல்பான (எளிய நடை) மொழியல்ல. மற்ற மொழிகளெல்லாம் இயல்பானவை. 'சம்ஸ்கிருதம்' என்ற வார்த்தைக்கு தோற்றுவிக்கப்பட்டது, குறை நீக்கப்பட்டது, இயல்பற்றது என்று பொருள். இந்தியாவிலேயே மிகவும் இயல்பான செயற்கைத்தன்மை யற்ற மொழி என்றால் அது பிராகிருத மொழிதான். பிராகிருதம் என்பதற்கு இயல்பானது என்று பொருள். ஆனால் அது வழக்கில் இல்லை. சம்ஸ்கிருதம் குறை நீக்கப்பட்ட தோற்றநிலை கொண்டது. அது இயற்கையான பூக்கள் போன்றதல்ல. அது சாரம், நேர்த்தி செய்யப்பட்டது (refined) போன்றது. ஒற்றைச் சொற்களை உண்டுபண்ண அதிகக் கவனமும் முயற்சியும் மேற்கொள்ளப்பட்டது. எல்லா சாத்தியங்களும் குறிக்கப்பட வேண்டும் என்பது கருத்தில் கொள்ளப்பட்டது. ஆழ்ந்து சிந்திக்கப்பட்டது. இந்த 'யம்' என்கிற சொல் புரிந்துகொள்ளப்பட வேண்டியது. அது மரணத்தின் கடவுள் (யமன்) என்று பொருள்படும். அது உள்ளார்ந்த ஒழுங்கு (கட்டுப்பாடு) என்றும் பொருள்படும். ஆனால், மரணத்துக்கும் ஒழுங்குமுறைக்கும் இருக்கக்கூடிய இன்றியமையாத தொடர்பு என்ன? எதுவும் இருப்பதாய் தெரியவில்லை. ஆனால் இருக்கிறது.

உலகில் இதுவரைக்கும் இரண்டு வகையான பண்பாடுகள் இருந்திருக்கின்றன - இரண்டுமே சரிசமமில்லாதவை, சரிகட்டப் படாதவை. ஒரு முழுமையான, எல்லாம் அடங்கிய, புனிதத் தன்மை யுள்ள பண்பாட்டை வளர்ப்பது இன்னமும் சாத்தியப்படவில்லை. மேற்கில், இப்போது பாலுறவிற்கு முழுமையான சுதந்திரம் அளிக்கப்பட்டுள்ளது: ஆனால் நீங்கள் கவனியாதிருக்கலாம். மரணம் மறைக்கப்பட்டதாயுள்ளது. மரணத்தைப் பற்றிப் பேச யாரும் விரும்புவதில்லை. எல்லாரும் பாலியல் பற்றியே பேசுகிறார்கள். பாலுறவு பற்றி நிறையவே எழுத்துகளும் படங்களும் கொண்ட

புத்தகங்கள் உள்ளன. 'ப்ளேபாய்' (Play Boy) போன்ற ஒழுக்கக் கேடான, வளமான சிந்தனையற்ற, நரம்பு அமைப்பைப் பாதிக்கிற (neurotic) இதழ்கள் உள்ளன. மேற்கில் பாலுறவு பற்றிய கருத்தாவேசம் இருக்கிறது. ஆனால், மரணம்? மரணம் ஒரு தடை செய்யப்பட்ட சொல்லாக இருக்கிறது. நீங்கள் மரணத்தைப் பற்றிப் பேசினால் மக்கள் உங்களை நோயுற்றவராய் எண்ணிக் கொள்வார்கள் - "நீங்கள் ஏன் மரணத்தைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்கிறீர்கள்?" 'உண்டு, குடித்து, களித்திரு' இதுதான் மேற்கோள் வாசகமாய், பின்பற்றப்பட வேண்டிய குறிக்கோளாய் இருக்கிறது. "நீங்கள் எதற்காக மரணத்தை உள்ளே நுழைக்கிறீர்கள்? அது வெளியில் இருக்கட்டும். அதைப்பற்றிப் பேசாதீர்கள்.'

கிழக்கில் பாலுறவு மறைக்கப்படுகிறது. ஆனால் மரணம் பற்றி தாராளமாய் பேசப்படுகிறது. பால் சார்ந்த, அருவருக்கத்தக்க நிர்வாண இலக்கியம் போன்று கிழக்கில் வேறு வகையான எழுத்து இருக்கிறது. நான் அதனை மரண இலக்கியம் என்பேன். மேற்கில் உள்ள ஆபாச இலக்கியம் மாதிரி இதுவும் ஆபாசமும், பிணியும் (வளமற்ற சிந்தனை) கொண்டதுதான். நான் புனித நூல்கள் பலவற்றைப் பார்த்திருக்கிறேன். கிட்டத்தட்ட எல்லா இந்திய மறை நூல்களும் மரணத்தைப் பற்றியே பேசுகின்றன. அவை ஒருபோதும் பாலுறவு பற்றிப் பேசுவதில்லை. பாலுறவு சமயத்தால் தடை செய்யப்பட்டதாயிருக்கிறது. அவை மரணத்தைப் பற்றியே பேசுகின்றன. இந்தியாவில் மதிப்பிற்கும், மரியாதைக்கும் உரியவராய் கருதப்படும் அருளாளர்கள் மரணத்தைப் பற்றியே பேசிக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் தொடர்ந்து மரணத்தைப் பற்றியே குறிப்பிடுகிறார்கள். நீங்கள் ஒரு பெண்ணைக் காதலித்தால் அவர்கள் சொல்கிறார்கள், 'நீங்கள் என்ன செய்கிறீர்கள்? பெண்ணென்றால் என்ன?' தோலினாலான ஒரு பை. உள்ளே இருப்பவையெல்லாம் தூய்மையற்ற சமாசாரங்கள்' என்று. அத்தனை வகை அழுக்கையும் வெளிக்கொண்டு வருவதில் அவர்கள் மகிழ்ச்சியடைகிறார்கள். இதனை ஒரு பிணியென்று சொல்லலாந் தானே. உடம்பிற்குள் இருக்கும் சளியை, இரத்தத்தை, சதையைப்பற்றி அவர்கள் பேசுகிறார்கள். இரைப்பை, கழிவுகளால் நிரம்பிய வயிறு பற்றிப் பேசுகிறார்கள், சிறுநீர்ப் பையையுந்தான். 'இதுதான் உங்களுடைய அழகான பெண். அழுக்குப்பை. இந்தப் பையுடன்தான் நீங்கள் கலவி புரிகிறீர்கள், விழிப்போடிருங்கள்".

இது புரிந்து கொள்ளப்பட வேண்டிய ஒன்று. கிழக்கில் வாழ்க்கையின் தூய்மையற்றத் தன்மை பற்றி நீங்கள் அறிய வேண்டும் என்றோ, உங்களை எச்சரிக்க வேண்டும் என்றோ விரும்பினால் அவர்கள் பெண்ணை உள்ளே கொண்டு வந்து விடுகிறார்கள். மேற்கில் வாழ்க்கை எத்தனை நேர்த்தியானது என்பதை உங்களுக்குப் புரிய வைக்க விரும்பினால் அவர்கள் மறுபடியும் பெண்ணை உள்ளே கொண்டு வருகிறார்கள். 'ப்ளேபாய்' இதழைப் பாருங்கள். வார்த்தெடுக்கப்பட்ட மாதிரி மிக அழகான பெண்கள். அவர்கள் உண்மையில் அப்படி இருப்பவர்களல்லர். அவர்கள் புகைப்படத் தந்திரங்களில் தயாரானவர்கள். திரும்பத்திரும்ப மெருகேற்றப்படும். அவர்கள் உன்னதமடைகிறார்கள். ஆயிரக்கணக்கானவர்கள் அவர்களைப் பற்றிக் கனவு காண்கிறார்கள், கற்பனை செய்கிறார்கள்.

பாலுணர்வைத் தூண்டும் படங்களோடு கூடிய எழுத்துகள் பெண்களின் உடம்பையே சார்ந்திருக்கின்றன. மரணத்தைப் பற்றிய புத்தகங்களும் அவ்வாறே பெண்ணுடலைப் பற்றிப் பேசுகின்றன. அந்நிலையில்தான் அவர்கள் சொல்கிறார்கள், 'நீ காதலிக்கிறாயா? இந்த இளம்பெண் சீக்கிரமே முதுமையடைந்து விடுவாள். சீக்கிரமே அவள் விகாரமான கிழவியாகி விடுவாள். கவனமாயிரு. காதல் வயப்பட்டு விடாதே, விரைவிலேயே அவள் செத்து விடுவாள், அப்போது நீ கூச்சலிட்டு அழுவாய், பிறகு துன்பத்தில் விழுவாய்" என்று. நீங்கள் வாழ்க்கையை உள்ளே கொண்டு வருவதாயிருந்தால் பெண்ணின் உடம்பு தேவைப்படுகிறது. நீங்கள் மரணத்தை உள்ளே கொண்டு வருவதற்கும் பெண்ணின் உடம்பு தேவைப்படும்.

ஆண் தொடர்ந்து பெண்ணின் உடம்பு பற்றிய ஒரே எண்ணத் துடன் இருக்கிறான் - அவர்கள் உல்லாசிகளாகவோ உத்தமர் களாகவோ இருந்தாலும் அதில் ஒன்றும் பெரிய வித்தியாசமில்லை.

ஆனாலென்ன? அது எப்போதுமே நடக்கிறதுதான். ஒரு சமுதாயம் பாலுணர்வை மறைக்கிறபோது மரணத்தைப் பற்றியதை வெளிப்படுத்துகிறது. மரணத்தைப் பற்றியதை மறைக்கிற சமுதாயம் பாலுணர்வை வெளிப்படையாக்குகிறது. காரணம், மரணமும் பாலுறவும் மாறுபட்ட கருத்துகளைக் கொண்ட இருநிலைகள். பாலுறவு என்பது வாழ்க்கை என்றே பொருள்படும். காரணம், வாழ்க்கை அதிலிருந்தே மேலெழுகிறது. வாழ்க்கை ஒரு பால் சார்ந்த நிகழ்வு - மரணம் அதன் முடிவுப்பகுதியாகும்.

நீங்கள் இரண்டைப் பற்றியும் ஒருசேர நினைத்தால் அதில் முரண்பாடு இருப்பதாய் தோன்றலாம். நீங்கள் பாலுறவு, மரணம் என்கிற இரண்டையும் சமரசப்படுத்த (reconcile) முடியாது. எப்படி வேற்றுமை அகற்றிச் சமரசப்படுத்திட முடியும்? ஒன்றை மறந்து மற்றொன்றை ஞாபகத்தில் வைப்பது எளிது. நீங்கள் இரண்டையும் நினைவில் வைத்தால் அவற்றைச் சமாளிக்க உங்கள் மனம் சிரமப்படும் - அவை ஒன்றாகவே இருக்கின்றன. அவை ஒட்டியிணைந்த மாதிரி சேர்ந்தே இருக்கின்றன. அவை உண்மையில் இரண்டல்ல, ஒரே சக்தியைக் கொண்ட இருவேறு நிலைகள்தாம். செயல்படுவது மற்றும் செயலற்றது, யின் (Yin) மற்றும் யாங் (Yang).

நீங்கள் அதைக் கவனித்ததுண்டா? ஒரு பெண்ணுடன் உறவு கொள்ளும்போது உச்சக்கட்ட இன்பம் (orgasm) என்கிற தருணம் வருகிறது. அதில் நீங்கள் அஞ்சி நடுங்குவீர்கள். காரணம் உச்சக்கட்ட நிலையை அடைகிறபோது வாழ்வும் மரணமும் ஒன்றாகவே இருக்கும். நீங்கள் வாழ்க்கையை அதன் உச்சியிலும், மரணத்தை அதன் அடியாழத்திலும் அனுபவிக்கிறீர்கள். உச்சமும், ஆழமும் ஒரே தருணத்தில் வாய்க்கிறது. அதுவே உச்சக்கட்ட இன்பத்தில் உண்டாகிற அச்சம். அது வாழ்வாயிருப்பதால் மக்கள் அதை விரும்புகிறார்கள், அது மரணமாயிருப்பதால் மக்கள் அதைத் தவிர்க்கப் பார்க்கிறார்கள். அது அழகான, பரவசமூட்டும் கணங்களைக் கொண்டிருப்பதால் மக்கள் அதை விரும்புகிறார்கள். அது மிகவும் ஆபத்தான கணங்களைக் கொண்டிருப்பதால் அவர்கள் அதைவிட்டு நழுவியோட விரும்புகிறார்கள். ஏனெனில், மரணம் தனது வாயை அகலத் திறந்து வைத்துக் கொண்டிருக்கிறது.

விழிப்புணர்வுடைய மனிதன் மரணமும், பாலுறவும் ஒரே சக்தியைக் கொண்டவை என்பதை உடனே தெரிந்து கொள்கிறான். அவை ஒட்டுமொத்த பண்பாடு, எல்லாவற்றையும் உள்ளடக்கிய முழுமையான பண்பாடு, புனிதமான பண்பாடு என்பதை அறிகிறான். இரண்டையும் ஏற்றுக்கொண்டு விடுகிறான். அது சரிசமமாய் பொருத்தப்பட்டிருக்கிறது. அது ஒரு முனையைத் தவிர்த்துவிட்டு மற்றொரு முனைக்குச் செல்வாது. இதனை அறிவதென்பது இருமை (duality)யைக் கடப்பதாகும். யோகாவின் முழு முயற்சியும் - எப்படிக் கடப்பதென்பதுதான்.

யமம் முக்கியத்துவம் உடையதாயிருக்கிறது காரணம் ஒருவர் மரணத்தைப் பற்றிய எச்சரிக்கை கொள்கிறபோது, அந்நிலையில்

மட்டுமே. சுயக்கட்டுப்பாட்டுடன் கூடிய வாழ்க்கை சாத்தியமாகிறது. நீங்கள் பாலுறவு வாழ்க்கை பற்றி மட்டுமே அறிந்திருந்தால் மரணத்தைத் தவிர்க்கப் பார்ப்பீர்கள், அதிலிருந்து தப்பியோட முயல்வீர்கள், அதைக் காணாமல் கண்களை மூடிக்கொள்வீர்கள். அதைப் பின்பகுதியில் போட்டு வைப்பீர்கள். தன்னுணர்வற்ற பகுதிக்கு (unconscious)த் தள்ளி விடுவீர்கள். அந்நிலையில் சுயக்கட்டுப்பாட்டுடன் கூடிய வாழ்க்கையை நீங்கள் உருவாக்கிக் கொள்வதற்கில்லை. அதனால் என்ன பயன்? உங்கள் வாழ்க்கை மனம் போன போக்கில் போகிற வாழ்க்கையாகி விடும் - உண்டு, குடித்து, உல்லாசமாயிருப்பது. அதில் தவறில்லைதான். ஆனால் அதனளவில் மட்டுமே, அதுவே முழுமையான சித்திரமாகி விடாது. இது ஒரு பகுதி - நீங்கள் பகுதியை முழுமையாய்க் கொள்கிற போது - நீங்கள் தவற விடுவீர்கள், பெரிய அளவில் தவற விட்டு விடுவீர்கள்.

மரணத்தைப் பற்றிய விழிப்புணர்வு மிருகங்களிடமில்லை. அதனால் பதஞ்சலியை மிருகங்களுக்குப் போதிக்கிற சாத்தியம் கிடையாது. சாத்தியமில்லை என்பதற்குக் காரணம் எந்தவொரு மிருகமும் சுயக்கட்டுப்பாட்டோடு இருப்பதற்குத் தயாராயில்லை. மிருகம் கேட்கும், 'எதற்காக?' என்று. அந்த இடத்தில் வாழ்க்கை மட்டுமே இருக்கிறது. மரணம் இருப்பதில்லை, காரணம் தான் இறக்கப் போவதை மிருகம் அறிந்திருக்காது. நீங்கள் சாவப்போவதை அறிந்து கொண்டால், உடனே உயிரோடிருப்பதைப் பற்றிய மறு சிந்தனையை தொடங்கி விடுவீர்கள். மரணத்தை முற்றிலுமாய் வாழ்க்கை எடுத்துக் கொண்டுவிட வேண்டும் என்று விரும்புவீர்கள்.

வாழ்க்கை மரணத்தை உறிஞ்சுகிறபோது 'யமம்' தோன்றுகிறது. ஒழுங்குமுறையோடு கூடிய வாழ்க்கை. பிறகும் நீங்கள் வாழ்கிறீர்கள், ஆனால், மரணம் பற்றிய நினைவோடுதான் வாழ்கிறீர்கள். நீங்கள் செல்கிறீர்கள். ஆனால் மரணத்தை நோக்கிச் செல்வதை அறிந்தே செல்வீர்கள். நீங்கள் அனுபவித்து மகிழ்வீர்கள். ஆனால் இது எப்போதைக்குமாய் நிலைக்கப் போவதில்லை என்பதை அறிந்தே இருப்பீர்கள். மரணம் உங்கள் நிழலாகிறது. உங்கள் இருப்பணுர்வின் ஒரு பகுதியாகிறது, நீங்கள் காணும் காட்சியின் ஒரு பகுதியாகிறது. நீங்கள் மரணத்தை உட்கொண்டு விடுவதால் தற்போது சுயக்கட்டுப்பாடு மட்டுமே சாத்தியமாகிறது. தற்போது நீங்கள் எண்ணமிடுவீர்கள், "எப்படி வாழ்வது?" என்று. காரணம் வாழ்க்கை தற்போது குறிக் கோளாயிருப்பதில்லை: மரணமும் அதனுடைய பகுதியாயிருக்கிறது.

எந்தத் தரத்தில் வாழ்வது? என்பது நீங்கள் மிகவும் நேர்த்தியான விதத்தில் வாழ்வதோடு சாகவும் முடியும் என்பதாகும். எந்த நிலையில் வாழ்வது? வாழ்க்கை மட்டும் பேரானந்தத்தின் உச்சநிலை ஆவதில்லை, மரணமும் உச்சத்தை எட்டுகிறது. காரணம் மரணம் வாழ்வின் உச்சக்கட்டமாய் (climax) இருக்கிறது.

இத்தகைய வழியில் வாழ்கிறபோது முழுமையாக வாழும் திறனை மட்டுமா நீங்கள் பெறுகிறீர்கள், முழுமையாய் மரணிக்கும் திறனையும் அடைகிறீர்கள். அதுவே சுயக்கட்டுப்பாட்டின் பொருள். சுயக்கட்டுப்பாடு என்பது மறைத்து வைப்பதல்ல. அது ஒளிவுமறைவற்ற நேரான வாழ்க்கையை வாழ்வது. அது மரணம் பற்றிய எச்சரிக்கையோடும், தெரிநிலை (aware)யோடும் வாழ்வது. அந்நிலையில் உங்கள் வாழ்வென்னும் ஆறு வாழ்க்கை மரணம் என்கிற இரண்டு கரைகளைக் கொண்டதாயிருக்கும். விழிப்புணர்வு என்கிற ஆறு இவையிரண்டுக்கும் இடையே ஓடும். மரணத்தை மறுத்து வாழ்க்கையை வாழ முயல்கிறவர் ஒரு கரையின் பக்கமாகவே செல்வார். அவருடைய விழிப்புணர்வு என்கிற ஆறு முழுமையடையாது. அவரிடம் ஏதோ ஒன்று போதுமான அளவு இல்லாமலிருக்கும். மிக நேர்த்தியான ஒன்று குறைபாடாய் தெரியும். அவருடைய வாழ்க்கை மேலோட்டமானது – அதில் ஆழம் இருக்காது. மரணமில்லையேல் ஆழமில்லை.

நீங்கள் மறுமுனைக்குச் சென்றால், இந்தியர்கள் செய்தது போலத் தான் அது இருக்கும். அவர்கள் தொடர்ந்து மரணத்தோடு வாழத் தொடங்கினார்கள். அச்சம், பயம், பிரார்த்தித்தல் என்று மரணமற்று, அழியாதிருக்க எதையெல்லாமோ செய்தார்கள். அந்நிலையில், அவர்கள் வாழ்வதை எவ்வகையிலும் நிறுத்திக் கொண்டு விட்டார்கள் என்றே சொல்ல வேண்டும். அதுவும்கூட கருத்தாவேசம் – ஒரே எண்ணத்தில் இருப்பதுதான். அவர்களும் ஒரு கரையில் மட்டுமே போய்க் கொண்டிருப்பவர்கள்தாம். அவர்களுடைய வாழ்க்கையும் ஒரு துன்பியல் நாடகமாகவே இருக்கும்.

மேற்கு ஓர் அவலக்காட்சி, கிழக்கும் ஓர் அவலக்காட்சி – ஏனெனில் எல்லாம் நிறைந்த வாழ்க்கை என்பது இன்னமும் சாத்தியமாகவில்லை. மரணத்தை ஞாபகத்தில் வைத்துக்கொண்டு ஓர் அழகான பாலுறவு வாழ்க்கை வாழ்வது சாத்தியமா? மரணத்தை நினைவில் கொண்டபடி உண்பது, ஆனந்தமாய் உண்பது

சாத்தியப்படுமா? நீங்கள் சாகப்போகிறீர்கள், உங்களுக்குப் பிரியமானவர் சாகப்போகிறார் என்பதை நன்கு அறிந்திருந்தும் காதலிப்பதும் உறவு கொள்வதும் சாத்தியமா? அதுவெல்லாம் சாத்தியமென்றால் முழுமையான வாழ்க்கையும் சாத்தியந்தான். அந்நிலையில் நீங்கள் முற்றிலும் சமநிலையுடையவராகி விடுகிறீர்கள். அதன்பிறகு உங்களுக்குக் குறைபாடாய் தெரியாது. அவ்வேளையில் நீங்கள் மனநிறைவு கொண்டவராயிருப்பீர்கள். ஆழ்ந்த மனநிறைவு உங்கள்மீது வந்திறங்கும்.

யமம் சமநிலை கொண்ட வாழ்க்கையாகும். பதஞ்சலியின் இவ்வைந்து உறுதிமொழிகளும் (vows) ஒரு சமநிலையை உங்களிடம் ஏற்படுத்தும். ஆனால் நீங்கள் அதைத் தவறாகப் புரிந்து கொள்ளவும், மறுபடியும் சமநிலையற்ற ஒரு வாழ்வை உருவாக்கிக் கொள்ளவும் முடியும்.

யோகா ஆசைகளுக்கு இடங்கொடுத்து அனுபவிப்பதற்கு எதிரானதல்ல, அது சமநிலைக்கானது. யோகா சொல்கிறது, ‘உயிரோடிருங்கள், ஆனால் எப்போதும் சாவதற்கும் தயாரயிருங்கள்’ என்று. அது முரண்பாடாய் தெரியும். யோகா சொல்கிறது, ‘அனுபவித்து மகிழுங்கள். ஆனால் இது உங்கள் வீடல்ல என்பதையும் நினைவில் கொள்ளுங்கள். இது ஒரு இராத்தங்கல்’ என்று. இதில் தவறேதுமில்லை. நீங்கள் முழு நிலா இரவொன்றில் ஒரு சத்திரத்தில் தங்கியிருந்தால் அதில் தவறேதுமில்லை. அனுபவியுங்கள். ஆனால் சத்திரத்தை உங்களுடைய வீடாய்க் கொண்டு விடாதீர்கள், காரணம் நாளைக்கே நாம் வெளியேற வேண்டியிருக்கும். ஓரிரவு இங்கே தங்க முடிந்ததற்கு நன்றியுடையவராயிருப்போம். இருந்தவரை நன்றாயிருந்தது – ஆனால் அதை எப்போதைக்கும் வேண்டுமென்று கேட்காதீர்கள். அது எப்போதைக்கும் நிலைக்க வேண்டுமென்று நீங்கள் கேட்டால் அது இன்னோர் எல்லை. அது நிலைக்கப் போவதில்லை என்பதற்காக நீங்கள் அதை அனுபவித்து மகிழாமலே இருந்தால் அது இன்னோர் எல்லை. இரண்டு வழியிலும் நீங்கள் பாதியிலேயே நின்று விடுகிறீர்கள்.

நீங்கள் என்னைப் புரிந்து கொள்ள முயல்வீர்களாயின், இதுவே என்னுடைய முழு முயற்சியும் ஆகும். எல்லா முரண்பாடுகளும் உள்ளடங்கி, ஓர் இணக்கத்தை மேலெழச் செய்து உங்களை முழுமையாக்குகிற முயற்சி. நீங்கள் சலிப்படையும் நிலைக்குத் தள்ளப்படுவதை நான் விரும்பவில்லை. மனம் போன போக்கில்

வாழ்கிற வாழ்க்கைதான் சலிப்பை ஏற்படுத்தும். சாதாரண யோக வாழ்க்கையும் சலிப்பூட்டுவதுதான், அலுப்பூட்டுவதுந்தான். வளமான வாழ்வென்பது எல்லா முரண்பாடுகளையும் உள்ளடக்கியதாகும். அதுபல இசைக் குறிப்புகளைக் கொண்டிருக்கும். ஆனால், அத்தனை இசைக் குறிப்புகளும் ஓர் இணக்கத்தைக் கொண்டதாயிருக்கும். என்னைப் பொறுத்தவரை அந்த வளமான வாழ்க்கையை அடைய வேண்டுமென்றால் யோகாதான் வேண்டும்.

இந்த ஐந்து உறுதி மொழிகளும் இருப்பது வாழ்க்கையிலிருந்து உங்களைத் துண்டிப்பதற்கல்ல, அவை உங்களை இணைப்பதற் காகவே இருக்கின்றன. அந்த முக்கியத்துவத்தை நினைவில் கொள்ள வேண்டும். காரணம், பலரும் இந்த உறுதிமொழிகளை வாழ்க்கையில் இருந்து தங்களைத் துண்டித்துக் கொள்ளப் பயன்படுத்துகிறார்கள். அவற்றின் நோக்கம் அதுவல்ல, அவை முற்றிலும் மாறாய் கருதிக் கொள்ளப்பட்டன.

எடுத்துக்காட்டாக, முதலாவது அகிம்சை, வன்முறை இல்லாதது. மக்கள் தங்களை வாழ்க்கையில் இருந்து துண்டித்துக் கொள்ள முனைவதற்குக் காரணம் நீங்கள் வாழ்க்கையில் இருந்தால் ஏதாவதொரு விதத்தில் வன்முறையும் இருக்குமென்று அவர்கள் எண்ணுவதுதான். இந்தியாவில் சமணர்கள் இருக்கிறார்கள், அவர்கள் அகிம்சையில் நம்பிக்கை உடையவர்கள். அதுதான் அவர்களுடைய மதம் ஆகும். ஒரு சமணத் துறவியைப் பாருங்கள். அவர் எல்லாவற்றிலுமிருந்து நழுவியோடிக் கொண்டிருப்பார். காரணம் வன்முறைக்கான சாத்தியங்களை அவர் காண்கிறாா. அவை எங்குமிருப்பதைக் கண்டுபிடிக்கிறார். சமணர்கள் தோட்டமிடுதல், விவசாயம் செய்தல் என்று பயிர் செய்வதையே நிறுத்தி விட்டார்கள். காரணம் நீங்கள் விவசாயம், தோட்டவேலை என்று ஈடுபட்டால் அங்கே வன்முறை இடம் பெற்றுவிடும். நீங்கள் செடிகளைத் துண்டிக்க வேண்டியிருக்கும். ஒவ்வொரு செடியிலும் உயிர் இருக்கிறதே. எனவே, சமணர்கள் விவசாயம் செய்வதைக் கைவிட்டார்கள்.

அவர்கள் போருக்குச் செல்வதில்லை, காரணம் அங்கேயும் வன்முறைப் பிரயோகம் இருக்கும். அவர்களுடைய ஆசான்கள் அனைவரும் போர் வீரர்கள், அவர்கள் சத்திரிய வகுப்பைச் சேர்ந்தவர்கள். மகாவீரரும் மற்ற தீர்த்தங்கரர்களும் சத்திரியர்கள். ஆனால் அவர்களைப் பின்பற்றியவர்களோ வியாபாரிகளாயும்,

தொழிலதிபர்களாயும் இருந்தனர். என்ன ஆயிற்று? அவர்களால் போருக்குச் செல்ல முடியவில்லை, அவர்களால் படையில் சேர முடியவில்லை. எனவே. அவர்கள் போர் வீரர்களாக முடியவில்லை. காரணம் அங்கே வன்முறைப் பிரயோகம் இருக்கும். அவர்களால் விவசாயிகளாகவும் முடியவில்லை. காரணம் அங்கே வன்முறைக்கு இடமிருந்தது. யாரும் சூத்திரராகவோ, தீண்டாதவராகவோ இருக்க விரும்பவில்லை. மற்றவர்களுடைய கழிவறையைச் சுத்தம் செய்யவும், வீடுகளைக் கழுவி விடவும் வேண்டியிருக்கும் - யாரும் அதை விரும்பாததால் அப்படி ஆகவில்லை. அவர்களால் பிராமணர்களாகவும் முடியவில்லை. காரணம் அவர்களுடைய மதம் பிராமணர்களுக்கெதிராய் கிளர்ச்சி செய்வது. ஆக. இருந்த ஒரே சாத்தியம் வியாபாரிகளாகி விடுவதுதான்.

அவர்கள் மூச்சு விடவும் அஞ்சுகிற சமணத்துறவிகள். காரணம் மூச்சு விடுகிறபோது பல உயிர்கள் கொல்லப்பட்டுவிடும். மிகச்சிறிய பூச்சிகள் காற்றில் பறந்து கொண்டிருக்கும். அது கிருமிகளாலும் மிகச்சிறிய நுண்ணுயிர்களாலும் நிரம்பியிருக்கும். நீங்கள் வெற்றுக் கண்களால் அவற்றைக் காண முடியாது. நீங்கள் மூச்சை உள்ளிழுக்கும் போது அவை இறந்து விடும், நீங்கள் மூச்சை வெளிவிடும் போதும் வெளிவருகிற சூடான காற்று அவற்றைக் கொன்று விடும். எனவே, அவர்கள் மூச்சு விடவும் அஞ்சினார்கள். அவர்களால் இரவில் நடக்க முடியாது. காரணம் இருட்டில் ஏதாவது சிற்றுயிர்கள் - பூச்சியினங்கள் இருக்கலாம்... அங்கே வன்முறை ஏற்பட்டு விடும். மழைக் காலத்திலும் அவர்களால் செல்ல முடியாது. காரணம், மழைக்காலத் தில்தான் பல பூச்சிகளும், ஈக்களும், எறும்புகளும் தோன்றுகின்றன, எங்கும் வாழ்க்கை உயிரோட்டத்துடன் இருக்கும். நீங்கள் ஈர நிலத்தில் நடந்தால் அங்கேயும் சாத்தியம் இருக்கிறது. ஒரு சமணத்துறவி இரவில் தூங்கும்போது கூட புரண்டு படுக்கக்கூடாது என்று சொல்லப்படுகிறது. காரணம் நீங்கள் பலமுறை புரளும் போது ஒருசில பூச்சிகளைக் கொன்று விடுவீர்கள். எனவே. ஒரு பக்கமாய் படுத்து உறங்க வேண்டும்.

இது ரொம்ப உச்சநிலைக்குச் செல்வது. இது சற்றும் பொருத்தமில்லாதது. எனவே நினைவில் கொள்ளுங்கள், மக்கள் உயிரை முன்னிட்டு அகிம்சையைப் பயன்படுத்தினார்கள் என்பதை. அகிம்சை என்றாலே உயிரிடம் அன்பு. உங்களால் ஓர் உயிரைக்

கொல்ல முடியாது. யாரையும் துன்புறுத்த விரும்பாத அளவுக்கு நீங்கள் உயிரை நேசிக்கிறீர்கள். அது ஆழ்ந்த அன்பு. ஒதுககித் தள்ளுவதல்ல.

உண்மையில் வாழ்ந்து கொண்டிருப்பதற்கு சிறிதளவாயினும் வன்முறை அவசியமாகும். ஆனால், அது வன்முறையாகாது. காரணம் அதை நீங்கள் விரும்பிச் செய்வதில்லை. நான் சுவாசிக்கிறேனென்றால் விரும்பிச் சுவாசிக்கவில்லை. நீங்களாக மூச்சு விடுவதில்லை – மூச்சு தானாக இயங்குவது. நீங்கள் செய்பவர் அல்லர். நீங்கள் அதை நிறுத்த முயற்சி செய்தால் என்னவாகும் என்று உங்களுக்குத் தெரியும். ஒரேயொரு கணம் நீங்கள் நிறுத்த முடியும். அது வேகமாய் பாயும். அதன் போக்கு உள்ளும், வெளியும் வேகமாயிருக்கும். நீங்கள் சாப்பாட்டை சாப்பிட்டுத்தான் ஆகவேண்டும். நீங்கள் உண்பது எதுவாயினும் ஒருவகை வன்முறை இருக்கும். மரங்களில் இருந்து பழங்களைப் பறிப்பதுகூட மரங்களைத் துன்புறுத்துவதாகும்.

சமணர்கள் மாமிசம் சாப்பிடாதிருக்கத் துவங்கினார்கள். நல்லது. காரணம் அது ஒதுக்கக் கூடியதுதான். ஒன்றை விட முடிவது அருமையான விசயம். பிறகு அவர்கள் மரங்களிலிருந்து பழங்களை உண்ணவும் அஞ்சினர். காரணம், நீங்கள் பழங்களைப் பறிக்கிறபோது மரம் துன்பத்துக்குள்ளாகும். அப்படியானால் என்ன செய்வது? பொறுங்கள்... பழம் பழுத்து தரையில் விழும். அதுவும் நல்லதுதான், ஒன்றும் தவறில்லை. ஆனால், அந்தப் பழம் தரையில் விழுந்தாலும் அதில் இலட்சக்கணக்கான விதைகள் இருக்கும். ஒவ்வொரு விதையும் மரமாகும். ஒவ்வொரு மரத்திலும் மறுபடியும் இலட்சக்கணக்கான பழங்கள் தோன்ற சாத்தியம் இருக்கிறது. ஆக நீங்கள் அத்தனை சாத்தியங்களையும் உண்டு விடுகிறீர்கள் – நீங்கள் வன்முறையைப் பிரயோகம் செய்கிறவர்.

நீங்கள் ஒரு கோட்பாட்டை பொருத்தமில்லாத ஒன்றிற்கும் விரிவுபடுத்திக் கொள்ள முடியும். அதன்பிறகு ஒரேயொரு சாத்தியந்தான் இருக்கும் – அது தற்கொலை செய்து கொள்வது. ஆனால், அதுவும் வன்முறைதான். உங்களையே நீங்கள் கொல்கிறீர்கள். உங்களை மட்டுமல்ல, உங்கள் இரத்த ஓட்டத்திலுள்ள எழுபது மில்லியன் நுண்ணுயிர்களையும் கொன்று விடுகிறீர்கள். நீங்கள் தற்கொலை செய்து கொண்டால் அவை கொல்லப்பட்டு விடும். ஆக, எங்கேயும் நகர்வதற்கில்லை – தற்கொலைகூட சாத்தியமில்லை.

இது ரொம்பவும் கவலை, இறுக்கம் கொண்ட பொருத்தமில்லாத வாழ்க்கையாகி விடுகிறது. நீங்கள் தணிவான, அமைதியும், நல்ல தன்மையும் உடைய வாழ்க்கையைத் தேடுகிறீர்கள். இந்த வாழ்க்கை அத்தனை வேதனையும், இறுக்கமும் கொண்டிருக்கிறது. நீங்கள் புரிந்து கொள்ள முடியும் - போங்கள், சமணத்துறவிகளின் முகங்களைக் கூர்ந்து கவனியுங்கள். அவர்களுடைய முகத்தில் ஆனந்தத்தை நீங்கள் பார்க்க முடியாது - அது சாத்தியமில்லை. எல்லாமே தவறாகி விட்டிருக்கிறது என்கிற ஒட்டுமொத்த அச்சத்தில் நீங்கள் வாழ்வீர்கள் என்றால் உங்களைச் சுற்றிக் குற்றங்கள் மட்டுமே இருக்கும். வேறொன்றும் இருக்காது. நீங்கள் எதைச் செய்தாலும் அது கூடவோ குறையவோ அறமுறை விதியை மீறுவதாகவே இருக்கும்... ஒரு வார்த்தை பேசுவதுகூட பாவ காரியமாகி விடும். காரணம், நீங்கள் பேசும்போது உங்கள் வாயிலிருந்து வெப்பக்காற்று வரும். அது ஆயிரக்கணக்கான நுண்ணுயிர்களைக் கொன்று விடும். நீங்கள் குடிக்கிற தண்ணீரும் கொல்வதாகவே இருக்கும். நீங்கள் தவிர்ப்பதற்கில்லை. பிறகு வேறென்ன செய்ய?

பதஞ்சலி வாழ்க்கைக்கு மாறானவர் அல்லர், அவர் நேசிப்பவர். அறிந்தவர் யாரும் வாழ்க்கைக்கு எதிராவதில்லை. அந்நிலையில் அகிம்சை உயிரை மிகவும் நேசிப்பது என்று பொருள்படும். என்னைப் பொறுத்தவரை அகிம்சை என்றால் அன்பு - யாரையும் துன்புறுத்த விரும்பாத அளவுக்கு வாழ்க்கையை நேசியுங்கள், அவ்வளவுதான். ஆனால், முழுமையான வாழ்க்கையில் நீங்கள் சரி செய்ய முடியாத அளவுக்குப் பல விசயங்கள் நடந்து விடுகின்றன. அதுகுறித்து கவலைப்படாதீர்கள், இல்லையேல் நீங்கள் பைத்தியமாகி விடுவீர்கள். அதுபற்றிக் கவலைப்படாதீர்கள்; ஒன்றை மட்டும் நினைவில் கொள்ளுங்கள். யாரையும் (எதையும்) நீங்கள் வேண்டுமென்றே கொல்லவில்லை. அப்படியே நீங்கள் விருப்பமில்லாமல் கொன்றாலும், உங்களிடம் அன்புணர்வு இருக்கவே செய்யும்.

உங்களுக்குப் பசி, ஒரு மரத்திடம் சென்று பழம் பறிக்கிறீர்கள். அந்தப் பழத்தைப் பறிக்காவிட்டால் நீங்கள் பசியில் இறந்து போவீர்கள். அந்நிலையில் மரத்துக்கு நன்றி தெரிவியுங்கள். முதலில் மரத்திடம் அனுமதி கேளுங்கள்: "நான் இந்தப் பழத்தை எடுத்துக் கொள்கிறேன். இது அத்து மீறல்தான். ஆனால் நான் செத்துக் கொண்டிருக்கிறேன் என்பதால் அதைச் செய்தேயாக வேண்டும்.

ஆனால் நான் பல வழிகளிலும் உனக்குப் பணிவிடை செய்வேன். அதை நான் திருப்பிச் செலுத்துவேன். நான் உனக்கு இன்னும் நீர் பாய்ச்சுவேன், உன்மீது கூடுதலாய் அக்கறை காட்டுவேன். ஆக, நான் எடுத்துக் கொள்வது எதுவாயினும் நான் உன்னிடம் திரும்பச் செலுத்தி விடுவேன் - அதைவிட அதிகமாகவே செலுத்துவேன். "உயிரை நேசிப்பது, உயிருக்குப் பயன்படுவது, உயிருக்கு நன்மை செய்வது என்று - உயிரோடிருக்கிற எந்த ஒன்றுக்குச் செய்தாலும் அது தெய்வத்தின் ஆசியேயாகும். உங்களால் தவிர்க்கக்கூடிய ஒன்றை நீங்கள் செய்ய வேண்டியிருந்தால் முதலில் தவிர்க்கப் பாருங்கள். தவிர்க்க முடியாவிட்டால் பிறகு அதைத் திருப்பிச் செலுத்தி விடுங்கள்.

அதில் ஒரு வேறுபாடு இருக்கிறது. தற்போது அறிவியலாரும் அதில் வேறுபாடு இருப்பதாய் தெரிவிக்கிறார்கள். நீங்கள் மரத்திடம் சென்று அனுமதி கேட்டால், மரம் காயப்பட்டதாய் உணராது. அது இனியும் அத்துமீறலாய் இருக்காது. அனுமதி தேவையென்று கேட்கப்பட்டது. உண்மையில், நீங்கள் வந்தது குறித்து மரம் நிறைவாகவே உணரும். தேவையில் இருக்கும் ஒருவருக்கு உதவ முடிந்ததில் மரம் மகிழ்ச்சியடையும். மரம் வளம் மிக்கதாக இருக்கிறது. நீங்கள் வந்தீர்கள், உங்களுடன் பகிர்ந்துகொள்ள முடிகிறது. எப்படியும் பழங்கள் கீழே விழுந்துதான் ஆக வேண்டும். மரம் யாரேனும் சிலருடன் பகிர்ந்து கொள்ளக்கூடும் - நீங்கள் உங்களுக்கு மட்டும் உதவிக் கொள்ளவில்லை. மரம் விழிப்புணர்வுடன் வளரவும் நீங்கள் உதவியிருக்கிறீர்கள்.

அகிம்சையுடையவராயிருப்பது, நலம் பயப்பதை, எல்லாருக்கும் உதவியாயிருப்பதைக் குறிக்கும் - உங்களுக்கு மட்டுமல்ல மற்றவர் களுக்கும். இதுதான் முதல் யமம். சுயக்கட்டுப்பாட்டில் முதலாவது அன்பு செய்தல். புனிதர் அகஸ்டினிடம் யாரோ கேட்டார்கள். "நான் படிப்பு வாசனை இல்லாதவன், எதைச் செய்யலாம் எதைச் செய்யக்கூடாது என்று எனக்குத் தெரியாது. இலட்சக்கணக்கில் புனித நூல்களும், கோட்பாடுகளும் இருக்கின்றனவே. நான் குழம்பிப் போகிறேன். சிலர் ஒன்றைச் சொல்கிறார்கள், சிலர் வேறொன்றைச் சொல்கிறார்கள். எதைச் செய்வது, செய்யக்கூடாது என்பதில் நான் தெளிவில்லாமல் இருக்கிறேன். நீங்கள் பெரிய மனிதர், அறிவாளி, அருட்தொண்டர்: எனக்கு ஒரு வார்த்தை சொல்லுங்கள், நான் குழப்பமில்லாமல் அதைப் பின்பற்றுவேன்" என்று.

புனிதர். அகஸ்டின் ஒரு சிறந்த உபதேசியாயிருந்தார். அவரால் மணிக்கணக்கில் பேச முடியும். ஆனால் அவரிடம் யாரும் மதத்தைப் பற்றி ஒரே வார்த்தையில் சொல்லும்படிக் கேட்டது கிடையாது. அவர் தனது கண்களை மூடித் தியானித்தார். காரணம், அவருக்கு அது கடினமாயிருந்தது. அதன் பிறகு கண்களைத் திறந்து, 'போ, அன்பு செய். நீ அன்பு செய்தால் எல்லாம் சரியாகி விடும்' என்றார்.

அகிம்சை என்றால் அன்பு. நீங்கள் நேசித்தால் எல்லாம் சரியாகி விடும். நீங்கள் நேசிக்காவிடில், அகிம்சாவாதியானாலும் அதனால் பயனில்லை.

பதஞ்சலி எதற்காக இதனை முதல் ஒழுங்கு முறையாக்கியது? அன்பே முதல் ஒழுங்குமுறை, அடித்தளம். மற்றவர்களைத் துன்புறுத்துகிற மாதிரி, புண்படுத்துகிற மாதிரி உங்களுக்குள் ஒரு தடம் (trace) இருந்தாலும் நீங்கள் ஆற்றல் மிக்கவராகும் போது ஆபத்தானவருமாகி விடுவீர்கள். இந்தத் தடம் ஆபத்தானது. ஒரே ஒரு தடம் என்றாலும் அடுத்தவர் மனதைக் காயப்படுத்துவதாகி விடும். அது எல்லாருக்குள்ளும் இருக்கிறது.

நீங்கள் இலட்சோபலட்சம் வழிகளில் புண்படுத்துகிறீர்கள் - யாரும் தற்காத்துக் கொள்ள முடியாத வழிகளில் நீங்கள் துன்புறுத்துகிறீர்கள்: சில சமயங்களில் நல்ல காரணங்களுக்காக நல்ல வழிகளில், நேர்த்தியான முறையில் புண்படுத்துகிறீர்கள். உண்மையாகவே இருந்தாலும் ஒருவரிடம் 'நான் உண்மையைச் சொல்கிறேன்' என்று நீங்கள் சொல்கிறீர்கள். ஆனால் அடியாழத்தில் அந்த உண்மையைச் சொல்வதன் மூலம் அவரைப் புண்படுத்துகிற விருப்பம் உங்களிடம் இருக்கும். அப்போது அந்த உண்மை பொய்யைவிட மோசமானதாகவே இருக்கும். அதைச் சொல்லி யிருக்கக் கூடாது. உங்கள் உண்மையை உங்களால் இனிமையாக்க, விரும்பத்தக்கதாக்க, அழகாக்க முடியாவிட்டால் அதைச் சொல்லாமலே இருந்து விடுவது சிறப்பு. நீங்கள் அதைச் சொல்வதற்கு முன் உள்ளுக்குள் நோக்குங்கள். ஆழ்ந்த விருப்பமாய் இருப்பது என்ன? உண்மை என்கிற பெயரால் அடுத்தவரை நீங்கள் துன்புறுத்த விரும்புகிறீர்களா? அந்நிலையில் உங்களுடைய உண்மை முன்பே நச்சுத்தன்மை அடைந்து விட்டிருக்கும். அது இனியும் கடமை உணர்வுடையதாயிருக்காது. அது இனியும் சரியான மனப்பான் மையைக் கொண்டிருக்காது. அது முன்பே ஒழுக்கமற்றதாகி விட்டது. அந்த உண்மையைக் கைவிடுங்கள்.

அன்புடன் பேசப்பட்டால் பொய்கூட நன்மை பயப்பதாகி விடும் என்பேன் நான். புண்படுத்துவதற்காகவே பேசப்படுகிற உண்மை ஒழுக்க வகையில் கண்டிக்கத்தக்கது.

இவை செயலற்ற கொள்கைகளல்ல. நீங்கள் அவற்றைப் புரிந்து கொள்ளுங்கள். அவற்றை எப்படிச் சாமர்த்தியமாய் பயன்படுத்துவது என்பதையுந்தான். நல்ல கொள்கைகளைத் தவறான கொள்கைகளுக்காகப் பயன்படுத்துகிறவர்களையும், சரியான வாழ்க்கையைத் தவறான காரணங்களுக்காக வாழ்கிறவர்களையும் நான் கண்டிருக்கிறேன்: உங்கள் பக்தியை எண்ணி நீங்கள் தற்பெருமை அடைவீர்களெனில் அப்போது அந்த பக்தியே ஒரு பாவமாகி விடும். நீங்கள் நல்வொழுக்கமுள்ளவர் என்று பெருமைப்பட்டுக் கொள்ளுமளவுக்கு பண்பு, குணம், நடத்தை கொண்ட மனிதராக முடியும். குறைந்தபட்சம் அங்கே தற்பெருமை (ego) இல்லாதிருக்க வேண்டும். உங்களுடைய சிறப்பியல்பு (character) தற்பெருமையை வளர்க்கும் என்றால் அது ஒழுக்கமற்றவராக இருப்பதைவிட மோசமானது. எனவே அடியாழத்தில் கூர்ந்து நோக்குங்கள். உங்களுடைய இருப்புணர்வின் அடியாழத்தின் தேடுகிறவராயிருங்கள்: நீங்கள் எதைச் செய்து கொண்டிருக்கிறீர்கள்? ஏன் செய்து கொண்டிருக்கிறீர்கள்? மேலோட்டமான விளக்கங்களில் திருப்தியடைந்து விடாதீர்கள். அவை ஆயிரக்கணக்கில் இருந்தாலும் நீங்கள் நேராக நடப்பவர் என்பதைக் கொண்டுதான் உங்களுக்கு நீங்கள் நம்பிக்கையூட்ட முடியும்.

நீங்கள் வீட்டுக்கு வருகிறீர்கள். உங்களுடைய மேலதிகாரி உங்களிடம் நல்ல முறையில் நடந்து கொள்ளவில்லை என்ற காரணத்தால் நீங்கள் கோபமாயிருக்கிறீர்கள். எந்த அதிகாரியும், முதலாளியும் நல்லவிதமாய் நடந்து கொள்வதில்லை. அவர் அதிகாரம் செலுத்துகிறவர் என்பதாலேயே அவர் எதைச் செய்தாலும் தவறாய் தெரிகிறது, சரியில்லாததாய் தோன்றுகிறது. காரணம் அடியாழத்தில் நீங்கள் தோற்றவர் என்றும், யாரோ ஒருவர் வெற்றியாளராய் இருக்கிறார் என்றும் சீற்றம் கொண்டிருக்கிறீர்கள், ஆனால் உங்களால் எதிர்வினை புரிய முடியவில்லை. அது ரொம்பவும் இழப்பை ஏற்படுத்தி விடும். நீங்கள் கடுமையான கோபத்துடன் வீட்டுக்கு வருகிறீர்கள், உங்கள் குழந்தையை அடிக்கத் தொடங்குகிறீர்கள். 'நீ கெட்ட பையன்களுடன் சகவாசம் வச்சிருக்கே' என்று சொல்லியபடி அடிக்கிறீர்கள். சிறுவன் எப்போதும் கெட்ட பையன்களுடன்தான்

விளையாடிக் கொண்டிருக்கிறான். யார் அந்த கெட்ட பையன்கள்? அந்தக் கெட்ட பையன்களின் அம்மாக்கள் உங்களுடைய கெட்ட பையனுடன் தங்களுடைய பிள்ளைகள் விளையாடுவதற்காக அடிக்கிறார்கள். ஆனால் நீங்கள் அறிவுக்குப் பொருத்தமாய் விளக்கம் கொடுத்துக் கொண்டிருக்கிறீர்கள். கோபம் கொப்பளித்துக் கொண்டிருக்கிறது. யார் மீதாவது அதைக் காட்டியாக வேண்டும். உண்மையில் உங்களைவிட பலவீனமான ஒருவரிடந்தானே அதைக் காட்ட முடியும்.

குழந்தைகள் அந்த வகையில் ரொம்பவும் பயன்படுகிறார்கள். அப்பா கோபமாயிருக்கிறார், பையனை அடிக்கிறார். அம்மா கோபமாயிருக்கிறாள், பையனுக்கு அடி விழுகிறது. ஆசிரியருக்குக் கோபம் அவரும் பையனை அடிக்கிறார். வேறெங்கும் வீசியெறிய முடியாதவர்கள் குழந்தை மீது வீசியெறிகிறார்கள்.

என்னுடைய எண்ணத்தில் தோன்றுகிறது. குழந்தையில்லாத தம்பதிகளிடம்தான் விவாகரத்துக்கான சாத்தியங்கள் அதிகம் இருக்கிறது என்று. அவர்களுக்குக் குழந்தை இருந்திருந்தால் விவாகரத்துக்கான சாத்தியம் குறைவாய் இருந்திருக்கும். காரணம், மனைவிக்குக் கணவனிடம் கோபம் வருகிறபோதெல்லாம் அவளால் குழந்தையை அடிக்க முடியும். கணவனுக்கு மனைவியிடம் மோதல் ஏற்பட்டால் குழந்தையை அடிக்க முடிகிறது. குழந்தைகள் ஒரு மருத்துவ சிகிச்சை மாதிரி. அவர்கள் உதவுகிறார்கள், பெரிய அளவில் உதவுகிறார்கள். அதனால்தான் கீழை நாடுகளில் ஒவ்வொரு தம்பதிக்கும் பல குழந்தைகள் இருப்பதால் விவாகரத்து நிகழ்வதில்லை. மேற்கில் தற்போது அது கடினமாகி விட்டது. திருமணம் சாத்தியமற்றதாகிக் கொண்டிருக்கிறது. காரணம் குழந்தைகளில்லை. ஆழ்ந்த மருத்துவ சிகிச்சையைப் போன்று அவர்கள் (குழந்தைகள்) தேவைப்படுகிறார்கள், அவர்கள் இணைக்கும் செயல்திறன் கொண்டவர்கள். அவர்கள் உணர்ச்சியைத் தூய்மைப்படுத்த உதவுகிறார்கள்.

ஒருபோதும் கெட்ட காரணம் ஒன்றுக்காக நல்ல காரியத்தைச் செய்யக்கூடாது என்பதை நினைவில் கொள்ளுங்கள். காரணம், அதற்கு மேலும் அது நன்மை பயப்பதாயிருக்காது, நீங்கள் ஏமாற்றுகிறீர்கள்.

அகிம்சையே முதன்மை பெறுகிறது. அன்புதான் எப்போதும் முதலாவதாயிருக்கிறது. எப்படி நேசிப்பது என்பதைக் கற்றுக் கொண்டால் நீங்கள் எல்லாவற்றையுமே கற்றுக் கொண்டவராவீர்கள்.

காலப்போக்கில் அன்பின் மிகச்சரியான தோற்றநிலை உங்களைச் சுற்றிச் சூழ்ந்து கொள்கிறது. நீங்கள் எங்கு சென்றாலும் தயையுடைய வராய் செல்கிறீர்கள். நீங்கள் எங்கு சென்றாலும் பரிசுகளுடன் செல்கிறீர்கள், உங்கள் இருப்புணர்வை (being) பகிர்ந்து கொள் கிறீர்கள். அகிம்சை ஒன்றும் எதிர்மறையான விசயமல்ல. அது அன்பின் நேர்மறை உணர்வு. வன்முறையின்மை (non-violence) என்பது எதிர்மறைச் சொல்லாய் தெரியும். அந்தச் சொல் முரண்பாடாயிருக்கக் காரணம் மக்கள் வன்முறை சார்ந்தவர்களாய் இருக்கிறார்கள். வன்முறை அவர்களுடைய இருப்புணர்வில் ஒரு நேர்மறை சக்தியாய் (ஆக்கபூர்வமான) மாறி விடுகிறது. வார்த்தை யளவில்தான் முரண்படுகிறது. நடப்பில் தெளிவாக இருக்கிறது.

“அகிம்சை, உண்மை பேசுதல்...” உண்மை பேசுதல் என்பதற்கு நம்பத்தக்கது என்று பொருள். பொய்மை கூடாது. உண்மையாயிருக்க வேண்டும் - முகமூடியைப் பயன்படுத்தாதீர்கள், உங்களுடைய அசலான முகம் எதுவாயினும் அதை வெளிக்காட்டுங்கள். அதற்காக எதை இழக்க வேண்டியிருந்தாலும் சரி.

அதற்காக மற்றவர்களுடைய முகமூடிகளை நீங்கள் கிழித்தெறிய வேண்டும் என்று அர்த்தமல்ல. அவர்கள் தங்களுடைய பொய்களில் ஆனந்திக்கிறார்கள் என்றால் அவர்கள்தாம் அதுபற்றித் தீர்மானிக்க வேண்டும். நீங்கள் போய் யாருடைய முகமூடியையும் நீக்கக்கூடாது. இப்படித்தான் மக்கள் நினைக்கிறார்கள்.

தாங்கள் உண்மையாயும், நம்பிக்கைக்குரியவராயும் இருப்பதாக அவர்கள் நினைத்துக் கொள்கிறார்கள். தாங்கள் சென்று மற்றவர்களுடைய வேஷத்தைக் கலைக்க வேண்டும் என்று கருதுகிறார்கள் - “நீங்கள் எதற்காக உங்கள் உடம்பை மறைத்துக் கொள்ள வேண்டும். இந்த உடைகள் தேவைப்படாது” என்கிறார்கள். இல்லை, தயவுசெய்து நினைவில் கொள்ளுங்கள், உங்களுக்கு நீங்கள் உண்மையாயிருங்கள். உலகில் வேறு யாரையும் நீங்கள் திருத்தம் செய்ய வேண்டிய அவசியமில்லை. உங்களை நீங்கள் வளர்த்துக் கொள்ள முடிந்தால் அதுவே போதுமானது. சீர்திருத்தவாதியாகி விடாதீர்கள், மற்றவர்களை மாற்ற முயலாதீர்கள். நீங்கள் மாறினால் அதுவே போதிய நற்செய்தியாயிருக்கும்.

நம்பக்கூடியதாய் இருப்பதன் பொருள்; உங்களுடைய சொந்த இருப்புணர்விற்கு நீங்கள் உண்மையாயிருப்பதாகும். எப்படி

உண்மையாயிருப்பது? மூன்று கருத்துகளை நினைவில் கொள்ள வேண்டும். ஒன்று - நீங்கள் எப்படி இருக்கவேண்டும் என்று யார் சொன்னாலும் அதைக் காதில் போட்டுக் கொள்ளாதீர்கள். எப்போதும் உங்களுடைய மனம் சொல்வதைக் கவனித்துக் கேளுங்கள், நீங்கள் எப்படி இருக்க வேண்டும் என்பதை அது சொல்லும். இல்லையேல் உங்களுடைய ஒட்டுமொத்த வாழ்க்கையும் வீணாகிவிடும். நீங்கள் ஒரு பொறியாளராக வேண்டுமென்று உங்கள் தாய் விரும்பலாம், நீங்கள் ஒரு மருத்துவராக வேண்டுமென்று உங்கள் தந்தை விரும்பலாம். நீங்களோ ஒரு கவிஞராக விரும்புவீர்கள். என்ன செய்வது? உண்மையில் தாய் கூறுவது நியாயமாயிருக்கும். காரணம் அது - பொறியாளராவது மிகவும் சிக்கனமாயும், நிதிசார்ந்த வகையில் உதவியாயும் இருக்கும். தந்தையின் விருப்பமும் சரியானதுதான் மருத்துவருக்குச் சந்தை மதிப்பு இருக்கிறது, சந்தையில் நல்ல வணிகச்சரக்கு அது. ஒரு கவிஞர்? உங்களுக்குப் பைத்தியம் பிடித்துவிட்டதா என்ன? பொருளில்லாத ஆசைகொண்டு விட்டீர்களே?

கவிஞர்கள் தான் பழிப்புக்குள்ளாகிறவர்கள். அவர்களை யாரும் விரும்புவதில்லை. அவர்கள் தேவைப்படுகிற நிலை இல்லை. கவிதை இல்லாமல் உலகம் இருக்க முடியும். கவிதை இல்லை என்பதால் எதுவும் இடர்ப்பாடாகிவிடாது. பொறியாளர்களில்லாமல் உலகம் இருக்க முடியாது, உலகத்துக்குப் பொறியாளர்கள் தேவைப் படுகிறார்கள். நீங்கள் தேவைப்படுகிறீர்கள் என்றால் நீங்கள் மிகுந்த மதிப்புடையவர். நீங்கள் தேவைப்படாதவர் என்றால் நீங்கள் எந்த மதிப்பையும் கொண்டிருப்பதில்லை. ஆனால், நீங்கள் கவிஞராக விரும்பினால், கவிஞராகிவிடுங்கள். நீங்கள் ஏழ்மை நிலையில் இருக்கலாம். நல்லது. அதிலிருந்து கவலைப்படாதீர்கள், காரணம் நீங்கள் ஒரு பெரிய பொறியாளராகலாம், அதிக அளவில் பணம் சம்பாதிக்கலாம். ஆனால் ஒரு போதும் மனநிறைவைப் பெறுவதற்கில்லை. எப்போதும் ஆசை இருக்கும், உங்கள் உள்ளார்ந்த உணர்வு ஆசைப்படும், கவிஞராவதற்கு.

நான் கேள்விப்பட்டிருக்கிறேன், ஒரு பெரிய விஞ்ஞானியிடம், நோபல் பரிசு பெற்ற அறுவை சிகிச்சை நிபுணரிடம் இப்படி கேட்கப்பட்டது. “உங்களுக்கு நோபல் பரிசு வழங்கப்பட்டபோது நீங்கள் மகிழ்ச்சியற்றுக் காணப்பட்டீர்களே, என்ன விசயம்?” என்று அவர் சொன்னார், “நான் ஒரு நடனமாடுகிறவராகத்தான் இருக்க

விரும்பினேன். நான் ஒரு போதும் அறுவைசிகிக்சை நிபுணராவதற்கு முதன்மை அளிக்கவில்லை. தற்போது நான் அறுவை சிகிக்சை நிபுணராவதோடு அதில் வெற்றிகரமானவராயும் திகழ்கிறேன். இது தான் சுமையாய்,. சுமக்க வேண்டிய துயராயிருக்கிறது. நான் நடனமாடுபவராக இருக்க விரும்பினேன். ஒரு வெறுக்கத்தக்க, மகிழ்ச்சியற்ற மனிதனாயிருக்கிறேன். அதுதான் என்னுடைய வேதனை, துயரம் எல்லாம் யாராவது நடனமாடுவதைக் கண்டால் ரொம்பவும் கொடுமையாய் ஒரு நரகத்தில் இருப்பது போல் உணர்கிறேன். இந்த நோபல் பரிசை வைத்துக் கொண்டு நான் என்ன செய்யப் போகிறேன்? அது ஓர் நடனமாகிவிடுமா என்ன? அது ஒரு நடன அனுபவத்தை எனக்குக் கொடுக்க முடியாது.

நினைவில் கொள்ளுங்கள், உங்களுக்குள்ளிருந்து எழும் குரலுக்கு உண்மையாயிருங்கள். அது உங்களை ஆபத்தான நிலையில் வழி நடத்தலாம். ஆபத்திற்குட்பட்டாலும், உள்ளிருந்து எழும் குரலுக்கு உண்மையாயிருங்கள். அந்நிலையில் ஒருநாள் உள்ளார்ந்த நிறைவோடு ஆடக்கூடிய நிலைக்கு நீங்கள் வருவீர்கள். எப்போதும் முதன்மை பெறவேண்டியது உங்களுடைய உள்ளுணர்வு தான். மற்றவர்கள் உங்களைக் கையாளவும், கட்டுப்படுத்தவும் அனுமதியாதீர்கள். நிறைய பேர் இருக்கிறார்கள். எல்லாரும் உங்களை அடக்கியாளத் தயாராயிருக்கிறார்கள், எல்லாரும் உங்களை மாற்றிவிடத் தயாராயிருக்கிறார்கள். நீங்கள் கேட்காதபோதே உங்களுக்கு வழிகாட்ட எல்லாரும் தயார். எல்லாரும் உங்களுடைய வாழ்க்கைக்கு ஓர் வழிகாட்டியை வழங்குகிறார்கள்.

அந்த வழிகாட்டி உங்களுக்குள்ளும் இருக்கிறது, நீங்கள் ஒரு வரைபடத்தை – வரைபடத்தின் நிழற்பட அச்சை சுமந்து செல்கிறீர்கள்.

நம்பத்தக்காயிருப்பதன் பொருள் ஒருவர் தனக்குத்தானே உண்மையாயிருப்பது. அது மிகவும் அபாயகரமான தோற்றநிலை. அபூர்வமானவர்கள் தாம் அதைச் செய்யமுடியும். ஆனால், அவர்கள் அதைச் செய்து முடித்துவிடுகிறார்கள். அப்படியோர்அழகை, அருட்தன்மையை, நிறைவை, நீங்கள் கற்பனை செய்யவும் முடியாதிந்த அவர்கள் முயன்று அடைகிறார்கள். எல்லாரும் விரக்தியாயிருப்பதுபோல் தெரிந்தால், யாரும் தம்முடைய சொந்தக் குரலுக்குச் செவி சாய்க்கவில்லை என்பதுதான் காரணமாகும்.

நீங்கள் ஒரு பெண்ணை மணம் செய்து கொள்ள விரும்புகிறீர்கள், ஆனால் அந்தப் பெண் ஒரு முஸ்லிம், நீங்களோ இந்து பிராமணர். உங்கள் பெற்றோர் அனுமதிக்கமாட்டார்கள். சமுதாயம் ஏற்காது. அது ஆபத்தானது. அந்தப் பெண் ஏழை. நீங்கள் பணக்காரர். எனவே, ஒரு பணக்காரப் பெண்ணை இந்து பிராமண வகுப்பைச் சேர்ந்தவளை மணந்து கொள்கிறீர்கள். அது எல்லோராலும் ஏற்றுக் கொள்ளப் படுகிறது. ஆனால் உங்கள் இதயம் ஏற்றுக் கொள்வதில்லை. ஆக, தற்போது உங்களுடைய வாழ்க்கை அருவருக்கத்தக்கதாகிவிடுகிறது. தற்போது நீங்கள் விலைமாதைத் தேடிச் செல்கிறீர்கள். ஆனால் விலை மாதர்களும் உங்களுக்கு உதவமுடிவதில்லை. உங்களுடைய வாழ்க்கையே இழிவான செயலுக்கு உட்படுத்தப்பட்டுவிடுகிறது. ஒட்டு மொத்த வாழ்க்கையையும் குட்டிச்சுவராக்கிக் கொண்டுவிடுகிறீர்கள்.

எப்போதும் உள்ளிருந்து எழும் குரலுக்குக் காதுகொடுங்கள், வேறு எதையும் கவனிக்காதீர்கள். உங்களைச் சுற்றி ஆயிரத்தியோரு கவர்ச்சிப் பொருள்கள் இருக்கும். காரணம், பலரும் தங்களுடைய சில்லறைப் பொருள்களை அங்கே சுற்றித்திரிந்துவிற்றுக் கொண்டிருக்கிறார்கள். உலகம் ஒரு பல்பொருள் அங்காடி அங்கே எல்லாரும் தங்களுடைய பொருள்களை உங்களுக்கு விற்பதில் ஆர்வம் காட்டுகிறார்கள். ஒவ்வொருவரும் ஒரு விற்பனையாளர். பல விற்பனையாளர்களிடமும் காது கொடுத்தால் நீங்கள் பைத்தியமாகி விடுவீர்கள். யாரையும் கவனியாதீர்கள், உங்களுடைய கண்களை மூடிக்கொண்டு உள்ளிருந்து ஒலிக்கும் குரலைக் கவனியுங்கள். இதுவே தியானம் பற்றியதாகும். இதுவே முதன்மையளிக்கப்பட வேண்டியதுமாகும்.

இரண்டாவது கருத்து – நீங்கள் முதலாவது செயலைச் செய்து முடித்தால் மட்டுமே இரண்டாவது சாத்தியமாகும். ஒருபோதும் முகமுடி அணியாதீர்கள். நீங்கள் கோபம் வந்தால் கோபமாயிருங்கள். அது ஆபத்தானதுதான் ஆனால் புன்னகைக்க முயலவேண்டாம். காரணம், அது பொய்யாயிருக்கும். ஆனால், கோபம் கொண்டபோதெல்லாம் புன்னகை செய்யும் படி நீங்கள் போதிக்கப்பட்டிருக்கிறீர்கள். அப்போது உங்கள் புன்னகை போலியானதாகிவிடும், ஒரு முகமுடியை அணிந்து கொண்டதுபோல, ம்ம்..? அது உதடுகளுக்கு ஒரு பயிற்சி, வேறென்ன. உள்ளம் நிறைய கோபம் உதட்டில் நச்சுப் புன்னகை. நீங்கள் ஒரு போலியான தோற்றநிலையைக் கொண்டு விடுகிறீர்கள்.

அந்நிலையில் வேறொன்றும் நிகழ்கிறது. நீங்கள் புன்னகைக்க விரும்புகிறபோது உங்களால் புன்னகைக்க முடிவதில்லை. உங்களுடைய ஒட்டுமொத்த எந்திர நுட்பமும் தலைகீழாகிவிடுகிறது. காரணம், நீங்கள் கோபமாயிருக்க விரும்புகிறபோது அப்படி இருப்பதில்லை. நீங்கள் வெறுக்க விரும்பிய போது அதை நீங்கள் செய்யவில்லை. தற்போது நீங்கள் நேசிக்க விரும்புகிறீர்கள், திருப்தியென்று இயந்திர நுட்பம் வேலை செய்யாததைக் கண்டுபிடிக்கிறீர்கள். தற்போது நீங்கள் புன்னகைக்க விரும்புகிறீர்கள், அதை நீங்கள் வலுக்கட்டாயமாய் செய்ய வேண்டியிருக்கிறது. உண்மையிலேயே உங்கள் இதயம் புன்னகையால் நிரம்பிக் கிடக்கிறது. அத்துடன் நீங்கள் உரக்கச் சிரிப்பதற்கு விரும்புகிறீர்கள். ஏதோவொன்று உங்கள் இதயத்தைத் திணறடிக்கிறது. ஏதோவொன்று உங்கள் தொண்டையை அடைக்கிறது. புன்னகை வருவதில்லை அல்லது வந்தாலும் அது சோகையாய், சவத்த புன்னகையாயிருக்கிறது. அது உங்களை மகிழ்ச்சியடையச் செய்வதில்லை. நீங்கள் அதில் நம்பிக்கை கொண்டவராகிவிடுவதில்லை. அது உங்களைச் சுற்றி ஒளி வீசுவதல்ல.

நீங்கள் கோபமாயிருக்க விரும்பினால் கோபமாயிருங்கள். கோபமாயிருப்பதில் தவறேதுமில்லை. நீங்கள் சிரிக்க விரும்பினால் சிரியுங்கள். உரக்கச் சிரிப்பதில் தவறில்லை. காலப்போக்கில் உங்களுடைய மொத்த அமைவு (System)-ம் செயல்படுவதைக் காண்பீர்கள். அது செயல்படும் போது உண்மையில் அதைச் சுற்றி ஒரு ரீங்காரம் (வாய்திறவாது பாடுவது) இருக்கும். ஒரு கார் மாதிரி, எல்லாமே சரியாய் போய்க் கொண்டிருக்கும் போது, ரீங்கரிக்கும்.

காரை நேசிக்கும் ஓட்டுநர் அறிவார் எல்லாமே நன்றாய் வேலை செய்து கொண்டிருக்கிறது. உறுப்பு சார்ந்த ஒருமை (Organic Unity) உள்ளது - எந்திரநுட்பம் நன்றாய் இயங்கிக் கொண்டிருக்கிறது என்பதை. ஒருவருடைய இயக்க ஆற்றல் நன்கு செயல்படுகிற போது நீங்கள் அந்த ரீங்கரிப்பை (hum) அவரைச்சுற்றிக் கேட்க முடியும். அவர் நடக்கிறார் ஆனால் அவருடைய காலடி வைப்பில் ஒரு நடனம் இருக்கிறது. அவர் பேசுகிறார், ஆனால் அவருடைய வார்த்தைகள் தம்முள் ஒரு நுட்பமான கவிதையை சுமந்திருக்கின்றன. அவர் உங்களை நோக்குகிறார், அவர் உண்மையிலேயே நோக்குகிறார், அதில் ஆர்வம் மட்டுமல்ல, இதமும் இருக்கிறது. அவர் உங்களைத் தொடும்போது உண்மையாகவே தொடுகிறார். அவருடைய ஆற்றல்

உங்களுக்குள் செல்வதை, உயிர்ச் சக்தி ஓடி இடம் பெயர்வதை நீங்கள் உணரமுடியும். காரணம் அவருடைய இயக்க ஆற்றல் நன்றாகவே செயல்படுகிறது.

முகமூடிகளை அணியாதீர்கள். இல்லையேல் உங்களுடைய இயக்க ஆற்றலில் தடைகளைத் தோற்றுவித்துக் கொள்வீர்கள். உங்கள் உடம்பில் பல தடைகள் உள்ளன. கோபத்தை மறைக்கிற ஒருவருக்கு அவருடைய தாடையில் தடை ஏற்பட்டுவிடும். எல்லாக் கோபமும் தாடைவரை வரும்; அதன்பிறகு அங்கேயே நின்றுவிடும். அவரது கைகள் அருவருப்பாகிவிடும், அவை நடனமாடுகிறவரின் அழகான அசைவைக் கொண்டிருக்காது. கோபத்தை வெளியேற்ற இரண்டு மூலங்கள் உள்ளன என்பதை நினைவில் வையுங்கள். ஒன்று பற்கள் மற்றொன்று விரல்கள். காரணம், விலங்குகள் கோபப்படுகிறபோது பற்களால் உங்களைக் கடித்துவிடும் அல்லது கைகளைக் கொண்டு உங்களைக் கிழித்துக் காயப்படுத்தும். ஆக, நகங்களும் பற்களும் கோபத்தை வெளியேற்றும் இரண்டும் முனைப்பகுதிகளாகின்றன.

எனக்கொரு சந்தேகம் உண்டு, கோபம் அதிக அளவில் மறைக்கப்படுகிறபோது மக்களின் பற்கள் உபாதைக்குள்ளாகும் என்று. அவர்களுடைய பற்கள் சரியில்லாததாகிவிடும், காரணம், அதிக அளவிலான சக்தி, வெளியேற்றப்படாமல் அங்கேயே இருந்து விடுகிறது. கோபத்தை யார் மறைக்கிறாரோ அவர் எப்போதும் அதிக அளவில் உண்பவராயிருப்பார். காரணம் அவருடைய பற்களுக்கு ஏதாவது பயிற்சி தேவைப்படும். கோபக்காரர்கள் நிறையவே புகைப் பார்கள். கோபமுள்ளவர்கள் அதிகம் பேசிக் கொண்டிருப்பார்கள்.

அவர்களுடைய பேச்சில் கருத்தாவேசம் இருக்கும் காரணம், தாடை பயிற்சி மேற்கொள்கிறபோது ஏதோ ஒரு வகையில் சக்தி ஓரளவு வெளியேற்றப்படுகிறது. கோபக்காரர்களின் கைகள் முடிச்சிட்டுக் கொண்டு, அருவருப்பாயிருக்கும். அந்தச் சக்தி வெளியேறிவிட்டால் அவை அழகிய கைகளாகிவிடும்.

நீங்கள் எதையாவது மறைத்தால், உடம்பின் ஏதோவொரு பகுதி அந்த உணர்ச்சியுடன் இசைந்ததாயிருக்கும். நீங்கள் அழ விரும்பாவிடில் உங்களுடைய கண்கள் பளபளப்பை இழந்து விடும் காரணம் கண்ணீர்த்துளிகள் தேவைப்படும். அவை விழிப்புடன் கூடிய தோற்ற நிலையாகும். ஒரு முறை சிறிது நேரம் நீங்கள் அழுகிற போது உண்மையிலேயே நீங்கள் அதனுள் இருக்கிறீர்கள். அதுவாகவே

மாறிவிடுகிறீர்கள் - கண்ணீர்த்துளிகள் உங்களுடைய கண்களின் வழியே ஓடத்தொடங்கும். உங்களுடைய கண்கள் சுத்தமாகிவிடும். கண்கள் மறுபடியும் புத்துணர்ச்சி, இளமை கொண்டு தூய தன்மை அடையும். அதனால்தான் பெண்கள் அழகிய கண்களைப் பெற்றிருக்கிறார்கள் காரணம் அவர்களால் இன்னமும் அழமுடிகிறது. ஆண் தனது கண்களை இழந்துவிட்டான் காரணம் ஆண்கள் அழக் கூடாது என்ற தவறான கருத்தை அவர்கள் கொண்டிருக்கிறார்கள். யாரேனும் ஒரு சிறுவன் அழுதால் அவனுடைய பெற்றோர்களும், மற்றவர்களும் சொல்வார்கள் 'நீ என்ன செய்து கொண்டிருக்கிறாய்? நீ என்ன பொட்டையா? (பெண் தன்மை கொண்ட சிறுவன்) என்று. என்ன அபத்தம், கடவுள் உங்களுக்கு - ஆண் பெண் இருவருக்கும் அதே கண்ணீர்ச் சுரப்பிகளைத்தான் கொடுத்திருக்கிறார். ஆடவன் அழுவதற்கில்லை என்றால் - கண்ணீர்ச் சுரப்பிகளே அவனுக்கு இருந்திருக்காதுதானே. ஒரு சின்னக் கணக்கு. ஆண்களின் கண்ணீர்ச் சுரப்பிகளும் பெண்களின் கண்ணீர்ச் சுரப்பிகளும் ஏன் ஒரே விகிதத்தில் இருக்கின்றன? கண்ணீர் விட்டு அழுவது கண்களுக்கு அவசியம். நீங்கள் மனம் விட்டு அழமுடிந்தால் அது உண்மையிலேயே நேர்த்தியானதாகும். நினைவில் கொள்ளுங்கள், நீங்கள் மனம்விட்டு அழமுடியாவிட்டால், உங்களால் சிரிக்கவும் முடியாது. காரணம் அது மற்றொரு மாறுபட்ட கருத்துடைய நிலையாகும். சிரிக்க முடிகிறவர்களால் அழவும் முடியும். அழமுடியாதவர்களால் சிரிக்கவும் முடியாது. நீங்கள் குழந்தைகளைக் கவனித்திருக்கலாம்; நீண்ட நேரம் உரக்கச் சிரிப்பவர்கள் அழத் தொடங்கிவிடுவார்கள்.

கிராமங்களில் தாய்மார்கள் தங்கள் குழந்தைகளிடம், 'அதிகம் சிரிக்காதீர்கள், அழத்தொடங்கிவிடுவீர்கள்' என்று சொல்வதை நான் கேட்டிருக்கிறேன். உண்மையிலும் உண்மை காரணம் நடப்புகள் வேறானவையல்ல - ஒரே சக்திதான் எதிரெதிர் நிலைகளுக்குச் செல்கின்றன.

இரண்டாவது விசயம் - எதை இழந்தாலும் முகமுடியைப் பயன்படுத்தாதீர்கள்.

மூன்றாவது, நம்பத்தக்கது பற்றியது: எப்போதும் நிகழ் காலத்தில் இருங்கள். உண்மைக்கு ஒத்துவராத எல்லாமும் ஒன்று கடந்த காலத்தில் இருந்தோ அல்லது எதிர்காலத்தில் இருந்தோதான்

நுழைகின்றன. கடந்தவைகள் கடந்தவையாகவே இருக்கட்டும். கவலைப்படாதீர்கள். அதை ஒரு சுமையாய் சுமக்க வேண்டியதில்லை. இல்லையேல் நிகழ்காலத்துக்கு உண்மையாயிருக்க இடமளிக்காது. எதுவெல்லாம் வந்துசேரவில்லையோ அதுவெல்லாம் இன்னும் வரவில்லை - தேவையில்லாமல் எதிர்காலம் குறித்து கவலைப் படாதீர்கள். இல்லையேல் அது நிகழ்காலத்தில் நுழைந்து அதைப் பாழாக்கி விடும். நிகழ்காலத்துக்கு உண்மையாயிருங்கள். இங்கே - இப்போது இருப்பதே நம்பத்தக்கது. கடந்த காலமும் இல்லை. எதிர்காலமும் இல்லை. இந்தக் கணந்தான் சகலமும். இந்தக் கணமே சாசுவதம்.

நீங்கள் இம்மூன்றுடன் பதஞ்சலி எதை மெய்ம்மை(*truthfulness*) என்று அழைக்கிறாரோ அதை அடைவீர்கள். அந்நிலையில் நீங்கள் எதைச் சொன்னாலும் அது உண்மையாகவே இருக்கும். சாதாரணமாக உண்மையைச் சொல்வதில் கவனமுடன் இருக்க வேண்டும் என்று நீங்கள் எண்ணுவீர்கள். நான் அதைச் சொல்லவில்லை. நான் சொல்வது - நீங்கள் உண்மையான தன்மை (*authenticity*)யை உருவாக்கு கிறீர்கள் என்பதைத்தான். நீங்கள் சொல்வது எதுவாயினும் அது உண்மையாயிருக்கும். உண்மையான மனிதன் பொய் சொல்ல மாட்டான். அவன் சொல்வதெல்லாம் உண்மையாகவே இருக்கும்.

யோகாவில் ஒரு மரபை நாம் பெற்றிருக்கிறோம் - அதை உங்களால் நம்பமுடியாமல் கூட இருக்கலாம் நான் அதை அறிவேன் என்பதால் அதை நம்புகிறேன். நான் அதை அனுபவித்து உணர்ந்தவன். உண்மையான, நம்பத்தக்க ஒருவன் பொய் சொல்கிறான். அந்தப் பொய் உண்மையாகிவிடுகிறது காரணம் நம்பத்தக்க மனிதனால் பொய் சொல்லமுடியாது.

அதனால்தான் பழைய திருமறை நூல்களில், 'நீங்கள் உண் மையைப் பயிற்சியாய் செய்துவந்தால், உடம்புக்கு எதிராய் எதையும் சொல்லக்கூடாது என்பதில் எச்சரிக்கையாயிருங்கள். - காரணம் அது பலித்துவிடும். பெரிய ஞானிகள் கோபத்தில் சிலவற்றைச் சொல்ல அவை உண்மையாவதைப்பற்றி நம்மிடம் கதைகள் உள்ளன.

நீங்கள் துர்வாசரைப்பற்றிக் கேள்விப்பட்டிருப்பீர்கள். பெரிய முனிவர், சத்தியசீலர். ஆனால், அவர் ஒன்றைச் சொல்லிவிட்டால் பிறகு அதை நீக்க அவராலும் முடியாது. அவர் உங்களைச் சபித்தால் அந்தச் சாபம் பலித்துவிடும். 'நாளை செத்துப்போவாய்' என்று அவர்

உங்களைச் சொல்லிவிட்டால் நீங்கள் நாளையே செத்துப் போவீர்கள்'. காரணம் உண்மையின் அடிமூலத்தில் பொய் சாத்தியப்படாது. ஒட்டுமொத்த உலகமும் ஒரு சத்தியசீலனைப் பின்பற்றும். அந்த நிலையிலும் கூட அவனால் அதை நீக்க முடியாது.

அது நேர்த்தியானது. அதனால்தான் மக்கள் ஆசீர்வாதம் பெறுவதற்காய் பெரிய ஞானிகளிடம் செல்கிறார்கள். அவர்கள் ஆசீர்வதித்தால் அது உண்மையில் நடந்துவிடும். அதுதான் பொருள் வேறெதுவும் இல்லை. அவர்கள் செல்கிறார்கள், ஆசீர்வாதத்தை வேண்டுகிறார்கள். அந்த ஞானி ஆசீர்வாதங்களை வழங்கினால் பிறகு அவர்கள் கவலைப்படமாட்டார்கள். அது தற்போதே நடந்துவிடும் தானே. ஓர் உண்மையான மனிதன் எப்படிப் பொய் சொல்ல முடியும்? அது ஒரு பொய்யாகவே இருந்தாலும் அது பலிக்கப்போகிறது. ஆக, நான் சொல்ல மாட்டேன் 'உண்மையச் சொல்லுங்கள்' என்று. நான் சொல்கிறேன் உண்மையானவராயிருங்கள், நீங்கள் சொல்வது எதுவாயினும் அது பலிக்கும்' என்று.

மூன்றாவது ஆஸ்தேயா, அசவுர்யா - களவு செய்யாமை, நேர்மையாயிருத்தல். மனம் ஒரு பெரிய திருடன். பல வழிகளில் அது களவு செய்து கொண்டேயிருக்கும். நீங்கள் மக்களிடமிருந்து பொருளைக் களவாடாமல் இருக்கலாம். ஆனால் சிந்தனைகளைக் களவாடமுடியும். நான் உங்களிடம் ஒன்று சொல்கிறேன். நீங்கள் வெளியே செல்கிறீர்கள். அது உங்களுடைய சிந்தனை என்பதுபோல் பாவனை செய்கிறீர்கள். நீங்கள் அதனைக் களவாடினீர்கள், நீங்கள் ஒரு திருடர் - நீங்கள் என்ன செய்கிறீர்கள் என்பதே உங்களுக்குத் தெரியாமல் இருக்கலாம்.

பதஞ்சலி சொல்கிறார், 'களவு செய்யாத நிலையில் இருங்கள்' என்று. அறிவாகட்டும், பொருள்களாகட்டும் - எதையுமே களவாடக் கூடாது. நீங்கள் அசலாக இருக்க வேண்டும். 'பொருள்கள் எனக்குச் சொந்தமானவையல்ல' என்கிற உணர்வு எப்போதும் இருக்க வேண்டும். நீங்கள் வெறுமையாக (empty) இருங்கள், அதுதான் சிறப்பு. ஆனால் உங்கள் வீட்டை திருட்டுப்பொருள்களால் நிரப்பி விடாதீர்கள். நீங்கள் களவாடிக் கொண்டே போனால் உங்களுடைய தற்பண்பை (Originality) இழந்துவிடுவீர்கள். பிறகு ஒரு போதும் உங்களுடைய சொந்த இடத்தை நீங்கள் கண்டுபிடிக்கப்போவதில்லை நீங்கள் மற்றவருடைய கருத்துகளால் நிரப்பப்பட்டு விடுவீர்கள், அவர்களுடைய

சிந்தனைகள், பொருள்கள் இவற்றாலுந்தான். எந்தவொரு மதிப்பையும் உண்மையென அவை நிரூபிக்கப் போவதில்லை. எது உங்களிடமிருந்து வருகிறதோ அதுமட்டுமே மதிப்புடையவை. உங்களிடமிருந்து வருவது எதுவோ அதைத்தான் உண்மையில் நீங்கள் உடைமையாய்க் கொள்ள முடியும், சொந்தமாய் கருத முடியும். நீங்கள் களவாட முடியும் ஆனால் சொந்தமாய் கொள்ள முடியாது.

ஒரு திருடன் தொல்லையற்றவனாய் ஒருபோதும் இருப்பதற்கில்லை - அகப்பட்டுக் கொண்டுவிடுவோம் என்கிற பயம் அவனுக்கு எப்போதும் இருக்கும். அவனை யாரும் பிடிக்கவில்லை என்றாலும், இது தன்னுடையதல்ல என்பதை அவன் அறிவான். அவனுடைய இருப்புணர்வில் இது இடைவிடாத சுமையாகவே இருக்கும்.

பதஞ்சலி சொல்கிறார் 'எந்த வழியிலும், எந்த அளவிலும் ஒரு திருடனாயிருக்காதீர்கள்' என்று. அப்போதுதான் உங்களுடைய தற்பண்பு வளர்ச்சி அடையமுடியும். களவாடப்பட்ட பொருள்களுடன் சிந்தனைகளையும், தத்துவங்களையும், மதங்களையும் சுமக்காதீர்கள். உங்களுக்குள் இருக்கும் இடத்தை மலரச் செய்யுங்கள்.

நான்காவது பிரும்மச்சர்யம். இந்த வார்த்தையை மொழி-பெயர்ப்பது உண்மையிலேயே கடினம். 'பால்சார்ந்த புலனடக்கம்' என்று மொழிபெயர்க்கப்படுகிறது. திருமணம் புரிந்துகொள்ளாத நிலை (Celibacy). அது பொருத்தமாயிருக்காது. காரணம் பிரும்மச்சர்யம் என்பது ஒரு பெரியவார்த்தை. மிகப்பெரியது.

'பால் சார்ந்த புலனடக்கம்' ஒரு குறுகலான விசயம். அது ஒரு பகுதி, அது முழுமையாகாது. பிரும்மச்சர்யம் என்ற சொல் 'கடவுளைப் போல் வாழ்தல்' என்று பொருள்படும். மிகச் சரியான பொருள் கடவுளைப் போல் வாழ்தல். உண்மையில் தெய்வத்தன்மையோடு கூடிய வாழ்க்கையில் பாலுணர்வு மறைகிறது.

பிரும்மச்சர்யம் பாலுணர்வுக்கு எதிரானதல்ல. அது பாலுணர்வுக்கு எதிரானதாயிருந்தால் அந்நிலையில் பாலுணர்வு ஒரு போதும் மறையாது. பிரும்மச்சரியத்தில் சக்தி பிறிதொரு வடிவமாய் மாறுகிறது. அது பாலுணர்வுக்கு எதிராய் இருப்பதல்ல, சொல்லப் போனால் அது சக்தியை பாலுணர்வு மையத்தில் இருந்து உயர்ந்த மையங்களுக்கு எடுத்துச் செல்கிறது. அது மனிதனின் ஏழாவது மையமான சஹஸ்ரத்தை அடைகிறபோது அந்நிலையில் பிரும்மச்சரியம் நிகழ்கிறது. அது மூலாதாரம் என்கிற முதலாவது மையத்தில்

தங்கியிருந்தால் அந்நிலையில் அது பாலுணர்வு. ஏழாவது மையத்தை அடைகிறபோது அதுவே சமாதிநிலை ஆகிவிடுகிறது. அதே சக்திதான் செல்கிறது. அது எதிரானதாய் இருப்பதில்லை. அதைப் பயன்படுத்தும் திறனாய் இருக்கிறது.

பாலுணர்வு மாற்றப்பட வேண்டியது – அதற்கு எதிராகி விடாதீர்கள். நீங்கள் அதற்கு எதிராயிருந்தால் அதை உங்களால் மாற்றமுடியாது. காரணம் நீங்கள் ஏதாவதொன்றுக்குப் பகையாய் இருந்தால் உங்களால் அதைப் புரிந்து கொள்ள முடியாது. பிறருடைய உணர்வுகளைப் புரிந்து கொள்ளும் தன்மை பெரிய அளவில் தேவைப்படும். நீங்கள் பகைமை கொண்டிருந்தால் இரக்கத்தை எப்படித் தரமுடியும்?

நீங்கள் ஏதோ ஒன்றிடம் நட்புத் தன்மையுடன் இல்லாதிருந்தால் உங்களால் ஊன்றிக் கவனிக்கவும் முடியாது. உங்கள் பகைவனிடமிருந்து நீங்கள் பின்வாங்கவும், தப்பியோடவும் விரும்புவீர்கள். உங்கள் பாலுணர்வுடன் நட்பாயிருங்கள், காரணம் அது உங்களுடைய ஆற்றல், அதனுள் மிகப்பெரிய சாத்தியங்கள் மறைந்திருக்கின்றன. அது பாலுணர்வு நிலையில் பக்குவப்படாதது, சமாதிநிலையில் கடவுளாகிறது. அதனைத் தரமாற்றம் (transmute) செய்யமுடியும், புறமாற்றம் (transfigure) செய்ய முடியும். ஒட்டுமொத்த யோகாவும் மாற்றுவதற்கான வழியாயிருக்கிறது, மாறுவதற்கானதும். யோகாவைக் கொண்டு கீழான உலோகத்தை மேலான உலோகமாய் மாற்றமுடியும். முழுத்திறனும் இரும்பை எப்படித் தங்கமாய் மாற்றுவது என்பதுதான். யோகா ஓர் இரசவாதம், உங்கள் இருப்புணர்வின் இரசவாதம்.

பிரும்மச்சர்யம் என்றால் பாலுணர்வின் சக்தியைப்புரிந்து கொள்ள முயற்சிப்பது என்று பொருள், உங்கள் இருப்புணர்வில் எப்படிச் செயல்படுவது என்பதைப் புரிந்து கொள்வது. அது ஏன் உங்களுக்கு இனிமையைத் தருகிறது என்பதைப் புரிந்து கொள்வது, உண்மையில் மகிழ்ச்சி எங்கிருந்து வருகிறது என்பதைப் புரிந்து கொள்ள முயல்வது – அது பால் சார்ந்த கூடலின் விளைவாய் வருகிறதா, பாலுறவில் விடுவிக்கப்படுகிறதா அல்லது வேறு எங்கிருந்தேனும் வருகிறதா என்பதை அறிய முயற்சிப்பதாகும்.

நீங்கள் ஊன்றிக் கவனிப்பவராயிருந்தால் அது வேறு எங்கிருந்தோ வருகிறதென்பதை விரைவிலேயே தெரிந்து கொள்வீர்கள், கண்டுபிடிப்பீர்கள். நீங்கள் பால்சார்ந்த உறவை மேற்கொண்ட

நிலையில் உடம்பு முழுதும் ஒரு கடுமையான அதிர்வு நிகழும். அது ஓர் அதிர்ச்சி, காரணம் சக்தி அதிக அளவில் விடுவிக்கப்படுகிறது. ஒட்டு மொத்த உடம்பும் அதிர்வில் நடுக்கத்துக்குள்ளாகிறது. அந்த அதிர்ச்சியில் சிந்தனைகள் நின்றுவிடும். அது ஒரு மின் அதிர்ச்சி போன்றதாகும்.

ஒருவன் பைத்தியமாகிவிடுகிறான், நீங்கள் மனநல மருத்துவரிடம் அழைத்துச் சென்று பின் அதிர்ச்சியைக் கொடுக்கிறீர்கள். எதற்காக? காரணம், நீங்கள் மின் அதிர்ச்சியைக் கொடுத்தால், அந்நிலையில் அதிர்ச்சியானது மனதின் வழியே கடக்கிறபோது ஒரு கணத்துக்கு எல்லாமே நின்றுவிடும். உதாரணமாக, நீங்கள் என்னைக் கவனித்துக் கொண்டிருக்கிறீர்கள். இன்னும் கூட சிந்தனைகள் இருக்கும். அப்போது இங்கே ஒரு வெடிகுண்டு வெடிக்கிறது. உடனே சிந்தனைகள் இல்லாமல் போய்விடும். ஒரு கணத்துக்கு அதிர்ச்சியில் ஒட்டுமொத்த அமைப்பும் செயலாற்றுப்போகும். மின் அதிர்ச்சி பித்துப் பிடித்தவர் களுக்கு உதவுகிறது. காரணம் அந்த அதிர்ச்சி ஒரு தொடர்ச்சியின்மை (discontinuity)யைத் தருகிறது. தாங்கள் முன்பு எப்படியிருந்தோம் என்பதை அதிர்ச்சிக்குப் பிறகு அவர்களால் நினைவுபடுத்திக் கொள்ள முடியாது. தாங்கள் அதிர்ச்சிக்குமுன் குதிரையாகிவிட்டதாய் அவர்கள் நினைத்திருந்தால், அதிர்ச்சிக்குப் பிறகு, தங்களைப் பிடித்து ஆட்டிக் கொண்டிருந்த எண்ணம் எதுவென்பதை அவர்களால் நினைவில் கொள்ள முடியாது. தற்போது ஒரு புதிய சுழற்சி தொடங்குகிறது. அதிர்ச்சி உதவுகிறது.

பால்சார்ந்த சக்தி மற்றெந்த சக்தியையும் போலவே மின்னாற் றலுக்குரியதாயிருக்கிறது. அனைத்து சக்திகளும் மின்னாற்றல் உடையவைதாம். பால் சார்ந்த சக்தி உயிர்ப்பொருள் சார்ந்த மின்னாற்றல் (Bio-electricity) ஆகும். அது உங்கள் உடம்பில் இருந்தே வருகிறது. நீங்கள் ஸ்வீடன் நாட்டில் உள்ள ஒரு பெண்ணைப்பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறீர்களா? அவளுடைய உடம்பில் ஏதோ தவறாகிவிட்டிருக்க வேண்டும். அவள் தனது கையில் ஐந்து மின் குமிழ்களை ஏந்திக் கொள்வாள். அவை ஒளிர்ந்து கொண்டேயிருக்கும். உங்களுக்கு இப்படி நேரிட்டால் அது விரும்பத் தக்கதாயிருக்கும் என்று எண்ணிக் கொள்ளாதீர்கள்.

அவள் ஆபத்தானவளாயிருந்தாள். அவளைத் தொட்டபோது அவளுடைய கணவனுக்கு அதிர்ச்சி ஏற்பட்டது. அந்தப் பெண்ணுடன் நீங்கள் உறவு கொள்ள முடியாது. உங்களுக்கு அதிர்ச்சி ஏற்பட்டு

எல்லாப் பெண்களையும் மறந்து விடுவீர்கள் எப்போதைக்குமாய். தற்போது நீதிமன்றம் அந்த வழக்கை ஆராய்ந்து கொண்டிருக்கிறது, காரணம் அந்த வழக்கை எப்படி முடிவு செய்வது என்பதற்கு எந்தச் சட்டமும் இல்லை. எந்தவொரு முன்னுதாரணமுமில்லை. கணவன் விவாகரத்து கோரினான். காரணம், அவன் அஞ்சி நடுங்குமளவிற்கு அத்தகைய அதிர்ச்சிகளை அந்தப் பெண் கொடுத்திருந்தாள். இயக்கத்தில் ஏதோ தவறு நேர்ந்திருக்கும் - ஒரு மின்குறுக்குப்பாய்வு (*Short circuit*).

பாலுறவில் நீங்கள் சக்தியை உருவாக்குகிறீர்கள். பால்சார்ந்த இயக்கம், கற்பனை, விருப்பம் இவற்றின் மூலம் சக்தியை நீங்கள் உருவாக்கிக் கொள்கிறீர்கள். ஒட்டுமொத்த சக்தியும் பாலுணர்வு மையமாகிய மூலாதாரத்தை நோக்கிச் செல்கிறது. அங்கே ஒரு முனைப்படுகிறது. அந்நிலையில் உச்சத்தை அடைகிறது. அதிகரிக் கிறது பிறகு திடீரென்று வெடிக்கிறது - உடம்பெங்கும் அதிர்ச்சி பரவு கிறது. அதன் பிறகு அமைதி தொடர்கிறது - இந்த அமைதி அதிக மதிப்புடையது நீங்கள் ஒன்றுமில்லாததற்காக மதிப்புமிக்க சக்தியை வீணடிக்கிறீர்கள்.

தற்போது - மிகவும் புகழ்பெற்ற ஒரு விஞ்ஞானி, எதிர்காலத்துக்கு ஆபத்தை உண்டுபண்ணக் கூடியவர் - பெயர் டெல்காடோ - ஒரு சிறிய எந்திர நுட்பத்தை உருவாக்கினார்.

நீங்கள் அதைச் சட்டைப் பையில் வைத்துக் கொள்ளமுடியும். அது மனதில் உள்ள பாலுணர்வு மையத்துடன் இணைக்கப்படக் கூடியது. அங்கிருந்துதான் உடம்பிலுள்ள பாலுணர்வு மையம் கட்டுப் படுத்தப்படும். ஒரு கம்பியானது அந்த இணைப்பு வேலையைச் செய்யும். நீங்கள் அதனைச் சட்டைப்பையில் வைத்துக் கொள்ள முடியும். உங்களுக்குப் பால்சார்ந்த மகிழ்ச்சி தேவைப்படுகிறபோது, ஒரு பித்தானை அழுத்தினால் போதும், அது மின்கலனிலிருந்து மனதிலுள்ள பாலுணர்வு மையத்துக்கு ஓர் அதிர்ச்சியை ஏற்படுத்திக் கொடுக்கும். நீங்கள் பெரிய அளவில் சந்தோசத்தைப் பெறுவீர்கள். இது சிறந்தது, ஆனால் இது ஆபத்தானது - ஆபத்துக்குக் காரணம் நீங்கள் அதை நிறுத்தாமல் தொடர்ந்து செயல் செய்யத் தூண்டிக் கொண்டேயிருப்பீர்கள்.

அது நடந்தது. டெல்காடோ எலிகளை வைத்து ஆராய்ச்சியில் ஈடுபட்டார். ஒரு டஜன் எலிகளின் தலைகளில் மின் முனைகளை

(electrodes) அவர் பொருத்தினார். எந்திரநுட்பம் அவற்றின் முன்பாய் இருந்தது. அதை எப்படி அழுக்குவது என்று அவற்றுக்குக் கற்றுத் தந்தார். அவை கிளர்ச்சியடைந்துவிட்டன. ஒரு மணிநேரத்தில் ஆறாயிரம் முறை. அவை முழுமையாய் களைத்துச் சோராதவரை தன்னுணர்வற்றுப் போகாதவரை டெல்காடோவைக் கவனிக்கவில்லை. அவை தொடர்ந்து செயலுக்குத் தூண்டிக் கொண்டேயிருந்தன. இது ஆண்களிடம் சாத்தியமானால் யாரும் பெண்களிடத்தில் அக்கறை காட்டமாட்டார்கள், பெண்களுக்கும் ஆண்களிடம் ஆர்வம் ஏற்படாது. காரணம் தொல்லை ஏற்படுத்தாத ஒன்று.

வேறொரு நாளில் 'பெண் தொல்லை தருபவள்' என்கிற மார்பாவின் வாசகத்தை நான் படித்துக் கொண்டிருந்தேன். அவள் அப்படித்தான். இந்தப்பெட்டி ரொம்பவும் சிக்கனமானது, தொல்லை யில்லை. ஆணும் தொல்லை தருகிறவன்தான், காரணம் இரண்டுபேர் சந்திக்கிறபோது இரண்டு பேருமே தொல்லை செய்பவர்களாகவே இருப்பார்கள். இந்தப் பெட்டி மலிவானது. ஆனால் ஆபத்தானது காரணம் எலிகள் சோறு, தண்ணி தேடாது. தூங்கவும் போகாது. எவ்வித இழப்புமற்ற மின்னாற்றலுக்குரிய நிகழ்வு.

நீங்கள் ஒரு பெண்ணுடனோ அல்லது ஆணுடனோ உறவு கொள்ளும்போது அதேதான் நிகழ்கிறது. அது குழந்தைத் தனமானது. நீங்கள் எலியை நினைத்துச் சிரிக்கிறீர்கள், உங்களை நினைத்துச் சிரித்ததுண்டா? நீங்கள் சிரிக்கவில்லையென்றால், எலியைப் பார்த்துச் சிரிக்கவும் உங்களுக்கு இடமில்லை - அது சரியல்ல. உங்கள் மனதைக் கூர்ந்து நோக்குங்கள். அங்கே எலி இருக்கிறது, தொடர் கற்பனையாய்.

முழுமையான நடப்பை, என்ன நடக்கிறது என்பதை அறிந்து கொள்வதுதான் பிரும்மச்சர்யம். அதிர்ச்சிகள் மூலம் நீங்கள் அமைதிப்படுகிறீர்கள் என்றால், கணநேர மகிழ்ச்சியை அடைகிறீர்கள் என்றால்... அது சாசுவதமாகி (eternal) விடாது. அது மிகவும் குறுகிய காலத்துக்கானது. விரைவில் அந்தச்சக்தி இழக்கப்பட்டு நீங்கள் விரக்தி அடைவீர்கள். இல்லை நிலைத்து நிற்கிற ஒன்றைக் கண்டறிந்தாக வேண்டும், கண்டுபிடித்தாக வேண்டும். நீங்கள் பரம சுகத்தில் திளைக்கக்கூடிய ஒன்றை, நிலைப்படுகிற ஒன்றைக் கண்டுபிடித்தாக வேண்டும். அது அதிர்ச்சியின் மூலம் கிடைப்பதாய் இருக்கக்கூடாது. அது பிறிதொரு வடிவமாய் உருமாறுவதில் கிடைக்க வேண்டும்.

அதே சக்தி மேல் நோக்கிச் செல்லும்போது நீங்கள் சக்தியின் அணை(dam)யாகி விடுகிறீர்கள். அதுதான் பிருமச்சர்யம். நீங்கள் சக்தியைச் சேகரித்துச் கொண்டே போகிறீர்கள். நீங்கள் சேகரிக்குமளவிற்கு அது உயர்ந்துகொண்டே போகும். ஓர் அணையில் ஏற்படுகிறமாதிரி; தற்போது மழை பெய்யும். நீரின் அளவு உயரும், மேலும் உயரும், உயர்ந்துகொண்டேயிருக்கும். ஆனால், அங்கே கசிவு இருந்தால் அப்போது நீரின் அளவு உயராது. பாலுணர்வு உங்கள் இருப்புணர்வின் கசிவு ஆகும்.

அங்கே கசிவு இல்லாவிடில் நீரின் அளவு மேலும் மேலும் உயர்ந்து கொண்டே போகும், ஒரு நேரம் வரும் - அப்போது பல மையங்களை அது கடந்து செல்லும். முதலில் அது ஹாராவை அடைகிறது. அங்கிருந்து - மூலாதாரத்திலிருந்து இரண்டாவது மையத்தை அடைகிறது. அந்த மையத்தில் நீங்கள் மரணமற்ற தன்மையை உணர்கிறீர்கள். எதுவும் அழிவதில்லை என்ற உணர்வைப் பெறுகிறீர்கள். அச்சம் மறைகிறது. நீங்கள் அச்சமாய் உணர்கிற போதெல்லாம் ஏதோ ஒன்று உங்களுடைய தொப்புள் பகுதியைப் தாக்குவதைக் கவனித்திருக்கிறீர்களா? மரணத்தின் மையமும், மரணமில்லாத் தன்மையின் மையமும் அங்கே உள்ளது. சக்தி மையத்துக்கு செல்கிறது. கிடைமட்டத்தை (level) அடைகிறது. அப்போது நீங்கள் மரணமில்லாத் தன்மையை (நிலையாயிருப்பது) உணர்கிறீர்கள். உங்களை யாராவது கொன்றால் கூட நீங்கள் கொல்லப்படவில்லை என்றே அறிவீர்கள். 'உடலை அழிப்பதன் மூலம் ஆன்மாவை அழிக்க முடியாது' ('ந ஹன்யதே ஹன்யமானே சரீரே').

பிறகு, சக்தியானது மேலேறுகிறது. மூன்றாவது மையத்துக்கு வருகிறது. மூன்றாவது மையத்தில் நீங்கள் வெகுவாய் அமைதியடையத் தொடங்குகிறீர்கள். நீங்கள் அமைதியாயிருக்கும் போது மார்பிலிருந்து மூச்சுவிடாமல், வயிற்றில் இருந்து மரணம் மற்றும் மரணமற்ற தன்மையின் மையம். தொப்புளுக்கு மேலே இருப்பது அமைதி மற்றும் இறுக்கங்களின் மையம். சக்தி இல்லையென்றால் நீங்கள் இறுக்கமாய் உணர்வீர்கள், சக்தி இல்லையென்றால் நீங்கள் அச்சமாய் உணர்வீர்கள். சக்தி இருந்தால் இறுக்கம் மறையும். நீங்கள் ரொம்பவும் அமைதியாய், சாந்தமாய், சுதந்திரமாய் உணர்ச்சிகள் கட்டுக்குள் இருப்பதாய் உணர்வீர்கள்.

அந்நிலையில் சக்தியானது இருதயத்தில் உள்ள நான்காவது மையத்தைச் சென்றடையும். அங்கே அன்பு மேலெழுகிறது. தற்போது உங்களால் காதல் செய்ய முடியாது. நீங்கள் காதலென்று அழைப்பது எதுவாயினும் அது பாலுணர்வன்றி வேறில்லை. அது காதல் என்கிற அழகான வார்த்தையில் உருமறைப்பு (camouflage) செய்து கொண்டுள்ளது. அந்த வார்த்தை உங்களுக்கு உண்மையானதல்ல - உண்மையாயிருக்க முடியாது. சக்தி இதயத்தின் நான்காவது மையத்தை எட்டுகிற போதுதான் காதல் சாத்தியமாகிறது. திடீரென்று நீங்கள் காதல் வயப்பட்டு விடுகிறீர்கள் - இப்பிரபஞ்சத்தையே காதலிக்கிறீர்கள். எல்லாவற்றிடமும் அன்பு உண்டாகிறது. நீங்களே அன்பாகிவிடுகிறீர்கள்.

பிறகு, அந்தச் சக்தி தொண்டையில் உள்ள ஐந்தாவது மையத்துக்குச் செல்கிறது. அந்த மையம் அமைதியான மையம். அமைதி, சிந்தனை, எண்ணமிடுதல், பேச்சு. பேச்சும், பேச்சின்மையும் அங்கே இருக்கிறது. தற்போது உங்கள் தொண்டை மட்டுமே பேச்சுக்காக இயங்குகிறது. அமைதியில் எப்படி வேலை செய்வது, அமைதிக்குள் எப்படிச் செல்வது என்று அதற்குத் தெரியாது. சக்தி அதனிடம் வந்து சேரும் போது நீங்கள் திடீரென்று அமைதியாகி விடுகிறீர்கள். அது நீங்கள் முயற்சிக்கிறீர்கள் என்பதாகாது, அமைதியாயிருக்க உங்களைக் கட்டாயப்படுத்துகிறீர்கள் என்றாகாது. உங்களை அமைதியால் நிரப்பும் வழியை நீங்கள் கண்டுபிடித் திருக்கிறீர்கள்.

நீங்கள் பேசுவதாயிருந்தாலும் அதற்கு முயற்சி செய்தாக வேண்டும். உங்களுடைய குரல் இனிய இசையாகிறது. நீங்கள் சொல்வதெல்லாம் கவிதையாகிறது. உங்கள் வாழ்வின் நுட்பமான ஒளி அந்த வார்த்தைகளில் தங்களோடு அமைதியைச் சுமந்துசெல்கின்றன உங்கள் வார்த்தைகள். உண்மையில் உங்கள் வார்த்தைகளைவிட உங்களுடைய மவுனம் பொருள் பொதிந்ததாயிருக்கிறது.

பிறகு, அந்தச் சக்தி ஆறாவது மையத்துக்குச் செல்கிறது, நெற்றிக்கண். அங்கே நீங்கள் ஒளியை - விழிப்புணர்வை, பிரக்ஞையைக் கண்டுகொள்கிறீர்கள். அந்தப் பகுதியில் தான் உறக்கம் நிகழ்கிறது. அறிதுயில் நிகழ்கிறது. அறிதுயிலில் ஆழ்த்துகிற யாரையேனும் (hypnotizer) நீங்கள் கவனித்திருக்கிறீர்களா? அவர் உங்கள் கண்களை ஒரு புள்ளியில் நிலைப்படுத்துமாறு சொல்வார்.

உங்கள் இரண்டு கண்களையும் அந்தப்புள்ளியில் நீங்கள் நிலைப் படுத்தியதும், உங்களுடைய நெற்றிக்கண் உறக்கத்தில் ஆழ்ந்துவிடும். மூன்றாவது கண்ணில் உறக்கத்தை ஏற்படுத்த அது ஒரு தந்திரம். சக்தி மூன்றாவது கண்ணை அடையும்போது முழுக்க முழுக்க ஒளியைத்தான் நீங்கள் உணர்வீர்கள். இருள் மறைந்துவிடும். எல்லையற்ற பேரொளி உங்களைச் சுற்றியிருக்கும். உண்மையில் அதற்குப் பிறகு உங்களுக்குள் எந்த உருவமும் இருக்காது. உருவத்தின் நிழலும் இருக்காது. திபெத்தில் ஒரு பழமொழி உண்டு "ஒரு யோகி விழிப்புணர்வை மெய்யாகப் புரிந்து கொண்டுவிடும்போது அவனுடைய உடம்பு நிழலற்றதாகிவிடும்" என்பதாய். அதை சொல்லுக்குச் சொல் சரியாய் (literal) எடுத்துக் கொள்ளாதீர்கள் - உடம்பு நிழலை உண்டு பண்ணும். ஆனால், அடியாழத்தில் ஒளியானது அதிக அளவில் எங்கும் பரவியிருக்கும். தோற்றுவாய் (source) இல்லா ஒளி. ஒளி ஒரு தோற்றுவாயுடன் இருக்குமென்றால் அங்கே நிழல் இருக்கும். தோற்றுவாய் இல்லாத ஒளியெனில் அங்கே நிழல் இருக்காது.

தற்போது. வாழ்க்கை ஒரு வேறுபட்ட பொருளையும், வடிவத்தையும் கொண்டுள்ளது. நீங்கள் உலகத்தில் ஓடியாடிக் கொண்டிருந்தாலும், இந்த உலகத்தினுடையவராக மாட்டீர்கள். நீங்கள் புத்த நிலைக்குச் சமீபமாய் வந்துவிட்டீர்கள். தோட்டம் அருகில் இருக்கிறது. நறுமணத்தை உங்களால் உணரமுடியும். இந்த விசயத்தில் முதல் முறையாய் நீங்கள் புத்தரைப் புரிந்து கொள்ளும் திறனைப் பெறுகிறீர்கள். அதற்குமுன், கொஞ்சம் கொஞ்சமாய் படிப்படியாய் உங்களுக்குச் சிதறல்கள் (fragments) ஏற்பட்டுவிடுகின்றன. ஆனால், முழுமையான புரிதலாய் அது இருக்காது. ஆனால் அந்தப் பகுதியில் நீங்கள் வாயிற்கதவிக்குப்பக்கமாய் நெருங்கிவிடுகிறீர்கள். ஆலயம் வந்தாயிற்று, வாசல் திறக்கும், நீங்கள் புத்தராகிவிடுவீர்கள். தற்போது வெகு அருகில், நெருக்கத்தில் முதல் முறையாய் நீங்கள் புரிதலை (Understanding) உணரத் தொடங்குகிறீர்கள்.

அதன்பிறகு சக்தியானது சஹஸ்ராரம் என்கிற ஏழாவது மையத்துக்குச் செல்கிறது. அங்கே அது பிரும்மச்சர்யம் என்கிற நிலையை, தெய்விக வாழ்க்கையை அடைகிறது. அந்நிலையில் இனி யும் நீங்கள் ஒரு மனிதனாய் இருக்க மாட்டீர்கள் - கடவுளாகி விடுவீர் கள். உடைமையாக்கிக் கொள்ளாமலே உலகம் உங்களுடைய உடை மையாகிவிடும். ஆனால் காலப்போக்கில் உடைமைத்தனமில்லாத

நிலைக்கு உங்களைப் பழக்கிக் கொண்டு விடுவீர்கள். உடைமைத் தனத்தோடு இருக்காதீர்கள். காரணம் நீங்கள் உடைக்குரிய வராகிறபோது நீங்கள் ஒரு பிச்சைக்காரர் என்பதை வெளிப்படுத்திக் கொள்கிறீர்கள். நீங்கள் உண்மையிலேயே பெற்றிருக்க முயலும் போதெல்லாம் அதைப் பெற்றிருக்கவில்லை. என்பதை வெளிக்காட்டுகிறீர்கள். நீங்கள் எசமானர், அதைப் பெறுவதற்காக முயல வேண்டியதில்லை.

எடுத்துக்காட்டாக நீங்கள் ஒருவரை நேசிக்கிறீர்கள். அவரை உங்கள் பிடியில் வைத்துக் கொள்ள நீங்கள் முயன்றால் அது நேசமாகாது. நீங்கள் அவருடைய நேசத்தைப்பற்றி உறுதியாய் இருக்கவில்லை, அதனால்தான் பாதுகாப்பு நடவடிக்கைகளை உங்களுடைய தந்திரம், சாமர்த்தியம் இவற்றைக் கொண்டு உருவாக்குகிறீர்கள். அதனால் அவர் உங்களைவிட்டு விலகமாட்டார் தானே. ஆனால் நீங்கள் நேசத்தைக் கொன்றுபோடுகிறீர்கள். காதல் சுதந்திரமானது, காதல் சுதந்திரத்தை வழங்குகிறது. காதல் சுதந்திரத்தில் வாழ்கிறது - காதல் அதன் உள்ளார்ந்த மையத்தில் சுதந்திர மாயிருக்கிறது. நீங்கள் முழுமையான கருத்தையும் கொன்று போட்டுவிடுவீர்கள். நீங்கள் உண்மையிலேயே அன்பு செய்தால் உங்கள் பிடியில் வைத்திருக்க அவசியமில்லை உங்கள் ஆளுகைக்குள் வைத்துக் கொள்ள வேண்டிய அவசியம் என்ன? நீங்கள் உரிமை கோரவில்லை, உரிமைகோரல் திட்பமற்றதாக (shallow)வே இருக்கும்.

நீங்கள் உண்மையிலேயே பெற்றிருந்தால் உடைமைத்தன மில்லாத நிலையை அடைந்திருப்பீர்கள். ஆனால் ஒருவர் தன்னைப் பயிற்றுவித்துக் கொள்ள வேண்டியிருக்கும், உணர்ந்து கொள்ளுங்கள். எதையும் சுவாதீனப்படுத்திக் கொள்ள முயற்சிக்காதீர்கள். அதிகபட்சம் பயன்படுத்துங்கள், பயன்படுத்த அனுமதித்தற்காக நன்றியுடைய வராயிருங்கள் ஆனால், சுவாதீனப்படுத்திக் கொள்ளாதீர்கள்.

தனக்குச் சொந்தமானது என்னும் நிலை கருமித்தனம். கருமியாயிருப்பவர் வளர்ச்சிகாண முடியாது. கருமித்தனமானவர் எப்போதும் ஆன்மா சார்ந்த சிக்கலில் இருப்பார். நீங்கள் தாம் இசைவாகி, பகிர்ந்து கொள்ள வேண்டும். உங்களிடம் இருப்பது எதுவாயினும் பகிர்ந்து கொள்ளுங்கள். அதிகம் பகிர்ந்து கொண்டால் அதிகமாய் வளரும். கொடுத்துக் கொண்டேயிருங்கள், நீங்கள்

தொடர்ந்து மீண்டும் நிரப்பப்படுவீர்கள். தோற்றுவாய் – உற்பத்தி இடம் எப்போதும் நிலைத்திருப்பது. கருமியாயிவிடாதீர்கள். அன்பு, அறிவு – அது எதுவாயினும் பகிர்ந்து கொள்ளுங்கள். பகிர்ந்துகொள்வது என்றால் உடைமைத் தனமில்லாதிருப்பது.

ஆனால் நீங்கள் பலரைப் போல் முட்டாள்தனமுடையவராய் இருக்கக்கூடும். "இந்த வீட்டைவிட்டு, காட்டுக்குச்செல், உன்னுடைய தாக இல்லாதவீட்டில் நீ எப்படி இருக்கமுடியும்?" என்று அவர்கள் எண்ணமிடுகிறார்கள். நீங்கள் வீட்டில் வாழமுடியும், அதை உங்கள் உடைமையாக்கிக் கொள்ள வேண்டுமென்பதில்லை. நீங்கள் காட்டில் வாழ்வீர்கள், காட்டை உங்களுடையதாக்கிக் கொள்வீர்களா என்ன? 'நான் இந்தக் காட்டுக்கு அரசன் என்று சொல்வீர்களா? காட்டை உடைமையாக்கிக் கொள்ளாமல் அதில் வாழ்வதால் என்ன பிரச்சனை? நீங்கள் ஏன் வீட்டிலும், பணிமனையிலும் அதை உடைமையாக்கிக் கொள்ளாமல் இருக்கமுடியாது? முட்டாள்கள் சொல்கிறார்கள், "உன்னுடைய மனைவியையும், குழந்தைகளையும் விட்டுவிடு. நழுவி ஓடிவிடு. உடைமைத்தனம் இல்லாதிருந்து பழக வேண்டும்" என்று அவர்கள் முட்டாள்கள்.

நீங்கள் எங்கே செல்வீர்கள், எங்கே செல்வீர்கள்? நீங்கள் எங்கே சென்றாலும் உங்கள் உமைமைத்தனமும் உங்களோடு இருக்கும். அதில் பெரியதாய் என்ன வித்தியாசம் ஏற்பட்டுவிடப் போகிறது.

நீங்கள் எங்கிருந்தாலும், புரிந்துகொள்ளுங்கள், அத்துடன் உடைமைத்தனத்தை விட்டுவிடுங்கள். உங்கள் மனைவியிடம் தவறாக எதுவுமில்லை – 'என்னுடைய' மனைவி என்று சொல்லாதீர்கள். 'என்னுடைய' என்பதை விட்டுவிடுங்கள். உங்கள் பிள்ளைகளிடம் குறை சொல்லும்படியாய் எதுவும் இல்லை – அழகான பிள்ளைகள், கடவுளின் குழந்தைகள். அவர்களை நேசிக்கவும் அவர்களுக்குப் பணிபுரியவும் ஒரு வாய்ப்பு உங்களுக்கு வழங்கப்பட்டிருக்கிறது. அதைப் பயன்படுத்திக் கொள்ளுங்கள் ஆனால் 'என்னுடைய' என்று சொல்லாதீர்கள். அவர்கள் உங்கள் மூலமாய் வந்தவர்கள். ஆனால் உங்களுக்குச் சொந்தமானவர்களல்லர். அவர்கள் எதிர்காலத்துக்குரிய வர்கள், முழுமைக்குரியவர்கள். நீங்கள் ஒரு பாதையாய், சாதனமாய் இருந்திருக்கிறீர்கள் ஆனால் நீங்கள் உரிமையாளராகிவிடமாட்டீர்கள்.

ஆக இதில் நழுவியோடுவது எங்கே வருகிறது? எங்கு வேண்டுமானாலும் இருங்கள். அது உங்களுக்கு நேரிட்டது. கடவுள்

வைத்த இடத்தில் இருங்கள், உடைமைத்தனமில்லாமல் வாழுங்கள் திடீரென்று நீங்கள் வளர்ச்சியடைவீர்கள் - சக்திகள் பாய்ந்தோடும். உங்களுடைய நடப்பு தடை செய்யப்பட்டிருக்கிறது. நீங்கள் பாய்ந்தோடுவீர்கள். பாய்ச்சல் அழகானது. தடைசெய்யப்பட்டு வாழ்வதும், உறைந்துகிடப்பதும் அருவருப்பைத்தரும், அது செயலற்றதுங்கூட.

இந்த ஐந்து உள்ளார்ந்த சுயக் கட்டுப்பாடுகளும் அடிப்படையில் தேவைப்படுகிறவை. "வகுப்பு, இடம் நேரம் அல்லது சந்தர்ப்ப சூழ்நிலை இவற்றை கருதவேண்டியதில்லை. நீங்கள் இன்று பிறந்திருந்தாலும் அல்லது ஐயாயிரம் ஆண்டுகளுக்குமுன் பிறந்திருந்தாலும் அதிலொன்றும் வேறுபாடில்லை.

இந்திய மதச்சொற்பொழிவாளர்கள் சொல்கிறார்கள், "இந்தக் கலியுகத்தில் நீங்கள் ஞானம் பெற முடியாது" என்று. பதஞ்சலி சொல்கிறார், "வகுப்பு, இடம், நேரம் அல்லது சந்தர்ப்ப சூழ்நிலை இவற்றைக் கருத்தில் கொள்ளாமல்" என்று நீங்கள் எங்கிருந்தாலும் ஞானம் பெறமுடியும்.

இந்திய மதச் சொற்பொழிவாளர்கள் சொல்கிறார்கள், "இந்தக் கலியுகத்தில் நீங்கள் ஞானம் பெறமுடியாது" என்று. பதஞ்சலி சொல்கிறார், "வகுப்பு, இடம், நேரம் அல்லது சந்தர்ப்ப சூழ்நிலை இவற்றைக் கருத்தில் கொள்ளாமல்" என்று. நீங்கள் எங்கிருந்தாலும் ஞானம் பெறமுடியும்.

நேரம் ஒரு பொருட்டில்லை. விழிப்புணர்வைதான் முக்கியம். இடம் முக்கியமில்லை.

நீங்கள் இமயத்தில் இருந்தாலும், சந்தையில் இருந்தாலும் அது ஒன்றும் முக்கியமாகாது. சந்தர்ப்பக் சூழ்நிலையும் முக்கியமில்லை. நீங்கள் ஓர் இல்லறத்தானாகவோ அல்லது எல்லாவற்றையும் துறந்தவராகவோ இருக்கலாம். வகுப்பு முக்கியமல்ல - நீங்கள் ஏழையா பணக்காரரா, படித்தவரா, படிக்காதவரா, பிராமணரா, சூத்ரரா, இந்துவா அல்லது முகமதியரா கிறிஸ்துவரா அல்லது யூதரா என்பதல்ல. எதுவும் முக்கியமல்ல, அடியாழத்தில் நீங்கள் ஒன்றே.

வட்டத்தின் சுற்றில் பல வேற்றுமைகள் இருக்கலாம், ஆனால் வட்டத்தின் சுற்றில் மட்டுமே அவை இருக்கின்றன. மையம் தீண்டப்படாததாகவே இருக்கிறது. மையத்தின் தூய்மையை அடையப் பாருங்கள். அதுதான் குறிக்கோள் - அடையவிரும்பும் முடிவு.

ஒவ்வொரு காலையிலும் உங்களைக் கவனித்துக்கேட்டு அகநோக்கும், புரிந்துகொள்வதும் தேவை என்கிற எண்ணம் எனக்குத் தெவிட்டலாகிவிட்டது. உண்மையில் தன்னுடைய வாலைத் துரத்துகிற நாயைப்போல் என்னை உணர்கிறேன். அது எத்தனை கடினமாய் முயன்றாலும் அதன் வெற்றி வாய்ப்பு குறைவாகவே உள்ளது. ஆனால், முயற்சியைக் கைவிடுவதால் எந்தப் பயனும் இருக்கப் போவதில்லை. காரணம், அதிகக் கவனமும், அறிதலும் இன்னொரு தந்திரச் செய்கையாகிவிடும். நான் பழைய தடத்துக்கே திரும்புகிறேன்.

ஒன்றைச் செய்தாலும், செய்யாவிட்டாலும் அது உதவப் போவதில்லை என்பதை நீங்கள் உணர்ந்திருப்பது நல்லது, காரணம் செயலின்றியிருத்தலும் ஒரு தந்திரச் செய்கைதான். இந்த விழிப்புணர்வில் எந்தவொரு நாளிலும், எந்தவொருகணத்திலும் ஒரு புதிய வாசல் உங்களுக்குத் திறக்கக் கூடும். நீங்கள் செய்தாலும், செய்யாவிட்டாலும், நீங்கள் மட்டும் அங்கிருக்கிறபோது நீங்கள் ஓர் உயிர் என்கிறபோது - செய்பவராயினும், செய்பவராயில்லாவிட்டாலும் - காரணம் செய்யாதவருங்கூட ஒரு செய்பவர்தான் - இருமை (duality) மறைகிறது. சற்றும் எதிர்பாரதவிதமாய் கண்டுபிடிக்கிறீர்கள் நீங்கள் எப்போதும் வீட்டிலிருப்பதை, அதைவிட்டு நீங்கள் வெளியேறிவிடவில்லை என்பதை நீங்கள் ஒருபோதும் வேறிடம் சென்றுவிடவில்லை. அந்நிலையில் வாலைத் துரத்த அவசியம் இல்லாது போய்விட்டதை நாய் தெளிவாகப் புரிந்து கொள்கிறது, வால் முன்பே அதனுடையதாய் இருக்கிறது. வாலைத் துரத்த அவசிய மில்லை, வால் முன்னதாகவே நாயைத் தொடர்ந்து கொண்டுதானி ருக்கிறது.

தான் செய்யாதிருக்கும் நிலையை அடைய ஒருவர் செய்தாக வேண்டியிருக்கும். அந்நிலையில் இருப்புணர்வை அடைய செய்யாதிருப்பதை அவர் செய்தாக வேண்டும். எல்லாமும் அதற்குத் துணை செய்யும். தோல்விகளும், ஏமாற்றங்களும் கூட துணை செய்யும். முடிவாய், நீங்கள் அடைகிறபோது எல்லாமும் உதவியதை

நீங்கள் புரிந்து கொள்வீர்கள் - வழிதவறிச் செல்வது, பழைய தடத்தில், பொறியில் விழுவது என்று எல்லாமும் பயன்படும். எதுவும் பயன்படாமல் போகாது. ஒவ்வொன்றும் மற்றொன்றின் படியாகிவிடும்.

நேற்றுநான் அஜிஹானந்தபாரதியின் கட்டுரையொன்றைப் படித்துக்கொண்டிருந்தேன். அவர் ஒரு சமயம் ரவிசங்கரிடம் கேட்டதை, ஜார்ஜ் ஹாரிசன் சித்தார் வாசித்தால் எவ்வளவு நன்றாயிருக்கும் என்று கேட்டதை கூறுகிறார். ரவிசங்கர் ஒரு கணம் யோசித்துவிட்டுச் சொன்னார், “நல்லது, அவர் சித்தாரை சரியானமுறையில் தாங்கிப் பிடித்திருப்பார்” என்று. ஆனால் அதுகூட சிறந்த தொடக்கந்தான். நீங்கள் சித்தார் வாசிக்கக்கற்றுக் கொள்ள விரும்பினால், சித்தாரை முற்றிலும் சரியாய் பிடிக்கத் தெரிந்திருக்க வேண்டும். ஆக, அதனை ஒரு நல்ல தொடக்கம் என்றே சொல்ல வேண்டும். அதுமுன்பே குறிப்பிடப்படாத ஒன்றாய் இருக்கிறது. எனவே சிரித்து வைக்காதீர்கள். ஜார்ஜ்ஹாரிசன் நன்றாக வைத்துக் கொண்டிருந்தார் என்பதற்காகவே ரவிசங்கர் பாராட்டினார்.

முதலில் நீங்கள் ஒரு செய்பவராக வேண்டும். செய்வதை நன்றாய் செய்யுங்கள். ஒட்டுமொத்த விசயமும் அதுதான். நீங்கள் அதை நல்ல முறையில் செய்யாவிட்டால் மறுபடியும் மறுபடியும் நீங்கள் வந்தாக வேண்டும்; காரணம் எதையும் பூர்த்திசெய்யாமல் விட முடியாது.

உண்மையில் மீண்டும் வந்து மறுபடியும் செய்யப்போவதில்லை என்கிற அளவுக்கு நீங்கள் முழுமையாய் ஏமாற்றமடைந்திருக்கலாம். அப்போது செய்யாதிருக்கும் தன்மையில் ஈடுபடுங்கள். அதுவேனும் முற்றாய் முடிந்ததேயென்கிற மாதிரி அதைச் செய்யுங்கள். அதன் பிறகு திரும்பவும் செல்ல வழியிருக்காது. எல்லாவற்றையும் சரிவரப் பூர்த்தி செய்துவிட்டால் நீங்கள் பின்னாக விழமாட்டீர்கள். அரைகுறை யான அனுபவங்களே உங்களைத் திரும்பவும் அழைத்துக் கொண்டிருக்கும்.

அரைகுறை அனுபவங்கள் அவற்றுக்குள் காந்தம்போல் கவர்ந்திழுக்கும் சக்தியைக் கொண்டிருக்கும். அவை நிறைவேற்றக் கோரும். அதனால்தான் நீங்கள் பழைய தடத்திலேயே திரும்பத் திரும்பச் செல்லும்படியாகிறது. நீங்கள் பக்குவமில்லாமல் செயல்படுகிறீர்கள். ஓர் அனுபவம் முழுமையடையவில்லை - அறிவு சார்ந்த விதத்தில் நீங்கள் புரிந்து கொள்ளத் தொடங்குகிறீர்கள் ஆனால்

முழுமையாக அல்ல. அது பயன்படாது. ‘இது பயனற்றது’ என்பதை உங்களுடைய முழு இருப்புணர்வும் புரிந்து கொள்ள வேண்டும்.

‘இது பயன்படப்போவதில்லை’ என்று நான் சொல்கிற காரணத்துக்காக அல்ல. ஆனால் உங்களுடைய இருப்புணர்வு ‘இது பயன்படாது. நீ என்ன செய்கிறாய்? இது அர்த்தமற்றதாய் இருக்கிறதே’ என்று சொல்கிற காரணத்துக்காக வேனும் புரிந்து கொள்ளுங்கள்.

பிறகு செய்யாதிருக்கும் தன்மையில் ஈடுபடுங்கள். அது ஒரு செய்கை. அதனால்தான் நான் சொல்கிறேன் ‘செய்’ என்று. மிகவும் நுட்பமானது. நீங்கள் செய்யும்போது சுத்தமற்றது (gross) முதல்பகுதி. நுட்பமானது இரண்டாம் பகுதி. சீக்கிரமே நீங்கள் தெளிவாய் புரிந்து கொள்வீர்கள் இதுதான் நீங்கள் மறுபடியும் செய்து கொண்டிருப்பது - செய்யாமலிருக்க முயல்வது, என்பதை, ஆனால் அங்கே முயற்சி இருக்கிறது அதுதான் உழைப்பு. உங்களுடைய முயற்சியின்மையும் முயற்சிதான். ஆனால், நான் என்ன சொல்கிறேன் என்பதை நிங்கள் இப்போதே புரிந்து கொள்ளமுடியும். அது முக்கியமல்ல, நீங்கள் அதை அனுபவித்து உணரவேண்டும். அதை கடந்து செல்ல வேண்டும். அதைத் தெளிவாய் புரிந்துகொள்ள வேண்டும். அனுபவத்தின் மூலம் அடைகிற பக்குவம் அவசியம்.

அப்போது ஒரு நாளில் சுத்தம் இல்லாததும், நுட்பமானதும் (தந்திரம்) மறைந்துவிடும். திடுதிப்பென்று நீங்கள் செய்வதற்கு ஒன்றுமில்லாமலும் செய்யாமலிருக்க ஏதுமில்லாமலும் அங்கே அமர்ந்துவிடுகிறீர்கள்.

பிறகு நீங்கள் என்ன செய்வீர்கள்? அப்படியே இருப்பீர்கள். வாலைத் துரத்திப் பிடிக்கிற அவசியம் இல்லை. தற்போது நாய்க்குத் தெரிகிறது வால் தனக்குச் சொந்தமானது என்பது. தற்போது நாய் ஒரு புத்திராகிவிட்டது. இதுவே ஞானமாகும்.

***‘தரிசன காலத்தில் அல்லது தங்களுடைய சொற்பொழிவுகளின் போது நான் சில சமயம் தங்கள் தோற்றநிலையால் உணர்ச்சியில் மூழ்கியிருக்கிறேன். அந்நிலையில் அது புத்தர் இயேசு மற்றும் இதர குருமார்களின் காலடியில் நான் அமர்ந்திருப்பது போல் இருக்க வேண்டும் என்று எண்ணுகிறேன். அது தோற்றுவிடுகிறது. எந்தவொருகல்லும் தலைகீழாய் திருப்பாமல் (நிலைமாற்றம்) விடப்படாது என்று உறுதிகொள்ள என்னுடைய குருவாய் தாங்கள் தொடர்ந்து இருக்க தயவு செய்து வாக்குறுதி அளிப்பீர்களா?’***

அது உங்களைச் சார்ந்திருக்கிறது? நான் எந்தக் கல்லையும் திருப்பாமல் விடமாட்டேன். ஆனால் அது பெரிய அளவில் உதவப் போவதில்லை - புத்தரும் இயேசுவும் கூட எந்தக் கல்லையும் திருப்பாமல் விட்டுவிடவில்லை. எந்தவொரு குருவும் கல்லைப் புரட்டாமல் விட்டது கிடையாது. ஆனால் எந்த குருவும் உங்களுக்கு ஞானத்தை வழங்க முடியாது. நீங்கள் புரிந்துகொள்ளாவிடில் எதுவும் செய்யப்படாது.

சிலநேரங்களில் குருவின் முயற்சி உங்களுக்குள் ஓர் எதிர்த்து நிற்கும் நிலையைத் தோற்றுவிக்கலாம். நான் பலமுறை அதனை உணர்ந்திருக்கிறேன். நான் அதிக அளவில் உங்களுக்குப் பின்னால் இருந்தால் நீங்கள் என்னிடமிருந்து நழுவியோடத் தொடங்குவீர்கள். நான் ஒன்றைச் செய்வதற்குக் கடினமாய் முயன்றால் நீங்கள் பயந்துவிடுவீர்கள். உங்களுடைய சீரணிக்கும் (புரிந்துகொள்கிற) திறனுக்கேற்ப நான் அளவாய் கொடுக்கிறேன்.

அது உங்களைப் பொறுத்தது. நீங்கள் விரும்பினால் எல்லாமும் சாத்தியமாகும். ஆனால், அடியாழத்தில் நீங்கள் அதை விரும்ப வில்லை. அதுதான் பிரச்சினை. நீங்கள் அதைப்பற்றிக் கொண்டிருக் கிறீர்கள். நீங்கள் ஞானமடைய விரும்புவதாயும், இந்தப் பாழாய்ப் போன வாழ்க்கையை முடித்துக் கொண்டுவிட்டதாயும் அதைக் கடந்து செல்ல விரும்புவதாயும் சொல்கிறீர்கள் - ஆனால் உண்மையிலேயே அதனுடனான தொடர்பு முடிக்கப்பட்டுவிட்டதா? நீங்கள் உண்மையிலேயே உங்கள் கணக்குகளை முடித்துக் கொண்டீர்களா? உங்களுக்குள் இன்னமும் அடியாழத்தில் ஒரு விருப்பம் பதுங்கியிருக் கிறதுதானே? ஒரு நம்பிக்கை இன்னமும் உயிர்த்துடிப்புடன் இருக்கிறது அல்லவா? அடுத்தொரு வாழ்க்கையில் ஒரு விதை எந்தக் கணத்திலும் முளைக்கக்கூடும் இல்லையா? அங்கே ஒரு விருப்பம் இருப்பதை, நம்பிக்கை இருப்பதை, வாழ்க்கையின் முழுமையை நீங்கள் அறிவீர்கள் என்பதை, அறியாமல் இருந்திருக்கலாம் என்பதை ஏதோ ஒன்றை நீங்கள் நழுவவிட்டுக் கொண்டிருக்கிறீர்கள் என்பதை ஒரு பேரின்பம் இருந்திருக்கிறது என்பதை, நீங்கள் சரியான கதவைத் தட்டவில்லை என்பதை நீங்கள் கவனித்தால் புரிந்துகொள்வீர்கள். அது தொடர்கிறது.

நீங்கள் என்னிடம் வருகிறீர்கள், ஆனால், அரைமனதுடன் வரு கிறீர்கள். அது வந்தடைவதாகாது ஒரு போதும் அது வந்தடைவ தாவதில்லை.

நீங்கள் என்னிடம் வருவது போன்ற தோற்றம் மட்டுமே இருக்கும். ஆனால், ஒருபோதும் வருவதில்லை. நான் எந்தக்கல்லையும் தலைகீழாய்த் திருப்பாமல் விடமாட்டேன் என்று உங்களுக்கு வாக்குறுதி அளித்துள்ளேன். ஆனால், நீங்கள் எங்கே இருக்கிறீர்கள்? எனக்கு அருகில், நெருக்கமாய் இருக்கிறீர்களா? நீங்கள் மிகவும் தந்திரமானவர், சாமர்த்திய சாலி. நீங்கள் நெருக்கத்தில் இருந்தாலும் ஆயிரத்தியோரு வழிகளில் உங்களைப் பாதுகாத்துக் கொண்டிருக் கிறீர்கள்.

எடுத்துக்காட்டாக, உங்களுடைய கேள்விகளும், உங்களுடைய மனோபாவங்களுங்கூட பாதுகாத்துக் கொள்வதாயிருக்கின்றன. ஆனால் அவர்கள் எதனைப் பாதுகாத்துக் கொள்ள முற்படுகிறார்கள் என்பதை நீங்கள் அறிய மாட்டீர்கள். உங்களுள் கருமித்தனமுள்ள ஒரு பெண்மணியை நான் அறிவேன். அவள் ஞானம் பெறுவதற்காக இங்கே வந்திருக்கிறாள். ஆனால், அவள் இங்கிருக்கக் தொடங்கியதில் இருந்தே கேள்விகள் கேட்டபடி இருக்கிறாள். ஆசிரமத்தில் ஏன் இத்தனை விலைமிக்க கார் உள்ளது? நான் விலை மதிப்புள்ள கைக்கடிகாரத்தை அணிந்திருப்பது ஏன்? இத்தகைய கேள்விகள் அவளுக்குமட்டும் ஏன் எழுகின்றன? அவளுடைய கருமித்தனம் =- பாதுகாத்துக் கொண்டிருக்கிறது. அவளுடைய பிடிவாதமான கருமித்தனத்தை நான் அறிவேன். அவளது கருமித்தனம் தகர்க்கப்படாவிடில் அவளால் முன்னேற முடியாது.

எந்தக் காரை வைத்திருப்பது அல்லது வைத்திருப்பதில்லை என்பதை நான் தான் தீர்மானிக்க வேண்டும். எனக்கென்று நியாயமான நோக்குகள் இருக்கின்றன என்னுடைய காரணங்களை நீங்கள் புரிந்துகொள்ள முடியாது. நான் அதைப் பயன்படுத்துவதில்லை. ஆனால் அதைப் பெற்றிருக்கிறேன். அது அங்கே அடைகாக்கப் படுகிறது. ஆனால் அது பல விசயங்களை மாற்றியிருக்கிறது. என்னைச் சுற்றி சில கருமிகள் இருக்கிறார்கள், மார்வாடிகள், அவர்கள் என்னை விட்டுச்செல்வதில்லை. நான் இந்தக் காரை வாங்கியதும் - அவர்கள் சென்று விட்டார்கள். அவர்கள் ரொம்ப எளிதாய் வெளியேற்றிவிட்டனர். மறுபடியும் வரவேயில்லை. இரண்டு சாத்தியங்கள் இருந்தன. ஒன்று, தங்களுடைய கருமித்தனத்தை அவர்கள் விட வேண்டும், அப்போது தான் அவர்கள் இங்கே இருக்க முடியும் அல்லது என்னைவிட்டு சென்றுவிட வேண்டும். அவர்கள் சென்றதிலிருந்து ஆசிரமம் வேறுபட்ட ஒரு பண்பைப்

பெற்றிருக்கிறது. அவர்கள் தூய்மையற்றவர்கள் ஆனால் நான் யாரோ ஒருவரை வெளியேற வேண்டும் என்று சொல்ல முடியாது. தன்னுடைய விலையைவிட அதிகமாகவே இந்தக் கார் செய்திருக்கிறது. ஆனால், உங்களுக்குத் தெரியாது. ஆனால் இத்தகைய விசயங்கள் பற்றி எவ்வகையிலும் நீங்கள் கவலைப்படத் தேவையில்லை.

யாரேனும் தம்மிடம் வரும்போதெல்லாம் குருட்ஜீவ் கூறுவார், 'உன்னுடைய பணத்தை என்னிடம் கொடுத்துவிடு' என்று. பல பேர் இது காரணத்தினாலேயே அவரை விட்டுப் போய்விட்டார்கள். காரணம் அவர்கள் வந்தது ஓர் ஆன்மிக குருவிடம், ஆனால் அவரோ பணத்தைத் துரத்திச் செல்பவராய் இருக்கிறார். ஆனால், எஞ்சியிருந்தவர்கள் மாற்றம் செய்விக்கப்பட்டார்கள். குருட்ஜீவ் அவர்களுடைய பணத்தில் ஆர்வம் காட்டவில்லை – அவர்களுடைய கருமித்தனத்தைத் தகர்ப்பதில் ஆர்வம் காட்டினார். காரணம் நீங்கள் கருமியாயிருந்தால் விரிவடைய முடியாது. ஒரு கருமியின் ஒட்டுமொத்த பிரக்ஞையும் சுருங்கி விடுகிறது. கருமித்தனம் இருப்புணர்வில் ஒரு சிக்கல், நீங்கள் விரிவடையமுடியாது. பகிர்ந்து கொள்ளவோ, பாய்ந்தோடவோ இயலாது. கருமித்தனம் ஒரு மனக்கோளாறு. எல்லாமும் அதனால் தடைப்பட்டுப் போகும். பணமே கடவுளாயிருக்கிறது. உங்களிடம் ஒரு உண்மையான கடவுளைக் கொடுக்க, பொய்யான கடவுளை உடைத்தெறிய வேண்டும். குருட்ஜீவ் முதலில் கேட்கிற விசயமே பணத்தைப் பற்றியதாகத்தான் இருக்கும்.

என்னிடம் கேட்கிறமாதிரி அத்தனை எளிதாய் அவரிடம் நீங்கள் கேள்வி கேட்டுவிட முடியாது. ஒரு கேள்விக்கு நூறு டாலர் கேட்பார் அவர். உண்டு அல்லது இல்லை என்பதே அவருடைய பதிலாயிருக்கும். தம்முடைய முதல் நூலை எழுதியதும் (All and Everything) அவர் பதிப்பித்துவிடவில்லை. சீடர்கள் அவரிடம் தொடர்ந்து கேட்டபடி இருந்தனர். 'அது மிகச்சிறந்த படைப்பு, அதைப்பதிப்பியுங்கள்' என்று. அவர் சொன்னார், 'பொறுத்திருங்கள்' என்று. தமது கையெழுத்துப் பிரதியை ஒருவர் பார்ப்பதற்கு, ஆயிரம் டாலர் வாங்கிக் கொண்டுதான் அவர் அனுமதிப்பார், சும்மா புரட்டிப் பார்ப்பதற்கு.

அவர் என்ன செய்து கொண்டிருந்தார்? அவர் எவ்வகையிலும் பணத்தின் மீது ஆர்வம் கொண்டிருக்கவில்லை. ஒரு கையால் எடுப்பதை மறுகையால் கொடுத்துவிடுவார். அவர் கையில்

இலட்சக்கணக்கான டாலர் இருந்திருக்க வேண்டும். ஆனால், அவர் ஏழையாகவே செத்துப்போனார் அவரிடம் ஒன்றுமேயில்லை. அவர் செத்தபோது ஒரேயொரு டாலர் கூட அவரிடம் காணப்படவில்லை. அந்தப் பணம் எங்கே மறைந்தது? சிலரிடமிருந்து எடுத்ததைச் சிலரிடம் கொடுத்தார். பணம் பாய்ந்தோடுகிற இடைவழியாய் அவர் இருந்தார்.

அவர் பணம் கேட்பதைக் கண்டதுமே மக்கள் உடனடியாய் அவரைவிட்டுச் சென்றிருப்பார்கள். அவர் என்னை மாதிரியில்லை. ஒட்டுமொத்த பணத்தையும் கேட்பார் - "உங்களிடம் இருப்பது எதுவாயினும் நீங்கள் கொடுத்துவிடுங்கள், ஒப்படைத்துவிடுங்கள்" என்று. ஆனால் ஒப்படைத்தவர்கள் ஆசீர்வதிக்கப்படுவார்கள், முழுமையாய் மாற்றம் செய்யப்படுவார்கள். அதுவே தொடக்க மாயிருந்தது. அது பிரித்தெடுக்கிற முனைப்பகுதியாயிருந்தது. அங்கிருந்தே ஒவ்வொன்றும் தனித்தன்மை அடைவதாயிற்று. பணத்துடன் ஒட்டிக் கொண்டிருக்கும் ஒருவருக்கு எல்லாவற்றையும் கொடுப்பதென்பது பெரிய விசயம்.

ஒரு முறை அப்படி நடந்தது. சிறந்த இசைக்கலைஞரான ஒரு பெண்மணி அவரிடம் வந்தாள், அவரோ அவளிடமிருந்த அனைத்து நகைகளையும் கேட்டார்.

அவள் உண்மையிலேயே அவரிடம் ஆழ்ந்த நம்பிக்கை கொண்டிருந்தாள். உடனே அத்தனை நகைகளையும் அவள் கழற்றிக் கொடுத்துவிட்டாள். மாலையில் அந்த நகைகள் அவளிடம் திருப்பிக் கொடுக்கப்பட்டது. ஆனால் அவளுடைய நகைகளோடு கூடுதலாய் சில நகைகளையும் குருட்ஜீவ் அந்தப்பையில் சேர்த்திருந்தார் - அவளுடைய நகைகளைவிட விலைமதிப்புள்ளவை அவை. என்ன நடக்கிறதென்றே அவளால் புரிந்து கொள்ள முடியவில்லை.

அந்நிலையில் பதினைந்து நாட்களுக்குப் பிறகு மற்றொரு பெண்மணி வந்தாள். ஒரு பணக்காரப் பெண்மணி. குருட்ஜீவ் அவளிடம் இருப்பது எதுவாயினும் - பணம் நகை எல்லாவற்றையும் ஒரு பையில் வைத்துத் தன்னிடம் கொடுக்கும்படி கேட்டார். அந்தப் பெண்மணி அஞ்சினாள். 'நான் யோசித்து நாளை சொல்கிறேன்' என்றாள். இந்த இசைக்கலைஞரான பெண்மணியைப் பற்றி அப்போது அவள் கேள்விப்பட்டாள். அவளிடம் சென்று 'என்ன நடந்தது' என்று கேட்டாள். அவள் முழுக்கதையையும் சொன்னாள். அந்நிலையில்

அவள் மகிழ்ச்சியடைந்தவளாய், 'அப்படியானால் நல்லது. ஒரு நல்ல வேலைதான். இலாபகரமான வியாபாரம். 'நீங்கள் சில நகைகளைக் கொடுத்தீர்கள் அவை இருமடங்கானது' என்றாள். உடனடியாய் இரவே - அவளால் மறுநாள்வரை காத்திருக்க முடியவில்லை. உடனே தன்னுடைய நகைகளைப் பையில்போட்டு குருட்ஜீவிடம் கொடுத்து விட்டாள். அது ஒருபோதும் திரும்பிவரவில்லை. அந்தப் பெண்மணி காத்திருந்தாள். காத்திருந்தாள் அது திரும்பி வரவேயில்லை.

என்ன நடக்கிறது என்பதை மேற்பரப்பில் (surface) நீங்கள் கண்டறிய முடியாது. முதலில் ஒப்படைத்துக் கொண்ட பெண்மணி பணத்தில் பிணைப்புடையவளில்லை, அதை எடுத்துக் கொண்டதில் எந்தக் கருத்தும் இல்லை. குருட்ஜீவ் அதிக நகைகள் சேர்த்து திருப்பிக் கொடுத்துவிட்டார். மற்றொரு பெண்மணியோ இலாபகரமான ஒரு வியாபாரம் போல் கருதி பணத்தைக் கொடுத்தாள். அவள் பணத்தில் தீவிர எண்ணமுடையவள். அந்தப் பணம் திருப்பிக் கொடுக்கப்பட வில்லை. ஆனால் முதலாவது பெண்மணியோ மாற்றம் அடையப் பெற்றாள். அவை எதற்காகத் திருப்பிக் கொடுக்கப் படவில்லை என்பது பற்றிய முழுநிகழ்வையும் அவள் புரிந்து கொண்டிருந்தாள்.

கவலைப்படாதீர்கள். நான் எதைச் செய்கிறேன், எதை செய்வதில்லை என்பது உங்களுக்குச் தொடர்புடைய விசயமல்ல, அது உங்களுடைய கவலைக்கானதல்ல.

உங்களுடைய சொந்தக் கவலைகளே உங்களுக்குப் போது மானது. நீங்கள் நிறையவே பிரச்சினைகளைக் கொண்டிருக்கிறீர்கள். என்னைப்பற்றிக் கவலைப்படாதீர்கள். நான் எனக்கென்று சில வழிகளை வைத்திருக்கிறேன் எனக்கு ஆலோசனை வழங்க முற்படாதீர்கள் - அதை மறந்துவிடுங்கள். உங்களுடைய சுயத்தைப் பற்றி சிந்தியுங்கள். நீங்கள் ஏன் இங்கிருக்கிறீர்கள். என்பது பற்றிச் சிந்தியுங்கள். நீங்கள் சின்ன விசயங்களைத் தவறவிடுவீர்கள் காரணம் அவை உங்களுடைய கண்களுக்கு நெருக்கமாயிருக்கும். 'இது ஏன்? என்றும் அது எதற்காக? என்றும் கேட்காதீர்கள் - அது உங்களுடைய சிந்தனைக்குரியதல்ல.

என்ன நடந்துகொண்டிருக்கிறது என்பது எனக்குத் தெரியும். நான் எடுக்கிற ஒவ்வொரு நடவடிக்கையும் அக்கறையோடு கவனித்து எடுக்கப்பட்டது. என்னுடைய வாழ்க்கையில் நான் எதைச் செய்ததற் காகவும் வருந்தியதில்லை, அது செய்ய வேண்டியதாயிருந்தது.

ஆனால் காரைப் பற்றிக்கேட்டுக் கொண்டேயிருந்த பெண்மணி வீட்டைப்பற்றியும் அதையும் இதையும் கேட்டுக் கொண்டிருந்தவள் ஒரு பணக்காரி, உண்மையிலேயே ரொம்பப் பணக்காரப் பெண்மணி - தன்னுடைய பணத்தைப் பற்றியே அவளுக்கு அச்சம் இருந்தது. தனது கஞ்சத்தனத்தை அவள் கண்ணும் கருத்துமாய் காப்பாற்றி வந்தாள். தான் வெகு பொருத்தமான கேள்விகளைக் கேட்பதாகவே அவள் நினைத்துக் கொண்டாள். ஆனால் அவள் இங்கேயே இருந்தால் நான் தான் அலங்கோல அமைதியை அழிக்கப் பேச்சைத் துவங்கியாக வேண்டும். சில நாட்களேனும் இங்கே தங்கியிருக்கும் துணிவு அவளிடம் இருக்கிறதா என்பது கவனிக்கப்பட வேண்டியது. அவளுடைய கருமித்தனம் தகர்த்தெறியப்படவேண்டும். அதைத் தகர்த்தெறியாமல் அவள் வளரமுடியாது. அவள், உண்மையிலேயே அஞ்சினால், அவள் நழுவியோட வேண்டும். முடிந்த அளவு உடனடியாய் நழுவிச் சென்றுவிட வேண்டும். காரணம் விரைவிலேயே தப்பிச் செல்வதற்கான சாத்தியம் இல்லாது போய்விடும்.

உங்கள் வளர்ச்சியோடு தொடர்புடைய விஷயங்களைக் கேளுங்கள் - உங்கள் இருப்புணர்வின் அடியாழத்தில் உள்ள கேள்விகள் விடையளிக்கப்பட வேண்டியவை.

**எல்லா மனமும் முட்டாள்தனம் என்கிற ஒரே பொருளால் உண்டாக்கப்பட்டதா?**

ஆம், மனம் என்பது முட்டாள் தனமானது. அறிவுத்திறனுடைய மனம் என்பது இல்லை. மனம் அறிவுக்கூர்மை உடையதல்ல. மனம் முட்டாள் தனமானது. 'முட்டாள் மனம்' என்பது சரியல்ல. முட்டாள் தனமும் மனமும் ஒரே பொருளைக் கொண்டவை.

மனம் எதற்காக முட்டாள்தனமாயிருக்கிறது? காரணம் மனம் என்பது கடந்த காலத்தையன்றி வேறில்லை. வழியில் நீங்கள் சேர்த்துக்குவித்த புழுதி - அடுக்கடுக்காய் சேர்த்து வைக்கப்பட்டது. அது உங்கள் அறிவு நுட்பத்தைத் தடுக்கிறது. அது தூசிபடிந்த நிலைக் கண்ணாடி மாதிரி. மனம் தூசி, பிரக்ஞை (உணர்வு) கண்ணாடி. அத்தனை தூசியும் துடைக்கப்பட்ட பொழுதில் அறிவுத்திறன் மேலெழும். மனமில்லாதபோது நீங்கள் அறிவுடையவர்ாயிருப்பீர்கள், மனம் உள்ள போது முட்டாளாகிவிடுகிறீர்கள்.

உண்மையில் முட்டாள்களில் இரண்டுவகை. அறியாத முட்டாள்கள். அதிகம் அறிந்த அந்த முட்டாள்கள் என்று; ஏதுமறியாத

மனிதர்களை முட்டாள்கள் எனலாம். அதிக அளவில் விசயங்களை அறிந்து வைத்திருப்பவரும் முட்டாள்தான். முதலாவதைவிட இரண்டாவது வகை ரொம்பவும் ஆபத்தானது என்பதை நினைவில் கொள்ளுங்கள் காரணம் இரண்டாவது வகையில் முதலாவது வகையைவிட கண்ணாடி அதிகம் தூசி படிந்ததாயிருக்கிறது. அறியாமை உள்ளவன் அறிவாளியைவிட எளிதில் வெளிப்படுத்து கிறான், வளர்ச்சியடைகிறான். தனக்கு எல்லாம் தெரியும் என்கிற எண்ணமே தடையாகிறது. மனம் அறிவுக்கூர்மை உடையதல்ல. அறிவுக்கூர்மையென்பது மனமற்றது ஆகும். மனம் ஒரு தடை.

இதனைப் புரிந்து கொள்ள முயலுங்கள். மனம் உங்களால் அனுபவிக்கப்பட்டதாயும், உங்களால் கடந்து செல்லப்பட்டதாயும் இருக்கிறது. அது ஏற்கெனவே மரித்தது. உங்கள் இருப்புணர்வின் செயலற்ற பகுதியாய்(dead) மனம் இருக்கிறது. அந்நிலையில், நீங்கள் அதைச் சுமந்தபடி இருக்கிறீர்கள். அது உங்களை இங்கே இருக்கவிடுவதில்லை, உங்களை முன்னிலைப் படுத்திக் கொள்ள அது இடமளிக்காது. நீங்கள் அறிவுடையவராய் திகழவும் அது அனுமதிப் பதில்லை. நீங்கள் மறுமொழியளிப்பதற்குள் அது எதிர்வினை புரியத் தொடங்குகிறது.

எடுத்துக்காட்டாக ஒருவரிடம், 'கடவுள் இருக்கிறாரா?' என்று நான் கேட்டால் – தனது மனதில் இருந்து பதிலளித்தால் அவர் முட்டாள். 'ஆமாம், கடவுள் இருக்கிறார்' என்று அவர் சொன்னால் – காரணம் அத்தகைய வழியில் அவர் பயிற்சியளிக்கப்பட்டிருக்கிறார் – போதிக்கப்பட்டிருக்கிறார், பண்படுத்தப்பட்டிருக்கிறார், நிலைப் படுத்தப்பட்டிருக்கிறார்.

கடவுள் இருக்கிறார் என்று அவர் சொல்கிறார். அது அறிவார்ந்த மறுமொழியல்ல. அவருக்குத் தெரியாது. யாரோ அவரிடம் சொல்லியிருக்கிறார்கள். அவர் ஒரு வதந்தியைக் கேட்டார், அந்த வதந்தியை அவர் நம்புகிறார். அவர். அறிவாளியல்ல. தான் என்ன சொல்கிறோம் என்பதைப்புரிந்து கொள்ளும் அளவுகூட போதிய அறிவில்லாதவர் அவர். அல்லது அந்த மனிதர், 'இல்லை, கடவுள் இல்லை' என்று சொல்லக்கூடும்; காரணம், அவர் ஒரு பொதுமை உடைமைக் கொள்கை உடைய குடும்பத்தில் இருந்தோ அல்லது ரஷ்யா அல்லது சீனாவில் இருந்தோ வந்திருப்பார். அதுவும்கூட அதே முட்டாள் தனமுடைய மனந்தான் – நிலைமை மாறியிருந்தாலும்

முட்டாள் தனம் அப்படியே இருக்கிறது. கடவுள் இருக்கவில்லை என்பதை அவர் புத்திக்கூர்மை இல்லாமலே அறிவார். அவர் கவனமாய்த் தேடவில்லை, விசாரணை செய்யவில்லை. அவர் கருத்து மூலத்துக்குள் (malter) எவ்வகையிலும் அலசி ஆராயவில்லை.

ஆனால், ஓர் அறிவாளியிடம் கேட்கப்பட்டால் ... நான் குறிப்பிடுவது மனதின் வழியே பார்க்காத ஒரு மனிதனை, மனதை ஒருபுறமாய் ஒதுக்கிவைத்தவனை. நீங்கள் அவனிடம் 'கடவுள் இருக்கிறாரா?' என்று கேட்டால் - பதில் இருக்காது. பெரும்பாலும் ஓர் அறிவாளி சொல்லக்கூடியது 'எனக்குத் தெரியாது' என்பதுதான். 'எனக்குத் தெரியாது' என்று நீங்கள் சொல்லும்போது ஒரு குறிப்பிட்ட அளவு அறிவு நுட்பத்தை நீங்கள் வெளிக்காட்டுகிறீர்கள். அது சிறிய அளவிலானது தான் ஆனால் அது வளர முடியும், பெரிய தோற்றநிலையைப் (phenomenon) பெறமுடியும். அல்லது அந்த நபர் சொல்லலாம் நான் விசாரணை செய்யவில்லை. மக்கள் இதனைச் சொல்வதைக் கேட்டிருக்கிறேன் ஆனால் எனக்குத் தெரியாது. என்னைப் பொறுத்தவரை இந்த வழியா, அந்த வழியா என்பதை, உண்டா இல்லையா என்பதை உணர்ந்திருக்கவில்லை. இரண்டுமே சாத்தியமற்றவை. என்னால் சொல்ல முடியவில்லை.'

இதுதான் அறிவு இந்த அறிவு ஒரு நாள் கண்டுபிடிப்பை நிகழ்த்தக்கூடும் என்பதை அவன் அறிவான். நீங்கள் கோட்பாடுகள் முட்டுக்கட்டையிடப்பட்டிருந்தாலும், புனித நூல்களைச் சுமந்திருந் தாலும் நீங்கள் அறிவுடையவராக மாட்டீர்கள். நீங்கள் எப்போதும் முட்டாளாகவே இருப்பீர்கள்.

மனம் கடந்த காலமாயிருக்கிறது - மரித்துப்போனது உயிரோடிருப் பதன் மீது தொங்கிய நிலையில் இருக்கிறது. அது மேகம் உங்களைச் சூழ்ந்து கொள்கிற மாதிரி: அதன் வழியே நீங்கள் கண்டறிய முடியாது, காட்சி தெளிவாய் இருப்பதில்லை, எல்லாமும் உருவத்தைச் சிதைத்து, கருத்தை திரித்துக் கூறும். இந்த மேகத்தை மறையவிடுங்கள். விடைகளில்லாதவராய், முடிவுகளில்லாதவராய், கோட்பாடுகளில் லாமல், மதங்களில்லாமல் இருங்கள். வெளிப்படையாய் இருங்கள். ஊறுபடத்தக்கவராய் (அபாயம், குறைகாணல்) இருங்கள், உங்களிடம் உண்மை நிகழும். உங்களுக்குத் தெரியாது என்பதை அறிந்திருப்பது அறிவு மனம் அற்ற தன்மையின் மூலம் அறிவின் வாயில் திறக்கிறது. இல்லையேல் மனம் தான் முட்டாள் தனமாகிறது.

*உண்மையிலேயே அறிவு நுட்பமுடைய ஒரு பெண்ணை நீங்கள் சந்தித்தில்லை என்று சொல்லியிருக்கிறீர்கள். ஆனால், ஆசிரமத்தில் பெண்கள் நிர்வாகிகளாய் இருப்பது எப்படி ஏற்பட்டது?*

காரணம் நான் ஆசிரமத்தை அறிவுத்திறன் கொண்டு நடத்த விரும்பவில்லை. அது இதயத்தால் நடத்தப்பட வேண்டும் என்று நான் விரும்பினேன். அது ஆண் மனத்தால் நடத்தப்படுவதை நான் விரும்பவில்லை. அது பெண்ணியல்பு கொண்ட இதயத்தால் நடத்தப்பட வேண்டும் என்று விரும்பினேன். காரணம் பெண் சார்ந்தது ஊறுபடத்தக்கதாயும், புதிய எண்ணங்களைக் கருத்தில் கொள்ளும் ஆர்வமுடையதாயும் இருப்பது. பெண்ணியல்பு இணக்கமானது, இடமளிப்பது, காத்திருப்பது, அவசரமோ இறுக்கமோ இல்லாதிருப்பது. அது அன்புமயமாயிருப்பது. ஆம், ஆசிரமம் பெண்களால் நடத்தப்படுகிறது. காரணம் அது அன்பு, பாசம், கனிவு கொண்ட இதயத்தால் நடத்தப்பட வேண்டும் என்று நான் விரும்பினேன்.

அறிவு நுட்பமுடைய ஒரு பெண்மணியை நான் உண்மையில் சந்திக்கவில்லை என்றே நான் கூறுகிறேன். நான் கருத்தில் கொள்வது பகுத்தறிந்து செயல்படும் அறிவுக்கூர்மை (intelligence) அல்ல, அறிவுத்திறனை (intellectual)த்தான். அறிவுக்கூர்மை என்பது மனம் அற்றிருப்பதற்கு உரியது. அந்த அறிவுக் கூர்மை ஆணுமல்ல, பெண்ணுமல்ல. அந்த அறிவுக்கூர்மை மனம் அற்றிருப்பதற்கு உரியது. மனம் ஆணாகவும் இருக்கிறது, பெண்ணாகவும் இருக்கிறது - மனம் அற்றதோ எதுவாகவும் இருப்பதில்லை.

மனம் அற்றது எந்தப்பாலினத்தையும் கொண்டிருப்பதில்லை. மனம் அற்றிருப்பது என்பது வெளிப்படையாயிருப்பது அங்கே அனைத்து இருமைகளும் (duality) மறையும் - ஆண்/பெண், யின்/யாங், நேர்மறை/எதிர்மறை, உளதாய் இருத்தல்/இல்லாதிருத்தல் போன்ற இருமைகள். எல்லா இருமைகளும் மனம் அற்ற நிலையில் மறையும் ஆனால் மனம் அற்றிருக்கும் நிலை முன்பே அடையப்பட்டு விடுகிறது. நீங்கள் மனத்தால் தேர்வு செய்வதாயின் அந்நிலையில் ஆண் மனத்தைவிட பெண்ணியல்பு கொண்ட மனத்தைத் தேர்வு செய்யுங்கள் - காரணம் ஆண்மனம் காரணமில்லாமல் தாக்குவது.

ஆண்மனம் நன்மையளிப்பது, நீங்கள் வெற்றியாளராய் உலகில் விளங்க அவசியப்படுவது. தாக்குவதற்கு, சச்சரவு செய்வதற்கு, சண்டைக்குத் தயாராவதற்கு, போட்டியிடுவதற்கு, உயிர்வதை செய்யும்

வன்முறைக்கு, எல்லாரையும் விரோதியாய் எண்ணிவாழும் உலகில் எப்போதும் எச்சரிக்கையாயிருப்பதற்கு ஆண்மனம் தேவைப் படுகிறது. அது பொறாமை கொண்டது. எங்கே நீங்கள் அடைய முயல்வதை மற்றவர்கள் அடைய முய்ல்வதாய் எண்ணிப் பாதுகாத்துக் கொள்கிறதில் மிகப்பெரிய போராட்டம்.

நீங்கள் உலகில் வெற்றிபெறவிரும்பினால் அப்போது வேண்டும் ஆண்மனம். அகவுலகில் வெற்றி காண விரும்பினால் அப்போது தேவைப்படுவது பெண்மனம் ஆனால் அது ஓர் தொடக்கம் மட்டுமே - பெண் சார்ந்த மனம் ஒரு தொடக்கந்தான். மனம் அற்ற நிலையை நோக்கிச் செல்வதில் அது ஓர் படி. மனம் அற்ற நிலையில் இருந்து, பெண்மனத்தைவிட ஆண்மனம் கொஞ்சம் கூடுதலான தொலைவில் இருக்கிறது. இதுதான் விசனம். அதனால்தான் பெண்மனம் புரியாத புதிராய் உள்ளது.

ஒரு பெண்ணை உங்கள் வாழ்க்கை நெடுகவும் நீங்கள் காதலிக்க முடியும். ஆனால் புரிந்துகொள்ள உங்களால் முடியாது. அவள் ஒரு விளங்காத புதிராய், ஊகிக்கமுடியாதவளாய் இருப்பாள். சிந்தனை களைவிட மனநிலைகளின் வழியே வாழ்கிறாள், தட்பவெப்ப நிலையைவிட அதிகமாயும், எந்திர நுட்பத்துக்குக் குறைவாயும் இருப்பவள். காலையில் மேகங்கள் இருந்தன, பிற்பகலில் மேகங்கள் மறைந்து சூரியஒளி கூடியிருக்கிறது.

ஒரு பெண்ணைக் காதலித்தால் தெரிந்து கொள்வீர்கள். காலைவானில் மேகங்கள் சூழ்ந்திட அவள் சோகம் கவிந்து காணப்படுகிறாள், எதுவும் உடனே நிகழ்ந்துவிடவில்லை குறிப்பிடும் படியாய் மேகங்கள் மறைந்து மறுபடியும் சூரிய ஒளி அதிகரிக்கவும் அவள் பாடுகிறாள். ஓர் ஆணைப் பொறுத்தவரை இதுவெல்லாம் நம்ப முடியாதது. ஏன் பெண்ணிடத்தில் மட்டும் பொருளற்றதாய் ஒரு போக்கு? ஆம், அது பொருளற்றதுதான். காரணம் ஆணுக்கு எந்த விசயமும் அறிவுக்குப் பொருத்தமான விளக்கத்துடன் இருக்க வேண்டும். 'நீ ஏன் துயரமாய் இருக்கிறாய்' என்று கேட்டால் பெண் உடனே சொல்லிவிடுவாள்' நான் வருத்தத்தில் இருக்கிறேன்' என்று. ஓர் ஆணால் அதைப்புரிந்துகொள்ள முடியாது. வருத்தப்பட ஏதேனும் காரணம் இருக்க வேண்டும் உங்களுக்கு. 'நீ ஏன் மகிழ்ச்சியாய் இருக்கிறாய்?' பெண் சொல்வாள் 'நான் மகிழ்ச்சியாய் உணர்கிறேன்' என்று. அவள் மனநிலைகளின் மூலம் வாழ்கிறாள்.

உண்மை, ஒரு பெண்ணுடன் வாழ்வது ஆணுக்கு எளிதல்ல. ம்ம்.. காரணம், செயல்கள் அறிவு சார்ந்ததாயிருந்தால் சமாளிக்க முடியும். செயல்கள் பகுத்தறிவுக்குப் பொருந்தாததாய் இருந்தால் - எதிர் பாராமல் நடப்பதாயின் - சமாளிப்பது கடினம். ஒரு பெண்ணைச் சமாளிக்கும் திறன் ஆணிடம் இல்லை. முடிவில் சமாளிக்க முடியாமல் முயற்சியை விட்டுவிடுகிறான்.

மனம் அற்றநிலையில் இருந்து வெகுதூரத்தில் இருக்கிறது ஆண்மனம். அது எந்திரத்தனமாய், அறிவு சார்ந்ததாய், அதிக அறிவுத் திறனுடன் இருக்கிறது. பெண்ணியல்பு கொண்ட மனமோ நெருக்கமாய், இயல்பாய், பகுத்தறிந்து செய்யப்படாததாய் இருக்கிறது. இதயத்தில் இருந்து வயிற்றுப் பகுதியில் விழுவது எளிது. அங்கே சிந்தனை யின்மை இடம்பெறுகிறது. தலை அறிவுக்கு இருப்பிடமாயுள்ளது. இதயம் அன்புக்கும், உள்ளுணர்வுக்கும் இருப்பிடமாகும். அதற்கும் கீழே தொப்புள் பகுதி. இரண்டங்குலம் கீழேயிருப்பது, ஜப்பானியர் களால் (hara) ஹரா என்று அழைக்கப்படுவது. அதுவே மனம் அற்ற (சிந்தனையின்மையின்) மையம். அங்கே வாழ்வும் மரணமும் சந்தித்துக் கொள்கிறது. இருமைகளனைத்தும் மறைகிறது.

தலையில் இருந்து அடியாழத்தில் உள்ள 'ஹரா'வில் நீங்கள் விழுகிறீர்கள்.

பிறந்த குழந்தை 'ஹரா'வில் இருந்தே இயக்கம் பெறுகிறது. தாயின் கர்ப்பத்தில் ஒரு குழந்தை ஹராவைக் கொண்டுதான் இயங்கும். அவனிடம் மனமுமில்லை, எண்ணங்களுமில்லை. அவன் விழிப்போடும், சுறுசுறுப்போடும் இருக்கிறான், உண்மையில் கருவறையில் இருந்தபோது அவன் கொண்டிருந்த விழிப்பும் சுறுசுறுப்பும் வேறு எப்போதும் அவனிடம் இருக்கவில்லை. பிறந்து சில மாதங்கள் வரையும் கூட அந்தக் குழந்தை 'ஹரா'வில் இருந்தே இயக்கம் பெறுகிறது. தூங்கி கொண்டிருக்கிற ஒரு குழந்தையைப் பாருங்கள், அது வயிற்றில் இருந்தே மூச்சுவிடும், மார்பில் இருந்து மூச்சுவிடுவதில்லை, மார்பு முற்றிலும் தணிவு நிலையில் இருக்கும். மூச்சு ஹராவிற்குப் போகிறது, ஹராவை மோதுகிறது, குழந்தை ஹராவில் இருந்தே செயல்படுகிறது. அதனால்தான் ஒவ்வொரு குழந்தையும் களங்கமற்றதாய் தெரிகிறது. நீங்கள் மறுபடியும் ஹராவிற்குச் செல்ல முடிந்தால் மறுபடியும் களங்கமற்றவராகி விடுவீர்கள் மாசு நீக்கப்பட்ட கண்ணாடியைப் போன்று.

பெண்ணியல்பு முடிவெல்லை (goal) ஆகாது. அது மனம் அற்ற நிலைக்குச் சமீபமாய் இருப்பது. அதனால்தான் லாவோட்சு வற்புறுத்துவார், 'இணக்கமாயிருங்கள், காத்திருங்கள், பொறுமை யோடிருங்கள்' என்று. அவசரப்படாதீர்கள், காரணமின்றி தாக்க முனையாதீர்கள். ஏனெனில் உண்மையை வெற்றி கொள்ள முடியாது. நீங்கள் அதனிடம் ஒப்படைத்துக் கொள்ளத்தான் (surrender) முடியும்.

எனவே, மனம் அற்றவர்களை நான் கண்டுபிடிக்கிற வரையும் ஆசிரமம் பெண்களின் மூலமே நடத்தப்படும். மனம் அற்ற மனிதர்கள் கிடைத்துவிட்டால் ஆண், பெண் பற்றிய கேள்வி எழாது. அந்நிலையில் ஆசிரமம் மனம் அற்றவர்களால் நடத்தப்படுவதாகிவிடும். அப்போது வேறுவகையான அறிவு வேலை செய்யும். உண்மையில் அச் சமயத்தில் மட்டுமே அறிவு வேலை செய்கிறது. அது அறிவு நுட்பமல்ல, அதுவே பூரணமாவது.

**'தங்களுடன் புனேயில் இருந்து கொண்டிருப்பதில் என்னுடைய வாழ்க்கை, என்னளவில் எந்த முயற்சியும் இல்லாமல், பெருமளவு வளம் பெற்றிருக்கிறது. இதற்காக நான் மிகவும் நன்றியுணர்வு கொண்டவனாயிருக்கிறேன். ஆனால் ஒட்டுமொத்த உலகமும் இந்த அருமையான மருந்துக்கு ஏங்கிக் கொண்டிருக்கும்போது ஒரு சிலருக்கு மட்டும் அதைச் சுவைக்க வாய்த்திருக்கிறதே?**

இது நூற்றாண்டுக் கணக்கில் இருந்துவருகிற ஒரு பொருத்தமான கேள்வி. ஒரு புத்தர் இருக்கிறார், தம்மால் வழங்கக் கூடிய சகலத்தையும் வழங்கிக் கொண்டிருக்கிறார். தம்முடைய இருப் புணர்வை பகிர்ந்து கொள்ளத் தயாராயிருக்கிறார். ஆனால், யாருக்கும் தேவைப்படவில்லையென்றே தெரிகிறது. அவர்கள் எல்லாருக்கும் அது தேவைப்படுவதுதான். எல்லாரும் நோயுற்றிருக்கும் நிலையில் புத்தர் மருந்தை வழங்கிக் கொண்டிருக்கிறார். ஆனால், யாருக்கும் அந்த மருந்தில் ஆர்வம் இருப்பதாய் தெரியவில்லை. ஏதோ ஒரு காரணம் இருக்க வேண்டும்.

இதுவே நான் கருத்தூன்றிக் கவனித்தது: மகிழ்ச்சியில் ஆர்வம் காட்டுவதும், ஆரோக்கியத்தில் அக்கறை கொள்வதும் கடினம். மக்கள் மகிழ்ச்சியற்ற நிலையுடனும், நோயுடனும் ஒரு பிணிசார்ந்த விருப்பம் கொண்டிருக்கிறார்கள். அதனால்தான் நீங்கள் எப்போதுமே மகிழ்ச்சியற்ற நிலைக்குத் தயாராயிருப்பது. அதற்கு எந்த முன்னேற்பாடும் தேவையில்லை, பதஞ்சலி தேவைப்படுவதில்லை. மகிழ்ச்சியற்ற நிலைக்கு எட்டுப்படிகளெல்லாம் கிடையாது.

எல்லாருமே குதிக்கத் தயார். மகிழ்ச்சியின்மையைப் பொறுத்தவரை எல்லாரும் வாவோட்சுவைப் பின்பற்றுகிறார்கள், எப்படி என்று யாரும் கேட்பதில்லை. யாரும் என்னிடம் வந்து மகிழ்ச்சியில்லாமல் இருப்பது எப்படி என்று கேட்கிறதில்லை, எல்லாருக்கும் தெரிந்திருக்கிறது. யாரும் உங்களுக்கு மகிழ்ச்சியின்மையைப் போதிக்க வேண்டியதில்லை. அதை உங்களுடைய உள்ளுணர்வால் அறிந்து கொண்டு விடுவீர்கள் நீங்கள் அதில் முன்பே தேர்ச்சியுற்றவர்தாம்."

அதில் ஓர் ஆழ்ந்த விசாரணை தேவைப்படும். மக்கள் ஏன் மகிழ்ச்சியற்றிருக்க விரும்புகிறார்கள்? நான் 'விரும்புதல்' என்று குறிப்பிடுகிறபோது 'தாங்கள் விரும்புவதை அவர்கள் அறிவார்கள்' என்பதைக் கருத்தில் கொள்ளவில்லை. தாங்கள் விரும்பவில்லை என்றும் அவர்கள் கூறலாம். மகிழ்ச்சியற்றிருப்பதை யார் விரும்புவர்கள்? அவர்கள் மகிழ்ச்சியாயிருக்க விரும்புவார்கள் ஆனால் அதுவல்ல விசயம், அவர்கள் மகிழ்ச்சியின்மையைப் பற்றிக் கொண்டிருக்கிறார்கள். தாங்கள் மகிழ்ச்சியை விரும்புவதாயும் ஆனால் தாங்கள் எதைச் செய்தாலும் அவை மகிழ்ச்சியற்ற நிலையை உண்டு பண்ணிவிடுவதாயும் அவர்கள் சொல்கிறார்கள். இது ஒன்றும் புதிதல்ல, அவர்கள் பல பிறவிகளாய் இதைத்தான் செய்து வருகிறார்கள். மறுபடியும், மறுபடியும் அவர்கள் ஒன்றையே செய்து கொண்டு இருக்கிறார்கள். பிறகு – மகிழ்ச்சியற்ற நிலைக்குத் தள்ளப் படுகிறார்கள். அத்துடன் தங்கள் மகிழ்ச்சியை விரும்புவதாய் சொல்லிக் கொள்கிறார்கள்.

அதில் பயன் கருதிய முதலீடு ஒன்று இருக்க வேண்டும். நான் சிலவற்றை உங்களுக்குச் சொல்கிறேன், ஏனெனில் அவை உதவக்கூடியதாயிருக்கும். நீங்கள் மகிழ்ச்சியற்றிருக்கும் நிலையில் இந்த உலகத்தைப் பழித்துக் கூறுவது எளிது. அடுத்தவர் தலையில் பொறுப்பைச் சுமத்திவிடுவதும் எளிதான காரியந்தான். நீங்கள் மகிழ்ச்சியற்றவராய் இருக்கும்போது உங்களைச் சுற்றியிருப்பவர்களைச் சுயநலத்துக்குப் பயன்படுத்திக் கொள்வீர்கள் – ஏனெனில் நீங்கள் மகிழ்ச்சியில்லாமல் இருக்கிறீர்கள் அவர்கள் உங்களை மகிழ்ச்சியாக வைத்துக் கொள்ள வேண்டும். நீங்கள் மகிழ்ச்சியில்லாதிருக்கும்போது, 'நான் பிணியுற்றிருக்கிறேன். மகிழ்ச்சியற்றிருக்கிறேன்' என்று நீங்கள் உரிமையுடன் கேட்க முடிகிறது.

தங்களுடைய நோயைப்பற்றியே பேசிக்கொண்டு, அதைப் பெரிதுபடுத்தி மனவாட்டம் கொள்கிறவர்களை (Hypochondriacs)

நீங்கள் எதிர் கொண்டிருப்பீர்கள். உண்மையில் பெரிதாய் எந்த நோயும் அவர்களுக்கு இருந்திருக்காது. ஆனால் நீங்கள் சொல்கிறீர்கள். 'இதைப்போய் நீங்கள் பெரிதுபடுத்துகிறீர்கள்' என்று, அவர்களோ புண்படுத்தப்பட்ட உணர்வை அடைகிறார்கள். தாங்கள் நோயுற்றிருப் பதாய் ஓர் எண்ணத்தை அவர்கள் வளர்த்துக் கொள்கிறார்கள். தங்களுடைய கதையைச் சொல்ல ஒவ்வொரு மருத்துவராய் தேடிச் செல்கிறார்கள். தங்களிடமிருப்பதையும், தங்களுடைய மருத்துவ அறிவையும் கொண்டு அவர்களால் எதுவும் செய்ய முடிவதில்லை. அந்த அளவு அறிவாளி யாரும் இருப்பதில்லை. யாருக்கும் அதுபற்றித் தெரியாது. அவர்களுடைய நோய் அத்தகையது, புரியாத புதிராய் அமைந்தது. இந்த விசயத்தில் யாரும் உதவப் போவதில்லை என்பதைத் தொடக்கத்தில் இருந்தே அவர்கள் அறிவார்கள். தங்களுடைய நோயைப்பற்றி தொடர்ந்து சொல்லிக் கொண்டிருக்கும் போது அவர்கள் என்ன செய்து கொண்டிருக்கிறார்கள் - தங்கள் காயத்தைக் காண்பித்து தங்களைத் தாங்களே துன்புறுத்திக் கொள்கிறார்களா? அவருக்கு வேண்டுவது பரிவும், கவனிப்பும்.

ஒரு குழந்தை தன்னுடைய குழந்தைப் பருவத்தில் இருந்தே அந்தத் தந்திரத்தை அறிந்து வைத்திருக்கிறது. குழந்தை நோயுள்ள நிலையில் அதன் பெற்றோர் கூடுதலாய் கவனம் செலுத்துவார்கள். அவன் மகிழ்ச்சியற்றிருக்கும்போது தங்களுடைய பொறுப்பை மொத்த குடும்பமும் உணர்கிறது. நோயுற்ற குழந்தை தன்னுடைய சொற்பாங்கில் கட்டளையிடும், அது ஒரு குட்டி சர்வாதிகாரியாகவே மாறிவிடும். இன்று சாயந்தரத்துக்குள் இந்த விளையாட்டுக் கருவியைக் கொண்டு வந்தாக வேண்டும் என்று அவன் சொல்வான், யாரும் மறுத்துப் பேச முடியாது - காரணம் அவன் நோயில் இருக்கிறான். ஆனால் அவன் உடல் நலத்துடன் இருக்கும்போது யாரும் அவனைப்பற்றி அலட்டிக் கொள்வது கிடையாது. அவன் ஆரோக்கியத்துடன் இருக்கும்போது யாரும் வந்து அவன் பக்கத்தில் உட்கார்ந்திருப்பதில்லை. அவன் நோய்ப்படுக்கையில் இருக்கும்போது அப்பா பெரியப்பாவெல்லாம் வருகிறார்கள். தன்னை ஒரு முக்கியமானவனாய் கருதிக்கொண்டு குழந்தை மகிழ்ச்சியடைவான். நீங்கள் அவனருகே அமர்ந்து அவனுடைய நலம் குறித்து விசாரிக்கிறீர்கள், அப்போது மருத்துவர்கள் வருகிறார்கள். பெரிய பெரிய மருத்துவர்களெல்லாம் வருகிறார்கள், அக்கம்பக்கத்தில் இருப்பவர்கள் வருகிறார்கள். அம்மா அவனுடைய நோயைப்பற்றியே

தொடர்ந்து பரபரப்புடன் இருக்கிறாள். அவன் ஒட்டுமொத்த குடும்பத்தின் மையமாகிவிடுகிறான், குடும்பமே உலகமாகிவிடுகிறது அவனுக்கு. உலகம் அவனைச் சுற்றியே சுழல்வதாயிருக்கிறது. அவன் சூரியனாகிவிடுகிறான், அவனைச் சுற்றியுள்ளவை கிரகங்களாகி விடுகின்றன. அது ரொம்பவும் நேர்த்தியாயிருப்பதாய் அவன் உணர்கிறான். தன்னுடைய வாழ்க்கை முழுவதையும் துன்பத்துக் குள்ளாக்கிக் கொள்ளும் ஒரு தந்திரத்தை தற்போது அவன் கற்றுக் கொண்டுவிடுகிறான் - ஓர் ஆபத்தான தந்திரம் அது.

என்னுடைய செயல்முறையைச் சொல்வதாயின், குழந்தை நோயுற்றிருக்கும்போதும், மகிழ்ச்சியற்றிருக்கும்போதும் அவனிடம் அதிகக் கவனம் செலுத்தாதீர்கள் என்று தான் நான் சொல்வேன். அக்கறைகாட்டுங்கள் ஆனால் அதிகக் கவனிப்பு வேண்டாம். சொல்லப்போனால் அவன் மகிழ்ச்சியாயிருக்கும் போது, ஆரோக்கியமாய் இருக்கும் போதுதான் கவனிப்பு அவசியம். ஒரு குழந்தை மகிழ்ச்சியாய் இருக்கும்போது அவன் தான் குடும்பத்தின் மையம் என்பதை உணரச் செய்ய வேண்டும். அவன் மகிழ்ச்சியில்லாமல் இருக்கும் போது அவனை பக்கமாய் இருக்கச் செய்து, மருந்து கொடுங்கள், ஆனால் அவனைப்பற்றி யாரும் கவலைப்படவில்லை என்பதை அவன் உணரும்படிச் செய்யுங்கள். அவன் ஒரு பக்கமாய் விடப்படுவது இரக்கமற்ற செயலாய், கொடுந்துன்பமாய் தெரியலாம் - நான் சொல்வது குரூரமாய் தெரிந்தாலும், அதுதான் இரக்கம் என்பேன். காரணம் உங்களுடைய வழக்கமான பரிவு அவனை வாழ்நாள் முழுக்க வருந்தச் செய்துவிடும். ஒரு பிறவியில் மட்டுமல்ல, பல பிறவிகளிலும் அவன் அதையே திரும்பச் செய்து கொண்டிருப்பான்.

வாழ்கையில் உங்களுக்கு எப்போதெல்லாம் கவனிப்பு தேவைப் படுகிறதோ... அப்போதெல்லாம் மற்றவர்களுக்கும் அது தேவைப் படும், காரணம், தன்முனைப்பிற்கு அது (கவனிப்பு) ஒரு தீனி. ஒரு புத்தருக்கு மட்டுமே அத்தகைய கவனிப்பு தேவைப்படுவதில்லை - காரணம் அங்கே நான் என்கிற அகந்தை (Ego) கிடையாது. அதனால் அதற்குத் தீனியும் தேவைப்படுவதில்லை - இல்லையேல் எல்லாருக் கும் அது தேவைப்படுகிறதுதான். உங்களுக்குக் கவனிப்பு தேவைப் படுகிறபோது நீங்கள் என்ன செய்கிறீர்கள்? உங்களுக்கு ஒரேயொரு தந்திரந்தான் தெரிந்திருக்கும், மகிழ்ச்சியில்லாதிருப்பது, நோயில் விழுந்து கிடப்பது. தொண்ணூறு சதவிகித நோய்கள் முதலில்

உங்களுடைய மனதில்தான் தோன்றுகின்றன, தன்னுணர்வற்ற தன்மையில் மனைவி உங்களைப்பற்றிக் கவலைப்படுவதில்லை, சொல்லப்போனால் அதற்கு மாறாக, நீங்கள் அலுவலகத்தில் இருந்து வரும்போது அவள் உங்களுடன் சண்டைபிடிக்கத் தயாராயிருப்பாள் அல்லது தட்டுகளை நீங்கள் கழுவிக்கொள்ளட்டும் என்று வைத்து விட்டிருப்பாள். ஆனால் நீங்கள் நோயுற்றிருக்கும்போது அவள் உங்களைச் சுற்றிச் சூழ்ந்திருப்பாள். இதமாய் நடந்து கொள்வாள், சண்டையிடமாட்டாள், சின்ன சமாசாரங்களிலும் அக்கறை காட்டுவாள்... நீங்கள் நிறைவாய் உணர்வீர்கள்.

உண்மையில் இது வளமில்லாத சிந்தனை பற்றிய விவகாரம். நீங்கள் மோசமான நிலையில் இருக்கும்போது நீங்கள் விரும்பத்தக்க விதமாய் உணர்கிறீர்கள். நீங்கள் தகுதியோடிருக்கும் போது உங்களை மோசமாய் உணர்கிறீர்கள். ஆனால் இது தான் நிலை. மனைவி நோயுற்றிருந்தால் கணவன் பூக்களுடன் வருகிறான், ஐஸ்க்ரீம் கொண்டுவருகிறான். அவள் சரியாகிவிட்டால் பிறகு அவள் பக்கம் திரும்பக்கூட மாட்டான் - தன்னுடைய செய்தித்தாளை பிரித்து, படிப்பதில் மூழ்கிவிடுவான்.

மகிழ்ச்சியற்றவராய் இருக்கும் விளையாட்டை எல்லாரும் விளையாடிக் கொண்டேயிருக்கிறார்கள். நீங்கள் மகிழ்ச்சியாயிருக்க விரும்புகிறீர்கள் ஆனால் மகிழ்ச்சியற்ற தன்மையில் முதலீடு செய்வதை நிறுத்திக் கொள்ளாதவரை நீங்கள் மகிழ்ச்சியாயிருக்க் முடியாது. மகிழ்ச்சியற்ற நிலைக்கு மற்றவர்கள் பொறுப்பாக முடியாது என்பதை நினைவில் கொள்ளுங்கள். அதேமாதிரி வேறு யாரும் உங்களை மகிழ்ச்சியுடையவராக்க முடியாது அது உங்களுடைய தனிப்பட்ட வளர்ச்சி, தனிப்பட்ட விழிப்புணர்வு, உங்களுடைய செயல்படும் சக்தி மேலும் மேலும் உயர்வது உங்களுக்குப் பரம சுகத்தை அளிக்கிறது. ஆனால், அடியாழத்தில் உள்ள தன்னுணர்வற்ற இயக்க நுட்பத்தை நீங்கள் அறிந்திருக்க வேண்டும் - மகிழ்ச்சியைப் பற்றிப் பேசியபடி மகிழ்ச்சியின்மையை விரும்பிக் கொண்டிருக் கிறீர்கள் என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும்.

அதனால்தான்... நீங்கள் விரும்புவது எதுவாயினும் அது நடந்தேறுகிறது. இந்த உலகம் உண்மையிலேயே ஒரு மாயவித்தை தான். நீங்கள் மகிழ்ச்சியற்ற நிலையை விரும்பினால் அது நடக்கிறது. நீங்கள் மகிழ்ச்சியை விரும்பினால் அதுவும் நடக்கிறது. காரணம் நீங்களே தீர்மானிக்கும் காரணியாய் (factor) இருக்கிறீர்கள்.

உங்களுக்கு நிகழ்கிற எல்லாவற்றுக்கும் நீங்களே ஆதாரமாய், அடித்தளமாய் இருக்கிறீர்கள். இதுவே கருமச் சட்டம். நீங்கள் விரும்புவது எதுவாயினும் அது நடக்கிறது. அதை நீங்களே செய்கிறீர்கள். நான் மீண்டும் கொடுமைக்காரனாய் தெரிகிறேனா? ம்ம்..? காரணம் ஆறுதல் பெற நீங்கள் என்னிடம் வருகிறீர்கள். நான் உங்களிடம், 'இந்த உலகமே உங்களுக்கு எதிராய் சதிபண்ணுவதால் தான் நீங்கள் மகிழ்ச்சியற்ற நிலைக்குத் தள்ளப்பட்டீர்கள் என்று நான் சொல்லியிருக்க வேண்டும். நீங்கள் நிறைவாய் உணர்வீர்கள் ஆனால் அது நான் உங்களுக்குச் செய்கிற உதவியாகிவிடாது. நான் உங்களுடைய நோய்த்தன்மைக்கே உதவுகிறேன், உங்களை மேலும் மேலும் நரம்பு உபாதை உடையவராக்குகிறேன்.

இல்லை, உங்களுடைய மகிழ்ச்சியற்ற நிலைக்கு உங்களையன்றி வேறுயாரும் காரணமில்லை. சந்தேகமேயில்லை, அது அப்படித்தான் உள்ளது. இது விஞ்ஞான பூர்வமான முற்றிலும் விஞ்ஞான பூர்வமான சட்டம். நீங்கள் தாம் பொறுப்பு. நீங்கள் மட்டுமே பொறுப்பாளி என்பதை உங்கள் மனதின் அடியாழத்தில் ஊடுருவச் செய்யுங்கள். நீங்கள் மகிழ்ச்சியின்றி, துன்பத்தில், வருத்தத்தில் இருக்கும்போது அது உங்களால் உண்டாக்கிக் கொள்ளப்பட்டது என்பதைத் தெரிந்து கொள்ளுங்கள். நீங்களாக அதை விரும்பியேற்றிருந்தால் சரி, அனுபவியுங்கள். அப்படியாயின் மகிழ்ச்சிவேண்டுமென்று கேட்காதீர்கள். அப்போது அதில் தணிவுநிலையில் இருங்கள். வருத்தத்தில், மகிழ்ச்சியற்றிருப்பது ஓர் இருண்ட இரவினைப் போன்றதாகும். நீங்கள் ஒரு பகலாக வேண்டுமென்று நான் கூறவில்லை. அதற்கு அவசியமுமில்லை. நீங்கள் இருண்ட இரவாக விரும்பினால், அப்போது பகல் வேண்டும் என்று கேட்காதீர்கள். நீங்கள் இரவைப்பற்றிக் கொண்டு, பகலை வேண்டும் என்று கேட்டால் தொல்லைதான். என்னிடம் வருகிறீர்கள், நான் கண்டுகொள்கிறேன். நீங்கள் இரைச்சலில் இருந்தபடி அமைதியைக் கேட்கிறீர்கள். எண்ணங்களை, சிந்தனைகளைப் பற்றி கொண்டிருக்கிறீர்கள். உங்களை அமைதியாயிருக்க விடாதவற்றை இறுகப்பிடித்துக் கொண்டு அமைதி வேண்டுமென்கிறீர்கள். உங்களுக்குள் இருக்கும் இந்தக் குழப்பத்தைத் தீர்த்துக் கொள்ளுங்கள்.

மக்கள் தேவையில் இருக்கிறார்கள், அவர்கள் எப்போதுமே வேண்டும் என்று கேட்கிற அவசியத்தில் இருக்கிறார்கள். ஆனால் அச்சத்தின் காரணமாய் அவர்கள் வருவதில்லை. தங்களுக்கு அதிகப்

பரிச்சயமில்லாத மகிழ்ச்சி தங்களுக்குள் வளர்வதைக் கண்டு அவர்கள் அச்சமுற்று விடுகிறார்கள்.

ஒரு சமயம் அப்படி நடந்தது. ஜார்ஜ் பெர்னார்ட்ஷா ஒருவரைப் பற்றித் தமது வெறுப்பைத் தெரிவிக்கிற விதமாய் பேசிக் கொண்டிருந்தார். ஜார்ஜ் பெர்னார்ட் ஷாவையும், அந்த நபரையும் நன்கறிந்திருந்த நண்பரொருவர் 'அவரை எவ்வகையிலும் நீங்கள் அறியமாட்டீர்கள் என்பது எனக்கு நன்றாய் தெரியும், நீங்கள் அவரைப் பழித்துரைக்கிறீர்கள் அவரிடம் குறை காண்கிறீர்கள். நீங்கள் அவருக்கு அறிமுகமானவரல்லர் என்பதும் எனக்குத் தெரியும். நீங்கள் அவருடன் ஓரளவும் பழகியவரல்லர், எனவே அவரைப்பற்றி நீங்கள் அறிந்துகொள்ள விரும்பினால் நான் அவரை அழைத்து வந்து அறிமுகப்படுத்துவேன்' என்றார். ஜார்ஜ் பெர்னார்ட்ஷா சொன்னார் 'வேண்டாம் - நீங்கள் அறிமுகப்படுத்திய காரணத்துக்காகவே நான் அவரை விரும்பும்படி ஆகும்' என்று.

அதுதான் தொல்லை. மக்கள் துன்புற்றிருக்கலாம், துயரத்தில் இருக்கலாம் ஆனால் என்னிடம் அவர்களைக் கொண்டுவருகிறீர்கள். அவர்கள் மகிழ்ச்சியடைய சாத்தியம் இருக்கிறது. அதுவே தயக்கத்துக்குக் காரணம். அவர்கள் அமைதியுடையவராக சாத்தியம் இருக்கிறது. அதுதான் தயக்கத்தை ஏற்படுத்துகிறது. ஆக, என்னிடம் வருவதைவிட எனக்கெதிராய் அவர்கள் பேசக்கூடும். அவர்கள் வேறு யாரையோ திருப்திப்படுத்துவதற்காக எனக்கெதிராய் பேசவில்லை தங்களை நம்பவைக்கிற முயற்சியாகவே அவர்கள் அதைச் செய்கிறார்கள். அதனால்தான் அவர்களை என்னிடம் வரவேண்டாம் என்பது. மனம் தந்திரமானது அது உங்களிடம் முன்னணிப் பெற முயற்சிக்கும். நிங்கள் உண்மையிலேயே கவனமாயிராவிடில் மனம் ஏற்படுத்துகிற குழப்பத்தில் இருந்துவிடபட முடியாது.

**இன்று லாவோட்சுவும், பதஞ்சலியும் சந்தித்துக்கொண்டால் ஆன்மவளர்ச்சி பற்றிய தங்கள் போதனைகளில் உள்ள வேற்றுமைகளை அகற்றி சமரசப்படுத்துவது அவர்களால் முடிகிற காரியமா? அவர்களுடைய புத்தநிலையில் வேறுபாடு காணப்படவில்லை என்கிறபோது, அவர்களுடைய போதனைகள் மட்டும் வெகுவாய் வேறுபடுவது ஏன்? புத்தர்களின் போதனைகளை ஒருங்கிணைத்துக் கொண்ட ஒரு குரு உங்களுக்கு முன் இருந்ததில்லையே, அது ஏன்?**

இந்தக் கேள்வி மூன்று படிநிலைகளைக் கொண்டதாய் இருக்கிறது. முதல்படி: லாவோட்சுவும் பதஞ்சலியும் இன்ற சந்தித்துக் கொண்டால் ஆன்ம வளர்ச்சி குறித்த தங்கள் போதனைகளை சமரசப்படுத்திக் கொள்வார்களா? என்பது.

அவர்கள் சந்தித்துக் கொண்டால் வேற்றுமை அகற்றி சமரசப்படுத்திக் கொள்ளும்படியாய் எதுவும் இல்லை என்பதைக் காண்பார்கள் - ஒவ்வொன்றும் முன்பே சமரசநிலையில் இருப்பதைக் கண்டுகொள்வார்கள். அவர்கள் ஒருவரையொருவர் தழுவிக் கொள்வார்கள், கைகள் கோத்தபடி அமர்ந்திருப்பார்கள். ஆனால் பேசமாட்டார்கள். அவர்கள் முன்பே சொர்க்கத்தில் அதைச் செய்து கொண்டிருப்பார்கள். பிரச்சினையாய் தெரிவது உங்களுக்குத்தான் அவர்களுக்கில்லை.

பாதையில் போய்க் கொண்டிருப்பவர்களுக்குத்தான் பிரச்சினை, இலக்கை அடைந்தவிட்டவர்களுக்கல்ல. இலக்கில் எல்லாமே சமரசப்பட்டுவிடுகிறது. நோக்கம் ஒன்று, பாதைகளோ பலவாயிருக் கின்றன. நீங்கள் ஒரு பாதையில் செல்கிறபோது அடுத்தவர் மற்றொரு பாதையில் பயணம் செய்வதாய் உணர்கிறீர்கள். ஆனால், இலக்கை அடைகிறபோது எல்லாரும் ஒரே இலக்கை அடைகிறவர்கள் தாம் என்பதைச் சற்றும் எதிர்பாராத விதமாய் அறிகிறீர்கள். உண்மை ஒன்றாகவே இருக்கிறது.

ஆக, சமரசம் பற்றிய கேள்விக்கே இடமில்லை. பலவற்றையும் இணைக்கவேண்டிய அவசியமில்லை, முன்பே அவை இணைக்கப்பட்டுள்ளன முற்றிலுமாய். அவர்கள் வாய்விட்டு, மனம் விட்டுச் சிரிக்கலாம், தேநீர் பருகலாம், ஆனால் தத்துவார்த்தமான விவாதம் அவர்களுக்குள் நிகழப்போவதில்லை என்பது மட்டும் நிச்சயம். அவர்கள் சீட்டு ஆடலாம் அல்லது பொருளற்றதாய் எதையும் செய்யலாம் ஆனால் அறிவுக்கு ஏற்புடைய விவாதம் எதுவும் நடக்காது. சொர்க்கத்தில் இருக்கிற விடுவிக்கப்பட்டவர் களெல்லாம் என்ன செய்து கொண்டிருப்பார்கள் என்று நான் எப்போதும் சிந்தித்துப் பார்க்கிறேன். அவர்கள் சீட்டாடிக் கொண்டிருக்க வேண்டும், சதுரங்கம் - இப்படிப் பொருளற்ற செயல்களில் ஈடுபட்டிருப்பார்கள். என்ன... நீங்கள் அங்கே சென்றால் என்ன செய்வீர்கள்? விளையாடுவீர்கள். ஆனால் அது ஓர் ஆட்டத்தைக் குறிப்பிட்ட வகையில் ஆடுவதாகாது. விளையாட்டு

என்றால் விளையாட்டுதான். நீங்கள் அதை அனுபவித்து மகிழ்கிறீர்கள் ஒரு குழந்தை மாதிரி.

**கேள்வியின் இரண்டாம் பகுதி: புத்த நிலையில் அவர்களுக்கிடையே வேறுபாடு இல்லையென்றால் அவர்களுடைய போதனைகள் வெகுவாய் வேறுபடுகிறதே, அது ஏன்?**

போதனைகள் வேறுபடும் ஆனால் போதகர்கள் வேறுபடுவதில்லை. ஆசான் ஒருவர் தான். கற்பிப்பவை வேறுபடக் காரணம் கற்றுக் கொள்பவர்கள் வேறானவர்களாய் இருக்கிறார்கள். பதஞ்சலி வேறுபட்ட ஒரு வகையினருக்குச் சொல்லிக் கொண்டிருந்தார் - இதனை நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும். லாவோட்சு அதிலிருந்து மாறுபட்ட தன்மையுள்ளவர்களுக்குச் சொல்லிக் கொண்டிருந்தார்.

இந்தியாவில் மறையியல் (Mysticism) ரொம்பவும் தர்க்கரீதியான ஒரு தோற்றநிலையைக் கொண்டுள்ளது.

இந்தியா வெகுவாய் சிந்திக்கிற நாடு. அது 'எண்ணிப்பார்க்கவே முடியாதவற்றையும் (Unthinkables) எண்ணிப்பார்க்கிறது. அது கோட்பாடாக்க இயலாதவற்றையும் கோட்பாடுகளாக்குகிறது. விளக்க முடியாதவற்றை அது விளக்குகிறது. கடவுளை விவரிக்க முடியாது என்பார்கள். ஆனால் இந்திய மறை நூல்கள் விவரிக்கின்றன. உண்மையை வரையறுத்துச் சொல்ல இயலாது என்பார்கள் - இதைச் சொல்வதில் அவர்கள் அதை வரையறை செய்துவிட்டார்கள். 'வரையறுக்க இயலாதவை' என்பதன் மூலம் ஒரு பண்பை, தன்மையை அவர்கள் காட்டுகிறார்கள். 'கடவுளைப் பற்றி எதுவும் சொல்ல முடியாது' என்று சொல்லிக் கொண்டேயிருந்தாலும், உடனே அவர்கள் சொல்கிறார்கள், 'அவர் உங்களுக்குள் இருக்கிறார்' அல்லது 'சகலமும் அவரால் படைக்கப்பட்டது', 'அவரே அனைத்துமாய் இருக்கிறார்' என்று.

இந்தியா ஆழ்ந்து சிந்திக்கிற நாடு. அது சிந்திப்பதை விரும்புவது. நடைமுறையில் செய்ய இயலாத அளவிற்கு அது சிந்தனையை விரும்புகிறது. அவர்கள் சிந்தித்துச் சிந்தித்தே அது நடைமுறை சாத்தியமற்றதாகிப்போனது. இந்தியா அறிவியல் சார்ந்த நுட்பம் எதையும் உற்பத்தி செய்யவில்லை. மனம் நடைமுறையோடு கூடியதாயிருந்தால் ஏதோ ஒன்றைச் செய்வதில் அது ஆர்வம் காட்டியிருக்கும். இந்தியா நடைமுறை சாத்தியமற்றவற்றைச் சிந்திக்கிற

நாடு. அது சிந்தித்துக் கொண்டேயிருக்கும். முழுவாழ்க்கையும் சிந்தித்தலை வேலையாய்க் கொண்டிருப்பதாய்த் தெரிகிறது.

லாவோட்சுவின் சீனா முற்றிலும் வேறுபட்டது. அவரைச் சுற்றியிருந்த சீடர் கூட்டமுந்தான்... லாவோட்சு புதிதாய் எதையும் பரவச் செய்துவிடவில்லை. அது ஆயிரக்கணக்கான ஆண்டுகளாய் இருந்துவருகிற ஒரு மரபுதான். அவருக்கு ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்தே அது இருப்பது ஆகும். அது ரொம்பப் பழைமையானது. அந்தக் காலத்திய சீனா ஒரு சிந்தனையற்ற நாடு: குறைவான அளவில் சிந்திப்பது. அதிக அளவில் தியானிப்பது. அது சிந்தனையில் அக்கறை காட்டவில்லை, கோட்பாடுகளை, தத்துவங்களை உருவாக்குவதிலுந் தான். அழகான தத்துவங்களை அந்த நாடு உலகிற்கு அளித்துவிட வில்லை - இந்தியா அளித்திருக்கிறது. நீங்கள் எதிர்கொள்கிற பெரும்பாலான தத்துவங்களும் இந்திய மூலத்தை (seed)க் கொண்டவை. சில சமயங்களில் அது வியக்கத்தக்க தோற்றநிலையைக் கொண்டதாயிருக்கும்.

இந்திய ஒப்புமை *(parallel) இல்லாத எந்தவோர் உலகத் தத்துவத்தையும் நீங்கள் மனதில் ஏற்கமாட்டீர்கள். வேறெங்கோ சிந்திக்கப்படுகிற எந்த ஒன்றும் முன்பே இந்தியாவில் சிந்திக்கப் பட்டதாயிருக்கும். சிந்திப்பதில் யாரும் இந்தியாவுடன் போட்டியிட முடியாது. இன்றைய இந்தியர்களைப்பற்றி நான் சொல்லிக் கொண்டிருக்கவில்லை. அவர்கள் பழைய பெருமையின் ஒரு சிதைவாக இருப்பவர்கள். உண்மையில் இந்தியா இன்னமும் இருந்து கொண்டிருக்கவில்லை. புத்தரின் இந்தியாவோ, பதஞ்சலியின் இந்தியாவோ, உபநிஷத-வேதகால இந்தியாவோ எவ்வகையிலும் இருக்கவில்லை. அவர்கள் சிந்தித்து, சிந்தித்து உலகைப்பற்றிய சிறந்த கொள்கைகளை உருவாக்கினார்கள் ஆனால் அவை செயல்முறை அனுபவத்தின் அடிப்படையைக் கொண்டதாகவோ (empirical), நடைமுறைக்கு ஏற்றதாகவோ (practical) இருக்கவில்லை.

சீனா முற்றிலும் மாறுபட்டது. கோட்பாடுகளைச் சிந்திப்பதில் அவர்கள் ஆர்வம் காட்டவில்லை, சொல்லப்போனால் அவர்களுக்கு வாழ்வதில்தான் அக்கறை இருந்தது. அவர்கள் சிந்தன்னையைவிட இருப்புணர்வில்தான் ஆர்வம் கொண்டிருந்தனர். அத்துடன் லாவோட்சு ஓர் ஊசிமுனைக் கோபுரமாயிருந்தார்.

---

* **Parallel** - ஒரு போக்கிலான்வை, இசைவுடையவை, இணையாயிருப்பவை.

போதிதர்மர் சீனாவிற்கு சென்றபோது இவ்விருசக்திகளும் சந்தித்துக் கொண்டன, லாவோட்சுவின் தியானம் புத்தரின் ஆழ்ந்த சிந்தனை என்கிற இரண்டும். அவை சந்தித்துக் கொண்டதில் மிகவும் நேர்த்தியமான கருத்துகளுள் ஒன்றாகிய ஜென் (Zen) தோன்றியது. அதுபுத்தப் பண்பையும், லாவோட்சுவின் பண்பையும் கொண்டது. அது புத்தமதத்தைப் பின்பற்றுவதுமல்ல, லாவோட்சுவைப் பின்பற்றுவது மல்ல. உலகில் அதற்குமுன் நிகழ்ந்திராத மிகச்சிறந்த கலப்பின உற்பத்தி அது.

பதஞ்சலி, அறிந்து கொள்ளமுடியாத இவ்வுலகில் ரொம்பவும் தர்க்க ரீதியானவர். படிப்படியாக நகர்ந்து மூலத்தின் மெய்ம்மை காண்பவர் (analytical) அவர். அவரால் ஓர் ஐன்ஸ்டீனை, விட்ஜென்ஸ்டீனை அல்லது ரஸ்ஸலை திருப்திப்படுத்த முடியும். லாவோட்சுவால் ஐன்ஸ்டீனை திருப்திப்படுத்த முடியவில்லை. ரஸ்ஸல் அல்லது விட்ஜென்ஸ்டீனையும் அவர் திருப்திப்படுத்த முடியாமல் போனது.

காரணம் அவர் அறிவுக்கு ஏற்புடைமையற்றவராய் (abfurd) தெரிந்திருக்க வேண்டும். அவர் பயன்படுத்த முடியாத ஒன்றைப் பற்றி ரொம்பத் தெளிவாய் சொல்லியிருப்பார். ஆனால் பதஞ்சலி எந்தவொரு விஞ்ஞானபூர்வமான சிந்தனையையும் திருப்திப்படுத்து கிறவராய் இருப்பார் காரணம் அவர் உரைத்ததெல்லாம் விஞ்ஞான பூர்வமானவை. அதுவுமல்லாமல் அவர் படிப்படியாய் ஒவ்வொரு கண்ணி (இணைப்பு) யையும் வெளிக்காட்டியபடி செயல்பட்டிருப்பார்.

விளக்கங்கள் வேறானவை காரணம் பதஞ்சலி இந்தியாவில் தோன்றியவர் - அவர் சொன்னதெல்லாம் இந்தியர்களுக்கானவை. ஆழ்ந்து சிந்திக்கிற நாடு இது. லாவோட்சு மறை ஞானிகளுக்காகப் பேசியவர். அந்த காலத்தில் மிகவும் தியானத்தில் இருந்த நாடு அவருடையது. இருவரும் வெவ்வேறு மக்களுக்காகச் சொன்னவர்கள், அவர்களைச் சுற்றியிருந்த சீடர்கள் வெவ்வேறு வகையினராவர். போதிக்கப்படுவர்களுக்கேற்ப போதனைகள் வேறுபடும். போதிப்பவர்கள் (ஆசான்கள்) வேறுபடுவதில்லை. நீங்கள் பதஞ்சலியைத் தனியாகவும் லாவோட்சுவைத் தனியாகவும் விட்டால் அவர்கள் ஒரேமாதிரியாயிருப்பார்கள். ஆனால் பதஞ்சலி தன்னுடைய மாணவர்களுடன் இருக்கும்போது, லாவோட்சு தன்னுடைய சீடர் களுடன் இருக்கும்போது இயல்புமாறியவர்களாய் காணப்படுவார்கள்.

பதஞ்சலியும் லாவோட்சுவும் அமைதியாய் இருக்கும்போது ஒன்றாகவே தெரிவார்கள். ஆனால் அவர்கள் யாருடனாவது விவாதம் செய்கிறபோது முற்றிலும் வேறானவர்களாகி விடுவார்கள். ஓர் ஆசான் தன்னுடைய சீடனுக்கேற்பவே போதிக்க வேண்டியிருக்கும் - அந்தச் சீடனுடைய புரிந்துகொள்ளும் திறன், விருப்பம், அறிவு, நிலைமை இவற்றைக் கருத்தில் கொள்ளும்படி இருக்கும். தம்முடைய மாணவனின் நிலைக்கு தம்முடைய போதனையை அவர் கொண்டுவர வேண்டும் இல்லையேல் அவர் ஓர் ஆசிரியராய் திகழ முடியாது. அதனால்தான் கற்பிக்கப்படுகிறவற்றில் வேறுபாடு காணப்படுகிறது.

இன்னொரு விசயம்: மக்கள் இரண்டு வகையினர் ஒரு வகையினர் மிகவும் துணிச்சலுடையவர்கள், குதிக்கத் தயாராயிருப்பவர்கள். உண்மையில் ஆபத்தை எதிர்கொள்ளும் அளவுக்கு ஆபத்தான துணிவு. ஆனால் அது பகுத்தறிவிற்குப் புறம்பானது. ஒரு குறிப்பிட்ட மனநிலையில் அவர்கள் குதித்தலை மேற்கொள்வார்கள், விளைவைப் பற்றிக் கவலைப்படுவதில்லை. இன்னொருவகையும் உண்டு - தயக்கம் கொள்வது. நிகழவிருப்பதை, அதன் விளைவை, அதனால் ஏற்படக் கூடியபலனை உறுதிப்படுத்திக் கொண்ட பின்னே அவர்கள் செயல்படுவார்கள். பதஞ்சலி, குதிப்பதற்கு முன் நம்பிக்கையூட்டப்பட வேண்டியவர்களுக்கென்றே ஒரு முறையீட்டை வைத்திருக்கிறார். லாவோட்சு நம்பிக்கை பற்றிக் கவலைப்படாதவர்களுக்கானவர், அவர்கள் குதிக்கத் தயாராயிருப்பவர்கள். இந்த இரண்டு வகையினருக்கான போதனைகளும் வெவ்வேறானவை. ஆனால், போதிப்பவர்கள் ஒரே நிலையில் இருப்பவர்கள் தாம்.

**மூன்றாவது பகுதி: 'புத்தர்களின் போதனைகளை ஒருங்கிணைத்துக் கொண்ட ஒரு குரு உங்களுக்கு முன் இருந்ததில்லையே, அது ஏன்?**

அதற்கு அவசியம் இருந்திருக்கவில்லை. ஆனால் தற்போது அவசியப்படுகிறது. கடந்த காலத்தில் உலகம் பகுதிகளாய் பிரிந்து கிடந்தது. உலகம் ரொம்பப் பெரியதாயிருந்தது. மக்கள் தங்களுடைய நாடுகளின் எல்லைகளுக்குட்பட்டிருந்தார்கள். விளக்கங்கள் எதிர்கொள்ளப்படவில்லை. முகமதியார் ஒரு முகமதியர் போலவே வாழ்ந்தனர்; வேதங்கள் சொல்வதை அறிந்திருக்கவில்லை. ஒரு இந்துவானவர் இந்துவாகவே வாழ்ந்தார். உண்மையில் ஜராதுஷ்ட்ரர் என்ன சொன்னார் என்பது ஒரு போதும் தெரிந்திருக்காது. ஆனால்

தற்போது உலகம் ரொம்பவும் சிறியதாகிவிட்டது. ஒரு கோளவடிவமான ஒரு கிராமமாய் உலகம் பெருமளவு சுருங்கிவிட்டது. இன்று ஒவ்வொருவரும் எல்லாவற்றையும் அறிந்திருக்கிறார்கள். ஒரு கிறிஸ்துவர் அப்படியே கிறிஸ்துவராய் மட்டும் இருந்துவிடவில்லை, அவருக்கு கீதை தெரிந்திருக்கிறது. குர்-ஆன் என்ன செல்கிறது என்பதை அவர் அறிவார். தற்போது குழப்பம் இருக்கும் காரணம், குர்-ஆன் ஒன்றைச் சொல்லும், கீதை ஒன்றைச் சொல்லும், பைபிள் வேறொன்றைச் சொல்லும், தற்போது ஒவ்வொருவரும் தம்மைச் சுற்றியிருக்கிற மற்றொன்றை அறிந்து (மேலும் அதிகமாய்) கொண்டிருக்கிறார்கள். மக்கள் ஒரு நாட்டிலிருந்து மற்றொரு நாட்டுக்குச் செல்கிறார்கள். இங்கே பலருக்கும் பல ஆசான்கள். ஒவ்வொருவரும் ஓர் ஆசானை விட்டு இன்னோர் ஆசானிடம் செல்கிறார்கள், அதனால் ஒரே குளறுபடி.

ஒரு பெரிய அளவிலான கூட்டிணைவு (Synthesis) தேவைப் படுகிறது. எதிர்காலத்தில் மதங்கள் தனித்தனியே இயங்க முடியாது. அது சாத்தியமற்றதாகிவிடும்.

நான் ஒரு புதிய ஆலயத்துக்கான அடித்தளத்தை உருவாக்கு கிறேன், - அது ஒரு தேவாலயமாய், மசூதியாய், குருத்வாரமா யிருக்கும். ஒரு கிறிஸ்துவரல்லாத, இந்துவல்லாத, முகமதியரல்லாத மத நம்பிக்கையுள்ள ஒருவருக்கான அடித்தளத்தை நான் உருவாக்கு கிறேன். மத நம்பிக்கையுள்ளவராயிருங்கள். ஒரு மிகப்பெரிய இணைப்புக்கான காலம் கனிந்து வந்திருக்கிறது. இதற்குமுன் ஒருபோதும் அப்படியிருந்ததில்லை.

முகமதியரல்லாதவர்களிடம் புத்தர் தமது கருத்துகளை வெளியிட்டிருக்கிறார். யூதர்கள் நடுவே இயேசு சொற்பொழி வாற்றியிருக்கிறார். அவர் யூதர்களிடம் பேசினார். நான் யாரிடம் பேசுவது? இங்கே யூதர்கள், கிறிஸ்துவர்கள், முகமதியர்கள், சமணர்கள், புத்த மதத்தைச் சேர்ந்தவர்கள், சீக்கியர்கள் என்று எல்லாரும் இருக்கிறார்கள். இங்கே ஒரு சிறிய உலகமே இருக்கிறது. மக்கள் ஒருவரையொருவர் புரிந்து கொண்டுவிடுகிறபோது, விரைவிலேயே வேற்றுமைகள் தொலைந்து போகும். ஒரு கிறிஸ்துவர் உண்மையி லேயே கீதையைப் புரிந்து கொண்டுவிடுகிறபோது கீதைக்கும் பைபிளுக்கும் உள்ள வேற்றுமை மறைந்துவிடும். அவை ஒரு முழுமையாகிவிடும்.

அதனால்தான் நான் அனைத்து குருமார்களையும், அனைத்து முறைகளையும் பற்றிப் பேச முயற்சிப்பது. அவ்விதமாய் ஓர் அடித்தளத்தை உருவாக்க முடியுந்தானே. எதிர்காலத்திய ஆலயமும், எதிர்கால மனிதனும் அந்த அடித்தளத்தில் நிற்பார்கள். அவர் கிறிஸ்துவராய் இருக்கமாட்டார். உண்மையிலேயே இனி வருங் காலத்தில் ஒருவர் கிறிஸ்துவராயிருந்தால் அவர் சற்றுப் பழைமையானவரார் கருதப்படுவார். ஒருவர் இந்துவாயிருந்தால் கொஞ்சம் முட்டாளாய் தெரிவார். முகமதியராய் சொல்லிக் கொள்பவர் சம காலத்தவராய் கருதப்படமாட்டார். மதத்தின் எதிர்காலம் - எல்லாமதங்களும் ஒன்று கலந்து கடைசியில் மறைந்துவிடும்.

அதனால்தான் கடந்தகாலத்தில் அது தேவைப்படவில்லை, தற்போது தேவைப்படுகிறது. தற்போது மனிதன் மகத்தான திருப்பு முனைகளுள் ஒன்றில் இருக்கிறான். எப்போதுமே இருபத்தியைந்து நூற்றாண்டுகளுக்கொருமுறை மனிதகுலம் ஒரு மாற்றத்தைச் சந்திக்கும். அந்த வட்டம் பூர்த்தியாகிவிட்டது. மனித உணர்வு புத்தருடைய காலத்தில் ஒரு திருப்பத்தைக் கண்டது. தற்போது இருபத்தியைந்து நூற்றாண்டுகள் முடிந்துவிட்டபடியால் வெகு சீக்கிரமே மாற்றம் ஏற்படவேண்டியிருக்கும்.

விழிப்போடிருப்பவர்கள் இந்த மாற்றத்தைப் பயன்படுத்திக் கொள்வதன் மூலம் அனுகூலமடைய முடியும். காரணம் அந்த அலையை (நேரத்தை அவர்கள் பயன்படுத்திக் கொண்டுவிடுவார்கள். அவர்கள் அலைமீது (நேரம்) பயணிக்கிறவர்கள். அவர்களால் எளிதில் வீடு திரும்ப இயலும். கடல் நலிவுற்று பின்னோக்கிப் பாயுமாயின் கரையை அடைவது கடினம். கடல் மட்டத்தில் ஏற்ற இறக்கம் இருந்தால்தான் அலைகள் கரைநோக்கிச் செல்லும் - உங்கள் படகை அதன்போக்கில் விடலாம், அலைகள் உங்களைச் சுமந்து செல்லும்.

இருபத்தியைந்து ஆண்டுகளுக்குள் வரலாறு குறிப்பிடத்தக்க முனைகளை அடையும். மனித உணர்வும் ஒரு மாற்றத்தை மேற்கொள்ளும். நீங்கள் அந்தச் சமயத்தில் தயார்நிலையோடும், ஆழ்ந்து எண்ணும் நிலையிலும் இருந்தால் அடுத்த இருபத்தியைந்து நூற்றாண்டுகளுக்குச் சாத்தியமாகாதவையெல்லாம் பெருமளவு சாத்தியமாகிவிடும். பதஞ்சலியின் காலத்தில் ஒரு திருப்பம் ஏற்பட்டது. புத்தருக்கு இருபத்தியைந்து நூற்றாண்டுகளுக்கு முன்பாய் பதஞ்சலி இருந்திருக்கிறார். எப்போதுமே இது அப்படித்தான் இருந்தது:

ஒரு குறிப்பிட்ட காலத்தில் உலகம் சூரியனை ஒரு சுற்றுச் சுற்றுகிற மாதிரிதான் இதுவும், ஒட்டுமொத்த மனித உணர்வும் ஒரு வட்டத்தில் சுழல்கிறது. ஒரு குறிப்பிட்ட கால அளவில் அது தொடங்கிய மூலத்துக்கே வந்தடைகிறது. அதுவே இருபத்தியைந்து நூற்றாண்டுகள். அந்தத் திறனாய்வுக்கான தருணம் அருகில் இருக்கிறது. அது பெரும் மாற்றங்கள் சார்ந்தது. பல கூறுகள் கொண்டது. உங்கள் மனம் பலவற்றையும் சேர்த்து இணைக்காவிடில் – நீங்கள் ஒரு முகமதியராய், ஒரு கிறிஸ்துவராய் இருப்பீர்கள். பழைமையனவராய், கடந்தகாலத்துக்குரியவராய் ஆகிவிடுவீர்கள். நீங்கள் இங்கே இருக்கவில்லை, நிகழ்காலத்துக்குக் கிடைக்கக் கூடியவராயில்லை. உங்களை நிகழ்காலத்தில் 'பொருந்தச் செய்வதற்கு, விரைவில் நடக்கப்போவதை புரிந்துகொள்ளும் திறமையுடையவராக்குவதற்குத் தான் இந்த ஒட்டுமொத்த இணைப்பு வேலையும்.

***'மனதின் குரலை மட்டுமே நாங்கள் பெற்றிருக்கிறோம் என்பதை அறிந்திருந்தும், 'உங்களுக்குள்ளிருந்து எழும் குரலைக் கேளுங்கள், அதற்கேற்ப நடந்து கொள்ளுங்கள்' என்று எங்களிடம் சொல்வதன் மூலம் தாங்கள் எதைக் குறிப்பிடுகிறீர்கள்? வெற்றிடத்தில் ஏது குரல்?***

ஆம். வெற்றிடம் தனக்கென்று ஒரு குரலைக் கொண்டிருக்கும். நேர்ச்சரியாகப் பொருள் கொண்டால் அது ஒரு குரலாகாது. அது ஓர் உள்ளக்கிளர்ச்சி – தூண்டுதல் (Urge). அது சப்தமல்ல நிசப்தம், ஓசையல்ல அமைதி. ஒன்றைச் செய்யும்படி யாரும் சொல்வதில்லை. நீங்கள் செய்வதாய் உணர்கிறீர்கள். உள்ளிருக்கும் குரலைக் கேட்பதென்பது உள்ளிருக்கும் வெறுமை (emptiness) எல்லா வற்றையும் விட்டுவிடுவதென்று பொருள். அப்போது அது உங்களை வழி நடத்தும். வெறுமையுடன் செயல்படுகிறபோது நீங்கள் சரியாகவே செயல்படுகிறீர்கள். நீங்கள் உள்ளார்ந்த வெறுமையைக் கொண்டிருந் தால் அதில் தவறேதுமில்லை, எதுவும் தவறாகிவிடாது. வெறுமையில் எதுவும் தவறாகிவிடுவதற்கில்லை – இதுவே சரியாக இருக்க உதவும் நெறிமுறையாகும். ஆம், வெறுமை தனக்கென்று ஒரு குரலைக் கொண்டது. அமைதி தனக்கென்று ஒரு நடனத்தைக் கொண்டிருக் கிறது. தனக்கென்று ஓர் இசையையுந்தான். ஆனால், நீங்கள் அதை அடைந்தாக வேண்டும்.

'மனதைக் கவனியுங்கள் என்று நான் சொல்லவில்லை. உண்மையில் மனம் உங்களுடையதல்ல. 'உங்கள் குரலைக்

கவனியுங்கள்' என்று நான் சொல்கிறபோது சமுதாயம் உங்களுக்கு வழங்கியதை எல்லாம் விட்டுவிடுங்கள் என்றே கருத்தில் கொள்கிறேன் - உங்கள் மனம் சமுதாயத்தால் வழங்கப்பட்டது. உங்கள் மனம் உங்களுடையதல்ல. அது ஒரு சமுதாயத்தை அடிப்படையாய்க் கொண்டது, சமுதாயத்தில் உள்ள மக்கள் சார்ந்தது. உங்கள் நடத்தையை ஒருமுகப்படுத்துவது, வெறுமைதான் உங்களுடையது, மனம் உங்களுடையதாகாது. மனம் இந்துவாய், முகமதியராய், கிறிஸ்துவராய் இருக்கிறது. மனம் ஒரு பொதுவுடைமைவாதியாய், பொதுவுடைமைக் கொள்கைக்கு எதிராய், முதலாளியாய் இருக்கிறது. வெறுமை என்பது யாருமல்ல, எதுவுமல்ல. அது சூன்யம் ஆகும். அந்தச் சூன்யத்தில் ஏதுமற்ற நிலை (nothingness)யில் இருக்கிறது உங்கள் இருப்புணர்வின் கன்னித் தன்மை. அதைக் கவனியுங்கள்.

அதைக் கவனித்துக் கேளுங்கள் என்று நான் சொல்கிறபோது உங்களிடம் யாரோ ஒருவர் பேசுவதாய் நான் குறிப்பிடவில்லை.

அதைக் காதுகொடுத்துக் கேளுங்கள் என்று நான் சொல்கிற போது அதற்குப் பயன்படத்தக்கவராய் இருங்கள் என்பதையே நான் கருத்தில் கொள்கிறேன், உங்கள் காதுகளையும், இருப்புணர்வையும் அதனிடம் கொடுங்கள். அது உங்களை வழி நடத்தும். அது எவரையும் தவறான வழியில் செலுத்தியதில்லை. ஏதுமற்றதில் இருந்து வருவது எதுவாயினும் அது நேர்த்தியாகவும், உண்மையாகவும், விரும்பத்தக்கதாகவும், பேரின்ப நிலையாகவும் இருக்கும்.

**'சௌச ஸந்தோஷ தப:**
**ஸ்வாத்யாயேச்வர**
**ப்ரணி தானானி நியமா'**

32. *அகம் மற்றும் புறத்தூய்மை, மனநிறைவு, தன்னொழுக்க முறைகளில் கண்டிப்பாயிருத்தல், சுய விசாரணை (ஆராய்தல்), இறைவனிடம் சரணாகதி இவை கருத்தூன்றிக் கவனிக்கப்பட வேண்டிய சட்டங்கள்.*

**'விதர்க்க பாதனே பிரதிபக்ஷ பாவனம்'**

33. *யோகத்திற்கு எதிரான எண்ணங்களைத் தடுக்க அவற்றிற்கு நேர்மாறான எண்ணங்களைக் கொண்டு வரவேண்டும்.*

**விதர்கா ஹிம் ஸாதய: க்ருத காரி தானு**
**மோதிதா**

**லோபக்ரோத மோஹ பூர்விகா ம்ருது**
**மத்யாதி மாத்ரா**

**து: க்காஜ் ஞானானந்த பவா**
**இதி ப்ரதிபட்ச பாவனம்**

34. *எதிரிடையானவற்றையும் சிந்திப்பது அவசியம், ஏனெனில் தவறான எண்ணங்கள், உணர்ச்சிகள், செயல்கள் – கொலை, பொய் போன்றவை அறியாமையிலும், பெருந்துன்பத்திலும் முடியும். இவற்றைச் செய்தாலும், செய்வித்தாலும், ஆமோதித்தாலும் இவை குறைந்தோ, நடுத்தரமாகவோ, பெரிய அளவிலே இருந்தாலும் முடிவில் அளவற்ற கேடுகளை விளைவிக்கும்.*

*சட்டங்கள் இருக்கின்றன. பல சட்டங்கள். மனிதனை அடக்குவதற்கான சட்டங்கள், அவனை மலர்விக்க உதவும் சட்டங்கள். தடை செய்யவும், கட்டுப்படுத்தவும் செய்கிற சட்டங்கள், அவன் விரிவடையவும், வளரவும் துணைபுரியும் சட்டங்கள் என்று பல. தடை செய்கிற சட்டம் தீங்கானது, வளரவும், மேம்படவும் உதவுகிற சட்டமே*

ஆக்கபூர்வமானது. பழைய ஏற்பாட்டில் (Old Testament) உள்ள பத்துக் கட்டளைகளும் பதஞ்சலியின் விதிகளில் இருந்து வேறுபடுகிறவை. அந்தப் பத்துக் கட்டளைகளும் தடைசெய்பவை, கட்டுப்படுத்துகிறவை, அடக்கிவைக்கிறவை. ஒருவர் எதைச் செய்யக் கூடாது, எதைச் செய்ய வேண்டும் என்பதற்கு முக்கியத்துவம் அளிப்பவை. இரண்டுக்குமிடையே மிகப்பெரிய வேறுபாடு இருக்கிறது.

பழைய ஏற்பாட்டில் விதிகளே இலக்காகவும், மனிதன் அவற்றுக்காக இருப்பதைப்போலவும், அவை மனிதனுக்காக இருக்கவில்லை என்பது போலவும் தெரிகிறது. பதஞ்சலிக்கோ விதிமுறைகளில் ஒரு பயனுடைத்தன்மை (Utility) இருப்பதாய் தெரிகிறது. ஆனால் அவையே இறுதியாயும், முழுமையாயும் ஆகிவிடாது. மனிதன் அவற்றுக்காக இருக்கவில்லை. அவையே மனிதனுக்காக இருக்கின்றன. அவை சாதனங்கள், ஒருவர் அவற்றின் வழியே செல்ல வேண்டும், அவற்றுக்கப்பால் செல்ல வேண்டும். அது நினைவில் கொள்ளப்பட வேண்டியது. இல்லையேல் பதஞ்சலியைப் பற்றி ஒரு தவறான அபிப்ராயத்தையே நீங்கள் கொண்டிருக்கும் படியாகும்.

பொதுவாக மதங்கள் ரொம்பவும் கேடு செய்யப்கூடியவைதாம். அவை ஒட்டுமொத்த மனித குலத்தையும் முடமாக்கிவிட்டன. அவை எல்லாரையும் குற்றவாளியாக்குகிறது - மனிதனுக்கெதிரான மிகப்பெரிய குற்றம் இதுவேயாகும். முழுத்தந்திரமும் இதுதான். முதலில் மக்களைக் குற்ற உணர்வுடையவராக்குவது. அவர்கள் குற்ற உணர்வில் நடுங்கியப்படி - அச்சத்தில், பயத்தில், துன்பச்சுமையுடன், நரகத்தில் உழலும்போது, அவர்களை வெளிக் கொண்டுவர நீங்கள் உதவுகிறீர்கள், அந்நிலையில் நீங்கள் வந்து, எப்படி விடுபடுவதென்று அவர்களுக்கு விளக்குகிறீர்கள். முதலாவது, குற்றத்தை எதற்காகத் தோற்றுவிப்பது? ஒருவன் குற்றவாளியாகிறபோது அவனுக்கு வளர்ச்சி பற்றிய பயம் வருகிறது. அவன் செயலற்றவனாகிறான், தனக்குப் பரிச்சயமில்லாத தான் அறிந்திராத ஒன்றில் ஈடுபட அஞ்சுகிறான். மாற்றம், வளர்ச்சி எதுவும் இல்லாமல் ஓர் உயிரற்ற பொருளாகி விடுகிறான். அந்நிலையில் அவனைப் பாவத்திலிருந்து காப்பாற்ற எல்லாரும் பாடுபடுகிறார்கள்.

பதஞ்சலி எந்த ஒன்று பற்றியும் உங்களைக் குற்றவாளியாக்கி விடுவதில்லை. அந்தச் சொற்பொருளில் அவர் மதச்சார்பைவிட

கூடுதலான அறிவியல் சார்பையே கொண்டிருக்கிறார். ஒரு மதகுருவைவிட மிகுதியான அளவு உளவியல் நிபுணராகவே அவர் இருக்கிறார். அவர் மதபோதகரல்லர். அவர் எதைச் சொன்னாலும் எப்படி வளர்வதென்பதைச் சொல்லும் வரைபடத்தின் நிழற்பட அச்சாகவே (blue-áint) அது இருக்கும். நீங்கள் வளர்ச்சியடைய விரும்பினால் உங்களிடம் ஒழுங்கு முறை இருக்க வேண்டும். ஒழுங்கு முறை என்பது வெளியில் இருந்து சுமத்தப்படுவதாய் இருக்கக் கூடாது. இல்லையேல் அது குற்ற உணர்வை உண்டுபண்ணும். ஒழுங்குமுறை என்பது உள்ளார்ந்த புரிதலில் (understanding) இருந்து வரவேண்டும். அப்போதுதான் அது நேர்த்தியாயிருக்கும். வேறுபாடு வெகுநுட்ப மானது. ஒன்றைச் செய்யும்படி உங்களுக்குச் சொல்லப்படலாம். பிறகு நீங்கள் அதைச் செய்கிறீர்கள் ஆனால் ஒரு அடிமையைப் போல் அதை நீங்கள் செய்கிறீர்கள். குறிப்பிட்ட நிகழ்வை, தோற்றநிலையைப் புரிந்து கொள்வது உங்களுக்குப் பயனளிப்பதாயிருக்கும்.

புரிந்து கொள்ளும் திறனோடு ஒன்றைச் செய்கிறபோது ஓர் எசமானனைப் போல் அதைச் செய்கிறீர்கள். நீங்கள் ஓர் எசமானனாயிருக்கும் போது நேர்த்தியாய் காட்சியளிக்கிறீர்கள், ஒரு அடிமை நிலையில் அருவருக்கத்தக்கவராகிவிடுகிறீர்கள்.

நான் ஒரு இத்திஷ் (Yiddish) நகைச்சுவையைக் கேட்டிருக் கிறேன். ஸூம்பாக் என்ற பெயரில் ஒரு தையற்காரன் இருந்தான். அவனிடம் ஒருவன் வந்தான். அவன் தயாராகியிருந்த தன்னுடைய ஆடைத் தொகுப்பை (suit) வாங்கிச் செல்வதற்காக வந்திருந்தான். ஆனால் சட்டையின் கைகளை மறைக்கும் பகுதிகளில் ஒன்று மற்றதைவிட நீளமாயிருக்கக் கண்டான். அவன் அதைப்பற்றி அமளி செய்யத் தொடங்கினான். தையற்காரன் ஸூம்பாக் அவனிடம் ‘எதற்காக இப்படிச் சின்ன விசயத்தைப் பெரிதாக்கி தொல்லை பண்றே? இப்போ என்னாச்சு? இதோ பார். இது கலைத்திறனோடு செய்கிற வேலை. ஒரு சின்னக்குறைபாட்டுக்கு இத்தனை ஆர்ப்பாட்டமா? நீ ஒரு கையைக் கொஞ்சம் உள்ளுக்கிழுத்திட்டா சரியாயிருமே’ என்றான்.

எனவே அந்த ஆள் முயன்று பார்த்தான். ஆனால் அவன் தனது கையை உள்ளுக்கிழுத்ததும் முதுகுப்பக்கம் எதையோ குவித்து வைத்த மாதிரி இருந்தது. அவன் சொன்னான், ‘ஒரு பொருளை முதுகில் குவிச்சாப்பல இருக்கு’ என்று.

தையற்கார ஸூம்பாக் சொன்னான், 'அதனால் என்ன. நீ கொஞ்சம் முன்பக்கமாய் உடலை வளைத்து கூன்போடு. ஆனால் இது ஒரு கலைத்திறனோடு கூடிய அழகான படைப்பு. நான் இதை மாற்றத் தயாரில்லை. பார், இது எத்தனை நேர்த்தியாயுள்ளது?' என்று.

எனவே அந்த ஆள் கூனிக்குறுகி நடந்து சென்றான். ஒரு கையை உள்ளுக்கிழுத்துக் கொண்டு நடப்பது மிகவும் சிரமமாயிருந்தது. அந்நிலையில் அவன் கூன்போட்டவனாகவே இருக்க நேர்ந்தது. அப்போதுதானே ஆடைத் தொகுப்பு அழகாய்த் தெரியும். அவ்வழியே வந்த இளைஞன் ஒருவன் 'அட, 'சூட்' எத்தனை அழகாருக்கு. நான் பந்தயம் கட்டுவேன், இந்த உடையைத் தயாரித்தது தையற்காரர் ஸூம்பாக்தானே? என்று கேட்டான்.

முதலாமவனுக்கு ஆச்சரியம். அவன் சொன்னான், 'ஆமாம், அது உனக்கெப்படித் தெரியும்?'

அந்த ஆள் சொன்னான், 'எப்படித் தெரியுமா? அவரால்தானே உன்னைமாதிரி முடவனுக்கு இத்தனை அருமையான 'சூட் தைக்க முடியும்' என்று.

மனித குலமனைத்துக்கும் அத்தனை மதங்களின் வழியேயும் இதுதான் நடக்கிறது. அவர்கள் அழகான சட்டங்களை உங்களுக்காகச் செய்துவைத்திருக்கின்றனர். 'கொஞ்சம் கூனிக்குறுகிக் கொள், அதனால் என்ன. எல்லாம் சரியாருக்கு. நீ அழகாய் தெரியறே' என்று அவர்கள் சொல்லிவிடுகிறார்கள். சட்டந்தான் பின்பற்றப்பட வேண்டியது, நிறைவேற்றப்பட வேண்டியது. சட்டமே முடிவெல்லை, நீங்களல்ல. நீங்கள் முடமாகிவிட்டால் ரொம்ப சரி. நீங்கள் கூனனாகிவிட்டால் அதுவும் சரியே. நீங்கள் நோயாளியாகிவிட்டாலும் பரவாயில்லை – ஆனால் சட்டம் நிறைவேற்றப்பட்டேயாக வேண்டும்.

பதஞ்சலி அந்த வகைச் சட்டங்களை உங்களுக்கு வழங்க வில்லை. அவர் அதிகம் அறிந்தவர். சூழ்நிலையை முழுமையாய் புரிந்து வைத்திருப்பவர். உங்களுக்கு உதவுவதற்காகத்தான் சட்டங்கள் இருக்கின்றன. ஓர் அடுக்கு மாடிக்கட்டடத்தை நீங்கள் கட்டுவதற்கு முன் செய்யப்படுகிற ஓர் அமைப்பு போன்றது அது.

புதிய கட்டடம் மேலெழு அது உதவும். கட்டடம் தயாரானதும் அந்த அமைப்பு (சாரம்) நீக்கப்பட்டுவிடும். அது ஒரு குறிப்பிட்ட நோக்கத்துக்கானது. அதுவே முடிவெல்லையாகிவிடாது. எல்லாச்

சட்டங்களுமே ஒரு குறிப்பிட்ட நோக்கத்தைக் கொண்டதுதான். அவை உங்கள் வளர்ச்சிக்குத் துணைபுரியும்.

முதலாவது யமம், சுயக்கட்டுப்பாடு. அகிம்சை, சத்தியம் போன்ற அந்த ஐந்து உறுதிமொழிகளை நீங்கள் கருத்தூன்றிக் கவனித்திருக்க வேண்டும். அவை ஒரு தனித்தன்மையைக் கொண்டவை. அவற்றை ஒரு சமுதாயத்தில் மட்டுமே நீங்கள் செயற்படுத்த முடியும். நீங்கள் தனியே ஒரு காட்டில் இருந்து கொண்டு அதைச் செயற்படுத்த முடியாது. அப்போது அதற்கான தேவையோ, வாய்ப்போ இருக்காது. வேறொருவர் இருக்கிற இடத்தில்தான் நீங்கள் உண்மையாயிருக்க முடியும். ஓர் இமயத்தின் சிகரத்தில் நீங்கள் தனித்திருக்கும்போது உண்மையைப் பற்றிக் கேள்வியெழாது காரணம் அங்கேயெப்படி நீங்கள் பொய் சொல்வீர்கள் - யாரிடம்? அதற்கு வாய்ப்பில்லையே.

யமம் என்பது உங்களுக்கும் மற்றவர்களுக்கும் இடையேயான ஒரு பாலம். உங்களுக்கும் மற்றவர்களுக்கும் நடுவே ஓர் ஒத்திசைவை நீங்கள் ஏற்படுத்திக் கொள்ள வேண்டும். உங்களுக்கும் அவர்களுக்கும் இடையே ஒரு தீர்வு காணப்படவில்லையென்றால் அவை தொடர்ந்து கவலையை உண்டுபண்ணும். முதலாவதன் பொருள் இதுதான் - ‘மற்றவர்களுடனான எல்லாக் கணக்குகளையும் முடித்துக் கொள்ளுங்கள்’...

நீங்கள் மக்களுடன் சண்டையிட்டால் மன இறுக்கமும், கவலையும் இருக்கவே செய்யும். உங்கள் கனவில் கூட அது கெட்டகனவாய் இருக்கும். ஒரு நிழலைப் போல் அது உங்களைத் தொடரும். நீங்கள் எங்கிருந்தாலும் அங்கே அது இருக்கும். உண்பதில், உறங்குவதில், தியானத்தில் - கோபம், வன்முறை இருக்கும். அது ஒவ்வொன்றின் நிறத்தையும் மாற்றிவிடும். அது எல்லாவற்றையும் பாழ்பண்ணிவிடும். நீங்கள் வீட்டில் இருந்தாலும் நிம்மதியாயிருக்க முடியாது.

எனவே, பதஞ்சலி சொல்கிறார், முதலாவதாய், யமத்தைக் கொண்டு, மக்களுடன் விசயங்களை சீர்படுத்திக் கொள்ளுங்கள். உண்மையற்றவராகவோ, வன்முறையில் ஈடுபடுபவராகவோ, உடைமைத் தனத்துடனோ இருக்க வேண்டாம். அப்போதுதான் உங்கள் நடுவே மோதல் இருக்காது - ஒத்திசைவு ஏற்படும். இதுவே உங்கள் இருப்புணர்வில் போடப்படுகிற முதல் வட்டம் - உங்களுடைய புற எல்லை, அங்கேதான், மற்றவர்களுடைய புறஎல்லைகளை

(periphercis) நீங்கள் தொடுகிறீர்கள். இது உடனடியாய் அமைதிப்படுத்தப்பட வேண்டியது. அதன் பின்னரே முழுமையுடன் நீங்கள் நெருக்கமாயிருக்க முடியும். அந்த நெருக்கத்தால் மட்டுமே வளர்ச்சி சாத்தியப்படும். இல்லையேல், வெளியில் இருந்து உண்டாகும் கவலைகள் பலதாகி, அவை உங்கள் கவனத்தை ஈர்க்கும், உங்களுடைய சக்தியை அவை சிதறடிக்கும், வீணாக்கி விடும். அவை உங்களை ஏகாந்தமாய், அமைதியாய் இருக்கவிடாது. நீங்கள் மற்றவர்களுடன் அமைதியாயில்லாவிட்டால் உங்களுடனும் நீங்கள் அமைதியாயிருக்க முடியாது. எப்படி இருக்க முடியும்?

ஆக முதல் காரியம் மற்றவர்களுடன் அமைதியாயிருப்பது. அப்போதுதான் உங்களுடன் நீங்கள் அமைதியாயிருக்க முடியும். புறஎல்லையில் அலைகளில்லை. திடீரென்று உங்கள் இருப்புணர்வில் ஓர் அமைதியான. உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்திக் கொண்ட தோற்றநிலை (phenomenon) ஏற்படும். உங்களுக்கும் மற்றவர் களுக்கும் இடையில் இருப்பதே முதன்மையானது.

தற்போது இரண்டாவது படி - நியமம். நியமம் என்றால் சட்டம். இது மற்றவர்களுடனானதல்ல, உங்களால் செய்யப்படுவது. உங்களுக்கு நீங்களே செய்து கொள்கிற ஒன்று. அந்த வகையில் இமயமலையில் உள்ள ஒரு குகைக்கு நீங்கள் இடம்பெயர்வதாய் வைத்துக் கொள்வோம், வேறு யாரும் அங்கே இல்லையென்பதால் முதலாவது படி - நடவடிக்கை சாத்தியப்படாது. ஆனால் இரண்டாவது படி - நடவடிக்கை சாத்தியம், காரணம் அது சமுதாயம் சார்ந்த நிலைக்கு உரியதல்ல - அது உங்களுடைய தனித்திருக்கும் நிலைக்கு உரியது. யமம் என்பது உங்களுக்கும் மற்றவர்களுக்கும் இடையே யானது. நியமம் என்பது உங்களுக்கும் உங்கள் சுயத்துக்கும் இடையிலானது.

தூய்மை, நிறைவு, தவம், சுயவிசாரணை மற்றும் கடவுளிடம் சரணாகதி இவை கருத்தூன்றிக் கவனிக்கப்படவேண்டிய விதிமுறைகள்.

ஒவ்வொன்றும் ஆழமாய் புரிந்துகொள்ளப்பட வேண்டியவை. முதலாவது ‘தூய்மை’. நீங்கள் ஓர் உடலாய், எண்ணம் உணர்வுகள் இவற்றின் உருவமாய் இருக்கிறீர்கள். உங்கள் உடம்பு நோயுற்றால் நீங்கள் எப்படி நலமாயிருக்க முடியும்? உங்கள் உடம்பு நச்சுத் தன்மையுற்றால் நீங்கள் நச்சுத்தன்மை உடையவராவீர்கள்.

நச்சுத்தன்மைகளைக் கொண்டிருக்கும் நிலையில் உங்கள் உடம்பு பாரம் சுமப்பதாகிவிடும். இலகுவாயிருக்காது. நீங்கள் இலேசாகி, பறக்க முடியாது. எனவே, உங்கள் உடம்பில் கவனம் செலுத்தி அதன் தூய்மைக்கு முயல வேண்டும்.

உங்களை மண்ணில் வேரூன்றச் செய்கிற உணவுகள் இருக் கின்றன. உங்களை விண்ணுக்குரியவராக்குகிற உணவுகளும் உண்டு. ஈர்ப்புசக்தியின் ஆதிக்கத்துக்குட்படுகிற ஒரு வாழ்க்கைமுறை இருக்கிறது. யோக ஆற்றல் மூலம் எழுந்து காற்றில் மிதக்கச் செய்யும் வாழ்க்கை முறைகளும் உண்டு.

இரண்டு விதிகள் உள்ளன. ஒன்று புவியீர்ப்பு விசை (gravitation) மற்றொன்று இறைத்தன்மையுடன் கூடியமாட்சி (grace). புவியீர்ப்பு விசை உங்களைக் கீழே இழுக்கும். இறையருள் உங்களை மேலே இழுத்துச் செல்லும். அறிவியல் புவியீர்ப்பு விசையை மட்டுமே அறியும். யோகா இறையருளையும் அறியும். யோகா அறிவியலை விட அதிக அளவு விஞ்ஞான பூர்வமானதாய் தெரிகிறது. காரணம் ஒவ்வொரு விதியும் அதற்கு எதிரிடையான ஒன்றைப் பெற்றிருக்கும். பூமி உங்களைக் கீழே இழுக்குமென்றால் உங்களை மேலே இழுக்கக் கூடிய ஒன்றும் இருக்கும்தானே; இல்லையேல் பூமி உங்களை ஒரேயடியாய் இழுத்துக் கொள்ள நீங்கள் மறைந்துவிட்டிருப்பீர்கள். நீங்கள் பூமியின் மேற்பரப்பில் இருக்கிறீர்கள் அதன் பொருள் உங்களைக் கீழே இழுக்கிற விதிக்கும். உங்களை மேலே இழுக்கிற விதிக்கும் இடையே ஒரு சமநிலை இருக்கிறது என்பதாகும். இல்லையேல் ரொம்பகாலத்துக்கு முன்பே நீங்கள் பூமியால் அழிக்கப்பட்டிருப்பீர்கள். மண்ணின் கருவறைக்குள் திரும்பவும் சென்று, மறைந்துவிட்டிருப்பீர்கள். ஆனால் நீங்கள் இருக்கிறீர்கள். எதிரிடையானவற்றுக்கு நடுவே ஒரு சமநிலை இருக்கிறது. எதிரிடையான ஒன்று இருந்தால்தான் ஒவ்வொரு விதியும் இங்கே இடம் பெற முடியும். எதிரான விதியின் பெயர் 'இறையருள்'.

சிலசமயம், திடீரென்று ஒரு நாள் காலையில் உங்களை யறியாமலே இலேசாய் - அதிக பளு இல்லாத மாதிரி நீங்கள் உணர்வீர்கள். ம்ம்.. பறக்க முடிகிறாற்போன்று. நீங்கள் நிலத்தின் மீது நடந்தாலும் உங்களுடைய பாதங்கள் நிலத்தில் பதிவதில்லை. நீங்கள் அத்தனை எடையற்றவராய் இறகு போலாகிவிடுகிறீர்கள். ஒரு நாள் ரொம்பவும் எடை கூடிய மாதிரி, கடினமாய் உணர்கிறீர்கள். நடக்க

முடியாததுபோல் உணர்கிறீர்கள். என்ன ஆயிற்று? அந்நிலையில் உங்களுடைய ஒட்டுமொத்த வாழ்க்கை முறையையும் நீங்கள் பகுப்பாய்வு செய்ய வேண்டியிருக்கும்.

ஏதோஒன்று உங்களை இலகுவாக்கிவிடுகிறது. ஏதோ ஒன்று உங்களைக் கனமாய் உணரச் செய்கிறது. உங்களை எடை கூடியவராக்குவது அசுத்தமாக இருக்கும் தன்மை, உங்களை இலகுவாய் உணரச் செய்வது தூய்மை. அந்தத் தூய்மை இலகுவாய் எடையற்றதாயிருக்கிறது. அசுத்தமோ பளுவாய், சுமக்க வேண்டிய துன்பமாயிருக்கும். ஆரோக்கியமானவன் இலகுவாய் எடையற்றவனாய் உணர்வான், ஆரோக்கிய மற்றவனோ சுமையாய், கீழே தள்ளிவிடப்பட்டதுபோல் உணர்வான். அவன் உட்கார்ந்தாலும் அது உட்கார்ந்திருப்பதாகாது, அவன் தூங்கிக் கொண்டிருப்பான்.

யோகா மூன்று சொற்களை, மூன்று குணங்களை அறியும்; சத்துவம், ராஜஸம், தாமஸம் என்கிற மூன்று. சத்துவம் தூய்மை. ராஜஸம் சக்தி, தாமஸம் பளுவை, ஒளியின்மை (தெளிவற்ற மனம்)யைக் கொண்டிருக்கும். நீங்கள் எதை உண்கிறீர்கள் என்பதைப் பொறுத்தே உங்கள் உடம்பு அமைகிறது. நீங்கள் இறைச்சியை உண்டால் உங்கள் உடம்பின் எடை கூடிவிடும். நீங்கள் பாலையும், பழத்தையும் உண்டு வாழ்பவராயின் நீங்கள் இலகுவாயிருப்பீர்கள். எப்போதாவது உண்ணாதிருக்கும் போது (நோன்பு) இலேசாகிவிட்ட மாதிரி உணரமுடிவதை, உடம்பின் ஒட்டுமொத்த எடையும் மறைந்துவிட்டது போலிருப்பதைக் கவனித்திருக்கிறீர்களா? நீங்கள் எடைகாட்டும் கருவியின் மீது நின்றால் அது உங்களுடைய எடையைக் காட்டும் ஆனால் அதை நீங்கள் உணரமாட்டீர்கள். என்ன ஆயிற்று? வழக்கமான நடைமுறை ஒழுங்கில் இருந்து உங்கள் உடம்பு விடுபட்ட நிலையில் உடம்பு எதையும் சீரணிப்பதற்கில்லை. சக்தி பாய்ந்தோடுகிறது, சக்திக்கு எந்த வேலையில்லை. உடம்புக்கு விடுமுறை நாள் அது. நீங்கள் ஓய்வாயிருப்பதாய், நேர்த்தியாய் உணர்வீர்கள்.

ஒருவர் தம்முடைய உணவில் கவனம் செலுத்த வேண்டும். நீங்கள் உண்பது எதுவாயினும் அது சாதாரண விசயமல்ல. நீங்கள் கவனமாயிருக்க வேண்டும், காரணம், சென்ற நாட்களில் நீங்கள் உண்ட உணவுகளைக் கொண்டே உங்கள் உடம்பு கட்டமைக்கப்படுகிறது. நீங்கள் குறைவாக அல்லது அதிகமாக அல்லது உரிய அளவில்

உண்பது கூட அதிக அளவில் வேறுபாட்டை உண்டுபண்ணும். நீங்கள் கருத்தாவேசத்துடன் உண்பவராயிருக்கக் கூடும். அதிகம் உண்டாலும் அதில் பெரும்பகுதி தேவைப்படாதாயிருப்பின் மிகவும் எடை குறைந்துவிட்ட நிலையை அடைவீர்கள். சரியான அளவில் உண்கிறபோது மகிழ்ச்சியாய் உணர்வீர்கள், எடை குறைந்த மாதிரி இருக்காது - சக்தி தங்கு தடையின்றித் தொடரும்.

அகவுலகில் பறந்து, உள்ளார்ந்த மையத்தை அடையப் போகிறவர் எடைக்குறைவாய் - எடையற்றவராயிருக்க வேண்டும். இல்லையேல் அந்தப் பயணத்தைப்பூர்த்தி செய்ய முடியாது. நீங்கள் சோம்பேறியாயிருந்தால் உள்ளிருக்கும் மையத்தை அடைவதற்கான திறமை உங்களிடம் இருக்காது. உள்ளிருக்கும் மையத்தைச் சென்றடைபவர் யார்?

என்ன உண்கிறீர்கள், எதைப் பருகுகிறீர்கள் என்பதில் கவனமாயிருங்கள். உங்கள் உடம்பை வைத்துக் கொண்டிருக்கும் முறையில், அதன் பராமரிப்பில் கவனமாயிருங்கள். சின்னச் சின்ன விசயங்களும் முக்கியத்துவம் பெறும். சராசரி மனிதன் அதை யெல்லாம் பொருட்படுத்த மாட்டான் காரணம் அவன் எங்கேயும் சென்றடைவதில்லை. நீங்கள் பயணத்தைத் தொடங்கிவிட்டால் எல்லாமே கவனிக்கப்பட வேண்டியவைதாம்.

நீங்கள் தினமும் குளிக்கிறீர்களா இல்லையா என்பது முக்கியம். சாதாரணமாய் அது பொருட்படுத்தப்படுவதில்லை. சந்தையில் அல்லது கடையில் வேலை செய்யும் போது நீங்கள் நன்றாய் குளித்தீர்களா இல்லையா என்பது கவனத்தில் எடுத்துக் கொள்ளப்படாது. உண்மையில் தினமும் நன்றாய் குளித்துவிட்டுச் செல்வது உங்களுடைய சந்தையில் ஒரு தடையாகவே இருக்கும். நீங்கள் இலேசாய் உணர்வதால் தந்திரபுத்தியுடன் (cunning) நடந்துகொள்வது சங்கடமாய் தெரியும். உங்களுடைய புத்துணர்ச்சி ஏமாற்றுவதற்கு இடையூறாயிருக்கும். நீங்கள் கன்னித்தன்மையுடன், களங்கமற்று உணர்ந்தால் அது சுரண்டும் வேலையைச் சாத்தியமற்றதாக்கிவிடும். அழுக்காயிருப்பது (தூய்மையின்றி) சந்தையில் உதவும் ஆனால் கோயிலில் அல்ல. கோயிலில் நீங்கள் குளுமையான பனித்துளிபோல், புத்தம் புதிய பூவைப்போல் இருக்க வேண்டும். அப்போது மட்டுமே நீங்கள் கோயிலினுள் பிரவேசிக்க முடியும். கோயிலுக்குச் செல்கிறவர் செருப்பு விடுகிற இடத்திலேயே உலகத் தொடர்புகளையும் கழற்றி விட்டுவிட வேண்டும். அவற்றை உள்ளே சுமந்து செல்லக் கூடாது.

குளிப்பது ஓர் அருமையான நிகழ்வு - ரொம்பவும் எளிதானது ஆனால் அதை அனுபவிக்கத் தொடங்கியவுடன் அது உடம்பிற்கு ஒரு தியானமாகிவிடும். ஒரு நீர்ப்பொழிவின்(shower) கீழே அமர்ந்து ‘ஓம்’ என்ற ரீங்காரத்துடனிருக்க (சாதாரணமாய் அசைந்தாடி ஒரு பாடலை முணுமுணுத்துக் கொண்டிருப்பதைவிட) அது இருமடங்கு ஆற்றலுடையதாகிவிடும். உடம்பின் மீது நீர் விழுகிறபோது உங்கள் மனதில் ‘ஓம்’ என்கிற மந்திரச்சொல் விழுகிறது. நீங்கள் இரட்டைக் குளியலை அனுபவிக்கிறீர்கள்.

உடம்பை நீர் சுத்தப்படுத்துகிறது. அது அடிப்படைக் கூறுகளுக்கு (நிலம், நீர், காற்று, தீ)ச் சொந்தமானது. உங்கள் மனதை ஓம் என்கிற மந்திரம் சுத்தப்படுத்துகிறது. குளியலுக்குப் பிறகு நீங்கள் பிரார்த்தனைக்குத் தயாராகிவிடுவீர்கள் - நீங்கள் பிரார்த்திக்க விரும்புவீர்கள். இந்தக் குளியல் மற்றும் மந்திர நீராட்டத்திற்குப் பிறகு நீங்கள் முற்றிலும் மாறுபட்டவராய் உணர்வீர்கள். வேறான ஒரு பண்பை நீங்கள் பெறுவீர்கள், உங்களைச் சுற்றி ஒரு நறுமணத்தையும்.

ஷௌச் - தூய்மை. தூய்மை என்றால் உணவு பற்றிய தூய்மை, உடல் பற்றிய தூய்மை, மனம் பற்றிய தூய்மை. தூய்மைகளின் மூன்று அடுக்குகள். நான்காவதான உங்கள் இருப்புணர்வைச் சுத்தப்படுத்த வேண்டியிருக்காது காரணம் அது அசுத்தமாவதில்லை. உங்களுடைய உள்ளார்ந்த மையம் எப்போதுமே தூய்மையாய், கன்னித்தன்மையுடன் இருப்பது. ஆனால் அசுத்தமாகக்கூடிய மற்றவற்றால் அது போர்த்தப்பட்டிருக்கிறது. அது நாளும் அசுத்தமாவது. உங்கள் உடம்பை நீங்கள் தினமும் பயன்படுத்துகிறீர்கள், தூசி சேர்கிறது. உங்கள் மனதை நீங்கள் தினமும் பயன்படுத்துகிறீர்கள் எண்ணங்கள் சேர்கின்றன. எண்ணங்கள் தூசி மாதிரிதான். இந்த உலகில் வாழ்ந்து கொண்டிருக்கிற நீங்கள் எப்படி எண்ணங்கள் இல்லாமல் வாழ்வீர்கள்? நினைத்துப் பாருங்கள். உடம்பில் தூசி சேர்ந்து அழுக்காகிறது, மனதில் எண்ணங்கள் சேர அழுக்காகிறது. இரண்டுக்குமே ஒரு நல்ல, சுத்தப்படுத்துகிற குளியல் தேவை. அது உங்களைப் பிறரிடமிருந்து வேறுபடுத்திக் காட்டும் பண்பில் ஒரு பகுதியாக வேண்டும். அதை ஒரு விதியாய் எடுத்துக் கொள்ள வேண்டியதில்லை. அது உன்னதமான ஒரு வாழ்க்கை முறையாய் இருக்க வேண்டும்.

நீங்கள் தூய்மையாய் உணர்ந்தால் அப்போது மற்ற சாத்தியங் களும் உடனடியாய் தொடங்கிவிடும். காரணம், ஒவ்வொன்றும்

மற்றொன்றுடன் இணைக்கப்பட்டிருக்கிறது. அது ஒரு சங்கிலி. நீங்கள் வாழ்க்கையை மாற்ற விரும்பினால் எப்போதும் துவக்கத்தில் (மூலம்) இருந்தே தொடங்குங்கள்.

நியமத்தின் இரண்டாவது படி சந்தோஷம் - மனநிறைவு. ஆரோக்கியமாயும், முழுமையாயும், இலகுவாயும், புத்துணர்ச்சி யோடும், இளமையாகவும் கன்னித்தன்மையோடும் உணர முடிகிற ஒருவன் மனநிறைவையும் புரிந்து கொள்ளக் கூடியவனாயிருப்பான். இல்லையேல் அதன் பொருளை நீங்கள் அறிய மாட்டீர்கள், ஒரு சொல்லாகவே அது நின்றுவிடும்.

இது நேர்த்தியானது, இது சிறந்தது என்கிற உணர்வைத் தருகிற எதுவும் மனநிறைவைத் தருவது தான். ஓர் ஆழ்ந்த ஏற்புணர்வே. இருக்கிறபடிக்கு பிரபஞ்ச இருப்பை ஆமோதிக்கிற உணர்வே மனநிறைவு.

சாதாரணமாய் மனம் கூறும 'எதுவும் சரியில்லை' என்று. வழக்கமாய் 'இது தவறு, அது தவறு' என்று குறை சொல்லிக் கொண்டேயிருக்கும் அந்த மனது. பொதுவாக மனம் எதிர் மறையானது. மறுப்பு தெரிவிப்பது. அது எளிதாய் மறுப்பு சொல்லிவிடும். 'ஆம்' என்று சொல்வது கடினம் காரணம் ஒரு முறை நீங்கள் 'ஆம்' என்று சொன்னதும் மனம் நின்றுவிடுகிறது. பிறகு மனம் தேவைப்படுவதில்லை. இந்த நிகழ்வை நீங்கள் கவனித்திருக் கிறீர்களா? நீங்கள் 'இல்லை' என்று சொல்கிறபோது மனம் எண்ணமிட்டுக் கொண்டேயிருக்கும். காரணம் 'இல்லை' என்பது முடிவெல்லையாகிவிடாது. 'இல்லை' என்பது ஒரு நிகழ்வின் தொடக்கம். 'இல்லை' என்பதற்கு முற்றுப்புள்ளி கிடையாது. 'ஆம்' என்பது முடிவெல்லை. நீங்கள் 'ஆம்' என்று சொல்கிறபோது ஒரு முற்றுப்புள்ளிவரும். தற்போது மனம் சிந்திப்பதற்கு, முணுமுணுப் பதற்கு, மனத்தாங்கல் கொள்வதற்கு, குறைகூறுவதற்கு எதுவும் இல்லை. நீங்கள் 'ஆம்' என்று சொன்னதுமே மனம் நின்றுவிடுகிறது. மனதின் அந்த மிகச்சரியான நிறுத்தந்தான் மனநிறைவு.

மனநிறைவு என்பது தேற்றுதல் அல்ல என்பதை நினைவில் கொள்ளுங்கள். தங்களைத் தாங்களே தேற்றிக் கொண்டு தாங்கள் மனநிறைவோடிருப்பதாய் எண்ணிக் கொள்பவர்களை நான் பார்த்திருக்கிறேன். இல்லை, தேறுதல் மனநிறைவாகாது. தேறுதல் ஒரு கள்ள நாணயம். உங்களை நீங்களே தேற்றிக் கொள்வதில் நீங்கள்

மனநிறைவைக் கண்டுவிடமுடியாது. உங்களுக்குள் கடுமையான மனநிறைவின்மை (அதிருப்தி) இருக்கிறது. அந்த மன நிறை வின்மையை அறிந்து கொள்கிறபோது கவலை ஏற்படும். அது பதற்றத்தைக் தோற்றுவிக்கும். அந்த மனநிறைவின்மை உங்களை எங்கேயும் இட்டுச் செல்வதில்லை, தார்க்க ரீதியாகச் சொன்னால், 'இது வல்ல வழி' என்று உங்களுடன் நீங்களே வாதிடுவீர்கள். ஆக, ஒரு பொய்யான மனநிறைவை உங்கள் மீது நீங்கள் திணித்துக் கொள்கிறீர்கள். 'நான் நிறைவாயிருக்கிறேன், நான் அரியாசனத்தில் ஆசை வைக்கவில்லை. நான் செல்வ வளங்களில் ஆசை வைக்கவில்லை.

நான் இதுவேண்டும் அதுவேண்டும் என்று ஆசைப்படு வதில்லை' என்று சொல்லிக் கொண்டேயிருக்கிறீர்கள். ஆனால் ஆசைப்படுகிறீர்கள். இல்லையேல் இந்த 'ஆசைப்படவில்லை' என்பது எங்கிருந்து வந்தது!

நீங்கள் ஆசைப்படுகிறீர்கள், விரும்புகிறீர்கள் ஆனால் அடைவது பெரும்பாலும் சாத்தியமில்லை என்பதையும் கண்டு கொண்டிருக்கிறீர்கள். ஆக நீங்கள் தந்திரக்காரர். நீங்கள் சாமர்த்தியசாலி, 'அதை அடைவது சாத்தியமில்லை' என்று சொல்கிறீர்கள். உள்ளுக்குள், அதை அடைவது முடியாத காரியம் என்பது தெரிந்திருந்தாலும் நீங்கள் தோற்றவராய், கையாலாகாதவராய் உணரவிரும்பவில்லை. உங்களை வலுகுன்றியவராய் உணர நீங்கள் விரும்பவில்லை. அப்படியிருக்க நீங்கள் சொல்கிறீர்கள் 'நான் ஆசைப்படவில்லை' என்று.

பழைமையான கதை சொல்லிகளுள் ஒருவரான ஈசாப் சொன்ன ஓர் அருமையான கதையை நீங்கள் கட்டாயம் கேட்டிருப்பீர்கள். ஒரு தோட்டத்தின் பக்கமாய் நரியொன்று வந்தது. அழகிய திராட்சைக் குலைகள் தொங்குவதை அது கண்களை உணர்த்திப் பார்த்தது. அது தாவிக்குதித்தது ஆனால் குதிப்பு போதிய அளவில் இல்லை. மிகக் குறைந்த உயரமே குதிக்க முடிந்தது. அது மேலும் மேலும் முயன்றது.... ஆனால் எட்டிப்பிடிக்க முடியவில்லை. பிறகு அது சுற்றிவரப்பார்த்தது. அதன் தோல்வியை யாரேனும் பார்த்திருப்பார்களோ என்ற எண்ணம். பிறகு அது இறுமாப்புடன் நடந்து சென்றது. புதரில் மறைந்து கொண்டிருந்த ஒரு சின்ன முயல் வெளிப்பட்டு, 'அத்தே, என்ன ஆச்சு?' என்று கேட்டது. நரி தோற்றதையும் அதன் கையாலாகாத்

தனத்தையும் அது பார்த்துக் கொண்டு தானிருந்தது. 'ஒண்ணுமில்லை அந்தத் திராட்சை ஒரே புளிப்பு' என்று சொன்னது நரி.

இதுதான் தேறுதல். உங்களால் அடையமுடியாது என்பது தெரிந்ததும் பகுத்தறிவிற்கேற்றவிதமாய் திராட்சை புளிக்கிறது என்றும் அது அடையத்தக்கதல்ல என்றும் விளக்கம் கொடுப்பது. உங்களுக்குக் கையாலாகவில்லை, உங்களிடம் ஆற்றலில்லை என்பதை விட்டுவிட்டு 'அவை அடையத்தக்கல்ல' என்கிறீர்கள். நீங்கள் தோற்படிக்கப்பட்டீர்கள் என்பதைச் சொல்லாமல், துறந்துவிட்டதாய் சொல்லிக் கொள்கிறீர்கள். உலகைத் துறந்த பலரை நான் பார்த்திருக்கிறேன். அவர்கள் ஈசாப் கதையின் பிரதிநிதிகளாய் இருப்பவர்களேயன்றி வேறல்லர். நான் பல சந்நியாசிகளையும் மகாத்மாக்களையும் சந்தித்திருக்கிறேன். அவர்களுடைய கண்களில் எட்டாத பழத்துக்குக் கொட்டாவிடும் ஆசையை இன்னமும் நீங்கள் பார்க்க முடியும்.

இந்த உலகம் பயனற்றது. மாயை என்பதால் தாங்கள் துறவு கொண்டதாய் அவர்கள் சொல்கிறார்கள். அவர்கள் ஈசாப்பின் நீதிக்கதையைப் படித்ததில்லை. அவர்கள் அதைக் கட்டாயம் படிக்க வேண்டும். வேதங்களையும் கீதையையும் படிப்பதைவிட அது அவர்களுக்குப் பேருதவி புரிவதாயிருக்கும். அதுமட்டுமல்லாமல் உண்மையில் என்ன நடந்தது என்பதையும் அவர்கள் புரிந்து கொள்ள வேண்டும். இது பகுத்தறிவிற்கேற்ப கொடுக்கப்படும் அகந்தையின் விளக்கம்.

ஆறுதல் என்பது ஒரு தந்திரம், சூழ்ச்சி. மனநிறைவு என்பதோ புரட்சி. முழுமையான மாற்றத்தைக் கொண்டுவருவது. மனநிறைவு என்பது தோல்விகள் சுற்றிச் சூழ்ந்திருக்க நீங்கள் கண்களை மூடியபடி 'இந்த உலகம் ஒரு மாயை, நான் இதற்கு ஆசைப்படவில்லை' என்று சொல்வதாகாது. ஜப்பானிய ஹைக்கூ கவிஞர்களில் ஒருவரான பாஸோ ஒரு சின்ன ஹைக்கூ எழுதினார். அதன் பொருள், 'காலைக்கதிரொளி பட்டுக் கரைகின்ற பனித்துளிகளைக் காணமுடிகிறவர் பாக்கியவான், அவர் உலகம் நிலையற்றது. மாயை எனக் கூறமாட்டார்' என்பதாகும். அருமையான ஹைக்கூ. நான் அதை மீண்டும் சொல்கிறேன் 'காலைக் கதிரொளியில் மறைகின்ற பனித்துளிகளைக் காண்பவர் பாக்கியவான் அவர் இந்த உலகை மாயை என்றோ இந்த உலகம் ஒரு கனவென்றோ கூற மாட்டார்.'' அதைச் சொல்வதன் மூலம் உங்களைத் தேற்றிக் கொள்வது எளிது.

மனநிறைவு என்பது நேர்மறையான இருப்புணர்வு; தேறுதல் என்பது மறைத்துவைப்பது. ஆனால் தேற்றுவது மனநிறைவைப் போலவே தோன்றும். ஒருவன் என்னிடம் வந்து 'நான் மனநிறைவுடையவன் என்னுடைய வாழ்க்கை முழுதும் நான் நிறைவாகவே இருந்திருக்கிறேன், ஆனால், எதுவும் நடக்கவில்லை என்றான். நான் வியப்புடன் அவனைக் கேட்டேன், 'உமக்கு என்ன வேண்டும்? மனநிறைவு என்பது போதும் என்கிற நிலை. உமக்கு வேண்டும் என்று. அவன் சொன்னான், 'நான் புனிதநூல்களில் படித்திருக்கிறேன், நீ மனநிறைவோடிருந்தால் உனக்கு எல்லாமும் நடக்கும் என்று எழுதியிருந்தது. ஆனால் எதுவும் நடக்கவில்லை. நிறைவடையாத பலரும் வெற்றி பெற்றிருப்பதை நான் கண்டிருக்கிறேன். நான் தோற்றவன், ஏமாற்றப்பட்டவன்'' என்று.

இந்த ஆள் மனநிறைவின் மூலம் சில விருப்பங்களை அடைய முயன்றவன். அவன் சூதானவன் அவனுடைய மனநிறைவு பொய்யானது. பிரபஞ்ச இருப்பிடம் நீங்கள் சூழ்ச்சியாய் நடந்து கொள்ள முடியாது. நீங்கள் அதை வஞ்சிக்க முடியாது. அதன் ஒரு பகுதியாய் நீங்கள் இருக்கிறீர்கள். பகுதி எப்படி முழுமையை வஞ்சிக்க முடியும்? பகுதியானது தனது ஏமாற்று வேலையைத் தொடங்குவதற்கு முன்பே முழுமை அதை அறிந்து கொண்டுவிடும்.

மனநிறைவுடைய ஒருவனுக்குச் சகலமும் நடக்கும் என்று நானும் சொல்கிறேன். காரணம் மனநிறைவே சகலமுமாயிருக்கிறது. அதற்காக நீங்கள் மனநிறைவைப் பயின்று கற்றுக்கொண்டால், எல்லாமும் நடந்துவிடும் என்பதல்ல. கடவுளும், பரமசுகமும், நிர்வாண நிலையும் (மோட்சம்) அப்படிக் கிடைத்துவிடுமா என்ன. மனநிறைவுற்ற ஒருவன் மனநிறைவே சகலமும் என்பதை அறிவான், அவையனைத்தும் முன்பே நடந்தேறிவிட்டதாயும் அவன் அறிகிறான். அவனுடைய 'ஆம்' என்பது மேலும் மேலும் வளர்கிறது. அவனது இருப்புணர்வு ஏற்புத்தன்மையுடன் மிக அதிக அளவில் பொருந்துகிறது. பொருள்களும், செயல்களும் அவற்றின் நிலையில் இருக்க வேண்டியபடி இருப்பதை அவன் உணர்கிறான்.

நீங்கள் தூய்மையோடிருந்தால் மனநிறைவு சாத்தியம். மனநிறைவு என்பது என்ன? அது காண்பது, முழுமையை அதன் அழகைக் காண்பது. உங்களால் அந்தி மாலையின் அழகைக் காணமுடிந்தால், இரவு எத்தனை அழகானதென்பதைக் காண முடிந்தால் மனநிறைவு

தன்னால் வந்துவிடும். எது உங்களைத் தொடர்ந்து சுற்றிச் சூழ்ந்திருக்கிறது என்பதை உங்களால் காணமுடிந்தால் அது ஓர் அதிசயமாய், அதிசயத்தின் தொடர்ச்சியாயிருக்கும். ஒவ்வொரு கணத்திலும் அற்புதம்... ஆனால் நீங்களோ பார்க்கும் திறனை முற்றிலும் இழந்தவராயிருக்கிறீர்கள். பூக்கள் மலரும்போது நீங்கள் பார்த்ததில்லை, குழந்தைகள் சிரிக்கும் போது நீங்கள் கேட்டதில்லை. நதிகள் கீதமிசைக்கின்றன - நீங்களோ கேட்கும் திறனற்றவராய் இருக்கிறீர்கள். நட்சத்திரங்கள் நடனமாடுவதை உங்களால் பார்க்க முடியவில்லை. மனநிறைவு சாத்தியமற்றதாய் தெரிகிறது.

அனைத்தும் முன்பே இருப்பது குறித்த விழிப்புணர்வே மனநிறைவு. முன்பே என்ன நிகழ்ந்து கொண்டிருக்கிறது என்பதை நீங்கள் கணநேரக்காட்சியாய் காண முடிந்தாலும் அதைவிட வேறென்ன வேண்டும்? அதிகம் எதிர்பார்ப்பது முழுக்க முழுக்க நன்றிகெட்டத்தனம். உங்களால் முழுமையைக் காணமுடிந்தால் எளிமையாய் ஒரு நன்றி சொல்வீர்கள்.

'ஒவ்வொன்றும் சரியாயிருக்கிறது, ஒவ்வொன்றும் அழகாயிருக்கிறது, ஒவ்வொன்றும் புனிதமாயிருக்கிறது என்று சொல்வீர்கள். நான் நன்றி பாராட்டுகிறேன் காரணம் 'உயிரோடிருப்பதற்கும், மூச்சு விடுவதற்கும், காண்பதற்கும் கேட்பதற்கும் - மரங்கள் பூச்சொரிவதைக் காணவும் பறவைகள் பாட்டிசைப்பதைக் கேட்கவும் எனக்கு சந்தர்ப்பம் வழங்கப்பட்டிருக்கிறது. வாய்ப்பு தரப்பட்டது, நானாக ஈட்டியதல்ல.

நீங்கள் விழிப்போடு இருந்தால் - சிறிதளவேனும் உங்களிடம் விழிப்புணர்வு இருந்தால் மாற்றப்படவும், விரும்பப்படவும் ஒன்று இருப்பதாய் எண்ணமாட்டீர்கள். ஒவ்வொன்றும் முன்பே உங்களிடம் வழங்கப்பட்டுவிட்டது. உங்களுடைய புகார்களும், குறைகூறலும், மறத்தலும் மேகக் கூட்டமாய் திரண்டுவிட உங்களால் பார்க்க முடிவதில்லை. உங்கள் கண்களை புகைமூட்டம் மறைக்கிறது. உங்களால் தீச்சுடரைக் காண முடியவில்லை.

மனநிறைவு என்பது நோக்குதல் - அது வாழ்க்கையின் வித்தியாசமான நோக்கு. அது விருப்பங்களின் வழியே காண்பதல்ல. ஆனால், முன்பே உள்ள நிலை எதுவாயினும் அதை முயன்று காண்பது. நீங்கள் விருப்பத்தின் வழியே பார்த்தால் ஒருபோதும் நிறைவடையப் போவதில்லை. எப்படி அடையமுடியும்... விருப்பங்கள் மேலும் மேலும் பெருகிக் கொண்டே போகும் போது?

உங்களிடம் பத்தாயிரம் ரூபாய் இருக்கிறது. ஆசை ஓர் இலட்சம் வேண்டுமென்கிறது. உங்களுக்கு ஓர் இலட்சம் கிடைத்ததும் அது பத்து இலட்சம், ஒரு கோடி கேட்கும். அந்தப் பகுதியை நீங்கள் அடைகிறபோது உங்களுடைய ஆசை உங்களுக்கு முன்னால் போய்விட்டிருக்கும். ஆசை எப்போதுமே உங்களுக்கு முன்பாய் விரைந்து செல்லும். அது ஒரு போதும் உங்களுடனிருப்பதில்லை. நீங்கள் எவ்விடத்தும் அதைச் சந்திக்க இயலாது. நீங்கள் எங்கு சென்றாலும் ஒரு தொடுவானத்தைப்போல் அது இருக்கும், எதிர்காலத்தில் எங்கோ ஓரிடத்தில் எட்டிப்பிடித்துவிடலாம் என்பதைப் போன்று. அது எப்போதும் அப்படித்தான் இருக்கும். மனநிறைவின்மை (அதிருப்தி)யும் அதைத் தொடரும். ஆசை முன்செல்ல அதிருப்தி தொடர்ந்து செல்லும். அதுதான் உங்கள் நிலை. மனநிறைவின்மை ஒரு நரகம்.

இதனைப் புரிந்து கொண்டுவிட்டால் நீங்கள் விருப்பம் என்கிற திரையின் வழியே மெய்ப்பொருளை (reality)க் காணமாட்டீர்கள்.

நீங்கள் விருப்பத்தை ஒதுக்கிவைத்துவிட்டு உடனடியாய், நேரடியாய் காண்பீர்கள். கண்களைத் திறந்து சும்மா பார்த்தாலே போதும் ஒவ்வொன்றும் மிகச் சரியாய் தெரியும். நான் அதனைக் கண்டிருக்கிறேன். அதனால்தான் நான் உங்களுக்குச் சொல்கிறேன். அது மேம்படுத்தவேண்டிய அவசியமில்லாமல் மிகச் சரியாக உள்ளது. அதுவே முடிவான பொருளாய் இருப்பது. அந்நிலையில் மனநிறைவு ஒரு மாலைப்பொழுதைப் போல் உங்கள் மீது வந்திறங்குகிறது; சூரியன், ஆசை என்கிற வறுத்தெடுக்கிற சூரியன் மறைந்துவிட, மாலைக்காலத்து இளங்காற்றும், அமைதியான இருளும் உங்கள் மீது வந்திறங்கும் - விரைவிலேயே அதனுள் மூடப்பட்டு விடுவீர்கள். இரவின் இதத்தில், மனநிறைவின் கருவறையில் மறைந்துவிடுவீர்கள்.

மனநிறைவு என்பது ஒரு பார்க்கும் முறை ஆனால் நீங்கள் களங்கமற்றவராய், இலகுவாய், எடையற்றவராய் இருந்தால் மட்டுமே அது சாத்தியம்.

மனநிறைவிற்கு பிறகு பதஞ்சலி தன்னொழுக்க நெறிகளில் கண்டிப்பாய் இருத்தலை (தவம்)ப்பற்றிப் பேசுகிறார். இது உண்மையிலேயே புரிந்துகொள்ளப்பட வேண்டியது. மிக மென்மையானதும், நுட்பமானதும் ஆகும். நீங்கள் மனநிறைவுக்கு

முன்பே கட்டுத்திட்டங்கள் விருப்பத்தின் வழியாகவே இருக்கும். பிறகு உங்களுடைய கட்டுத்திட்டங்களின் வழியே நீங்கள் மோட்சத்தை (விடுதலை) சொர்க்கத்தை விரும்புவீர்கள். அதனால் தான் பதஞ்சலி முதலில் விருப்பத்தையும் பிறகு தவத்தையும் வைத்தார். நீங்கள் மனநிறைவோடிருந்தால் அந்நிலையில் தவம் ஒரு வழிவகையாய் **(means)** இருக்காது. நேர்த்தியான வாழ்க்கை முறையாய் ஆகிவிடும். அப்போது ஒரு சிலவற்றை அல்லது கூடுதலானவற்றைப் பெறுகிற பிரச்சனை இருக்காது. பெற்றிருப்பதும், பெறாமலிருப்பதும் பிரச்சினை ஆகாது. அவ்வேளையில் அது சிக்கலான வாழ்க்கை முறையாய் இருப்பதில்லை, அது எளியதோர் வாழ்க்கை முறையாய் இருக்கும்.

இதனைப் புரிந்து கொள்வது கடினம். மனநிறைவு இல்லாமல் நீங்கள் ஒழுக்க நெறிகளில் நிற்க முயன்றால் உங்களுடைய தவம் சிக்கலானதாகிவிடும்.

முன்னொரு தடவை அது நடந்தது. நான் ஒரு சந்நியாசியுடன் முதல் வகுப்புப் பெட்டியில் பயணம் செய்து கொண்டிருந்தேன்.

எனக்கு அவரைத் தெரியாது. அவருக்கும் என்னைத் தெரியாது. ஆனால் அந்த இரயில் பெட்டியில் நாங்கள் இருவர் மட்டுமே பயணிகள். சில இரயில் நிலையங்களில் பலரும் வந்து அவருக்கு மரியாதை செலுத்தினர். அவர் ஒரு புகழ்பெற்ற மனிதராய் இருக்க வேண்டும். ஒரு சிறிய பையைத்தவிர அவரிடம் வேறெதுவும் இல்லை, அதில் ஒன்றிரண்டு உடைகள் இருக்கலாம். அவர் கட்டியிருந்த லுங்கி முழங்கால் வரை மறைத்துக் கொண்டிருந்தது. கிட்டத்தட்ட நிர்வாணமாயிருந்தார். அந்த லுங்கியும் விலை அதிகமிருக்காது.

நாங்கள் ஒன்றாய் பயணம் செய்து கொண்டிருந்த அவ் வேளையில் கொஞ்சம் கொஞ்சமாய் அவருடைய புரிந்துகொள்ளக் கடினமான தன்மைகளை நான் அறிந்துகொண்டேன். புறத் தோற்றத்தைப் பொறுத்தவரை அவர் ஓர் எளிமையானவராக இருந்தார். இரயில் நிலையம் கடந்து, மக்கள் சென்றதும் இரயில் ஓடத்தொடங்கியது. நான் அரைத்தூக்கத்தில் இருப்பதாய் அவர் எண்ணிக்கொண்டார். நான் கண்களை மூடியிருந்தேன், அவர் உடனே தனது பையைத் திறந்து எதையோ வெளியில் எடுத்தார். நான் தூங்கிக் கொண்டிருக்கவில்லை. நான் பார்த்தேன் - அவர் பண நோட்டுகளை எண்ணிக் கொண்டிருந்தார். யாரேனும் சிலர் வெகுமதியளித்திருக்க வேண்டும். நிறைய ரூபாய்களல்ல, நூறு ரூபாய்க்குச் சற்றுக்

கூடுதலாயிருக்கும். ஆனால் அவர் நோட்டுகளை எண்ணிய விதத்தில் தெரிந்த இன்பமும், வெறியும்... என்னால் நம்பவேமுடியவில்லை.

நான் பார்த்துக் கொண்டிருப்பதைக் கண்டதும் அவர் அவசரமாய் நோட்டுகளைப் பையில் வைத்துவிட்டு, மறுபடியும் புத்த நிலையில் அமர்ந்தார். இதுதான் சிக்கலான தன்மை. நீங்கள் பணத்தை எண்ணினால் எண்ணி கொண்டிருக்க வேண்டியதுதானே. நான் பார்த்தாலும், பார்க்காவிட்டாலும் அதிலென்ன முக்கியத்துவம் இருக்க முடியும்? அதை ஏன் மறைப்பது? அதுபற்றிய குற்ற உணர்வு எதற்காக? பணத்தை எண்ணுவது உங்களுக்கு மகிழ்ச்சியான காரியமாய் தெரிந்தால் அதில் தவறில்லை - அது தீங்கற்றது, குற்றமில்லாதது. ஆனால் அப்படியில்லாமல் அவர் குற்றமாய் உணர்ந்தது: ஒரு சந்நியாசி பணநோட்டுகளைத் தொடக்கூடாது என்பது போலவும், கையும் களவுமாய் அகப்பட்டுக் கொண்டது போலவும் ஒரு குற்ற உணர்வு.

பிறகு, ஆறு மணிக்குச் சென்றடைகிற ஓர் இரயில் நிலையத்தில் அவர் இறங்க வேண்டும். இரயில் நிற்கிற போதெல்லாம் - அது எந்த ஸ்டேஷன் என்று அவர் கேட்டுக் கொண்டிருந்தார். இரவு இரண்டு மணியானபோது கூட, சன்னலுக்கு வெளியே எட்டிப்பார்த்தபடி கேட்டார். அவரால் என்னுடைய தூக்கம் கெட்டுப்போனது. "கவலைப்படாதீர்கள். அது ஒன்றும் ஆறுமணிக்குமுன் வந்துவிடாது - அதனால் கவலைப்பட வேண்டாம்" என்று நான் அவரிடம் சொன்னேன். "அதுவுமல்லாமல் இந்த இரயில் அந்த இரயில் நிலையத்தைத் தாண்டிச் செல்லாது. நீங்கள் தூங்கிவிட்டால்கூட அதைத் தவறவிட மாட்டீர்கள் - அதுதான் கடைசி நிறுத்தம்' என்றும் கூறினேன். ஆனால், அவருக்கு இரவு முழுக்க தூக்கம் பிடிக்க வில்லை. அவர் மனஇறுக்கத்துடன் காணப்பட்டார். அவருடைய அமைதியின்மைக்கு என்ன காரணம் என்றே எனக்குப் புரியவில்லை.

காலையில் அந்த இரயில் நிலையம் நெருங்கிவரவும், அவர் கண்ணாடி முன் நின்று கொண்டிருப்பதை நான் கண்டேன். சீர்படுத்திக் கொள்ள எதுமில்லை. ஒரு சின்ன லுங்கியைத்தவிர, ஆனால், அவர் மறுபடியும் மறுபடியும் அதைக் கட்டிக் கொண்டு கண்ணாடியில் பார்த்தார் சரியாய் இருக்கிறதா இல்லையா என்று. நான் பார்த்துக் கொண்டிருப்பதை அவர் கண்டுவிட்டார். திகைத்துப் போனார். நான் கண்களை மூடிக்கொண்டபோது அவர் ஏதாவதொன்றைச் செய்வார்.

நான் கண்களைத் திறந்தால் உடனே அதை நிறுத்திக் கொண்டு விடுவார். ஆக, ஒவ்வொன்றிலும் குற்ற உணர்வு.

இந்த மனிதர் மனநிறைவு அடையவில்லை அத்துடன் துறவு கொண்டாடவும் செய்கிறார். அவர் ஆசை கொண்ட சராசரி ஆளாய் தெரிந்தார். கண்ணாடி முன் நின்று பார்ப்பதில் தவறில்லை, நான் அதைத் தவறென்று சொல்லவில்லை. வேறு யாராவது பார்த்தால் மட்டுமே அது தவறாகிவிடும். அது உங்கள் முகம். அழகானது. பார்த்துக் கொண்டேயிருக்கலாம். நீங்கள் கண்ணாடியில் பார்க்கிறீர்கள். உங்களுடைய முகத்தைப் பார்த்துக் கொள்ள உங்களுக்கு அதிகாரமளிக்கப்பட்டிருக்கவில்லையா என்ன. அதில் ஒன்றும் தவறில்லை. அந்த முகம் கடவுளின் முகம் என்றே ஒருவர் அனுபவித்து மகிழ வேண்டும். ஆனால் அவரோ குற்றவாளியாகிறார்.

ஒரு புனிதரைப் போல் தன்னைக் காண்பித்துக் கொள்ளமுயலும் ஒரு சாதாரண மனிதர் அவர்.

மனநிறைவில்லாமல் நீங்கள் பாவனை செய்யவும், துயர்ப்படவும் முடியும். நீங்கள் தன்னொழுக்க முறைகளில் கண்டிப்பாக முடியும். வீட்டையும் உடைகளையும் துறந்து நிர்வாணமாகிவிடமுடியும். அது எளிதில் சமாளிக்கிற முயற்சியாய் இருக்குமேயன்றி எளிமையாகி விடாது. நிர்வாணம் எளிமையல்ல, சிக்கல். மனநிறைவின் நிழலாய் வருவது எளிமை அந்நிலையில் நீங்கள் அரண்மனையில் வாழ்ந்தாலும் எளிமையாயிருக்க முடியும். எளிமைக்கும் உங்களிடம் இருப்பவற்றுக்கும் சம்பந்தமில்லை. எளிமை மனதின் தன்மையோடு தொடர்புடையது.

ஓர் இரயில் நிலையத்துக்கே இத்தனை அமைதியற்றுப் போகிறவர் மரணம் வந்தடைகிறபோது எப்படி அமைதியாயிருப்பார்? நான் அவரைப் பார்த்ததற்கே அஞ்சி நடுங்குகிறவர் கடவுள் பார்த்துக் கொண்டிருக்கிறார் என்கிற நிலையில் எந்த அளவு அச்சமடைவார். படைத்தவனை நேருக்கு நேர் பார்க்கும் போது எந்த அளவு அச்சமடையாமல் இருப்பார்? அவர் தன்னோடு ஓர் ஆட்டம் ஆடுகிறார், யாரும் வஞ்சிக்கப்படுவதற்கில்லை.

தன்னொழுக்க முறைகளில் கண்டிப்பாய் இருப்பது (austerity) எளிமை. எளிய வாழ்க்கை என்பது என்ன? அது ஒரு குழந்தையின் வாழ்க்கை போன்றதாகும் - நீங்கள் எல்லாவற்றையும் அனுபவிப் பீர்கள், ஆனால் எதையும் இறுகப்பற்றிக் கொண்டுவிடுவதில்லை.

அது நடந்தது. இந்தியாவின் சிறந்த புனிதர்களுள் ஒருவரானவர் கபீர். அவருக்கு ஒரு மகன் இருந்தார். அவருடைய பெயர் கமால். அவர் தன்னுடைய தந்தையைவிட சிறந்த மனிதனாய் இருந்தார். ஆனால் அவரைப்பற்றி யாரும் அதிகம் தெரிந்திருக்கவில்லை, காரணம் அவர் ஓர் அபூர்வப்பிறவி. சீடர்கள் பலர் அவர்களுக்குள் போட்டி. பலரும் கமாலுக்கெதிராய் இருந்தார்கள். 'இவர் கண்டிக்கத் தக்கவர்'' என்று அவர்கள் சொல்லிக் கொண்டனர். மக்கள் வெகுமதி, நன்கொடை, பணம், வைரம் என்று கபீரின் காலடியில் கொண்டு வந்து கொட்டுவார்கள் - அவர் ஒரு போதும் அவற்றைத் தொடமாட்டார். கமால் வெளிப்பக்கத்தில் அமர்ந்திருப்பார், மக்கள் திரும்பிவரும் போது ஏதேனும் வழங்கினால் அவர் அவற்றைப் பெற்றுக் கொள்வார். எனவே மக்கள் சொன்னார்கள் உங்கள் மகன் பேராசைக்காரர்'' என்று.

கபீர் தம் மகனை நன்கறிவார். எந்த வகையிலும் அவர் பேராசைக்காரரல்லர், அவர் ஓர் எளிமையான மனிதர். அதனால்தான் அவரைக் கமால் என்று அழைப்பது. கமால் என்றால் அற்புதம் என்று பொருள். அவர் உண்மையிலேயே ஓர் அற்புதமான மனிதர் தாம். ஆனால் அவர் உண்மையில் ஒரு குழந்தையைப் போன்று எளிமையானவர். சில நேரங்களில் கபீர் பரிசுகளை மறுப்பது பற்றி அவர் கேட்டிருக்கிறார். யாரேனும் ஒருவர் வைரங்களைக் கொண்டுவந்து கொடுத்தால் கபீர் அவற்றை மறுத்து ஒதுக்கி விடுவதுண்டு - அந்த நபர் திரும்ப எடுத்துச் செல்வார். கமால் சொல்வார், 'அழகான கற்க்ள். எங்கே எடுத்துப் போகிறீர்கள்? அவற்றை என்னிடம் கொடுங்கள். என்னுடைய தந்தை ஏற்காவிட்டால் என்ன, நான் ஏற்றுக்கொள்கிறேன்' என்று.

இரு ரொம்ப மோசம். எனவே சீடர்கள் கபீரிடம் வாதிட்டு அவருடைய விருப்பத்துக்கு மாறாக அவரை இணங்கவைத்தார்கள். கபீர் சொன்னார், 'சரி, உங்கள் எண்ணம் அதுவானால்... நான் அவரை வெளியில் தள்ளிவிடுகிறேன்' என்று.

கமால் வெளியில் தள்ளப்பட்டார். அவர் எதுவும் சொல்லவில்லை. ரொம்ப சாதாரணமாய் ஏற்றுக் கொண்டார். நிறைவான மனிதர். தன்னைப்பற்றிக் குறை கூறியவர்கள் சரியில்லாதவர்கள் என்று கூட அவர் வாதிடவில்லை. அத்தகைய மனிதர் வாக்குவாதம் செய்வதில்லை. அவர் அங்கிருந்து வெளியேறி கபீர் வசித்த இடத்துக்குப் பக்கமாகவே ஒரு குடிசை கட்டிக் கொண்டு வாழலானார்.

ஆயிரக்கணக்கானவர்கள் கபீரைத் தேடி வந்தார்கள், கமாலிடம் யாரும் வருவதில்லை. காரணம் அவர் எவ்வகையிலும் பிரபலமாகியிருக்கவில்லை. கபீர் அவரை வெளியேற்றிவிட்ட விசயம் எங்கும் பரவியிருந்தது. அவர்கள் அவரை ஒதுக்க இதுவே போதுமானதாயிருந்தது.

கபீரின் பக்தரான காசி தேசத்து மன்னர் ஒரு சமயம் வந்திருந்தார். ‘கமால் எங்கே?’ என்று கேட்டார் கபீர் நடந்ததைச் சொன்னார். ‘ஆனால் அந்த இளைஞருக்குள் பேராசை இருக்குமென்று நான் ஒரு போதும் எண்ணியதில்லை. அவர் எளிமையானவர். நான் போய்ப்பார்க்கிறேன்’ என்றார் மன்னர். எனவே அவர் ஒரு பெரிய விலைமதிப்புள்ள வைரத்தை எடுத்துக் கொண்டு கமாலின் குடிசைக்குச் சென்றார்.

அன்று பார்த்து வீட்டில் எந்த உணவும் இல்லாமல் கமால் பசியோடு இருந்தார். எனவே மன்னரிடம் அவர் சொன்னார். ‘இந்தக் கல்லை வைத்துக் கொண்டு நான் என்ன செய்யட்டும்? இதனை நான் சாப்பிடவா? நீர் ஏதாவது உணவு கொண்டுவந்திருக்கவேண்டும், நான் பசியோடு இருக்கிறேன்’ என்று.

‘நான் நினைத்தது சரிதான்’ மன்னர் தன்னுடைய மனதுக்குள் சொல்லிக் கொண்டார். ம்ம்.. இத்தகைய விலைமதிப்பற்ற வைரத்தை இவர் வெது சாதாரணமாய் மறுத்துவிட்டாரே. மன்னர் வைரத்தை எடுத்துக் கொண்டு திரும்பிச் சென்றார். கமால் சொன்னார், ‘இது ஒரு கல் என்பது தெரிந்திருந்தும் நீர் எதற்காக அதைச் சுமந்து செல்கிறீர்? அதைவிட்டுவிடலாம். முதலில், இங்கே அதைச் சுமந்து வந்ததே தவறு. தற்போது அதே தவறை மறுபடியும் எதற்காகச் செய்வது. அது வெறும் கல்’ என்று.

மன்னருக்குக் குழப்பமாகிவிட்டது. ‘இதில் சூழ்ச்சி இருக்கும். கமாலுக்கு இந்த வைரத்தில் ஆர்வம் இருக்க வேண்டும் ஆனாலும் என்னிடம் சாமர்த்தியமாய் பேசுகிறார்’. ஆனாலும் ‘என்னதான் நடக்கிறது பார்ப்போம்’ என்று நினைத்துக் கொண்டார். ‘நான் அதை எங்கே வைக்கட்டும்?’ என்று கேட்டார்.

கமால் சொன்னார் ‘நீர் மீண்டும் தவறு செய்கிறீர், அது ஒரு கல். அதை எங்கே வைப்பதென்று யாராவது கேட்பார்களா என்ன? நீர் அதை எங்கு வேண்டுமானாலும் வைக்கலாம், குடிசையில் போதிய இடம் இருக்கிறது? என்று.

என்னதான் நடக்கும். விசயத்தை முழுமையாய் பார்த்துவிடுவது என்று விரும்பினார் மன்னர். எனவே, அதைக் கூரைமீது வைத்தார். நான் கொஞ்சதூரம் போனபின் கமால் அந்த வைரத்தை எடுத்துக் கொள்வார் என்று அவர் நம்பினார்.

ஏழுநாட்கள் சென்றபிறகு என்ன நடந்தது என்பதை அறிய அவர் மீண்டும் அங்கே சென்றார். தற்போது அந்த வைரம் விற்கப் பட்டிருக்கும் என்பதில் அவர் உறுதியாயிருந்தார். மற்ற விசயங்களைப் பேசியவாறு 'அந்த வைரம் என்னவாயிற்று' என்று அவர் கேட்டார்.

கமால் சொன்னார். 'மறுபடியும் வைரமா? அது ஒரு கல் என்று உம்மிடம் நான் கூறவில்லையா. அதற்கு என்னவானால் என்ன. நான் எதற்குக் கவலைப்பட வேண்டும்?' என்று.

தற்போது மன்னர் எண்ணிக் கொண்டார். 'இவர் உண்மையி லேயே தந்திரமானவர். அதை விற்றிருக்க வேண்டும் அல்லது மறைத்து வைத்திருப்பார். ஆனால் நான் எதற்காக அதைப்பற்றிக் கவலைப்படுவது என்று தற்போது சொல்லிக் கொண்டிருக்கிறார்.'

கமால் சொன்னார். 'நீர் அதை வைத்த இடத்திலேயே பார்க்கலாம். யாரும் எடுத்துச் செல்லாவிட்டால் அது அங்கே தானிருக்கும்' என்று.

அது அங்கே இருந்தது.

இதுதான் எளிமை. இதுவே துறவு. ஆனால் கடினம்: ஒரு மாளிகையில் வாழ்ந்தாலும் அந்த இடம் அவருடைய மனதுக்குள் இல்லையென்றால் அது துறவு. நீங்கள் ஒரு குடிசையில் வாழ்ந்தாலும் அந்தக்குடிசை உங்கள் மனதுக்குள் நுழைந்துவிட்டால் அது துறவு ஆகாது. ஒரு சக்கரவர்த்தியாய் அரிசாசனத்தில் அமர்ந்திருந்தாலும் நீங்கள் சந்நியாசியாயிருக்க முடியும். நீங்கள் நிர்வாணக் கோலத்தில் ஒரு சந்நியாசியாய் நடுவீதியில் நின்றாலும் நீங்கள் ஒரு சந்நியாசியாயில்லாமல் இருக்கலாம். மக்கள் நினைப்பதுபோல் விசயங்கள் அத்தனை எளிதாயில்லை, புறத்தோற்றத்தை நம்பக் கூடாது. அடியாழம் வரை நோக்க வேண்டும்.

தன்னொழுக்க முறைகளில் கண்டிப்பாய் இருப்பதென்பது மனநிறைவுக்குப் பின்னரே சாத்தியம், காரணம் மனம் நிறைவடைந்த பிறகு உங்களுடைய துறவு ஏதோ ஓர் இலக்கை அடையும் சாதனமாய் இருக்கப்போவதில்லை. அது சிக்கலற்ற ஒரு வாழ்க்கை முறையாய்; எளியதோர் வாழ்க்கை முறையாய் ஆகிவிடும். எளிமை எதற்காக?

காரணம் அது மகிழ்ச்சியளிப்பது. உங்கள் வாழ்க்கை எந்த அளவு சிக்கலாகிறதோ அந்த அளவு நீங்கள் மகிழ்ச்சியற்றவராகவிடுவீர்கள், காரணம் பலவற்றை நீங்கள் சமாளிக்க வேண்டியிருக்கும். எளிமையான வாழ்க்கை மகிழ்ச்சியானதாயிருக்கும், காரணம், உண்மையில் எதையும் சமாளிக்க வேண்டியிருக்காது. சுவாசிக்கிற மாதிரி நீங்கள் எளிதாய் வாழமுடியும்.

அதன்பிறகு வருவது சுயவிசாரணை-ஸ்வத்யாய. தூய்மையை, மனநிறைவை, துறவி நிலையை அடைந்தவர் யாரோ அவரே சுயத்தை ஆராய முடியும். காரணம், தற்போது எல்லாக் குப்பைகளும் வீசியெறியப்பட்டுவிட்டன. இல்லையேல் சுயவிசாரணை சாத்திய மாகாது. உங்களுக்குள் நிறையவே குப்பைகளை வைத்துக் கொண்டு நீங்கள் சுயவிசாரணையில் இறங்கினால் அது சுயவிசாரணையா யிருக்காது. காரணம் அந்தக் குப்பைகளையே நீங்கள் ஆராயும்படி இருக்கும். அது ஃப்ராய்டின்* 'சைக்கோ அனலிஸிஸ்' ஆகிவிடும். இதுதான் ஃப்ராய்டின் சைக்கோ அனலிஸிஸிற்கும் ஸ்வத்யாயவிற்கும் உள்ள வேறுபாடு.

ஃப்ராய்டின் 'சைக்கோ அனலிஸிஸ்' - மூன்றுவருடங்கள். ஐந்து வருடங்கள் தொடரக்கூடும் அதன்பிறகும் ஏதும் நிறைவேற்றப் படாமலே இருக்கும். குப்பை சேர்ந்து கொண்டேபோகும். அதற்கு முடிவே இருக்காது. காரணம் அது தானே உருவாக்கிக் கொள்வது. இன்று ஒரு குப்பையை நீங்கள் வீசியெறிகிறீர்கள், மறுநாள் அதைப் பகுப்பாய்வு செய்கிறபோது இருபத்துநான்கு மணிநேரத்தில் அந்தக்குப்பை ஒரு குவியலாகிவிட்டிருக்கும். மறுபடியும் நீங்கள் வீசியெறிகிறீர்கள், மறுபடியும் அது சேர்ந்துவிடும். உங்கள் வாழ்வின் அடித்தளம் மாறாதவரை நீங்கள் குப்பையைச் சேர்த்துக் கொண்டே போவீர்கள். குப்பை முக்கியக் கருத்தல்ல - நீங்கள் அதைச் சேர்த்துக் கொண்டேயிருப்பதுதான். நீங்கள் அதை ஈர்க்கிறீர்கள் சேர்க்கிறீர்கள் பற்றிக்கொண்டுவிடுகிறீர்கள். உங்கள் வாழ்க்கை முறை அத்தகைய தாயிருக்கிறது. அது உடைத்தெறியப்படாவிட்டால், வாழ்க்கை முறை மாற்றப்படாவிட்டால் நீங்கள் சுயத்தை ஆராய முடியாது. நீங்கள் கூட்டம், அந்தக் கூட்டத்தில் சுயம் தொலைந்து போகிறது.

---

* சைக்கோ அனலிஸிஸ் (Psycho-analysis) உணர்வுநிலை, உணர்வுநிலைக்கு அப்பாற்பட்ட நிலை இவற்றுக்கிடையேயுள்ள தொடர்புகள் பற்றிய கொள்கைகள்.

பதஞ்சலி ரொம்பவும் விஞ்ஞானபூர்வமாய் செயல்படுகிறார். கட்டுதிட்ட நெறிகளுக்குப்பிறகு நீங்கள் மிகவும் எளிமையாகி விடுகிறீர்கள், எந்தக்குப்பையும் சேர்வதில்லை. உங்களுக்குள் ஆசையற்றவராகி மனநிறைவை அடைந்த நிலையில், நீங்கள் களங்கமில்லாமல் தூய்மையுடையவராய் கனமற்ற நிலையில் நீங்கள் நறுமணத்தைப் போலாகி இலகுவாய் சிறகடித்து காற்றில் பறக்கிறீர்கள். அப்போது சுயவிசாரணை சாத்தியம். தற்போது நீங்கள் சுயத்தை ஆராயமுடியும்.

சுயவிசாரணையும், சுயபகுப்பாய்வும் ஒன்றாகிவிடாது. சுய விசாரணை என்பது சுயத்தினுள் கூர்ந்துபார்ப்பது. அது சுயத்தின் மீது ஆழ்ந்துசிந்தனை செய்வது.

சுயவிசாரணைக்குப் பிறகு இரண்டாம் நிலையின் கடைசிப் படியாய் வருவது ‘கடவுளிடம் சரணாகதி’ பதஞ்சலி செல்லும் வழி உண்மையில் அதிசயிக்கத்தக்கது. அவர் ஒவ்வொரு படியையும் ஆண்டுக்கணக்கில் பரிசீலித்திருக்க வேண்டும். அப்படித்தான் தெரிகிறது. சுயவிசாரணைக்குப் பிறகே நீங்கள் சரணாகதி அடைய முடியும். இல்லையேல் வேறு எப்படி நீங்கள் சரணடைவீர்கள்? சுயந்தான் பகவானிடம் விட்டுக் கொடுக்கப்பட வேண்டியது. நீங்கள் அதனை நன்றாய் புரிந்துகொண்டால் சரணடைய முடியும். இல்லையேல் எப்படி சரணடைவீர்கள்?

மக்கள் என்னிடம் வருகிறார்கள். ‘நாங்கள் சரணடைய விரும்புகிறோம்’ என்று அவர்கள் சொல்கிறார்கள். ஆனால் நீங்கள் என்னிடம் எதை விட்டுக்கொடுப்பீர்கள்? தற்போது உங்களிடம் எதுவும் இல்லை. நீங்கள் வெறுமையான ஒன்றையே சராணாகதி என்கிறீர்கள். சரணடைவதற்கு நீங்கள் இருக்கவேண்டும். முதலில், சரணடைவதற்கு முழுமையான சுயம் தேவைப்படும். வெறும் வார்த்தையில் சரணாகதி நிகழ்ந்து விடுவதில்லை. நீங்கள் அதற்கான திறமையுடையவராய் இருக்க வேண்டும், அது ஈட்டப்பட வேண்டியது. சுயவிசாரணைக்குப் பிறகு, சுயம் உங்களுக்குள் ஒரு தீபத்தம்பமாய் எழுந்து நிற்கும்போது, நீங்கள் அதைப்புரிந்து கொண்டுவிடுகிற போது, தேவையற்றவை யெல்லாம் வெட்டி வீசியெறியப்பட்டதும், சுயம் மட்டுமே தன்னுடைய புராதனப் புனிதத்துடனும், அழகுடனும் இருக்கும் – தற்போது நீங்கள் அதை பகவானிடம் சரணடையச் செய்யமுடியும்.

பதஞ்சலியிடம் - சொல்வதற்கு இன்னுமோர் அரிதான விசயமும் உண்டு. அது கடவுள் இருக்கிறாரா இல்லையா என்பது முக்கியமல்ல என்பதாகும். பதஞ்சலிக்குக் கடவுள் ஒரு கோட்பாடு ஆகமாட்டார். கடவுள் நிருபிக்கப்பட்டவராயில்லை. கடவுள் சரணாகதி அடைவதற்கு ஒரு சாக்கு (காரணம்) என்கிறார் பதஞ்சலி. இல்லையேல் நீங்கள் வேறு எங்கே சரணடைவீர்கள்? உங்களால் கடவுள் இல்லாமல் சரணடைய முடியுமென்றால் ரொம்ப சரி, பதஞ்சலிக்கு அது ஒன்றும் தொல்லையாகாது. கடவுளை நம்பியாக வேண்டும் என்று அவர் வற்புறுத்தவில்லை. கடவுள் இன்றியமையாத ஒன்றல்ல என்று சொல்லுமளவிற்கு அவர் விஞ்ஞானபூர்வமானவர்தாம். அது சரணாகதிக்கு ஒரு வழி அவ்வளவுதான். இல்லையேல் எங்கு சரணடைவது என்று உங்களுக்குச் சிரமமாகிவிடும். 'யாரிடம் சரணடைவது?' என்று நீங்கள் கேட்பீர்கள்.

கடவுள் இல்லாமலே புத்தர், மகாவீரர் போன்றவர்கள் சரணடைந்திருக்கிறார்கள் ஆனால் அவர்கள் அரிதான நிகழ்வுகள். உங்கள் மனம் எப்போதும் கேட்டுக்கொண்டேயிருக்கும். நான் 'நேசியுங்கள்' என்று உங்களிடம் சொன்னால் 'யாரை?' என்று நீங்கள் கேட்பீர்கள். ஓர் இலக்கு (புலனால் அறியும் பொருள்) இல்லாமல் உங்களால் நேசிக்க முடியாது. ஒரு கடிதம் எழுதும்படி உங்களிடம் நான் சொன்னால், 'எந்த முகவரிக்கு?' என்று நீங்கள் கேட்பீர்கள். ஒரு முகவரியின்றி கடிதம் எழுத முடியாது உங்களால், காரணம் அது ரொம்பவும் முட்டாள்தனமாய் தெரியும். உங்கள் மனம்: முடிவெல்லையில் கடவுள் இல்லாதிருந்து அது உங்களிடம் 'சரணடை' என்று சொன்னால், நீங்கள் 'யாரிடம்?' என்பீர்கள்.

கடவுள் ஒரு முகவரியாய் இருந்து உங்களுக்கு உதவுகிறார். கடவுள் ஓர் இலக்கல்ல, கடவுள் ஒரு நபரல்ல. பதஞ்சலியைப் பொறுத்தவரை அவர் வழியில் ஒரு துணை-கடைசித்துணை. கடவுளின் பெயரால் சரணடைவது எளிது. கடவுளின் பெயரால் சரணடைகிறபோது எங்கே சரணடைவது என்கிற குழப்பம் இருக்காது. சரணடைய ஓர் இடம் வேண்டும் உங்களுக்கு. சரணடைய ஓர் இடம் இருக்கிறது. கடவுள் ஒரு நபரல்ல, அவர் எல்லையற்ற பெருவெளி (space) ஆவார்.

கடவுளில்லாமல் உங்களால் சரணடைய முடியுமென்றால் நாங்கள் அதை வற்புறுத்தமாட்டோம் என்கிறார் பதஞ்சலி. சரணாகதி ஒரு

செயல், கடவுளல்ல. நான் என்ன சொல்கிறனே் என்பதை நீங்கள் புரிந்து கொண்டுவிட்டால், அந்நிலையில் சரணாகதியே கடவுளாகிவிடும். சரணாகதி அடைவதே கடவுளிடம் சென்று சேர்வதற்காகத்தான். சரணாகதி அடைவதே கடவுட் தன்மை கொண்டுவிடுவதற்குத்தான். ஆனால் நீங்கள் மறையும்படி ஆகும். முதலில் உங்களைக் கண்டுகொள்ளுங்கள் அப்போது தான் மறையமுடியும். முதலில் உங்களை ஒருங்கிணைத்து முழுமைப்படுத்திக் கொள்ளுங்கள், அவ்வகையில்தான் நீங்கள் கோயிலுக்குச் செல்லமுடியும், பகவானின் பாதத்தில் உங்களை ஒப்படைத்துக் கொள்ளமுடியும். கடலில் ஓடிக் கலக்கிறீர்கள், மறைந்துவிடுகிறீர்கள்.

'தூய்மை, மனநிறைவு, தவம், சுயவிசாரணை, கடவுளிடம் சரணாகதி இவை கருத்தூன்றிக் கவனிக்கப்படவேண்டிய சட்டங்கள். இவை வளர்ச்சிக்கான சட்டங்கள். அவை தடைசெய்வதில்லை, அவை உதவுகிறவை. அவை எல்லைக்குட்படுத்தாதவை, படைப்பார்ந்தவை'.

'மனம் தவறான எண்ணங்களால் அமைதிகுலையும்போது எதிரிணையானவை (opposites)களைச் சிந்திக்க வேண்டும்'.

இது உங்களுக்குப் பயனளிக்கக்கூடிய ஓர் அழகான செய்முறை. எடுத்துக்காட்டாக நீங்கள் மனநிறைவற்ற நிலையில் (அதிருப்தியில்) என்ன செய்வீர்கள்? பதஞ்சலி சொல்கிறார், எதிரிணையானதைச் சிந்தியுங்கள் என்று. நீங்கள் நிறைவற்றிருந்தால் நிறைவை, நிறைவென்றால் என்னவென்பதைச் சிந்தியுங்கள். ஒரு சமநிலையைக் கொண்டுவாருங்கள். உங்கள் மனம் கோபத்தால் இருந்தால் அங்கே இரக்கத்தைக் கொண்டுவாருங்கள், இரக்கத்தைப் பற்றிச் சிந்தியுங்கள் உடனடியாய் ஆற்றல் மாறும். ஒரு தடவை நீங்கள் அதனை உள்ளே கொண்டுவந்துவிட்டால் அது கிரகித்துக் கொண்டுவிடும். கோபம் இருக்கிறபோது இரக்கத்தைச் சிந்தியுங்கள்.

ஒன்று செய்யுங்கள்: புத்தரின் சிலையொன்றை வைத்துக் கொள்ளுங்கள். காரணம் அந்தச்சிலை இரக்க உணர்வைக் குறிப்பது. நீங்கள் கோபப்படுகிற போதெல்லாம் அறைக்குள் சென்று புத்தரைப் பாருங்கள், புத்தநிலையில் அமர்ந்து கொள்ளுங்கள், இரக்கத்தை உணருங்கள். சற்றும் எதிர்பாராத விதமாய் உங்களுக்குள் ஒரு மாற்றம் நிகழ்வதைக் காண்பீர்கள். கோபம் மாறுகிறது, மனக்கிளர்ச்சி மறைகிறது, இரக்க உணர்வு மேலெழுகிறது. அது வேறானதொரு ஆற்றலல்ல. அதே ஆற்றல்தான் - கோபத்தின் அதே ஆற்றல் -

வலிமை தான். அதன் தன்மையை அது மாற்றிக்கொள்கிறது. மேல் நோக்கிச் செல்கிறது. அதைச் சோதித்தறியுங்கள்.

அதுவெளியிடாமல் மறைத்துவைப்பதல்ல என்பதை நினைவில் கொள்ளுங்கள். மக்கள் என்னிடம் கேட்பதுண்டு. 'பதஞ்சலி மறைத்து வைப்பவரா? காரணம், நான் கோபமாய் இருக்கும்போது, இரக்கவுணர்வைப்பற்றி நான் நினைத்தால், அது மறைத்து வைப்பதாகாதா?' என்று. இல்லை, அது ஒன்றை இன்னொன்றாக மாற்றி உயர்நிலை அடைவது (sublimation), அது மறைத்துவைப்பதாகாது. நீங்கள் கோபத்தில் இருந்து கொண்டு இரக்கத்தைப்பற்றிச் சிந்திக்காமல் கோபத்தை அடக்கிவைத்தால் அது வெளியிடாமல் மறைத்து வைப்பதாகும். அதை நீங்கள் கீழே தள்ளிவிட்டு, புன்னகை செய்கிறீர்கள், கோபமில்லாதவரைப்போல் நடந்து கொள்கிறீர்கள் - கோபம் அங்கு கொப்பளிக்கிறது, கொதிநிலை அடைந்து வெடிக்கத் தயாராகிறது. அந்நிலைதான் வெளியிடாமல் மறைத்துவைப்பது. இல்லை, நாம் எதையும் அடக்கிவைக்கவில்லை, புன்னகையை அல்லது வேறொன்றைத் தோற்றுவித்துக் கொள்ளவில்லை. நாம் முற்றிலும் மாறுபட்ட இரண்டு கருத்துநிலை (polarity)களை அப்படியே மாற்றுகிறோம். அவ்வளவுதான்.

எதிர்மாறான கருத்து எதிர்முனையாகிறது. நீங்கள் வெறுப்புற்ற நிலையில் அன்பை நினையுங்கள். நீங்கள் ஆசையில் இருக்கும்போது ஆசையற்ற தன்மையை எண்ணிக் கொள்ளுங்கள். நிலை எதுவாயினும் எதிரிணையானதை உள்ளே கொண்டுவாருங்கள். உங்களுக்குள் என்ன நிகழ்கிறது என்று கவனியுங்கள்.

அந்தத் திறமை வந்துவிட்டால் நீங்கள் நிபுணராகிவிடுவீர்கள். தற்போது உங்களிடம் சாதனம் இருக்கிறது. எந்தக் கணத்திலும் கோபத்தை இரக்கவுணர்வாய் நீங்கள் மாற்றிக்கொண்டுவிட முடியும். எந்தக் கணத்திலும் வெறுப்பை அன்பாய் மாற்றிவிடமுடியும். எந்தக் கணத்திலும் துயரத்தைப் பரவசமாய் மாற்றிக் கொள்ள முடியும். துயரமே பரமசுகமாகிவிடமுடியும் காரணம் துயரமும், சுகமும் அதே ஆற்றலைக் கொண்டிருக்கின்றன. ஆற்றல் வேறுபடுவதில்லை. நீங்கள் குறிப்பிட்ட செயல்வழியை அறிந்து கொண்டால் போதும்.

கோபத்தின் முழு ஆற்றலும் இரக்கவுணர்வாய் மாறிவிடுகிற நிலையில் அடக்கிவைப்பதென்பதில்லை - அடக்கி வைக்கும்படியால்

எதுவும் விடப்படவில்லை. உண்மையில் இரக்கத்தில் அதை நீங்கள் வெளிப்படுத்துகிறீர்கள்.

வெளிப்படுத்துவதில் இரண்டு வழிகள் இருக்கின்றன. மேற்கில், ஆழ்ந்த உணர்ச்சித் தூய்மை (Catharsis) முக்கியத்துவம் பெற்றிருக்கிறது. எதிர்த்து நிற்கும் குழுக்கள் (Encounter groups), அடிப்படை பிணிநீக்கல் (Primal therapy) - என்று எல்லாமும் உணர்ச்சித் தூய்மையில் நம்பிக்கை வைப்பவை. என்னுடைய ஆற்றல் வாய்ந்த தியானம் (Dynamic-Meditation) உணர்ச்சித் தூய்மையின் ஒரு செய்முறை, காரணம், உன்னதம் பெறுவதற்கான சாதனத்தை மக்கள் தொலைத்துவிட்டனர். பதஞ்சலி உணர்ச்சித் தூய்மைபற்றி எந்த வகையிலும் பேசவில்லை. அவர் ஏன் அதைப் பற்றிப் பேசுவ தில்லை? மக்களிடம் திறமை இருந்தது, எப்படி மேம்படுவது என்பதை அவர்கள் அறிந்திருந்தார்கள். நீங்கள் மறந்துபோனீர்கள், எனவே நான் உணர்ச்சித் தூய்மை பற்றி உங்களுக்கு விளக்க வேண்டியிருக்கிறது.

கோபம் இருக்கிறது; அதை இரக்கமாய் மாற்றஇயலும், ஆனால் அதை எப்படிச் செய்வது•என்ற யோசனைதான் உங்களிடம் இருக்கவில்லை. அது ஒன்றும் கலையல்ல கற்பிப்பதற்கு, அது ஒரு திறமை. நீங்கள் அதைச் செய்ய வேண்டும், செய்கையின் மூலம் கற்க வேண்டும், வேறு வழியில்லை. அது நீந்துதல் மாதிரி. நீங்கள் நீந்தும் போது தவறு ஏற்படலாம், சில நேரங்களில் ஆபத்துக்குள்ளாகலாம், சில சமயம் தொலைந்தோம் என்று எண்ணிக் கொள்ளலாம், அந்நிலையில் திறமை வந்தடைகிறது. அந்நிலையில் அது என்னவென்பதை நீங்கள் அறிந்துகொண்டுவிடுகிறீர்கள். நீந்துதல் அப்படியோர் எளிதான செயல்தான்.

நீங்கள் ஊன்றிக் கவனித்திருக்கிறீர்களா? ஒரு சிலவற்றை நீங்கள் கற்றுக் கொண்டதும், மறக்கவேமாட்டீர்கள். அவற்றுள் ஒன்று நீந்துதல். அல்லது சைக்கிள் சவாரி - நீங்கள் கற்றுக் கொண்டபின் மறக்க மாட்டீர்கள். வேறு பலவற்றை நீங்கள் கற்றுக் கொண்டாலும் மறந்து விடுவீர்கள். உங்களுடைய பள்ளிக்கூடத்தில் ஆயிரத்தியோரு விசயங்களைத் தெரிந்து கொண்டிருந்தாலும், ஏறக்குறைய எல்லா வற்றையும் தற்போது மறந்துவிட்டிருப்பீர்கள். பள்ளிக்கூடத்தின் ஒட்டு மொத்த நியதிப்பணிகளும் (school system) வீணாகிவிட்டிருக்கும். மக்கள் கற்றுக்கொள்கிறார்கள் ஆனால் நினைவில் வைத்திருப் பதில்லை. தேர்வுடன் தீர்ந்து போகும், பிறகேதும் நினைவில் இருக்காது.

ஆனால் நீந்துவதை உங்களால் மறக்க முடியாது. ஐம்பது ஆண்டுகள் ஆற்றுப்பக்கம் போகாமல் இருந்தாலும், திடீரென்று உங்களைத் தண்ணீரில் தூக்கிப்போட்டால் எப்போதும் போல் உற்சாகமாய் மறுபடியும் நீந்துவீர்கள். என்ன செய்வது என்கிற தயக்கம் கணப்பொழுதும் உங்களிடம் இருக்காது. ஏன் அப்படி நடக்கிறது? காரணம் அது ஒரு திறமை. அதை மறக்க முடியாது. அது கற்றல் அல்ல, அது ஒரு கலையும் அல்ல. கற்றதும், கலைத்திறனும் மறக்கக்கூடும் ஆனால், பிரத்யேகத் திறமை - கைத்திறன் உங்களுடைய இருப்புணர்வின் அடியாழத்துக்குச் சென்று உங்களில் ஒரு பகுதியாகவே மாறிவிடும். ஒன்றை மற்றொன்றாய் மாற்றி உன்னத மடைவது ஒரு திறமை.

பதஞ்சலி ஒருபோதும் உணர்ச்சித் தூய்மை (Catharsis) பற்றிப் பேசியதில்லை. ஆனால் ஒரு முறை தெரிந்து கொண்டு உன்னதமடைய உங்களால் முடியுமெனில் உணர்ச்சித் தூய்மை செய்ய வேண்டிய அவசியம் இருக்காது காரணம் உணர்ச்சியைத் தூய்மைப்படுத்துவது ஒரு வழியில் ஆற்றலை விரயப்படுத்துவதாகும். ஆனால், துரதிருஷ்டவசமாய் தற்போது எதுவும் செய்வதற்கில்லை. நீங்கள் பல நூற்றாண்டுகளாய் அடக்கிவைக்கப்பட்டிருந்தீர்கள் அதனால்தான் உன்னதமடைதலும் அடக்கிவைத்தலாய் தெரிகிறது உங்களுக்கு. உணர்ச்சியைத் தூய்மைப்படுத்துவது வழிமுறையாய் படுகிறது. முதலில் நீங்கள் விடுபடவேண்டும் எடையற்றவராய், சுமையற்றவராய் மாறிவிடுங்கள். அதன்பிறகு உன்னதம்பெறும் திறன் உங்களுக்கு விளக்கப்படும்.

உன்னதமடைவதென்பது ஆற்றலை உயர்ந்த வழியில் பயன்படுத்துவதாகும்.

அதே ஆற்றலை வேறொரு தன்மையுடன் பயன்படுத்துவது. ஆனால், நீங்கள் அதைச் சோதித்தறிய முடியும். உங்களில் பலரும் ஆற்றல் தியானத்தை (Dynamic meditaition) நெடுங்காலமாய் பழகியிருப்பீர்கள். நீங்கள் அதைச் சோதித்துப்பாருங்கள். அடுத்த முறை கோபம் இருக்கிறபோது, துயரம் இருக்கிறபோது அமைதியாய் அமர்ந்து. அந்தத் துயரத்தை மகிழ்ச்சியை நோக்கிச் செல்லவிடுங்கள். கொஞ்சம் உதவுகிறவிதமாய் தள்ளிவிடுங்கள். அதிகம் செய்ய வேண்டாம், அதிருவகச் செயல்பாடும் வேண்டாம். ம்ம்..? காரணம். மகிழ்ச்சியை நோக்கிச் செல்கிறபோது துயரம் முதலில் தயக்கம் காட்டும். பல நூற்றாண்டுகளாய் சென்றிராத வழி. தயக்கம் இருக்கும்.

தான் முன்பு சென்றிராத ஒரு புதிய பாதையில் வலுக்கட்டாயமாய் செலுத்தப்படுகிற குதிரை தயங்குமே. அந்த மாதிரி அது தயக்கப்படும். அது பழைய அமைப்பில், பழைய பாதையில், பழைய தடத்திலேயே செல்ல முயலும். ஆனால், மெள்ள மெள்ள அறிவுறுத்தி, வசப்படுத்த வேண்டும். அந்நிலையில் துயரத்திடம் சொல்லுங்கள், "பயப்படாதே. அது உண்மையிலேயே நீண்ட குறுகிய பள்ளம், அதைவிடு. இந்த வழியில் வா. நீ மகிழ்ச்சியாகிவிடலாம் அதிலொன்றும் தவறில்லை. முடியாதது எதுவுமில்லை." என்று.

உங்கள் துயரத்திடம் பேசி இணங்கச் செய்யுங்கள். திடீரென்று ஒரு நாள் அந்தத்துயரம் புதியதோர் போக்கு வழி (Channel) யில் செல்வதைத் காண்பீர்கள். அது மகிழ்ச்சியாய் மாறிவிடுகிறது. அன்றுதான் யோகி பிறக்கிறான். அதற்கு முன்பாயில்லை. அதற்குமுன் நீங்கள் தயார்ப்படுத்திக் கொண்டிருக்கிறீர்கள்.

'எதிரிடையானவற்றையும் சிந்திப்பது அவசியம், ஏனெனில் தவறான எண்ணங்கள், உணர்ச்சிகள், செயல்கள் - கொலை பொய் போன்றவை அறியாமையிலும் பெருந்துன்பத்திலும் முடியும். இவற்றைச் செய்தாலும், செய்வித்தாலும், ஆமோதித்தாலும் இவை குறைந்தோ, நடுத்தரமாகவோ, பெரிய அளவிலோ இருந்தாலும் முடிவில் அளவற்ற கேடுகளை விளைவிக்கும்.'

மறுப்பிற்குரியது எதுவாயினும் உங்களுக்கும், மற்றவர்களுக்கும் ஆபத்தையே உண்டு பண்ணும். எதிர்மறையான எதுவும் முன்பே உங்களுக்கும், மற்றவர்களுக்கும் நரகத்தைத் தோற்றுவித்துக் கொண்டிருக்கிறது. எச்சரிக்கையாயிருங்கள் அது உங்களுக்கும் மற்றவர்களுக்கும் துயரத்தையே தரும். நீங்கள் ஓர் எதிர்மறை சிந்தனையை எண்ணமிட்டாலும் அது முன்பே உலகத்தில் உண்மையாகிவிடுகிறது. நீங்கள் செயல்பட்டுத்தான் உண்மையாக வேண்டுமென்பதில்லை. எண்ணமும் செயலைப் போல் நடைமுறையைக் கொண்டிருக்கிறது. நீங்கள் ஒருவரைக் கொலை செய்ய எண்ணினால், முன்பே கொலை செய்தவராகிவிடுகிறீர்கள். அந்த மனிதர் உயிரோடிருக்கலாம். ஆனால் உங்களுடைய வேலையை நீங்கள் செய்துவிட்டீர்கள். முடிந்த அளவு முழுமையாக. அவர் வாழமுடியாமல் போகலாம். நீங்கள் ஓரளவு அவரைக் கொன்றுவிட்டீர்கள். அந்த மனிதர் உயிர்வாழ இயன்றிருக்கலாம் ஆனால் நீங்கள் கொலைகாரராகி விடுகிறீர்கள், அதுவுமல்லாமல்

உங்களுக்குள்ளிருக்கும் கொலைப் பண்பை உங்களுடைய ஆற்றல் சுமந்து கொள்ளும்.

எண்ணம், உணர்ச்சி அல்லது செயல் - இவற்றுக்கிடையில் நாம் எந்த வேறுபாட்டையும் ஏற்படுத்திக் கொள்ளவில்லை. அவை ஒரே மாதிரியானவை. அவை விதை, செடி, மரம் போன்றவை. விதை இருக்கிறது. விதைக்குள் மரம் இருக்கிறது. அது மரத்தைக் கருவுற்றிருக்கிறது, பின் வெளிப்படுகிறது. எதிர்மறையான ஓர் எண்ணத்தை நீங்கள் பற்றியிருந்தால் உடனடியாய் அதை மாற்றுங்கள், நேர்மறையானதாய் மாற்றிவிடுங்கள். அது ஆபத்தானது. ஒவ்வோர் எண்ணமும் கடைசியில் செயல்படுவதாகிவிடும். ஒவ்வோர் எண்ணமும் கடைசியில் செயலாகிவிடும்.

சில நேரங்களில் நீங்கள் கவனித்திருக்கிறீர்களா? ஓர் ஓட்டலின் புதிய அறைக்குள் தங்குவதற்காக நுழைகிறீர்கள். திடீரென்று உங்களுக்குள் ஒரு மாறுதலை உணர்கிறீர்கள். அல்லது, ஒரு புதிய வீட்டில் நுழைகிறீர்கள், அங்கு நீங்கள் இனியும் நீங்களாக இல்லாததுபோல் ஒரு விசித்திர உணர்வை அடைகிறீர்கள். ஒரு குறிப்பிட்ட விதியின்படி அது நிகழ்கிறது. ஓர் ஓட்டல் அறையில் பல விசயங்கள் நடக்கும், பல வகையான ஆட்கள் வந்து போவார்கள். அது மிகவும் நெரிசலான இடம், ஓர் ஓட்டல் அறையில் ஆயிரக்கணக்கான எண்ணங்கள் கூட்டமாய் திரண்டிருக்கும் - வெளியேற்றப்படும். அது காலியாயிருப்பதில்லை. அந்த எண்ணங்கள் அங்கே அதிர்வை ஏற்படுத்திக் கொண்டிருக்கும். நீங்கள் உள்ளே சென்றதும் சற்றும் எதிர்பாராத விதமாய் பல்வேறு எண்ணங்களின் ஆதிக்கத்துக்குட் படுத்தப்படுவீர்கள்.

ஒரு புதிய வீட்டுக்குள் செல்கிறீர்கள். நீங்கள் சீர்படுத்திக் கொண்டு, இது உங்களுடைய வீடு என்ற உணர்வைப் பெற ஏறக்குறைய மூன்று வாரம் பிடிக்கும், இருபத்தியோரு நாட்கள். காரணம் இருபத்தியோரு நாட்களில் கொஞ்சம் கொஞ்சமாய் உங்களுடைய எண்ணங்கள், அங்கே முன்பிருந்த எண்ணங்களை விரட்டியடித்து; வீட்டை அவற்றின் பிடிக்குக் கொண்டுவரும். பிறகு எல்லாம் எளிதாகிவிடும், நீங்கள் வீட்டில் இருப்பதாய் - உங்களுடைய சுயத்துக்குத் திரும்பி வந்துவிட்டாய் உணர்வீர்கள்.

சில நேரங்களில், ஒரு கொலைகாரன் ஓர் அறையில் வசித்துக் கொண்டு, கொலைபற்றியே தொடர்ந்து சிந்தித்து, எதையானும்

திட்டமிட்டுக் கொண்டிருந்திருப்பான். அவன் வெளியேறிய ஆறு நிமிடங்களுக்குள் நீங்கள் அந்த அறைக்குள் சென்று, அங்கே தங்கியிருந்தால், அவன் கொலை செய்யாதிருக்கலாம். ஆனால் நீங்கள் கொலை செய்துவிடக்கூடும் - ஏனெனில் அந்தக் கணத்தில் அவனுடைய எண்ணம் அத்தனை செயல்வேகம் மிக்கதாயிருக்கும். கொஞ்சம் கொஞ்சமாகத்தான் அது சிதறுகிறது. அல்லது, அந்த மனிதன் தற்கொலை பற்றிய சிந்தனையில் இருந்திருந்தால், வேறு யாரேனும் ஒருவர் தற்கோலை செய்துகொள்ளக் கூடும். உங்களுடைய எண்ணம் இன்னொருவரின் செயலாய் மாறிவிடும்.

ஆனால், நீங்கள் எதிர்மறையாய் எதைச் சிந்தித்தாலும் நீங்கள் தீவினையைத் தோற்றுவித்துவிடுகிறீர்கள், உங்களுக்கு மட்டுமல்ல மற்றவர்களுக்கும். நீங்கள் நடைமுறையின் இயல்பையே மாற்றிவிடுகிறீர்கள். ஒரு நேர்மறையான ஆற்றலிலும், நேர்மறையான சிந்தனையிலும் அதே மாதிரிதான் நிகழ்கிறது. நீங்கள் இரக்க சிந்தனையை உலகத்துக்கு அனுப்பிவைத்தால் அது ஏற்கப்படுகிறது. உங்களுடைய சிந்தனை ஒரு சிறந்த உலகைத் தோற்றுவிக்கிறது. நீங்கள் மனம் அற்ற நிலையை அடைவீர்களாயின் உங்களைச் சுற்றி ஒரு வெறுமையான இடத்தைத் தோற்றுவிப்பீர்கள். அந்த வெற்றிடத்தில் யாரேனும் ஒருவர் என்றாவது ஒரு நாள் புத்தராகிவிடுவார். அது காரணமாகவே - மெக்கா, மெதீனா அல்லது ஜெருசலேம் அல்லது கிர்னார், கயிலாயம் போன்ற சில இடங்களுக்கு அதிகமதிப்பும், அதிக மரியாதையும் வைக்கப்படுகிறது. உலகிலேயே அதிகப் புனிதம் பெற்ற இடங்களாய் அவை கருதப்படுகின்றன.

அந்த இடங்களில் இருந்து ஆயிரக்கணக்கான புத்தர்கள் உருவாயினர். அவர்கள் ஒரு வெற்றிடத்தை, இயக்கமுள்ள வெற்றிடத்தை விட்டுச் சென்றிருக்கிறார்கள். எந்தவொரு சிந்தனையும் உள்ளே நுழைய முடியாத அளவுக்கு ஆற்றல் மிக்க வெற்றிடம் அது. கயிலாயத்தில் ஒரு தகுதியான இடத்தை கண்டுபிடித்து, அந்த இடத்தில் அமர்ந்து கொண்டுவிட்டால் உடனடியாய் நீங்கள் மாற்றமடைவீர்கள். மனம் அற்ற நிலை என்கிற நீர்ச்சுழியில் இருப்பீர்கள். அது உங்களைச் சுத்தப்படுத்தும்.

நேர்மறையானவற்றுடன் என்ன நிகழ்கிறதோ அதுபோன்றுதான் எதிர்மறையானவற்றுடனும் நிகழும்.

நீங்கள் எதிர்மறையாய் ஒன்றை உணர்கிறபோது, உடனடியாக அதை நேர்மறையானதாய் மாற்றிவிடுங்கள். அதைக்கட்டாயப்படுத்த வேண்டுமென்று நான் சொல்லவில்லை. அதை அடக்கிவைக்கும் படியும் நான் சொல்லமாட்டேன். அதற்கு இடமளியுங்கள், அதனை எதிரிடையாய் மாற்ற உதவுங்கள் என்பேன். அது ஒன்றும் கடினமல்ல. அதற்கான திறனை அறிந்துகொண்டால் போதும்.

**ஒருவரிடம் கேட்பதற்குக் கேள்விகள் இல்லை என்பது ஒரு நல்ல அறிகுறியல்லவா?**

உண்மையிலேயே உங்களிடம் கேட்பதற்குக் கேள்விகள் இல்லை என்றாகிவிட்டால் அது குறிப்பிடத்தக்க ஒரு நிகழ்வுதான். அது மிகவும் நேர்த்தியான மனநிலைகளுள் ஒன்று. காரணம் கேள்விகள் இல்லை என்கிறபோது, கேள்வி எழுப்பாத பிரக்ஞை (consciousness)யே எல்லாக் கேள்விகளுக்கும் விடையாகும். நீங்கள் விடைகளைப் பெறுகிறீர்கள் என்பதல்ல, கேள்விகள் மறைகின்றன. மனம் இறுக்கமற்றதாகிறது. காரணம் ஒவ்வொரு கேள்வியும் ஓர் இறுக்கம், கவலை, பதற்றம்.

எந்த பதிலும் கேள்விக்கு விளக்கம் கொடுக்கப் போவதில்லை. கேள்வி கேட்கிற மனந்தான் பிரச்சினை, கேள்வியல்ல. உங்கள் கேள்விக்கு விடை கிடைக்கும் ஆனால் அந்த விடையில் இருந்து உங்களுடைய கேள்வி கேட்கிற மனம் ஆயிரத்தியோரு கேள்விகளை எழுப்பும். நீங்கள் ஒவ்வொரு விடையையும் மேலும் பல கேள்விகளாய் தன்மையில் தாழ்த்த முடியும். அது ஒருபோதும் பயன்தராது. எல்லாக் கேள்விகளையும் விட்டுவிடுகிறபோதுதான் அது அனுகூலமாயிருக்கும். பிரக்ஞை கேட்பதைக் கடந்து செல்லும் நிலையிலும், கேட்பதற்கு எதுவும் இல்லை என்பதை (விடையளிக் கவும்) நீங்கள் புரிந்து கொள்கிறபோதும் அது உதவக்கூடும்.

வாழ்க்கை ஒரு புதிர், பிரச்சினையல்ல. அது குறித்து நீங்கள் எதுவும் கேட்க முடியாது. அது உண்மையிலேயே நிகழுமெனில் இதுதான் சமாதிநிலை ஆகும்.

இதுபற்றியதே என்னுடைய முழுமுயற்சியும். கேள்விகளே எழாத ஒரு முனைப்பகுதிக்கு நீங்கள் வந்தாக வேண்டும். அந்த அமைதியில், பேரின்பத்தில், குழப்பமற்ற நிலையில் நீங்கள் மாற்றமடைகிறீர்கள். எல்லா வேதனையும், வரும்நிலை குறித்த அச்சமும் மறைகிறது.

ஆனால் கேள்வி இதுதான். கேள்விகள் இருந்தும் நீங்கள் கேள்வி கேட்கவில்லை என்பது உண்மையானால் அப்போது அதனால் எந்தப் பயனும் இல்லை. அந்நிலையில் கேட்பதே நல்லது. மனதுக்குள் கேள்விகள் இருந்தும் நீங்கள் கேட்காவிட்டால் அந்நிலையில் நீங்கள் அச்சமடைவீர்கள். அது உதவாது. அதைவிட கேட்டு நிறைவு செய்வது நல்லது. கேட்பதன் மூலம் நீங்கள் பதிலைப் பெறுவீர்கள் என்றாகாது. விடையைப் பெற்றவர் யாருமில்லை. அதை எந்தக் காலத்திலும் யாரும் பெற்றதில்லை. விடை சாத்தியமற்றது, காரணம் வாழ்க்கை ஒரு புதிர். அதைவிடுவிக்கமுடியாது. நீங்கள் எத்தனைக்கு விளக்கம் காணமுற்படுகிறீர்களோ அத்தனைக்கு அது விளக்க இயலாததாகவே நின்றுவிடும். ஆனால், கேள்விகேட்பதன் மூலம் நீங்கள் கேள்வி கேட்பது பயனற்றது என்பதைக் காலப்போக்கில் தெரிந்து கொள்வீர்கள்.

பிறகு ஒரு நாள் விழிப்புணர்வின் நுட்பமான கணத்தில் பிரக்ஞையின் முழுமையான கணத்தில் நீங்கள் கேள்விகளைக் கடக்கிறீர்கள். தனது பழைய சட்டையை விட்டுச்செல்கிற பாம்பு மாதிரி – பழைய தோல் உதறப்படுகிறது. பாம்பு தொடர்ந்து செல்கிறது – ஒரு நாள் உங்களுடைய பிரக்ஞையும் கேள்விகள் என்கிற தனது பழை தோலை விட்டுவிட்டுச் சென்றுவிடும். நீங்கள் புத்திளமையை, கன்னித்தன்மையை – அடைவீர்கள். நீங்கள் புத்தராகிவிடுகிறீர்கள். புத்த உணர்வு விடைகளையுடைய பிரக்ஞையாகாது. அது கேள்விகளற்ற உணர்வு.

**மிகப்பெரிய மன அழுத்தம் ஏற்படும் காலங்களில் – சமூகம் சார்ந்த, பொருளாதாரம் சார்ந்த, மதம் சார்ந்த – மிகப்பெரிய நன்மை விளைவது சாத்தியம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இந்த வகைமுறை புனேயில் உங்கள் முன்னிலையில் நாங்கள் அனுபவித்தறிவதைப் பிரதிபலிப்பதாகுமா?**

ஆம். இக்கட்டான நேரம் என்பது மதிப்புமிக்க நேரமாகும். எல்லாமும் நிலைப்படுத்தப்பட்டு நெருக்கடியேதும் இல்லையென்கிற போது செயல்கள் வலுவிழக்கும்.

எதுவுமே மாறாமல், பழைமையின்பிடி இறுகியிருக்குமெனில் உங்களை மாற்றிக் கொள்வதென்பது ஏறக்குறைய சாத்தியமற்றது தான். ஒவ்வொன்றும் பெருங்குழப்பத்தில் இருக்கும்போது எதுவும் நிலையாயிருக்காது. எதுவும் பத்திரத்தன்மையுடன் இருக்காது. அடுத்த

கணத்தில் என்ன நடக்கப் போகிறதென்று யாருக்கும் தெரியாது - அத்தகைய குழப்பமான கணத்தில் - நீங்கள் தடையற்றவராய் இருக்கிறீர்கள், உங்களால் மாறமுடியும். உங்கள் இருப்புணர்வின் உள்ளார்ந்த மையப்பகுதியை நீங்கள் அடையமுடியும்.

அது ஒரு சிறையில் இருப்பதைப் போன்றது. எல்லாமும் சீர்படுத்தப்பட்டிருப்பின் ஒரு கைதிக்கு அங்கிருந்து வெளியேறுவது, சிறையில் இருந்து தப்புவது சாத்தியமாகாது. ஆனால் இப்படிச் சிந்தியுங்கள்: அங்கே ஒரு பூகம்பம் ஏற்படுகிறது. எல்லாமும் ஒழுங்கற்றுப் போகின்றன. சிறைக்காவலர்கள் எங்கிருக்கிறார்கள், சிறையதிகாரி எங்கிருக்கிறார் என்று யாருக்கும் தெரியவில்லை, எல்லாவிதிகளும் இல்லாததாகிவிடுகின்றன. ஒவ்வொருவரும் தன்போக்கில் ஓடிக்கொண்டிருக்கிறார்கள். அந்தக் கணக்கில் கொஞ்சம் கவனத்தோடு செயல்பட்டால் அவன் எளிதாய் தப்பியோட முடியும். அவன் முட்டாளாயிருந்தால் தனக்குக் கிடைத்த வாய்ப்பை இழந்து விடுவான்.

ஒரு சமுதாயம் கிளர்ச்சியில் இருக்கும்போது, ஒவ்வொன்றும் நெருக்கடியில் சிக்கியிருக்கும் போது பெருங்குழப்பம் ஊடுருவிப் பரவும் - இந்தக் கணத்தில் நீங்கள் விரும்பினால் சிறையில் இருந்து தப்பியோட முடியும். உங்களுக்கு அருகில் யாருமில்லை, உங்களுக்கு யாரும் காவல் இல்லை என்பதால் அது எளிது. நீங்கள் தனியே விடப்படுகிறீர்கள். யாரும் உங்களைக் கூர்ந்து கவனித்துக் கொண்டிருக்கவில்லை ஒவ்வொருவரும் தம்முடைய வேலைபற்றிய கவலையில் இருக்கிறார்கள். இதுவே சமயம், இந்தச் சமயத்தை நழுவ விடாதீர்கள்.

பெரிய நெருக்கடி காலங்களில்தான் அதிக அளவு சிந்தனைத் தெளிவும் புரிந்து கொள்ளும் ஆற்றலும் உண்டாகிறது. சமுதாயம் நிலைபெற்று கலகம் செய்வதும், விதிகளை மீறுவதும் சாத்தியமில்லை என்கிற நிலையில் சிந்தனைத் தெளிவு கடினமாகிவிடும் - காரணம் அது சுதந்திரமாய் இருக்கும்நிலை. உண்மையில் அது சமுதாயத்திலிருந்து விலகி தனியானதாகிறது. சமுதாயம் தனிநபர்களை விரும்புவதில்லை. தனிநபர்களைப் போல் காட்சியளிக்கும் யந்திர மனிதர்களை (robots)யே அது விரும்பும். சமுதாயம் நம்பத்தக்கவர்களை விரும்புவதில்லை. அது முகமூடிகளை, பாசாங்குக்காரர்களை, போலியாக நடிப்பவர்களையே விரும்புகிறது.

ஆனால், உண்மையானவர்களை விரும்பாது, காரணம் உண்மையான ஒருவன் எப்போதுமே தொந்தரவாகத்தான் இருப்பான். உண்மையானவன் என்றும் தடையற்றவனாகவே இருப்பவன். அவன்மீது எதையும் நீங்கள் திணிக்க முடியாது. அவனைக் கைதியாக்க முடியாது. அவனை அடிமைகொள்ள முடியாது. தன்னுடைய சுதந்திரத்தை இழப்பதைவிட உயிரை இழப்பதையே அவன் பெரிதும் விரும்புவான். உயிரைவிட சுதந்திரம் அவனுக்கு மதிப்புடையது. சுதந்திரத்தை மிக உயர்ந்த மதிப்புடையதாய் அவன் கொள்வான். அதனால்தான் இந்தியாவில் மோட்சத்தை, நிர்வாண நிலையை நாம் உயரளவு மதிப்புடையதாய் எண்ணுகிறோம். அந்த வார்த்தைகளின் பொருள் சுதந்திரம் - ஒட்டுமொத்த சுதந்திரம், முழுமையான சுதந்திரம்.

சமுதாயம் கிளர்ச்சியுற்றிருக்கும் நிலையில், ஒவ்வொருவரும் தமது வேலையைக் கவனித்துக் கொண்டிருக்கும்போது- தப்பிவிடலாம். அந்தச் சமயத்தில் சிறைக் கதவுகள் திறந்திருக்கும். சுவர்களில் விரிசல்கள் இருக்கும், காவலர்கள் பணியில் இருக்க மாட்டார்கள்... ஒருவர் எளிதாய் தப்பிவிட முடியும்.

அதே நிலை இருபத்தியைந்து நூற்றாண்டுகளுக்கு முன்பு புத்தருடைய காலத்தில் இருந்தது. அது எப்போதுமே ஒரு வட்டமாய் வருகிறது, இருபத்தியைந்து நூற்றாண்டுகளில் அந்த வட்டம் பூர்த்தியாகிறது. ஓராண்டில் ஒரு வட்டம் பூர்த்தியாகி - மறுபடியும் கோடைவருகிற மாதிரி, ஓராண்டின் வட்டத்தில் திரும்பவும் கோடை வந்துவிடுவதைப் போன்று - இருபத்தியைந்து நூற்றாண்டுகளில் ஒரு பெரிய வட்டம். ஒவ்வொரு இருபத்தியைந்து நூற்றாண்டுக்குப் பிறகும் பழைய அடித்தளங்கள் வேண்டாம் என்று தள்ளப்பட்டு, புதிய அடித்தளங்கள் சமுதாயத்தில் போடப்படுகின்றன. ஒட்டுமொத்தக் கட்டடமும் தகுதியற்றதென்று உடைத்தெறியப்படுகிறது. அந்நிலையில் பொருளாதார, சமூக, அரசியல் சார்ந்த, மதம்சார்ந்த அத்தனை அமைவுகளும் குலைந்து போகின்றன. புதிதாய் ஒன்று பிறக்கிறது.

இரண்டு சாத்தியங்கள் உள்ளன. ஒன்று, சரிந்து கொண்டிருக்கும் அமைப்பைத் தாங்கி நிறுத்துவது. நீங்கள் ஒரு சமூக சேவகராகலாம், பொருள்களை உறுதியுடன் நிலைக்கச் செய்யலாம். அந்நிலையில் நீங்கள் எதுவும் செய்ய முடியாமல் தவறவிடுவீர்கள். சமுதாயம் செத்துக் கொண்டிருக்கும் (செயலிழத்தல்). ஒவ்வொரு

சமுதாயத்துக்கும் ஓர் ஆயுட்காலம் (வீச்செல்லை) இருக்கிறது. ஒவ்வொரு பண்பாட்டுக்கும் ஓர் ஆயுட் காலம் இருக்கிறது.

ஒரு குழந்தை பிறந்து, வளர்ந்து இளைஞனாகி, முதுமையடைந்து - எழுபது ஆண்டுகள், எண்பது ஆண்டுகள் அதிகபட்சம் நூறு ஆண்டுகள் இருந்து மரிப்பதை நாம் அறிவோம் - ஒவ்வொரு சமுதாயமும் பிறந்து, வளர்ந்து முதுமையடைந்து மரிக்கிறது. தோன்றுகிற ஒவ்வொரு நாகரிகமும் மறைந்துதானாக வேண்டும். கடந்தகாலம் மரிக்கிற கணங்களும், புதுமை பிறக்கிற கணங்களும் திருப்பத்தை ஏற்படுத்துகிறவை. நீங்கள் கவலைப்பட வேண்டிய தில்லை. பழைய அமைப்பை நீங்கள் தாங்கிக்பிடிக்க வேண்டிய தில்லை - அது மரித்துக் போகும். நீங்கள் அதைத் தாங்கிப்பிடித்தால் அதன்கீழே நசுக்குண்டுவிடுவீர்கள். அது பயன்படாது. நீங்கள் வாய்ப்பைத் தவறிவிடுங்கள்.

பிறகு - மற்றொரு சாத்தியம்: புதுமையைக் கொண்டுவருவதற்கு ஒரு சமுதாயப்புரட்சியை நீங்கள் தொடங்கலாம். அப்போதும் வாய்ப்பை மறுபடியும் நீங்கள் இழப்பீர்கள், காரணம், புதுமையான ஒன்று வரப்போகிறது. நீங்கள் அதைக் கொண்டுவர வேண்டியதில்லை. புதுமை முன்பே வந்து கொண்டிருக்கிறது - அது குறித்துக் கவலைப்பட வேண்டாம். புரட்சி செய்பவராகி விடாதீர்கள். புதுமை வந்துவிடும். பழைமை போய்விடுமென்கிறபோது யாரும் அதைக் கட்டாயமாய் இருக்கச்செய்ய முடியாது. புதுமை அங்கே இருக்குமாயின், உரியகாலம் வந்துவிடுமாயின், கருவறையில் குழந்தை முற்றிலும் வளர்ந்து, பிறக்கும். கருப்பை மேற்புறத்திறப்பு (Caesarean) அறுவைக்கு நீங்கள் முயல வேண்டியதில்லை. கவலைவேண்டாம், குழந்தை பிறக்கப் போகிறது. முழுமையான மாற்றம் தன்னால் விளைகிறது. அது ஓர் இயற்கையான நிகழ்வு. எந்தப்புரட்சியும் தேவையில்லை. நீங்கள் அந்த நபரைக் கொல்ல வேண்டியதில்லை, அவர் தானாகவே செத்துப்போவார். நீங்கள் சமுதாயம் சார்ந்த ஒரு புரட்சியைத் தொடங்கினால் நீங்கள் ஒரு பொதுவுடைமைவாதியாய், சமதர்ம வாதியாய் மாறி - தவறவிடுவீர்கள்.

இவ்விரண்டு மாற்று வழிகளில் நீங்கள் தவறவிடக்கூடும். அல்லது இந்த நெருக்கடியான நேரத்தைப் பயன்படுத்தி மாற்றமடைய முடியும். உங்களுடைய சொந்த வளர்ச்சிக்கு அதைப் பயன்படுத்திக் கொள்ளுங்கள். குற்றம் காண்கிற நேரம் என்று வரலாற்றில்

எதுவுமில்லை. ஒவ்வொன்றும் இறுக்கமாய், தீவிரமாயிருக்கும். ஒவ்வொன்றும் ஒரு நேரம் உச்சநிலையை அடையும். அங்கிருந்து சக்கரம் வேறுதிசையில் போகும். இந்த வாசலை, வாய்ப்பைப் பயன்படுத்துங்கள், மாற்றம் பெறுங்கள். அதனால்தான் எனது வற்புறுத்தல் தனிநபர் சார்ந்த புரட்சியாகவே இருக்கிறது.

***தற்காலத்தில் பிறப்பிலிருந்து இறப்புவரை ஒவ்வென்றும் அரசியலால் கட்டுப்படுத்தப்படுவதாய், வழிநடத்தப்படுவதாய், ஆதிக்கத்திற்குட்படுத்தப்படுவதாய், நிர்வகிக்கப்படுவதாய், கையாளப்படுவதாய் இருக்கிறது. ஆக, அரசியல் ஒழுங்கு செய்யப்படும்வரை அறிவியல் மற்றும் மதம் மேற்கொள்ளப்படும் முயற்சிகள் பயனற்றதாகவே இருக்கும். காரணம், இன்றைய உலகம் குழப்பத்துக்கும், ஒழுங்கற்றவைகளுக்கும், வேதனைக்கும், துன்பங்களுக்கும் இடமாயுள்ளது. மோசமான அரசியல்தான் இதற்கெல்லாம் காரணம் இல்லையா?***

கேள்வி இரண்டு பகுதிகளைக் கொண்டிருக்கிறது. மனிதகுலம் தூய்மையற்றிருப்பதற்குக் காரணம் தூய்மையில்லாத அரசியல்வாதிகளல்லர். மாசடைத்த மனிதகுலத்தால் தான் அரசியல் வாதிகளும் மாசுபடிந்தவர்களாயிருக்கிறார்கள். நீங்கள் இதனை நன்றாய் புரிந்துகொள்ள வேண்டும். பொறுப்பை அரசியல்வாதிகளின் தலைமையில் கட்டாதீர்கள். அவர்கள் உங்களைப் பிரதிநிதித்துவப் படுத்துவதோடு சரி. வேறெதுவுமில்லை. இது முட்டாள் தனமானது. நீங்கள்தான் அவர்களைத் தேர்ந்தெடுக்கிறீர்கள் பிறகு அவர்களைத் தூய்மையற்றவர்கள் என்கிறீர்கள். நீங்கள் தேர்ந்தெடுக்கிறபோதே தூய்மையற்றவரைத் தேர்ந்தெடுத்து விடுகிறீர்கள். நீங்கள் அவர்களுக்கு வாக்களிக்கிறீர்கள் அதன்பிறகு தூய்மையற்றவர்கள் என்கிறீர்கள். அவர்கள் எப்படி வந்தார்கள்? உங்களுடைய பின்பலத்திலல்லவா அவர்கள் நிற்பது. நீங்கள் அவர்களை ஆதரிக்காவிட்டால் அவர்கள் விழுந்துவிடுவார்கள்.

அவர்களைத் தூய்மையற்றவர்கள் என்று சொல்லாதீர்கள். அது மனதின் பழைய தந்திரம். எப்போதும் அடுத்தவர் மீது பொறுப்பை வீசிவிட்டு உங்களைக் குற்றமற்றவராய் உணர்வீர்கள். உண்மையில் நீங்கள் தான் குற்றவாளி. அரசியலில் தூய்மையற்றவர்கள் இருப்பதற்கு உங்களுடைய தூய்மையற்றமனமே காரணம். உங்கள் மனதின் ஏதோ ஒரு மூலையில் அவர்கள் வேரூன்றியிருக்கிறார்கள் அங்கிருந்தே அவர்கள் ஊட்டமளிக்கப் பெறுகிறார்கள். ஆக, அரசியல்வாதிகளை

மாற்றுவதால் எதுவும் மாறிவிடாது. ஆயிரக்கணக்கான ஆண்டுகளாய் மனிதன் அரசியல்வாதிகளை மாற்றிக் கொண்டிருக்கிறான். எதுவும் நடந்துவிடவில்லை, காரணம், மனிதன் தன்னை மாற்றிக்கொள்ள வில்லை. நீங்கள் அரசியல்வாதியை மாற்றிக் கொண்டே போகிறீர்கள் ஆனால் அடுத்த ஆளைத் தெரிவு செய்வது யார்? அடுத்தவரை மறுபடியும் தெரிவு செய்து நீங்கள் தாம்.

அதிகாரத்தில் இல்லாதபோது அரசியல்வாதி ரொம்பவும் நேர்த்தியாய், விரும்பத்தக்கவிதமாய், களங்கமற்றுத் தெரிவான் காரணம் அதிகாரம் இல்லாநிலையில் உங்களால் தூய்மையற்ற வராயிருக்கமுடியாது - அதிகாரம் தேவைப்படும். ஆக, அதிகாரத்தில் இல்லாத அரசியல்வாதி ரொம்பவும் பணிவாய், உண்மையானவராய் தெரிவார். அவரிடம் அதிகாரத்தை கொடுத்து பாருங்கள் உடனே அவர் மாறிவிடுவார். அவர் இனியும் பழைய ஆளாய் இருக்கமாட்டார். காரணம் அரசியல் ஓர் அதிகாரப் பயணம். அந்த மனிதர் அதிகாரத்தைத் தேடிக் கொண்டிருந்தார். உங்களை நயந்துபேசி நம்பவைக்கவும், வசப்படுத்தவும் பணிவாய் நடந்துகொண்டார், ஒரு புனிதத் தொண்டரைப் போல் காட்சியளித்தார். ஒரு முறை அதிகாரத்துக்கு வந்துவிட்டால் உங்களை லட்சியம் பண்ணமாட்டார். உண்மையில் ஒருபோதும் அவர் அக்கறையாய் இருந்ததில்லை. அவர் உங்களிடம் சூதான ஓர் ஆட்டம் ஆடினார். அவர் உங்களை வசப்படுத்தி, தன்னுடைய சுயநலத்துக்குப் பயன்படுத்திக் கொண்டிருந்தார். தற்போது, தம்முடைய குறிக்கோளை அவர் அடைந்துவிட்டார். உங்களைப்பற்றி அவர் ஏன் கவலைப்படப் போகிறார்? நீங்கள் யார்? உங்களை அவருக்கு அடையாளம் தெரியாது. நீண்டகாலமாய் மனதில் போற்றிவளர்த்து வந்த அதிகாரம் தற்போது அவருடைய கைகளில் இருக்கிறது. அவர் அதனைப் பயன்படுத்தத் தொடங்கிவிட்டார். அந்நிலையில் நீங்கள் சொல்கிறீர்கள் அவரைத் தூய்மையற்றவர் என்று.

பல நூற்றாண்டுகளாய் அரசியல்வாதிகளை நீங்கள் மாற்றிக் கொண்டிருக்கிறீர்கள் - எதுவுமே மாறிவிடவில்லை. சற்றே உங்களை மாற்றிக் கொள்ளுங்கள். இதுதான் நேரம் - போதிய அவகாசம் இருக்கிறது. சமுதாயம் சார்ந்த மாற்றம் எதுவும் புரட்சியாகிவிடாது என்பதை நினைவில் கொள்ளுங்கள். எந்தவோர் அரசியல் மாற்றமும் புரட்சியாகிவிடாது. பெரும்பாலும் அது ஒரு தற்காலிக இளைப் பாறலையே உங்களுக்கு வழங்கும். ஆனால் அது ஒன்றுமேயில்லை.

அதில் பெருமானமாய் ஏதுமில்லை, நீங்கள் மாறாவிட்டால் எதுவும் மாறாது. மனிதன் தனிப்பட்ட முறையில் மாறியாக வேண்டும்.

கேள்வியின் இரண்டாம் பகுதி: இன்று இந்தக் காலத்தில் பிறப்பில் இருந்து இறப்பு வரை எல்லாமும் அரசியல்வாதிகளால் கட்டுப் படுத்தப்படுகிறது – அவர்களால் வழி நடத்தப்படுகிறது, கட்டளையிடப் படுகிறது அவர்களுடைய ஆதிக்கத்துக்குட்படுத்தப்படுகிறது என்று நினைப்பீர்கள். அப்படியிருந்திராத ஒரு காலத்தை நீங்கள் அறிவீர்களா?

'இந்தக் காலத்தில்' என்று ஏன் அழைக்கிறீர்கள்? எப்போதுமே அப்படித்தான் இருந்திருக்கிறது. மனிதன் எப்போதுந்தான் வழிநடத்தப்பட்டிருக்கிறான். கட்டுப்பாட்டில் வைக்கப்பட்டிருக்கிறான். உண்மையில் தற்போது கட்டுப்பாடு அத்தனை வலுவாயில்லை. அதனால் தான் கேள்வி எழுகிறது. ஸ்ரீராமனுடைய காலத்தில் அந்தக் கேள்வி எழுப்பப்பட்டிருக்காது, காரணம் – முழுமையான கட்டுப்பாடு இருந்தது. அதற்கும் அப்பால் (காலவகையில்) சென்றால் கட்டுப்பாடு ரொம்பவும் முழுமையானதாய், நீங்கள் கேள்வி எழுப்பவே முடியாத அளவு இருந்திருக்கிறது. தற்போது நீங்கள் கேள்வி கேட்க முடியும், காரணம் கட்டுப்பாடு சிறிதளவு தளர்த்தப்பட்டிருக்கிறது. நீங்கள் கேள்வியெழுப்ப முடியும், குறைந்த பட்சம் அந்த அளவுக்கேனும் உலகில் சுதந்திரம் இருக்கிறதே. கொஞ்சம் பின்னோக்கிச் சென்றால் மக்கள் கட்டுப்பாட்டில் வைக்கப்பட்டிருந்ததை நீங்கள் காண்பீர்கள்.

எடுத்துக்காட்டாக, இந்தியாவில் ஆயிரக்கணக்கான ஆண்டு களாய் சூத்ரர்களும், தீண்டப்படாதவர்களும் இருந்து வருகிறார்கள். ஆனால் கடந்த கால வரலாற்றில் ஒரு போதும் அவர்களுடைய அடிமைத்தனத்திற்கு எதிராய் கேள்வியெழுப்பப்பட்டிருக்கிறதா? ஏன் – முழுமையான கட்டுப்படுத்தல் இருந்தது. கட்டுப்படுத்தல் அத்தனை முழுமையாயிருந்தது. அதை யார் உணரமுடிந்தது? கட்டுப்படுத்தல் முழுமையாயிருக்கும் போது உங்களால் எப்படி உணர முடியும்? விதிக்கப்பட்ட வாழ்க்கை இதுவென்று தானே எண்ணிக் கொள்வீர்கள். அதனுடன் ஒப்பிட்டுப் பார்க்க வேறு வாழ்க்கைக்கான சாத்தியம் இருப்பதில்லை. இதுமட்டுமே நிகழக்கூடியது என்று சூத்ரர்கள் ஏற்றுக் கொண்டார்கள். உலகிலேயே மிகவும் அருவருக்கத்தக்க வாழ்க்கையை அவர்கள் வாழ்ந்தார்கள். ஆனால் அவர்கள் ஒருபோதும் அதை அறிந்திருக்கவில்லை. கட்டுப்படுத்துதல் (நடத்தையை ஒரு முகப்படுத்துவது) அத்தனை முழுமையாயிருந்தது.

பிராமணர்களைப் போல் சரியான நிலையில் வைக்கப்பட்டவர்களை நீங்கள் காணமுடியாது. அவர்கள் சிறந்திருக்கக் காரணம் தொழிலில் ரொம்பகாலமாய் இருப்பதுதான். அவர்கள் அறிந்த அளவு தந்திரங்களை மற்றவர்கள் அறிந்திருக்கவில்லை. எப்படிக் கட்டுப்படுத்துவதென்பதை உலகம் பிராமணர்களிடமிருந்து கற்றுக்கொள்ள வேண்டும். அவர்கள் மூளைச்சலவை செய்வதில் மிகப் பழைமையானவர்கள். மிகப்பெரிய கூட்டமான சூத்ரர்களை முழுமையான அளவில் கட்டுப்படுத்தி வைத்தார்கள்.

'உங்களுடைய துன்பங்களுக்கெல்லாம் ஊழ்வினையே காரணம் என்று சூத்ரர்களை நம்பச் செய்தார்கள். எனவே அதற்கெதிராய் கிளர்ச்சி செய்வதற்கில்லை, நீங்கள் அதை அனுபவித்துத்தான் ஆக வேண்டும். நீங்கள் அமைதியாய் துன்பத்தை அனுபவித்து வந்தால் அடுத்த பிறவியிலாவது சூத்ரராய் பிறக்கமாட்டீர்கள். நீங்கள் தொல்லை கொடுத்துக் கொண்டிருந்தால் அடுத்தபிறவியில் சூத்ரராகவோ அதைவிட மோசமாகவோ பிறப்பீர்கள். அவர்கள் ஒரு பிறவியை மட்டும் கட்டுப்படுத்தவில்லை தொடர்ந்து வரும் பிறவிகளையும் கட்டுப்படுத்தி வைத்தனர். சூத்ரர்கள் படிப்பதற்கு அனுமதிக்கப்படவில்லை காரணம் நீங்கள் படிக்கத் தொடங்கிவிட்டால் கேள்வி கேட்கவும் ஆரம்பித்துவிடுவீர்களே. அவர்கள் வேதங்களை, புனித நூல்களைப் பற்றி தெரிந்து கொள்ள அனுமதிக்கப்படவில்லை, காரணம் அடக்கி ஒடுக்குபவர்கள் அறிந்திருக்கும் அதே இரகசியங்களை நீங்களும் அறிந்து கொண்டுவிட்டால் அது இடர்ப்பாடாகி விடுமல்லவா. அவர்கள் எந்த வகையிலும் எதையும் அறிந்து கொள்ள இடமளிக்கப்பட வில்லை. அவர்கள் விலங்குகளைப்போல் வாழ்ந்தனர்.

அடிமைத்தனம் முழுமையாயிருந்தது. உலகம் முழுவதிலும் அப்படித்தானிருந்தது. மனிதன் முதல் முறையாய் ஓரளவு சுதந்திரம் பெற்றான், ஒரு சிறிய கயிறு கிடைத்தது. எனவே, 'இந்தக் காலத்தில்' என்று சொல்லாதீர்கள், காரணம், 'இந்தக் காலம்' என்பதில் நிகழ்காலத்தைப் பற்றிய பழிப்புரையும், கடந்த காலத்துக்கான பாராட்டுதலும் இருக்கிறது. அது சரியல்ல நிகழ்காலம் எப்போதும் சிறந்ததாகும். அது கடந்த காலத்தில் இருந்து வளர்ச்சியுற்றது. அதிக அனுபவமும், செழிப்பும் உடையது. எதிர்காலம் உன்னதமாகவே இருக்கும். ஆனால் கட்டுப்படுத்துதல் இருக்கிறது. அது எப்போதுமே இருப்பதுதான். சமுதாயம் கட்டுப்படுத்தலில் வாழ்கிறது. அது

எல்லாரையும் கட்டுப்படுத்துகிறது. முறைகள் வேறுபடும் - சீனாவில் ஒரு வழியிலும், இரஷ்யாவில் ஒரு வழியிலும் இந்தியாவில் மற்றொரு வழியிலுமாய் அவர்கள் கட்டுப்படுத்துகிறார்கள் - ஆனால் கட்டுப்படுத்துவதில் ஒரேமாதிரிதான்.

நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்? மதப்பற்றுடையவர்கள் என்ன செய்து கொண்டிருக்கிறார்கள்? அரசியல்வாதிகள் மட்டுந்தான் மக்களைக் கட்டுப்படுத்துவதாய் நீங்கள் நினைக்கிறீர்களா? மதம் உலகிலேயே மிகப்பெரிய அரசியலாய் இருந்து கொண்டிருக்கிறது. அதுவும் மக்களைக் கட்டுப்படுத்துகிறது.

நீங்கள் எந்தநிலையில் ஓர் இந்துவாக இருக்கிறீர்கள்? ஓர் இந்துவாகவோ, முஸ்லிமாகவோ, கிறிஸ்துவராகவோ இருப்பதில் என்ன இருக்கிறது? அது ஒரு கட்டுப்படுத்துதல். குழந்தை பிறக்கிறது. அரசியல் அந்தக் குழந்தையின் கழுத்தை வெகுதாமதமாய் அது பள்ளிக்கூடம் போகிறபோதுதான் பிடிக்கிறது - அந்தச் சமயத்தில் அவனுக்கு ஏழுவயதாகியிருக்கும். அந்தப் பையன் ஏழுவயதுக்கு முன்பாகவே எண்பது சதவிகிதம் கட்டுப்படுத்தப்பட்டிருப்பான் என்று அறிவியல் நிபுணர்கள் தெரிவிக்கிறார்கள். அந்தக் கட்டுப்பாட்டை யார் செய்தது? - பெற்றோர்கள், மதகுரு, கோயில், தேவாலயம், தொடக்கத்தில் இருந்தே நீங்கள் ஒரு இந்து, நீங்கள் ஒரு முஸ்லிம், நீங்கள் ஒரு கிறிஸ்துவர் - அல்லது நீங்கள் ஒரு பொதுவுடைமைக் கொள்கையாளன் என்பதை உங்கள் மனதில் அவர்கள் திணித்துக் கொண்டே யிருக்கிறார்கள்.

ஒவ்வொரு மதமும் குழந்தைகளிடம் அக்கறைகாட்டி, போதிக்கின்றன. அவர்களுக்கு வார்த்தைகள் புரிந்ததுமே உடனடியாய் போதிக்கத் தொடங்கிவிடுவார்கள். உடனடியாய் - காரணம் முன்கூட்டியே அவர்களுக்குப் போதிக்காவிட்டால் வாய்ப்பைத் தவறவிட்டதாகும். அதில் ஆபத்து இருக்கிறது. உங்களுடைய தன்னுணர்வற்ற தன்மை (unconscious) முற்றிலுமாய் கட்டுப்படுத்தப் பட்டுவிடும். அது உங்களுடைய முழு வாழ்க்கையையும் பாதித்துவிடும். நீங்கள் எப்படிப்பட்ட ஆளாய் வந்தாலும் கட்டுப் படுத்துதல் இருக்கவே செய்யும். உங்கள் மனம் மற்றும் மனோபாவங்களுக்கு விளக்கம் அளிக்கப்படும். நீங்கள் பிறப்பில் இந்துவாக இருந்தாலும் கற்பது, அறிவு நுட்பத்துடன் புரிந்து கொள்வது, மற்றவர்களைச் சந்திப்பது, மற்றமதங்களை புனித நூல்களைப் பற்றித்

தெரிந்து கொள்வது இவற்றின் மூலம் இந்துக்கள் மட்டுமல்ல மற்றவர்களும் தகுதியானவர்கள், – வேதங்கள் மட்டுமல்ல குர்-ஆனும் விரும்பத்தக்கது என்பதை அறிவீர்கள் – ஆனால் தன்னுணர்வற்ற தன்மையின் அடியாழத்தில் பார்த்தீர்களானால் நீங்கள் எப்போதுமே ஒரு படிநிலை (hierarchy)த் தரத்தைத் காணமுடியும். வேதம் மிக உயர்ந்த நிலையில் வைக்கப்பட்டிருக்கும். நீங்கள் இயேசுவைப் பாராட்டுவீர்கள் ஆனால் கிருஷ்ணர் விஞ்சியிருப்பார்.

பெர்ட்ராண்ட்ரஸ்ஸல் தம்முடைய பிந்தைய வாழ்வில் கடவுளை என்றுமே முழுமையாய் புரிந்துகொள்ள முடியாது என்று நம்பினார். மதமற்றவரானார், கடவுள் எதிர்காலம் இவற்றில் கொண்டிருந்த நம்பிக்கைக்கு முற்றுப்புள்ளி வைத்தார்.

புத்தர் உலகிலேயே மிகச் சிறந்த மனிதர் என்பதை அவர் நன்கறிந்திருந்தாலும், 'இல்லை, புத்தர் எப்படி சிறந்தவராவார்? சாத்தியமில்லை' என்று அவர் மனம் சொல்லிக் கொண்டேயிருக்கும். எனவே அவர் சொல்வார், "பெரும்பாலும் நான் அவர்களை ஒரே மேடையில் வைத்துப் பார்க்கிறேன், என்னால் புத்தரைமட்டும் மேம்பட்டவராய் வைக்கமுடியாது. அதேபோன்று அறிவு சார்ந்த விதத்தில் இயேசுவைவிட புத்தரின் தோற்றநிலை சிறந்தது என்பதை நான் அறிவேன்" என்று – ஆனால் குழந்தைப்பருவப்பயிற்சி உங்கள் இதயத்தை இறுகப்பிடித்துக் கொண்டேயிருக்கும்.

மதங்கள் உங்களைக் கட்டுப்படுத்தும், அரசியல்வாதிகள் உங்களைக் கட்டுப்படுத்துவார்கள். உங்களுடைய எந்திரநுட்பம் கட்டுப்படுத்தப்பட்டிருக்கிறது. தியானத்தால் மட்டுமே உங்கள் மனதை நிபந்தனையற்றதாக்க முடியும். தியானம் செய்பவரே நிபந்தனையற்ற நிலைக்குச் செல்கிறார். ஒவ்வொரு நிபந்தனையும் எண்ணங்களின் வழியே செயல்படுகிறது. நீங்கள் ஓர் இந்துவாய் உணர்கிறீர்கள் என்றால் அது எப்படி? கொத்தாக சில கருத்துகள் உங்களிடம் கொடுக்கப்படும், உங்களிடம் கொடுக்கப்பட்டது என்னவென்றே நீங்கள் அறியாதிருந்தாலும் இருக்கலாம். அதேபோன்று நீங்கள் ஒரு கிறிஸ்துவராய் ரோமன் கத்தோலிக்கச் சார்புடையவர், பிராடெஸ்டென்ட் (ரோமன் கத்தோலிக்க ஆதிக்கத்தை எதிர்ப்பவர்) – கொத்தாக சில கருத்துகளுடன். இருக்கிறீர்கள். தியானத்தில் மட்டுமே எண்ணங்கள் மறைகின்றன – எல்லா எண்ணங்களும். நீங்கள் எண்ணமற்றவராகிறீர்கள். மனதின் எண்ணமற்ற நிலையில் நிபந்தனை

இல்லை. நீங்கள் அதற்கு மேலும் ஒரு இந்துவாகவோ, கிறிஸ்துவ ராகவோ, பொதுவுடைமைக் கொள்கையாளராகவோ, எதேச்சாதிகாரி யாகவோ (Fascist) இருக்கமாட்டீர்கள். இனி நீங்கள் வேறுயாராகவுமில்லாமல், நீங்கள் நீங்களாகவே இருப்பீர்கள். முதல்முறையாய் எல்லா நிபந்தனைகளும் கைவிடப்பட்டன. நீங்கள் சிறைக்கு வெளியே இருக்கிறீர்கள்.

தியானம் மட்டுமே உங்களை நிபந்தனையற்றவராக்க முடியும். சமுதாயம் சார்ந்த புரட்சி உதவாது, காரணம், புரட்சி செய்பவர்கள் தங்களுடைய வழியில் மறுபடியும் உங்களைக் கட்டுப்படுத்தி விடுவார்கள். 1917-இல் இரஷ்யா ஒரு புரட்சி அனுபவத்தைப் பெற்றது. அதற்கு முன் அது ரொம்பவும் பழைமையான கிறிஸ்துவ நாடுகளுள் ஒன்றாயிருந்தது - வாடிகனை (Vatican) விடப்பழைமை.

ஆனால், திடீரென்று இரஷ்யர்கள் எல்லாவற்றையுமே மாற்றிவிட்டனர். தேவாலயங்கள் மூடப்பட்டு - அவை பள்ளிக்கூடங் களாய், பொதுவுடைமைக் கட்சி அலுவலகங்களாய், மருத்துவ மனைகளாய் மாற்றப்பட்டன - மதபோதனை தடை செய்யப்பட்டது. அவர்கள் பொதுவுடைமைக் கொள்கைக்காக மக்களைக் கட்டுப்பாடு செய்தனர். பத்தே வருடங்களில் ஒவ்வொருவரும் நாத்திகராகி விட்டனர். 1927-வாக்கில் இரஷ்யாவில் இருந்து மதம் ஒரேயடியாய் மறைந்து போயிற்று. அவர்கள் புதிய நிபந்தனையை விதித்தனர்.

நீங்கள் ஒருவரை கத்தோலிக்கர், கிறிஸ்துவர் என்று கட்டுப்படுத்தினாலும் அல்லது பொதுவுடைமைக் கொள்கையாளர் என்று கட்டுப்பாடு செய்தாலும் என்னைப் பொறுத்தவரை எந்த வேறுபாடும் கிடையாது. காரணம் ஒட்டுமொத்த பிரச்சினையே கட்டுப்படுத்துவது பற்றியது தான். நீங்கள் கட்டுப்படுத்துகிறீர்கள், நீங்கள் அவருக்கு சுதந்திரம் கொடுக்கவில்லை - நீங்கள் கிறிஸ்துவ நரகத்தில் இருந்தாலும், இந்துக்களின் நரகத்தில் இருந்தால் அதில் பெரிதாய் என்ன வேறுபாடு வந்துவிடப்போகிறது? கிறிஸ்துவ அடிமைமுறை அல்லது இந்து அடிமைமுறை என்கிற இரண்டில் நீங்கள் எங்கே வாழ்ந்தால் என்ன? எல்லாம் ஒன்றுதானே. நீங்கள் ஓர் இந்துச் சிறையில் இருந்தால்... ம்ம்?... வெறும் முத்திரை. பிறகு ஒரு நாள் அங்கே புரட்சிவருகிறது. அவர்கள் முத்திரைச் சீட்டைக் கிழித்தெறிகிறார்கள். அவர்கள் அதை பொதுவுடைமைச் சிறை என்றாக்குகிறார்கள். அந்நிலையில் நீங்கள் அதே சிறையில்

இருந்துகொண்டு விடுதலையானதால் மகிழ்ச்சியடைகிறீர்கள், ஆனந்திக்கிறீர்கள். வார்த்தைகள் மட்டுமே மாறியது. முதலில், 'கடவுள் ஒருவர் இருக்கிறார், அவர்தான் உலகத்தைப்படைத்தார்' என்று உங்களுக்குப் போதிக்கப்பட்டது. தற்போது, 'கடவுள் இல்லை, இவ்வுலகம் யாராலும் படைக்கப்படவில்லை' என்று போதிக்கப் படுகிறீர்கள். இரண்டு விசயங்களுமே உங்களுக்குப் போதிக்கப் பட்டவைதாம்.

அதேபோன்று மதத்தைப் போதிக்க முடியாது. போதிக்கப்பட்டால் அது அரசியல். அதனால்தான் நான் சொல்கிறேன் கடந்த காலத்தில் மதம் ஒரு பெரிய ஆட்சியியலாய் இருந்தது என்று. மேலும், சமுதாயம் சார்ந்த புரட்சி என்பது சாத்தியமற்றது. காரணம் எல்லாப் புரட்சிகளும் உங்களை மறுபடியும் நிபந்தனைக்குள்ளாக்கும்.

ஒரேயொரு சாத்தியந்தான் உண்டு: அது தனிநபரிடத்தில் தோன்றும் மனம் அற்றநிலை. நீங்கள் எண்ணங்களற்ற தன்மையை அடையலாம். அப்போது உங்களை யாரும் கட்டுப்படுத்த முடியாது. அந்நிலையில் எல்லா கட்டுப்பாடுகளும் கைவிடப்படும். பிறகு, முதன்முறையாய் நீங்கள் தடையற்றவராவீர்கள். அப்போது எல்லையற்ற பெருவெளி உங்களுடையதாகிவிடும். எவ்வித கட்டுப்பாடுகளும் இல்லை, சுவர்கள் இல்லை. நீங்கள் வாழ்க்கையை அன்போடும், மகிழ்ச்சியோடும், ஆனந்தத்தோடும் வாழ்கிறார்கள்.

**'உணர்ச்சியைத் தூய்மை செய்வது எந்தவொரு முனைப்பகுதியில் விடப்படுகிறது?'**

அது முடிவுக்கு வந்ததும் தானாகவே அது விட்டுவிடுகிறது நீங்கள் அதை விடவேண்டுமென்பதில்லை. அதனுள் ஆற்றல் இல்லை என்பதை நீங்கள் கொஞ்சம் கொஞ்சமாய் உணர்வீர்கள். உணர்ச்சியைத் தூய்மைப்படுத்த நீங்கள் செய்வதெல்லாம் வெற்றுச் சைகைகள் என்பதை மெள்ள மெள்ள உணர்வீர்கள். அதில் ஆற்றல் இல்லை. - உண்மையில் நீங்கள் அதைச் செய்வதாய் நடிக்கிறீர்கள், பாசாங்கு செய்கிறீர்கள், அது நிகழ்ந்து கொண்டிருக்கவில்லை. அது நிகழ்ந்து கொண்டிருக்கவில்லை என்பதை உணரும்போது, நீங்கள் அதை வலுக்கட்டாயப்படுத்தும்படி இருக்கும். அதுமுன்பே விடப்பட்டு விட்டது. உங்கள் இதயம் சொல்வதை நீங்கள் கேட்கவேண்டும்.

நீங்கள் கோபப்படும்போது அந்தக் கோபம் எப்போது மறைந்தது என்பதை எப்படி அறிவீர்கள்? நீங்கள் பாலுணர்வோடு இருக்கும்போது

அந்தப் பாலுணர்வு எப்படிப் போனது என்பதை எவ்வாறு அறிவீர்கள்? காரணம் எண்ணத்தின் ஆற்றல் இனிமேலும் அங்கிருப்பதில்லை. எண்ணம் இருக்கும், ஆற்றல் இனியும் இருக்காது. அதுவெற்றுப் பண்டம். சில நிமிடங்களுக்குமுன் நீங்கள் கோபமாயிருந்தீர்கள், தற்போது உங்கள் முகத்தில் இன்னும் கொஞ்சம் கோபமிருக்கலாம், ஆனால் அங்கே கோபம் இல்லை என்பதை அடியாழத்தில் நீங்கள் அறிவீர்கள், ஆற்றல் அங்கிருந்து போய்விட்டது. உண்மையில் உங்கள் குழந்தையிடம் உங்களுக்குக் கோபம் ஏற்பட்டிருக்கும், உங்களால் புன்னகைபுரிய முடியாது. இல்லையோ குழந்தை உங்களைத் தவறாகப் புரிந்து கொண்டுவிடும், எனவே நீங்கள் இன்னமும் கோபத்தில் இருப்பதுபோல் பாசாங்கு செய்கிறீர்கள்.

ஆனால், தற்போது நீங்கள் சிரிக்க விரும்புவீர்கள், குழந்தையை உங்கள் அருகில் கொண்டுவந்து முத்தமிடவும், கொஞ்சமும் விரும்புவீர்கள் ஆனால், இன்னமும் பாசாங்கு செய்கிறீர்கள். இல்லையேல் மொத்தக் கருத்தும் இழக்கப்பட்டுவிடும் - உங்கள் கோபம் - அது ஒன்றுமே இல்லை என்பதாய் எண்ணிக் கொண்டு குழந்தை சிரிக்க ஆரம்பித்துவிடும். முகத்தளவில் நீங்கள் பாசாங்கு செய்கிறீர்கள், ஆனால், அடியாழத்தில் அந்த ஆற்றல் இடம் பெயர்ந்துவிட்டது.

உணர்ச்சியைத் தூய்மை செய்வதிலும் அதுவேதான் நிகழ்கிறது. நீங்கள் உணர்ச்சித்தூய்மை செய்கிறீர்கள் - அது ஆற்றலுடன் கூடிய ஒரு நிகழ்வு. பல உணர்ச்சிகள் மறைக்கப்பட்டிருந்தன - அவை சுருள் (Uncoil) பிரிக்கப்படுகின்றன. அவை குமிழிட்டுக் கொண்டு, மேலெழுகின்றன. அந்நிலையில் அங்கே ஆற்றல் அதிகரிக்கிறது. நீங்கள் 'கிறீச்' சொலியுடன் கத்துகிறீர்கள். பிறகு ஒரு சுமை தொலைந்தமாதிரி இறுக்கம் தளர்கிறீர்கள். எடையற்றாற்போல் உணர்கிறீர்கள். கலக்கமின்றி அமைதியாய், கிளர்ச்சியற்றவராய் உணரமுடிகிறது. ஆனால் அடக்கிவைக்கப்பட்ட உணர்ச்சி எதுவும் இல்லையென்றால் அந்நிலையில் உங்களால் சைகைக் குறிப்புகள் செய்ய முடியும். சைகைகளுக்குப் பிறகு களைப்பாய் உணர்வீர்கள் காரணம் நீங்கள் தேவையில்லாமல் ஆற்றலை வீணடித்துக் கொண்டிருந்தீர்கள். எதுவும் அடக்கிவைக்கப்படவில்லை, எதுவும் மேலே வரவில்லை. நீங்களோ தேவையில்லாமல் குதித்து, கூச்சலிட்டு களைத்துப்போன உணர்வடைகிறீர்கள்.

உணர்ச்சியைத் தூய்மை செய்வதென்பது உண்மையானால் நீங்கள் அதற்குப்பிறகு இளமையும் வனப்புமாய் உணரவேண்டும். உணர்ச்சித் தூய்மை என்பது பொய்யானால் நீங்கள் சோர்வாய் உணர்வீர்கள். உணர்ச்சியைத் தூய்மைப்படுத்துவது உண்மையெனில் நீங்கள் அதற்குப் பிறகு சுறுசுறுப்பாய், முன்னைவிட இளமையாய் சிலவருடங்கள் மறைந்துவிட்ட மாதிரி - முப்பது வயதாயிருந்த நீங்கள் இருபத்தியெட்டு, இருபத்தியைந்து வயதுக்கு வந்துவிட்டாற்போல் உணர்வீர்கள். ஒரு சுமை மறைந்தது. நீங்கள் இளமைப் பொலிவோடும், புத்துணர்ச்சியோடும் இருக்கிறீர்கள். ஆனால் நீங்கள் சைகைகளை (அங்க அசைவுகள்) மேற்கொண்டால் களைப்பாய் உணர்வீர்கள். நீங்கள் முப்பதுவயதில் இருந்தாலும் முப்பத்தியைந்தில் இருப்பதாய் உணர்வீர்கள் - வயது கூடிவிட்டதாய்.

நீங்கள் கவனிக்க வேண்டும். உங்களுக்குள் என்ன நிகழ்கிறது என்பதை வேறுயாரும் சொல்லமுடியாது. என்ன நிகழ்கிறது என்பதைத் தொடர்ந்து கவனியுங்கள். பாசாங்கு செய்யாதீர்கள் - காரணம் உணர்ச்சியை தூய்மைப்படுத்துவதே குறிக்கோளாகிவிடாது. அது ஓர் உபாயம் அவ்வளவுதான். ஒரு நாள் அதைவிடும்படி இருக்கும். அதைச் சுமந்து செல்ல வேண்டியதில்லை. அது ஒரு படகுமாதிரி, பயணப்படகு: நீங்கள் நீரோட்டத்தைக் கடந்து சென்றதும் அதை மறந்துவிடுகிறீர்கள், அதை உங்கள் தலையில் (எண்ணம், நினைவாற்றல் இவற்றின்மூலம்) சுமப்பதில்லை.

புத்தர் முன்பொருகாலத்தில் நடந்ததாய் ஒரு கதையைத் திரும்பத்திரும்பச் சொல்லிக் கொண்டிருப்பார். ஐந்து முட்டாள்கள் ஓர் ஆற்றைக் கடந்தார்கள். தங்கள் படகு ரொம்பவும் உதவியாய் இருந்ததால் அவர்கள் அதைப்பற்றியே சிந்தித்துக் கொண்டிருந்தார்கள். அது மழைக்காலம், ஆற்றில் வெள்ளம் புரண்டது, படகின் துணையில்லாமல் ஆற்றைக் கடக்க முடியாது என்கிற நிலை, எனவே அவர்கள் சொன்னார்கள் 'இந்தப் படகு எத்தனை அநுகூலமானது, நாம் எப்படி அதனை இங்கேயே விட்டுச்செல்வது? நம்முடைய மரியாதையையும், நன்றியையும் நாம் காட்ட வேண்டும்'' என்று. அதனால் படகைத் தங்களுடைய தலையில் சுமந்து கொண்டு சந்தைக்குச் சென்றனர். மக்கள் கேட்டனர் "நீங்கள் செய்கிற காரியம் என்ன?'' என்று. அவர்கள் சொன்னார்கள் "இந்தப்படகு எங்களுக்குப் பேருதவியாயிருந்தது. தற்போது நாங்கள் எப்படி அதனை விட

முடியும்? எங்கள் வாழ்க்கை முழுதும் நாங்கள் அதைச் சுமப்போம். அப்போதும் அது நன்றியைக் காட்ட போதுமானதாய் இருக்காது. இந்தப்படகு எங்கள் உயிரைக் காப்பாற்றியிருக்கிறது" என்று.

"அந்த ஐந்து முட்டாள்களைப்போல் நீங்களும் முட்டாள்தனமாய் நடந்து கொள்ளாதீர்கள்" என்பார் புத்தர். மதம் ஒரு படகு; வாழ்க்கையே குறிக்கோள். மதம் ஒரு படகு, பரவசமே குறிக்கோள். எல்லா முறைகளும் முறைகள் தாம் அதை மறந்துவிடாதீர்கள். முறை (method) குறிக்கோளாகிவிடாது. பதஞ்சலியில் உள்ள அனைத்தையும் ஒரு நாள் விடும்படி இருக்கும் காரணம் அது ஆராய்ச்சி முறை பற்றிய நூல் (methodology). பதஞ்சலியை முழுமையாய்விட்டதும் ஒரு லாவோட்சு பின்னால் மறைந்திருப்பதைக் காண்பீர்கள் - அவர்தாம் குறிக்கோள். குறிக்கோள் என்பது இருப்பதற்கானது. குறிக்கோள் என்பது எதையும் செய்வதற்கானது அல்ல.

எல்லா முறைகளும் ஒன்றைச் செய்வதற்கானவை, அவை நீங்கள் வீட்டையடைய உதவும். ஆனால் நீங்கள் வீட்டுக்குள் நுழைகிறபோதே உங்களைக் கொண்டு சேர்த்த வண்டியை அல்லது நீங்கள் அமர்ந்து வந்த கழுதையை அல்லது படகை மறந்துவிடுங்கள். எல்லா முறைகளும் வெளியில் விடப்பட வேண்டியவை. நீங்கள் வீட்டை அடைந்தாயிற்று.

உணர்ச்சியைத் தூய்மை செய்வதென்பது உங்களுடைய ஒரே எண்ணமாகி (கருத்தாவேசம்)விடும் என்பதை நினைவில் வையுங்கள். நீங்கள் அதைச் செய்துகொண்டே இருப்பீர்கள். அதன்பிறகு அதுவோர் தடமாய், அமைப்பாய் மாறிவிடும். அதை ஓர் அமைப்பாக்க வேண்டியதில்லை. கவனியுங்கள், கொஞ்சம் கொஞ்சமாய் நீங்கள் விழிப்படைவீர்கள் - அது ஒரு நுட்பமான விழிப்புணர்வு காரணம் அதன் தோற்ற நிலை நுட்பமானது. அங்கே ஆற்றல் இருக்கவில்லை. நீங்கள் வீறிட்டலறுகிறீர்கள். ஆனால் உண்மையில் அந்த வீறிடல் வெளிப்படவில்லை; நீங்கள் குதிப்பதைவிட்டு முயற்சி செய்ய வேண்டும். பிறகு அதை விட்டுவிடுங்கள். படகைச் சுமந்து செல்லாதீர்கள்.

உணர்ச்சித் தூய்மை செய்வதை எந்த முனைப்பகுதியில் விடவேண்டும்? அது தானாகவே விட்டுவிடும். நீங்கள் விழிப்போடு

அதைத் கவனித்தால் போதும். அதுவிட்டுச் செல்லவிரும்பும்போது நீங்கள் அதைப் பற்றிக் கொள்ள முயலாதீர்கள், விட்டுவிடுங்கள்.

**பதஞ்சலியின் காலத்தில் இருந்தே தனது உன்னதமாகும் திறனை மனிதன் ஏன் இழந்து கொண்டிருக்கிறான்?**

காரணம் அதிக அளவில் அடக்கிவைப்பதுதான். அந்த எந்திரநுட்பம் புரிந்துகொள்ளப்பட வேண்டியது. பதஞ்சலியின் காலம் ரொம்பப் பழைமையானது, இயற்கையானது, அடிப்படையானது. மக்கள் குழந்தைகளைப் போல் இருந்தார்கள் களங்கமில்லாமல். தற்போது ஒவ்வொருவரும் நாகரிகமானவராய், பண்பாடுடையவராய் இருக்கிறார்கள். உங்களுக்குள் இருக்கும் குழந்தை நசுக்கப்பட்டு விட்டது, முற்றிலுமாய் நசுக்கப்பட்டுவிட்டது. நாகரிகம் ஒரு பெரிய அரக்கன் மாதிரி. அது உங்களுக்குள் இருக்கும் குழந்தையைக் கொல்கிறது. கொலை செய்கிறது. இயற்கையான எல்லாமும் முறைகேடாய் செயல்படுத்தப்படுகின்றன. இயற்கையான எல்லாமும் பயன்படத்தகுதியற்றது என்று தீர்மானம் செய்யப்படுகின்றன.

அதற்குக் காரணங்கள் இருக்கின்றன.

எடுத்துக்காட்டாக, ஒவ்வொரு பண்பாடும் ஒவ்வொரு சமுதாயமும் பல பேர்களைக் கடந்து செல்ல வேண்டியிருக்கிறது. பாலுணர்வு அடக்கப்படவில்லையென்றால் அப்போது ஒரு படையைத் தோற்றுவிக்க முடியாது போகும். ஒரு ராணுவ வீரன் தன்னுடைய பாலுணர்வை வெளியிடாமல் மறைத்து வைக்க வேண்டியிருக்கும். அந்நிலையில் மட்டுமே அதே சக்தி போரிடுவதற்குத் தேவையான சக்தியாய் மாறும் அமெரிக்காவைத் தவிர வேறெந்த நாடும் தனது வீரர்கள் தங்களுடன் அவர்களுடைய மனைவிமாரையோ சிநேகிதிகளையோ போர் முனைக்கு அழைத்துச் செல்ல அனுமதிப்பதில்லை. அமெரிக்கா எல்லா இடங்களிலும் தோற்கும், காரணம், அவர்களுடைய ஆற்றல் வளர்த்துக் கொள்ளப்படவில்லை. ஒரு ராணுவ வீரனுக்குத் தேவை அவனை விரக்தியின் விளிம்பில் நிற்கச் செய்யும் ஆற்றல். தனது சிநேகிதி அல்லது மனைவியை பக்கத்தில் வைத்துக் கொண்டிருந்தால் அவன் திருப்தியடைந்தவனாயிருப்பான். அவன் எதற்காகச் சண்டையிடுவது?

நீங்கள் கவனித்திருக்கிறீர்களா? நீங்கள் பாலுணர்வை அடக்கிவைக்கிற போதெல்லாம் அதிகக் கோபம் ஏற்படும். நீங்கள்

போய்ப் பாருங்கள் உங்களுடைய துறவிகளை, சாதுக்கள் என்று அழைக்கப்படுகிறவர்களை. அவர்கள் கோபத்தில் இருப்பதைக் காண்பீர்கள். தற்போது கோபம் வாழ்க்கை முறையாகிவிட்டிருக்கிறது காரணம் அவர்கள் பாலுணர்வை அடக்கி வைக்கிறார்கள். அடக்கி வைக்கிற பாலுணர்வு: அந்நிலையில் அந்தச்சக்தி வேறு எவ்வகையிலேனும் வெளியேற்றப்பட்டாக வேண்டும். நீங்கள் ஒரு கதவை மூடினால் உடனே இன்னொரு கதவு திறக்கிறது இல்லையா. அந்த இன்னொரு கதவு இயல்புநிலையில் இருந்து மாறுபட்டது (perverted). முதலாவது இயல்பானது. இரண்டாவது கதவை மூடுங்கள். அப்போது மூன்றாவது கதவு திறக்கிறது – மூன்றாவது இயல்புநிலையில் இருந்து ரொம்பவே மாறுபட்டதாயிருக்கும். நான்காவது கதவைத்திறக்கும் நேரத்தில் நீங்கள் ஒரு பைத்தியக்கார விடுதியில் இருப்பீர்கள்.

எல்லாச் சமுதாயங்களும் பால் சார்ந்த சக்தியைப் பயன் படுத்துகின்றன. அதனால்தான் எல்லாச் சமுதாயங்களும் பாலுணர்விற்கு எதிராய் இருக்கின்றன. எல்லாருடைய பாலுணர்வும் நிறைவேற்றப்பட்டுவிட்டால், மகிழ்ச்சியாய், நேர்த்தியாய் அமைந்து விட்டார் யார் போரிடுவது பற்றிக் கவலைப்படப்போகிறார்கள்? நீங்கள் ஹிப்பிகளைச் (hippies) சண்டைக்கு அனுப்பமுடியாது. காரணம், அவர்கள் ரொம்பவும் மகிழ்ச்சியாயிருப்பவர்கள், தங்கள் வாழ்க்கையை வெகுஇயல்பாய் வாழ்பவர்கள். அவர்கள் போகாமல் இருப்பதோடு 'போர் வேண்டாம், நேசிப்போம்' என்று சுவரொட்டி களில்தாங்கள் உணர்வை வெளிப்படுத்தவும் செய்வார்கள். அவர் களிடம் நியாயம் இருக்கிறது. மக்கள் அன்புக்கு இடமளித்தால் போர் உலகத்தை விட்டே மறைந்துவிடும்.

இதுமிகவும் சிக்கலான விசயம்: அகிம்சையைப் போதிக்கிற சமணம் போன்ற மதங்களும் பாலுணர்வை அடக்கி வைக்கும்படிப் போதிக்கின்றன. இது அபத்தமானது. பாலுணர்வு அடக்கி வைக்கப்பட்டால் போர் உண்டாகும், வன்முறை இடம் பெறும், காரணம் அந்தச் சக்தி வேறு எப்படிச் செல்லும்? நீங்கள் உண்மையிலேயே உலகில் சண்டை ஏற்படுவதை விரும்பவில்லை என்றால் அந்தச் சக்தியை இயல்வான வழியில் செல்ல இடமளிக்க வேண்டும். ஆனால் எந்தச் சமுதாயமும் அப்படி இடமளிக்காது, காரணம் போர் அவசியப்படுகிறது, இல்லையேல் மற்றவர்கள் உங்கள் மீது

எகிறிவிழுவார்கள். நீங்கள் நிரம்பவும் நல்லவர் உங்களுக்குத் தொல்லைதரக் கூடாது என்று அவர்கள் நினைப்பதில்லை. இந்தியா முழுமையான பாலுறவு சுதந்திரம் கொடுத்துவிட்டால், ஒரு ஹிப்பிகளின் தேசமாகிவிட்டால், சீனா வந்துவிடும். அது சாத்தியமில்லை. சீனா இடமளித்தால் அங்கே அச்சமிருக்கும் இரஷ்யா வந்துவிடும். இரஷ்யா இடமளித்தால், அமெரிக்கா காத்துக் கொண்டிருக்கும். ஆக ஒவ்வொருவரும் இன்னொருவரைத் தொடர்ந்த படி இருக்கிறார். ஆனால் யாரும் வாழ்க்கையை அதன் இயல்பான வழியில் வளர்ச்சியடைய அனுமதிப்பதில்லை. உலகிலேயே மிகவும் கடினமான காரியம் இயல்பாயிருப்பதுதான்.

பிறகு, ஒரு குழந்தைக்கு நீங்கள் பாடம் நடத்த விரும்பினால் நீங்கள் பாலுணர்வை அடக்க வேண்டும் காரணம் பதின்மூன்று பதினாலுவயதிலேயே அவன் பர்ல் சார்ந்த விதத்தில் பக்குவம் பெற்றுவிடுகிறான். அப்போது இயற்கை அவனுக்க அனுமதிச்சீட்டு வழங்கிவிடுகிறது. அவனால் குழந்தைகளை இனப்பெருக்கம் செய்ய முடியும். பதினான்கு வயதில் அவனுக்குத் திருமணம் செய்து வைத்தால் பிறகெப்படி அவன் ஒரு மருத்துவராகவோ, பொறியாள ராகவோ வரமுடியும்? இல்லை, அவன் மருத்துவராக வந்தாக வேண்டும். ஆனால் ஒரு மருத்துவராக அவன் காத்திருக்க வேண்டும். இருபத்தியைந்து இருபத்தியாறு வயதில் அவன்ஒரு பொறியாள ராகவோ, மருத்துவராகவோ அல்லது ஒரு பேராசிரியராகவோ வந்துவிடுவோன். அதற்பிறகே அவன் மணந்துகொள்ள அனுமதிக்க வேண்டும். காரணம் அதே சக்திதான் கற்றுணர்வதற்குப் பயன் படுத்தப்பட வேண்டியது. நீங்கள் பையன்களையும் பெண்களையும் ஒரே விடுதியில் தங்க அனுமதித்தால் பல்கலைக்கழங்கள் காணாமல் போய்விடும். அவை இயங்க முடியாது. அடக்கிவைக்கிற ஒரு சூட்சுமமான எந்திர நுட்பத்தில்தான் அவை இருக்கின்றன. பாலுணர்வு வெளிப்படுத்தப்படாமல் மறைத்துவைக்க வேண்டியது. அப்போதுதான் வேறொன்றுக்குத் தேவையான ஆற்றல் கிடைக்கும். பையன்களும் பையன்களும் தங்களுடைய ஆற்றலைத் தேர்வுகளில் அமைவிக்கிறார்கள்.

எல்லா சமுதாயங்களும் சுய இன்பப் பழக்கத்திற்கு எதிரானவை, காரணம் நீங்கள் பையன்களையும் பெண்களையும் சேர்ந்துவசிக்க அனுமதிக்காவிடில் பையன்கள் சுய இன்பத்தில் ஈடுபடுவார்கள், பெண்களும் சுய இன்பத்தை மேற்கொள்வார்கள். சமுதாயம் அதற்கு

எதிராய் இருக்கவேண்டியிருக்கிறது, காரணம், அவர்கள் சக்தியை விரயம் செய்கிறார்கள். அந்தச் சக்தி பல்கலைக்கழகப்பாடங்களில் வலுக்கட்டாயமாய் செலுத்தப்பட வேண்டியது. அவர்கள் பொறியாளர்களாக வேண்டும். அவர்கள் தங்களை இன்பம் அனுபவிப்பதில் இழந்துவிடக்கூடாது. எனவே தான் எல்லாச் சமுதாயமும் சுயஇன்பத்தை ஒரு குற்ற உணர்வை ஏற்படுத்தும் செயலாக்கி வைத்திருக்கிறது. நீங்கள் பால் சார்ந்த சக்தியை அழியாமல் காப்பாற்றி வைத்தால் உங்களால் மிகப்பெரிய ஆளாக முடியும் என்று எல்லாச் சமுதாயமும் புகழ்ந்து தள்ளுகின்றன. உண்மையில் பேராவல் கொண்டவரால்தான் வந்துகாட்ட முடிகிறது. நீங்கள் பாலுணர்வை அடக்கிவைக்காவிட்டால் உங்களால் பெரிய அரசியல் வாதியாய் வரமுடியாது? யார் டெல்லிக்கு அல்லது வெள்ளை மாளிகைக்குப் போக விரும்புகிறார்கள் என்று கேட்பது முட்டாள்தனம். உங்களுடைய சின்னவீடுதான் வெள்ளை மாளிகை. நீங்கள் மகிழ்ச்சியாய், வெகு நேர்த்தியாய் வாழ்கிறீர்கள், எதற்காக உங்களுடைய சக்தியை டெல்லிக்கும், வாஷிங்டனுக்கும் பயணம் செய்வதில் வீணடிப்பது? இல்லை. அப்போது நீங்கள் ஒரு பெரிய அரசியல்வாதியாய் திகழ முடியாது.

பாலுணர்வு சக்தியைத் தோல்வியுறச் செய்யவேண்டும். ஏமாற்றத்தின் எல்லைக்குக் கொண்டுசெல்ல வேண்டும். அப்போதுதான் நீங்கள் மிகச் சிறந்த கலைஞர்களாக முடியும். பாலுணர்வு சக்தியைத் தடைசெய்தால்தான் நீங்கள் பெரிய விஞ்ஞானியாவீர்கள். ஃப்ராய்டு சொல்கிறார், 'பாலுணர்வைக் கடுமையாய் அடக்கி வைத்தவர்கள் தாம் விஞ்ஞானி களாகியிருக்கிறார்கள்' என்று. பால்சார்ந்த விதத்தில் எதையும் அறிந்து கொள்கிற ஆர்வமே (Sexual Curiosity) இரகசியத்தைக் கண்டுபிடிக்க உதவும் - ஒரு சின்னப்பையன் அம்மணக் கோலத்தில் பெண் எப்படியிருப்பாள் என்று அறிய முயல்கிறான், ஆர்வப்படு கிறான். உலகெங்கிலும் பையன்கள் 'டாக்டர்' விளையாட்டு என்கிற விளையாட்டை விளையாடுகிறார்கள்.

அவர்கள் டாக்டர்களாகிறார்கள் - பெண் நோயாளியாகிறாள் சின்ன பெண்கள். சிறுவர்கள் மருதுதவர்கள், சிறுமிகள் நோயாளிகள். ஆடைக்குள் பெண் எப்படி இருக்கிறாள் என்பதை அறிவதற்காகத் தான். உண்மையில் உடம்பைச் சோதிக்க ஒரு மருத்துவர் அனுமதிக்கப்படுகிறார்தானே. இந்த அறிந்து கொள்கிற ஆர்வம்

(*Curiosity*) ஒரு விஞ்ஞானியின் அதே ஆர்வந்தான். பாலுணர்வு அடக்கிவைக்கப்பட்டால் விஞ்ஞானி கொஞ்சம் கொஞ்சமாய் எல்லாவற்றிலும் தனது மூக்கை நுழைக்க முயற்சிப்பார். இயற்கையை அம்மணப்படுத்தி அதன் இரகசியங்களை அறிகிற முயற்சிபாய் அது இருக்கிறது. உலகத்தை, பிரபஞ்ச இருப்பை நிர்வாணப்படுத்த விரும்புகிறார் அவ்வகையில் தானே ஒவ்வொரு இரகசியத்தையும், ஒவ்வொரு மூலை முடுக்கையும் அவர் அறிய முடியும்.

பாலுணர்வுக்கு இடமளிக்கப்பட்டால் ... எடுத்துக்காட்டாக, உலகெங்கும் மிகவும் புராதன சமுதாயங்கள் இருந்திருக்கின்றன; ஒரு சில சமுதாயங்கள் இருக்கின்றன. அவை எந்தவொரு விஞ்ஞானியையயும் உருவாக்கவில்லை. அவற்றால் முடியாது. அவை ஒவ்வொரு நகரத்திலும் ஒரு சிறிய வீட்டை சமுதாயக் கூடத்தை வைத்திருக்கும். ஒவ்வொரு சிறுவனும், சிறுமியும் பன்னிரண்டு வயதானதும் அந்தச் சமுதாயக் கூடத்தில்படுத்துறங்க அனுமதிக்கப் படுவார்கள். எல்லாச் சிறுமிகளும், எல்லாப் பையன்களும் அங்கே படுத்துறங்குவார்கள். அவர்களுடைய பாலுணர்விற்கு எந்தத் தடையும் கிடையாது - அவர்கள் அனுபவித்து மகிழலாம். ஒரே வினோதமான கட்டுப்பாடு மட்டும் உண்டு. எந்தப் பையனும் ஒரு பெண்ணுடன் மூன்று நாட்களுக்கு மேல் பழகக்கூடாது. அவ்வகையில் அவன் நகரத்திலுள்ள அனைத்துப் பெண்களையும் அறிந்துகொள்வான், அப்போது அவனால் ஒரு தீர்மானத்துக்கு வரமுடியும் என்பதுதான் அது. அவ்வாறே ஒவ்வொரு பெண்ணும் ஊரிலுள்ள ஒவ்வொரு பையனையும் அறிந்து கொண்டுவிடுவாள். அந்த முறையில் தங்கள் வாழ்க்கை முழுவதும் யாரோடு வாழ்வது என்பதை அவர்களால் தீர்மானித்துக் கொண்டுவிட முடியும். இது உண்மையிலேயே நேர்த்தியாய், எளிமையாய், மனிதப் பண்பு சார்ந்ததாய் தெரிகிறது. பையன்களுக்கும், பெண்களுக்கம் எல்லா விதத்திலும் சுதந்திரம் - அடக்கி வைத்தால் இல்லை.

ஒரு முறை எல்லாப் பையன்களும் எல்லாப் பெண்களும் தங்களுக்குள் தெரிந்துகொண்டுவிட்டால் அவர்களால் தீர்மானிக்க முடியும். நீங்கள் உலகிலேயே வேறெங்கும் காணமுடியாத நம்பத்தக்க காதலர்கள் அவர்கள்.

ஒரு முறை ஒரு பையனும் பெண்ணும் திருமணம் செய்து கொள்ளத் தீர்மானித்துவிட்டால் மற்ற பையன்களையும்,

பெண்களையும் அவர்கள் முழுமையாய் மறந்துவிடுகிறார்கள். அதில் முக்கியக் குறிப்பாய் எதுவுமில்லை. அவர்கள் எல்லாரையும் அறிந்து கொண்டாலும் இதுவே அவர்களுடைய தேர்வாயிருக்கிறது. தங்கள் இணையை அவர்கள் கண்டறிந்தார்கள் - தீர்ந்தது. அவர்கள் ஒருவருக்கொருவர் நம்பிக்கையற்றவராய் இருப்பதில்லை. ஒரு கணவன் வேறொரு பெண்ணுடன் உறவுகொள்வதோ, இன்னொருத்தியிடம் ஆர்வம் காட்டுவதோ அல்லது ஒரு பெண் வேறொருவரின் நேசத்திற்குரியவளாயிருப்பதோ அவர்களுடைய வரலாற்றில் நிகழ்ந்ததேயில்லை. அது நடப்பதில்லை, நடக்கத் தேவையில்லை.

ஆனால் அவர்கள் மிகப்பெரிய விஞ்ஞானிகளையோ, மிகச் சிறந்த கவிஞர்களையோ, கலைஞர்களையோ, போர்வீரர்களையோ உருவாக்கியது கிடையாது. இல்லை, எந்த வகையிலும் சிறந்த ஒருவரை அவர்கள் உருவாக்கியதில்லை. அவர் உருவாக்கியதெல்லாம் சாதாரண; எளிமையான, இயல்பான மனிதர்கள். உண்மையில் அனைத்துவகை சிறப்புத்தன்மையும் ஒரு வகையில் இயல்புக்கு மாறானதுதான். எங்காவது ஓரிடத்தில் பாலுணர்வு சக்தியைப் பயன் படுத்திவிட வேண்டும், காரணம் அதுமட்டுமே சக்தியா யிருக்கிறது.

பதஞ்சலியின் காலத்தில் மக்கள் எளிமையாய், இயல்பாய் இருந்தனர். உணர்ச்சியைத் தூய்மைப்படுத்துகிற அவசியம் இருக்கவில்லை. அப்போது எதுவும் வெளிப்படுத்தாமல் மறைத்து வைக்கப்படவில்லை. அதனால் உணர்ச்சியைத் தூய்மை செய்ய அவசியம் இல்லாமல் போனது. ஆனால் தற்போது ஒவ்வொருவரும் ஆண்டுக்கணக்கில் உணர்ச்சித் தூய்மை செய்யப்பட வேண்டிய அளவுக்கு அடக்கி வைக்கப்பட்டிருக்கிறார்கள். அனேக வழிகளில் உங்களுடைய தன்னுணர்வற்ற தன்மையில் ஏகப்பட்ட குப்பைகளை நீங்கள் சேர்த்துவைத்திருக்கிறீர்கள். அதை வெளியே வீசியெறிய வேண்டும். இப்போது உங்களால் பாதையில் செல்ல முடியாது. முதலில் உங்களுடைய சுமைகளை நீக்க வேண்டும்.

நீங்கள் புரிந்துகொண்டேயாக வேண்டியது - சமுதாயம் தனக்கென்று தேவைகளை வைத்திருக்கின்றன. ஒவ்வொரு நாடும் தனக்கென்று தேவைகளைக் கொண்டிருக்கும். அவை தனிநபர்களின் தேவைகளாய் இருக்க வேண்டிய கட்டாயமில்லை என்பதுதான் பிரச்சனை.

தனக்கு வழங்கப்பட்ட இந்தக் குறுகிய வாழ்க்கையில் மகிழ்ச்சியும், ஆனந்தமும் கொண்டு சுகமாய் வாழ்வதே தனிநபரின் தேவையாகும். அது தனிப்பட்ட ஒருவரின் தேவையேயன்றி ஒரு சமுதாயத்தின் தேவையாகாது. நீங்கள் மகிழ்ச்சியாய் இருக்கிறீர்களா இல்லையா என்பது பற்றிச் சமுதாயம் கவலைப்படுவதில்லை. நீங்கள் ஆக்கவளம் உள்ளவராய் இருக்க வேண்டும், சிறந்த போர்வீரர்களாயிருக்க வேண்டும் (அப்போதுதானே சமுதாயத்தைப் பாதுகாக்க முடியும்) என்றே சமுதாயம் விரும்புகிறது. அறிவியல் ஆற்றல் மிக்கது என்பதால் நீங்கள் சிறந்த அறிவியல் நிபுணர்களால் திகழவேண்டும் என்று சமுதாயம் விரும்புகிறது. சமுதாயம் தனக்கென்று கொண்டிருக்கும் தேவைகளும் தனிப்பட்ட ஒருவரின் தேவைகளும் வெவ்வேறானவை.

ஒரு முழுமையான சமுதாயத்தில் குழு இருக்கிறது, தனி நபர்கள் மட்டுமே இருப்பார்கள். ஒரு முழுமையான சமுதாயத்தில் ஆட்சிக் குழு இருக்காது, அரசு இருக்காது, தனிநபர்கள் மட்டுமே இருப்பார்கள். பெரும்பாலும் ஒரு குறைந்த பட்ச பிரதிநிதிகளைக் கொண்ட அமைப்பு இருக்கும். எடுத்துக்காட்டாக, அஞ்சல் துறையைக் கவனிக்க ஒரு மைய முகவாண்மை (Central agency) இருக்கும் அல்லது இரயில்பாதைத் துறைக்கு ஒரு மைய முகவாண்மை. ஒரு ஆட்சிக்குழு இரயில் பாதைத் துறை, அஞ்சல் துறை இவை போன்றவற்றை இயக்கும். ஆட்சிக்குழு என்பது மறுக்கும் ஆற்றலைக் கொண்டிருக்க வேண்டும். நான், 'மறுக்கும் ஆற்றல்' என்று சொல்கிறபோது எந்தவொரு தனிநபரும் மற்றொருவருடைய சுதந்திரத்திலோ, வாழ்க்கையிலோ தலையிடுவதை அரசு பார்த்துக் கொண்டிருக்காது என்பதையே அது குறிக்கும். அரசு மக்கள் மீது நேரிடையாய் எந்த விதிகளையும் சுமத்தக்கூடாது என்றிருந்தால் அதுவே போதுமானது. ஒவ்வொருவரும் தன்னுடைய சொந்த வாழ்க்கையை வாழ அனுமதிக்கப்படுவார், அதிர் அடுத்தவர் தலையீடு இருக்காது என்பதே போதுமானது. அப்படி யாரேனும் தலையிட்டால் அரசு உள்ளே நுழையும். ஆனால் அது கற்பனையிலான குறைகள் ஏதுமற்ற சமுதாயம் அல்லது அரசியல் அமைவாகவே தெரிகிறது. ஆங்கிலத்தில் அதனை 'Utopia' என்கிறார்கள். அது அருமையான வார்த்தை. 'ஒருபோதும் நடக்காது' என்பது அதன் பொருள். 'Utopia' என்றால் 'எங்கும் இல்லாத நிலம்', அப்படியொன்று இருக்க வில்லைதானே. அது சாத்தியமற்றதாய் தெரிகிறது.

ஆக, நீங்கள் '*Utopia*' வை விரும்பவேண்டும் என்பதற்காக நான் விளக்கிக் கொண்டிருக்கவில்லை.

உங்களால் செய்யப்கூடியதெல்லாம் நீங்கள் விழிப்போடு இருப்பதான் அவ்வகையில் நீங்கள் குழப்பத்தில் இருந்து வெளியேற முடியும். தயவு செய்து மற்றவர்களைப் பற்றி கவலைப்படாதீர்கள். அவர்கள் விரும்பாவிட்டால் அவர்களைக் குழப்பத்தில் இருந்து நீங்கள் வெளியே கொண்டுவர முடியாது. அவர்கள் மகிழ்ச்சியாய் இருந்தால் அதை அனுபவிக்கவிடுங்கள். அவர்களுக்குத் துயரந்தான் மகிழ்ச்சியளிக்கும் என்றால் அவர்களைத் துயர்ப்படவிடுங்கள். அது அவர்களுடைய சுதந்திரம். யார்மீதும் எதையும் சுமத்தாதீர்கள் - அது வரம்பு மீறலாகும், நன்னடத்தைக் கோட்பாட்டிற்கெதிரான தீச்செயலைச் செய்வதாகும். என்னைப் பொறுத்தவரை இது வன்முறைதான். ஒவ்வொருவரும் தம்முடைய இருப்புணர்வோடு, சுதந்திரமாயிருக்க இடமளியுங்கள். அந்நிலையில் உணர்ச்சியைத் தூய்மைப்படுத்த அவசியம் இருக்காது. ஆனால் தற்போது ஒவ்வொருவரும் மற்றொருவரின் வாழ்க்கையில் தலையிட்டுக் கொண்டிருக்கிறார்கள், யாரும் உங்களைத் தனித்திருக்க விடுவதில்லை.

ஆக இத்தகைய உத்திகள் பயன்படுத்தப்படுகின்றன, வெகு நுட்பமான உத்திகள். நீங்கள் விழிப்போடு இல்லாவிட்டால் உங்களை அடிமையாக்க எந்த வகை உத்தி பயன்படுத்தப்பட்டது என்று உங்களால் புரிந்துகொள்ள முடியாது. நீங்கள் எங்கிருந்தாலும் கடவுள் உங்களைப் பார்த்துக் கொண்டிருக்கிறார் என்று மதங்கள் சொல்கின்றன. நீங்கள் தனித்திருக்க, உங்களுடைய சுயத்தோடிருக்க எங்குமே சாத்தியமில்லை என்பதுதான் இதன் பொருள். இந்தக் கடவுள் இரகசியமாய் பார்க்கிறவராயிருக்கிறார். நீங்கள் எங்கிருந்தாலும், உங்களுடைய குளியலறையில் இருந்தாலும்கூட அவர் உங்களைப் பார்த்துக் கொண்டிருப்பார். அங்கேயும்கூட நீங்கள் உங்களைப் பார்த்துக் கொண்டிருப்பார். அங்கேயும் கூட நீங்கள் ஒரு பாட்டை முணுமுணுக்கமுடியாது. சின்னதாய் ஆடி மகிழ முடியாது, உங்கள் முகத்தைக் கண்ணாடியில் பார்த்து ரசிக்க முடியாது. கடவுள் பார்த்துக் கொண்டிருக்கிறார். 'கடவுள்' என்றால் 'ரொம்பவும் கடுமை' என்று பொருள். வெண்ணிறகேசமும், தாடிமீசையும் கொண்ட ஒரு கிழவர், முகத்தைத் தொங்கப்போட்டுக் கொண்டு தீவிரமாய் கவனித்துக் கொண்டிருக்கிறார்.

நான் ஒரு பெண் துறவி (nun) பற்றி கேள்விப்பட்டிருக்கிறேன், அவள் தன்னுடைய உடைகளைக் கழற்றாமலே குளித்து முடிக்கிறவள். அவளிடம் யாரோ கேட்டார்கள், 'தாங்கள் என்ன செய்கிறீர்கள், உடைகளைக் கழற்றிவிட்டல்லவா குளிக்க வேண்டும்' என்று. ஆனால் அவள் சொன்னாள், 'கடவுள் எல்லா இடத்திலும் பார்த்துக் கொண்டிருக்கிறார், நான் எப்படி நிர்வாணப்பட முடியும். அது அவரை அவமதிப்பது போலாகும்" என்று. ஆனால் கடவுள் எங்கும் பார்த்துக் கொண்டிருப்பார் என்றால் அவர் ஆடைகளின் கீழேயுந்தான் பார்த்துக் கொண்டிருப்பார். ஆக, முக்கியக் கருத்து என்ன? நீங்கள் எங்கு வேண்டுமானாலும் நிர்வாணமாயிருக்கலாம் என்பதுதான். கடவுள் எங்கும் பார்த்தபடி இருக்கிறார். நீங்கள் தப்ப முடியாது. பேசாமல் அவரை மறந்துவிடுங்கள்.

இவை நுட்பமான உத்திகள், சமுதாயம் உங்களுக்குள் மனச்சாட்சியைத் தோற்றுவித்திருக்கிறது. ஆக, நீங்கள் எதைச் செய்கிறபோதும், சமுதாயத்துக்கான பணியாய் மனச்சாட்சி தொடர்ந்து செயல்பட்டுக் கொண்டிருக்கும். சமுதாயம் உங்களுக்குப் போதித்திருக்கிறது. 'இது உங்களுக்குள் இருந்து ஒலிக்கும் குரல்' என்று. இது உங்களுடைய உள்ளார்ந்த குரலல்ல. நீங்கள் ஒரு முகமதியக் குடும்பத்தில் பிறந்திருந்தால் உங்களுக்கு நான்கு மனைவிகள் இருந்திருப்பார்கள், நான்குவரை உங்கள் மனச்சாட்சி தலையிடாது. ஐந்து என்றால் ஆபத்து. ஐந்தாவது மனைவி என்கிறபோது உங்கள் மனச்சாட்சி கிண்டிக்கிளற ஆரம்பித்துவிடும், 'இது சரியல்ல' என்ற அது சொல்லும். நீங்கள் ஒரு இந்துவாகவோ, கிறிஸ்துவராகவோ இருந்தால் ஒரு மனைவிக்குமட்டும் அனுமதி உண்டு. இரண்டாவது மனைவி என்று வருகிறபோது தொல்லை ஏற்படும். உங்கள் மனச்சாட்சி 'இது தவறு, இது சரியாகாது, இது ஒழுக்கம் கெட்ட செயல்' என்று கூறத் தொடங்கும். நீங்கள் என்ன செய்கிறீர்கள்? காலகாலத்துக்கும் ஒரேயொரு பெண்ணுடன்தான் நீங்கள் நேசம் வைத்துக் கொள்ள முடியும்.

மனச்சாட்சி என்பது என்ன? ஒரு முகமதியருக்குரிய மனச்சாட்சி, இந்துவுக்குரிய மனச்சாட்சி என்று வேறுபாடு இருக்கிறதா?

எனது குழந்தைப் பருவத்தில் என்னுடைய வீட்டில் தக்காளிப் பழத்துக்கு இடமில்லை, காரணம் நான் ஒரு சமணக் குடும்பத்தில் பிறந்தவன், மேலும் தக்காளி இறைச்சிபோல் இருக்கும் - பார்ப்பதற்கு அதில் ஒன்றும் இல்லை. ம்ம்...? தக்காளி தீங்குவிளைவிக்கும்

எண்ணம் இல்லாதது. கேடு செய்யாதது. ஆனால், என்னுடைய குழந்தைப் பருவத்தில் நான் தக்காளி சாப்பிட்டதில்லை காரணம் என்வீட்டில் அதற்கு இடமளிக்கப்படவில்லை. ஒரு நண்பன் வீட்டுக்குச் சென்றிருந்தபோது முதல்முறையாய் என்னிடம் தக்காளி கொடுக்கப்பட்டது.

நான் வாந்தியெடுத்துவிட்டேன். முழுமையான மனச்சாட்சி, இறைச்சியைப்போல் தோற்றமளிக்கும் தக்காளியை எப்படி நீங்கள் சாப்பிட முடியும்?

மனச்சாட்சி என்பது சமுதாயத்தின் வஞ்சித்தாள் தந்திரம். உங்களுடைய உள்மனதில் சில யோசனைகளை அது கொடுக்கும், அங்கிருந்து வேலை செய்யத் தொடங்கும். அவை 'டெல்காடோ'வின் *மின் முனைகள் மாதிரி. வெகு நுட்பமானவை... நீங்கள் எங்கு சென்றாலும் சமுதாயம் உங்களைப் பின்தொடரும், உங்களுப்பின்னாடி ஒளிந்து கொண்டிருக்கும், உங்களுக்குள் இருக்கும். நீங்கள் மாறுபாடாய் எதையேனும் செய்தால் மனச்சாட்சி குத்தும்.

இது உள்ளிருந்து ஒலிக்கும் குரல்ல - காரணம் உண்மையான உள்ளொலி இந்து, முகமதியர், சமணர் மற்றும் கிறிஸ்துவர் என்கிற வேறுபாட்டைக் கொண்டிருக்காது. இல்லையா. உண்மையில் உள்ளிருந்து எழுந்த குரல் ஒரேமாதிரியாகத்தான் இருக்கும் காரணம் அந்தக் குரல் சமுதாயத்தால் விளைவிக்கப்பட்டதல்ல. உண்மையான உள்ளிருந்து ஒலிக்கும் குரல் உங்களுடைய இருப்புணர்வின் (being) உள்ளார்ந்த மையப்பகுதியில் இருந்து வரவேண்டும். ஆனால் அதைக் கண்டறிவதற்கு ஒருவர் ஆழ்ந்த சிந்தனையின் - தியானம், அத்தனை கட்டங்களையும் கடந்துசெல்ல வேண்டியிருக்கும். எண்ணங்களனைத்தும் மறையாதவரை உங்களுடைய சொந்தக் குரலை நீங்கள் கேட்க முடியாது. நீங்கள் கேட்பது எதுவாயினும் சமுதாயந்தான் உள்ளிருந்து கொண்டு உங்களைத் தனது சுயநலத்துக்குப் பயன்படுத்திக் கொள்ள முயற்சிக்கிறது. வெளிப்புறத்தில் இருந்து கொண்டு காவலர், நீதிபதி இவர்கள் மூலமும் அது உங்களைக் கையாள்கிறது. உட்புறத்தில் கடவுள், மனச்சாட்சி, ஒழுக்கமுறைமை, நரகம், சொர்க்கம் என்று ஆயிரத்தியோரு கருத்துகளைக் கொண்டு உங்களைக் கையாளும்.

---

* மின்முனைகள் (electrodes): வெற்றுக்கல் மின்னோட்டத்தில் இருகோடி முனைகளுள் ஒன்று. என்னைப் பொறுத்தவரை பிரபஞ்சஇருப்பே கடவுள்.

இந்தக் காரணத்தினால் உணர்ச்சித் தூய்மை செய்தல் (Catharsis) தேவைப்படுகிறது. நீங்கள் இயல்பாய் இருக்கவில்லை, உணர்ச்சியைத் தூய்மை செய்வதன் மூலம் மட்டுமே நீங்கள் சமுதாயத்திடமிருந்து சுமையற்றவராய் இருக்கமுடியும், சமுதாயத்திடம் இருந்து தடையற்றவராக முடியும். சமுதாயத்தில் இருந்து விடுபட்டதும் நீங்கள் இயற்கைக்கு அனுகூலமானவராகிவிடுவீர்கள். அவ்வாறே பிரபஞ்ச இருப்புக்கும் அனுகூலமானவராவீர்கள்.

'ஒருவர் நேரடியாய் தியானம் என்கிற ஏழாவது படியில் குதிக்க வேண்டும். அதன்பிறகு மற்ற படிகளையும் முடித்து சமாதிநிலையைத் தெளிவாகப் புரிந்துகொள்ள முழுமையாகிவிடவேண்டும் என்று தாங்கள் வற்புறுத்தலாய் கூறுவது ஏன்?'

ஒரு குறிப்பிட்ட காரணத்துக்காக தியானத்தின் ருசியை நீங்கள் இழந்துவிட்டிருக்கிறீர்கள், அதை மீண்டும் பெற்றுச் சுவைக்காவிடில் மற்றவற்றால் பூர்த்திசெய்யும் இடர்ப்பாட்டை நீங்கள் மேற்கொள்ள மாட்டீர்கள் என்பதால்தான் நான் முதலில் தியானத்தில் குதிக்கும்படி உங்களை வற்புறுத்துகிறேன்.

பதஞ்சலியின் காலத்தில் தியானம் ஒரு ஏற்கப்பட்ட உண்மையாயிருந்தது. எல்லாரும் தியானம் செய்துகொண்டிருந்தார்கள். காட்டில் உள்ள குருவின் ஆசிரமத்துக்கு ஒவ்வொரு குழந்தையும் அனுப்பிவைக்கப்பட்டது. அங்கே தியானந்தான் அடிப்படையில் கற்பிக்கப்பட்டது, மற்றதெல்லாம் இரண்டாம் பட்சம். இருபத்தியைந்து வயதாகும் போது அவன் சமுதாயத்துக்குத் திரும்பிவருவான், ஆனால் தியானத்தின் மூலம் ஆழ்ந்து எண்ணும் நிலையை அவன் அடைந்துவிட்டிருப்பான். அவன் சந்தையில் வியாபாரம் செய்துகொண்டிருந்தாலும் தியானநிலை கூடும். அவனுக்கு ஐம்பது வயதில் அவன் மீண்டும் வனவாசம் செய்ய காட்டுக்குச் செல்வான். எழுபத்து ஐந்து வயதில் தியானத்தைத் தவிர வேறு எதையும் அவன் செய்யமாட்டான்.

ஆக, வாழும் காலம் முழுவதையும் கூர்ந்து கவனித்தால் அது நூறு ஆண்டுகளாயிருக்கும்: முதல் இருபத்தியைந்து ஆண்டுகளில் தியானத்தின் ருசி அவனுக்கு வழங்கப்படுகிறது - ஒருவர் அதன் நறுமணத்தை, சுவையை அறிகிறார். அதன் நேர்த்தியை அறிகிறார். அந்தப் பேரின்ப நிலையைப் பரிச்சயம் செய்துகொண்டு உலகத்தினுள் பிரவேசிக்கிறார். தற்போது அவர் அந்த உலகின் ஒரு பகுதியாய்

இருப்பதில்லை. ஏதோ அருமையான ஒன்று வனத்தில் இருப்பதாய் அவர் அறிகிறார். அவர் தனிமையை அறிந்திருக்கிறார். தற்போது கூட்டத்தில் உலகில் ஒன்றாய் இருக்கிறார். ஒருவர் அந்த ருசியை அறிந்த பின் வேறெந்த ருசியும் தகுதியானதாயிருக்காது. உலகில் இருப்பதை ஒரு கடமையாய்க் கொண்டிருப்பார் அவர்.

ஐந்து மறை நூல்கள் அதைத்தான் செய்கின்றன. ஒருவர் இந்த உலகில் இருப்பதை ஒரு கடமையாய் கொள்ள வேண்டும் என்பதை. உங்களுடைய பெற்றோர்கள் உங்களை இனப்பெருக்கம் செய்தனர். உங்களுடைய கடமையை நீங்கள் செய்தாகவேண்டும். அத்துடன் இனப்பெருக்கமும் செய்ய வேண்டும். அவ்வகையில்தான் சமுதாயமும் தொடர்ச்சியும் (chain) தொடரமுடியும். ஆறு ஓடிக்கொண்டேயிருக்கும் - அதை நீங்கள் தடைசெய்யக்கூடாது. ஆனால் அழைப்பு தொடர்ந்து வந்து கொண்டிருக்கும். கடையில் வேலை செய்கிற ஒருவன் சந்தைப்பேட்டையில் வசிக்கிறான். அங்கேதான் கல்யாணம் பண்ணி, குழந்தைகள் பெற்று - என்று ஆயிரத்தியோரு செயல்களை அவன் செய்கிறான். ஆனால் தொடர்ந்து அழைப்பு வந்து கொண்டேயிருக்கிறது. சில சமயம் காலையில் சந்தைப்பேட்டை அமைதியாய் இருக்கும்போது, உலகமே உறக்கத்தில் ஆழ்ந்திருக்கும் போது அவன் எழுந்து கொள்கிறான். இருப்பத்தியைந்து வயதில் அறிந்துகொண்ட தியானத்தில் மூழ்குகிறான். இரவில், எல்லாரும் படுக்கச் சென்றபின், தன்னுடைய படுக்கையில் அவன் அமர்ந்திருக்கும்போது... அந்த அழைப்பு ஒரு நிழல் மாதிரி அவனைத் தொடர்கிறது.

ஐம்பது வயதில், அவனுடைய குழந்தைகள் கிட்டத்தட்ட இருபத்தி ஐந்து வயதினராய் குருகுலவாசத்திலிருந்து திரும்பும்போது அவன் மீண்டும் காட்டுக்குச் செல்கிறான். தற்போது அவர்கள் உலகத்தில் தங்களுக்குரிய பொறுப்புகளை ஏற்றுக் கொள்வார்கள். தற்போது அவனுடைய கடமை நிறைவேறிவிட்டிருக்கிறது. உண்மையில் மிகச்சரியாக ஐம்பது வயதில் அவன் காட்டுக்குச் செல்வதில்லை. வடமொழியில் வானப்பிரஸ்தம் என்கிறார்கள். அவன் வனம் நோக்கி முகம் திருப்புகிறான். அவன் வீட்டைவிட்டுச் செல்வதில்லை. காரணம், காட்டிலிருந்து வந்த அவனுடைய குழந்தைகளுக்குச் சில ஆண்டுகள் அவன் துணை புரியும்படி இருக்கும். தன்னுடைய சொந்த வாழ்க்கையின் அனுபவங்களை அவர்களுக்கு வழங்குவான். அவர்களை வசதியான நிலையில்

இருக்கச் செய்வான். இல்லையேல் இது மிகவும் நிச்சயமற்ற நிலையை உண்டாக்கும் ஒரு நிகழ்வாகிவிடும், அவர்கள் வீட்டுக்கு வரவும், அவன் போகவும் உலகத்துடன் தொடர்பேயில்லாமல் போய்விடும். அவர்கள் பிரபஞ்ச இருப்பைப் பற்றி அறிந்து கொண்டார்கள். தற்போது உலகியல் விசயங்களைத் தந்தையிடமிருந்து அவர்கள் தெரிந்து கொள்ள வேண்டும்.

ஆனால், தற்போது தந்தை இரண்டாம் பட்சமாகி விடுவான். குழந்தைகள் முக்கிய சக்திகளாகிவிடுவார்கள்.

தந்தை பின்னுக்குத் தள்ளப்படுவார், தாய் பின்னுக்குத் தள்ளப் படுவாள். மருமகள் வருகிறாள், மகன் வருகிறான். அவர்கள் தற்போது உண்மையான வீட்டுக்காரர்களாகிவிடுகிறார்கள். அவர்களுக்குத் தேவைப்படும்போது ஆலோசனை கூறத்தான் தந்தையும், தாயும் ஆலோசனை வழங்கிவிட்டு அவர்களுடைய முகங்கள் தற்போது காட்டை நோக்குகிறது. அவர்கள் தயாராகிவிட்டார்கள்.

அவர்களுக்கு எழுபத்தியைந்து வயதாகும்போது, அவர்களது குழந்தைகள் ஏறக்குறைய ஐம்பது வயதினராயிருப்பார்கள். தற்போது தாயும், தந்தையும் காட்டுக்குத் திரும்பத் தயாராகி விடுகிறார்கள். அவர்கள் வெளியேறி காட்டுக்குச் செல்கிறார்கள்.

இந்திய நாட்டைச் சேர்ந்தவர்களுக்கு வனத்தில் தொடங்கி வனத்தில் முடிகிறது வாழ்க்கை. தனிமையில் தொடங்கி தனிமையில் முடிகிறது. தியானத்தில் தொடங்குவது தியானத்திலேயே முடிவடைகிறது. உண்மையில் தியானத்துக்காக எழுபத்தியைந்து ஆண்டுகள், உலகத்துக்காக இருபத்தியைந்து ஆண்டுகள். உலகத்துக்கானது அதிகமில்லை. உள்ளார்ந்த ஓட்டம் தொடர்கிறது. உண்மையில் முழுவாழ்க்கையும் தியான நிலையில் இருப்பதாகவே இருந்தது. இருபத்தியைந்து ஆண்டுகளை மட்டுமே ஒருவர் கடமைக்காக எடுத்துக்கொள்கிறார்.

அந்தக் காலத்தில் தியான ருசியை ஏற்படுத்த வேண்டிய அவசியம் இருந்திருக்கவில்லை. நீங்கள் அதை முன்பே அறிந்திருப்பீர்கள். ஆனால், தற்போது விசயங்கள் முற்றிலும் மாறிவிட்டன. தியானம் என்றால் என்னவென்றே தெரியவில்லை உங்களுக்கு. நான் 'தியானம்' என்று சொல்லும்போது ஒரு சொல்தான் உங்கள் காதில் ஒலிக்கிறது - மறுமொழி இல்லை. நான் 'எலுமிச்சை'

என்று சொன்னால் உங்கள் வாயில் உமிழ் நீர் சுரக்கிறது. ஆனால் நான் தியானம் என்று சொல்கிறபோது எதுவும் இசைவாயில்லை. நான் 'கடவுள்' என்கிறபோது வாய் உலர்ந்துவிடுகிறது. நீங்கள் அதை ருசிக்கவில்லை. அந்தச் சொல் பொருளற்றதாய் தெரிகிறது.

அது காரணம் பற்றியே, நான் முதலில் தியானம் செய்யுங்கள் என்கிறேன். அது சிறிதளவு ருசிபார்த்து, கணநேரக் காட்சியைப் பெறுவது. அந்நிலையில் உங்களுடைய வழியில் தொடங்குங்கள். அதன் பிறகு மற்ற படிகளையும் பூர்த்தி செய்யத் தொடங்குங்கள். உங்களுக்கு அந்தக் கணநேரக் காட்சி தேவைப்படுகிறது. முன்பு அது தேவைப்படவில்லை. அதற்காகவே தியானத்தை நான் நேரடியாய் வற்புறுத்துகிறேன்.

ஒரு முறை நீங்கள் தியானத்துக்குச் சென்றுவிட்டால் ஒவ்வொன்றும் தொடர்ந்துவரும். நான் அதைப்பற்றி பேச வேண்டிய தில்லை. நீங்களாகவே அதைச் செய்யத் தொடங்கிவிடுவீர்கள்.

நீங்கள் தியான நிலையில் அமைதியாய் அமர்ந்து, அசைவற்று இருக்க விரும்புவீர்கள். ஆசன நிலையைப் பின்பற்றுவீர்கள். நீங்கள் தியானத்தில் இருக்கும்போது அமைதியின் சீர்த்தன்மையை (rhythm) சுவாசத்தில் புரிந்து கொள்வீர்கள். பிராணயாமம் தொடரும். நீங்கள் தனிமையில் அமைதியாய் தியானித்திருக்கும் போது உங்களுடைய சிறப்பியல்பு மாறும். யாருடைய வாழ்விலும் நீங்கள் தலையிட மாட்டீர்கள். நீங்கள் அகிம்சாவாதியாகிவிடுவீர்கள். நீங்கள் உண்மையானவராய் இருப்பீர்கள், காரணம் உண்மையற்றவரானால் உங்களுடைய உள்ளார்ந்த சமநிலையை இழந்துவிடுவீர்கள். நீங்கள் உண்மையானவராய் இருப்பீர்கள், காரணம் உண்மையற்றவரானால் உங்களுடைய உள்ளார்ந்த சமநிலையை இழந்துவிடுவீர்கள். உண்மையற்றவராய் இருப்பதன் மூலம் ஐந்து ரூபாய் மிச்சப்படுத்துவீர்கள் ஆனால் உண்மையற்றுப் போன காரணத்தால் நிறையவே இழப்பீர்கள் - உள்ளில் ஒரு புதிய செல்வத்தை தற்போது நீங்கள் இழக்க வேண்டியிருக்கும். ஐந்து ரூபாயை மிச்சப் படுத்துவதற்காக, மதிப்பு மிக்க பொக்கிஷத்தை உள்ளிருக்கும் செல்வக்குவியலை இழக்கும் ஒரு முட்டாளை இதற்குமுன் நான் பார்த்ததில்லை. பிறகு 'யமம்' தொடர்கிறது. நீங்கள் மிகவும் அமைதியாகிவிடுகிறீர்கள். வாழ்க்கை புறத்தூண்டுதலின்றி தானே இயங்குவதாகிறது: 'நியமம்' ஓர் உள்ளார்ந்த ஒழுங்கு முறை தன்னால்

அது நிகழ்கிறது. உங்களிடமிருந்து ஓரளவே உதவியும், புரிந்து கொள்ளும் திறனும் தேவைப்படும். செயல்கள் ஒழுங்காய் நடக்கும். ஆனால் நீங்கள் முதலில் தெரிந்துகொள்ள வேண்டியது தியானம் என்றால் என்னவென்பதைத்தான். மற்றதெல்லாம் பின் தொடரும்.

இயேசு சொன்னார், 'முதலில் கடவுளின் ராஜ்யத்தைக் கண்டுபிடியுங்கள், பிறகு, மற்றவை வந்து சேரும்' என்று. நானும் அதையேதான் உங்களுக்குச் சொல்கிறேன்.

நான் எதிர்கொண்ட கடந்தகால புத்தர்களை தெளிவாகவே விலக்குகிறேன். ஆனால், தற்போது இந்த உடம்பில் நான் எவ்வளவு காலம் இருந்தாலும் இதனை விடப்போவதில்லை. ஆனால், அதன்பிறகு ஒரு உடல் சாராத பொதுப்பங்கீடை மேற்கொள்வதற்கு முன் இந்த உடம்பை விடுவது நானாயினும், நீங்களாயினும் ஏதோ ஏற்படப் போகிறது என்ற பயம் இருக்கும்.

அந்த பயம் இயல்பானது, ஒரு வழியில் நன்மை செய்யக் கூடியதுமாகும். அதுகுறித்து அஞ்சவேண்டியதில்லை. அந்த பயம் அனுகூலமானது. எல்லா பயங்களும் தவறானவையல்ல. பயமற்றிருப்பதெல்லாம் சாயானவையுமல்ல. சில நேரங்களில் பயமில்லாதிருப்பது முட்டாள் தனமாகிவிடும். சில நேரங்களில் பயம் விவேகமாய் கொள்ளப்படும். இந்த பயத்தை விவேகம் என்றே நான் சொல்வேன். காரணம் இது நிகழ்த்தும் தன்மை உடையது. கடந்த காலத்தில் பல புத்தர்களை நீங்கள் தவறவிட்டிருப்பீர்கள், என்னையும் நீங்கள் தவறவிடக் கூடிய சாத்தியம் நிறையவே உள்ளது, தவறவிடுவதில் நீங்கள் நிறையவே பயிற்சி பெற்றிருக்கிறீர்கள். பயம் நல்லதுதான். அது உதவும். பயம் புத்திசாலித்தனமானது - உங்களைக் கவனமற்றவராய், ஓய்வில் இருக்க அது இடமளிக்காது. நீங்கள் மீண்டும் தவறவிடுவதை அது அனுமதிக்காது.

பயத்துக்கு நன்றி கூறுங்கள், பயம் எப்போதுமே தீங்கு செய்யாது என்பதை நினைவில் கொள்ளுங்கள். பாதையில் ஒரு பாம்பைப் பார்த்ததும், நீங்கள் என்ன செய்வீர்கள். அப்படியே துள்ளிக் குதிப்பீர்கள். உங்களுக்கு அச்சமா? நீங்கள் என்ன கோழையா? யாராவது முட்டாள் சொல்லலாம் நீங்கள் ஒரு கோழை என்று. ஆனால் நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?... புத்தர் என்ன செய்வார்? அவர் உங்களைவிட வேகமாய் தாவிக்குதிப்பார், அவ்வளவுதான். காரணம் அவர் உங்களைவிட அதிக எச்சரிக்கை உடையவர், நீங்கள் பாம்பைப்

பார்ப்பதற்கு முன்பே அவர் பார்த்துவிடுவார். ஆபத்தை உங்களுக்கு முன் அவரால் கண்டுகொள்ள முடியும். நீங்கள் ஆழ்ந்த உறக்க நிலையில் இருப்பதால் உங்களுக்கு அவகாசம் தேவைப்படும். புத்தர் விரைவாய் குதிப்பார், அவ்வளவே. ஆனால், பாம்பைப் பார்த்து புத்தர் பயப்படுவாரா? இல்லை, கேள்வி பயமிருக்குமா இல்லையா என்பது பற்றியதல்ல. அவர் எச்சரிக்கையாய் இருக்கிறார். அந்த எச்சரிக்கை உணர்வில் அவர் செயல்படுகிறார்.

இந்த பயம் ஒருவகை எச்சரிக்கை உணர்வுதான். அதைப் பதுங்கியிருக்கும் அச்சம் என்று சொல்லாதீர்கள். அதைக்காட்டிலும் 'மேலெழும் எச்சரிக்கை உணர்வு' என்று சொல்லுங்கள். காரணம், ஒன்றை நீங்கள் அழைக்கும் வகை நிறைய வேறுபாடுகளை உண்டுபண்ணும். நீங்கள் அதை அச்சம் என்று அழைத்தால் அதை முன்பே ஒதுக்கிவிட்டீர்கள். நீங்கள் 'மேலெழும் விழிப்புணர்வு' என்று அழைத்தால் முன்பே அதை ஏற்றுக் கொண்டுவிட்டீர்கள், அதன் சிறப்புகளைத் தெரிந்துகொண்டவராவீர்கள்.

நீங்கள் எச்சரிக்கையோடு இருந்தால் இம்முறை தவறவிட மாட்டீர்கள். முழுவிசயமும் எச்சரிக்கை உணர்வுதான். நீங்கள் கவனமாயிருந்தால் தவறவிட மாட்டீர்கள். நீங்கள் ஆழ்ந்த உறக்கத்தில், அறிதுயில் நிலை (Hypnotic state)யில் இருந்ததால் கடந்த காலத்தில் தவறவிட்டீர்கள். உங்களுடைய கண்கள் மூடியிருந்தன. ஒரு புத்தர் இருந்ததை நீங்கள் புரிந்து கொள்ளாத காரணத்தால் தவறவிட்டீர்கள். புத்தர் இருப்பதை ஒரு முறை புரிந்து கொண்டால் ஏன் தவறவிடப்போகிறீர்கள்? இது வைரம் என்பதை ஒரு முறை அறிந்து கொண்டுவிட்டால் அதை வீசியெறிய மாட்டீர்கள். நீங்கள் வெறும் கூழாங்கற்களாய் எண்ணிக் கொண்டு மற்ற வைரங்களை வீசியெறிந்திருக்கலாம்...

நான் ஒரு சூஃபி கதையைக் கேட்டிருக்கிறேன்: அது நடந்தது. ஓர் ஏழ்மையானயாசகர் – முஸ்லிம் துறவி, சிறிய ஏரியொன்றின் கரையில் போய்க் கொண்டிருந்தார். ஒரு பையின் மீது தடுக்கி விழுந்தார். அது அதிகாலை நேரம். சூரியன் இன்னும் தோன்றவில்லை, கருக்கலாயிருந்தது. அவர் பையைத் திறந்தார். உள்ளே என்ன இருக்கிறது என்று தடவிப் பார்த்தார். கற்கள் இருந்தன. ஏரியின் கரையில் அமர்ந்து, எதுவும் செய்வதற்கில்லாமையால், அந்தக் கற்களை ஒவ்வொன்றாய் ஏரியில் போடத் தொடங்கினார். அவை

விழுந்து தெரித்ததில், நீரில் சிற்றலைகள் எழுந்தன. பிறகு, மெள்ள மெள்ள பொழுது விடிந்து, இருள் மறைந்தது. அந்த நேரத்தில் தாம் என்ன செய்கிறோம் என்பதை அவர் பார்க்குமளவிற்கு வெளிச்சம் பரவியது, கடைசியாய் ஒரு கல் மட்டுமே எஞ்சியிருந்தது. அவர் அழுது, புலம்பலானார். அவை அத்தனையும் வைரங்கள். ஆனால், தற்போது அவரால் அதை எறிய முடியவில்லை.

நீங்கள் பையில் இருந்த ஒட்டுமொத்த வைரங்களையும், புத்தர்களையும் வீசியெறிந்திருக்கலாம். இவ்வேளையில் சிறிதளவு எச்சரிக்கை உணர்வு உங்களிடமிருந்து, பொழுதுவிடிந்து வெளிச்சம் பரவியிருந்தால் அதை எப்படி நீங்கள் வீசியெறிய முடியும்? அது சாத்தியமற்றதாகும்.

